ஸ்ரீமத் வால்மீகி

# ராமாயணஸாரம்.

எளிதான தமிழ் நடையில்

ஆசார்யர்களால்

V. K. ராமாநுஜதாஸரைக்கொண்டு

எழுதப்பெற்றது.

V. விஜயராகவாசாரியரால்

கும்பகோணம்

யதார்த்தவசனீ அச்சுயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

1936.



இதன் விலை ] [1—8—0.

ஸ்ரீராமஜயம்.



# பதிப்பாசிரியன் பாயிரம்.

ஜய ஜய மஹா வீர

நமஸ்தே ஸாந ஸ்தே நம:

ஸ்ரீமத் ராமாயணம் என்பது ராம சரித்திரத்துக்கு இடமாயுள்ள நூல். ராமன் என்பதற்குத் தன் திருக்கல்யாணகுணத்தில் எல்லாரும் மனங்களித்திருக்கப்பெற்றவன் எனவும், அயநம் என்பதற்கு ராமனை அறிதற்கும் அடைதற்கும் கருவியாயுள்ள நூல் எனவும் பொருள்கொள்ளலாம். அன்றியும், ஸ்ரீராமாயணம் சிறையிலிருந்தவள் ஏற்றஞ்சொல்லி, அவள் வைபவத்தை உணர்த்தும் நூல் என்றும் கூறலாம். இந்த ராமாயணஸாரம் என்னும் நூல், புற்றிலிருந்து வெளிப்பட்ட வான்மீகி மகர்ஷி இயற்றிய ஸ்ரீமத் ராமாயணத்தைப் பின்பற்றியே அமைக்கப்பட்டது. இது, திருக்குடந்தையில், வழுத்தூர் கிருஷ்ண அய்யங்கார்ஸ்வாமியின் திருக்குமாரராய் அவதரித்து, வடமொழி, தென்மொழி, ஆங்கிலம் ஆகிய மூன்றுபாஷைகளிலும் திறமைவாய்ந்து, இராஜாங்கத்தில் மேன்மையான பதவிகளை நன்கு வகித்து, "திவான்பகதூர்" என்னும் சீரியபட்டமும் பெற்றுச் சிறப்புற்று விளங்கும் ஸ்ரீ உ, வே. வி. கே. இராமாநுஜாசார்யஸ்வாமி இயற்றி

யது. ஸ்ரீமத் ராமாயணஸாரத்தை இயற்றிக்கொடுத்து, அ
ட்டு வெளியிடும்படி அடியேனுக்கு மனப்பூர்வமாக அநுக்ரஹி
ஸ்ரீ உ. வே. வி. கே. இராமாநுஜாசார்யஸ்வாமி ஸந்நிதி
அடியேன் என்றும் கிருதக்ஞதா அநுஸந்தாநம் பண்ணிக்கொ
டிருப்பேன். இந்த இரஸத்தைப்பிழிந்துஎடுக்கப் பேருதவிபுரி
வித்வான் சின்னமு. ஸ்ரீநிவாஸபாட்டராசார்யஸ்வாமிக்கும், இ
ஸாரத்தை வான்மீகி ராமாயணத்துடன் ஒத்துப்பார்
விஷயஸாரம் சிறிதும் விடாமல் திருத்தமுற அமைத்
பேருதவிபுரிந்த பண்டிதராஜ, அபிநவபட்டபாண, மஹாமஹோ
பாத்தியாய ஸ்ரீ உ. வே. ஆர். வி. கிருஷ்ணமாசார்யஸ்வாமிக்கு
நூலாசிரியரும் அடியேனும் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டி
கிறோம். சகல வியாதிகளுக்கும் பழரஸம் ஔஷதமும் உண
ஆகுமாறுபோல, ஆஸ்திகம் மெலிந்து நாஸ்திகம் மலிந்துவ
இக்காலத்து இந்த ராமாயணஸாரமே மேலான ரஸாயன
உணவுப்பொருளும் ஆகும் என்பது திண்ணம்.

பற்பல பழரஸங்களுடன் பாலுந்தேனும் பாகும் கல
பானத்தைப் பலர் பானம்பண்ணிக் களிக்கிறார்கள். அதுபே
ஸ்ரீமத் ராமாயண கதையை அறிந்து ஆராய்ந்து பரிசீலனை
பண்ணி, ரஸமான விஷயங்களை வடித்தெடுத்து அமைக்கப்பெ
இந்த ராமாயணஸார புத்தகத்தைப் பாடசாலை இளைஞர்களு
ஏனையோர்களும் கற்றுத்தேறி நற்குண நற்செயல்கள் வள
பெற்றுக் களிப்பார்களென்பதில் ஐயமில்லை. எனவே, யாவரு
இதனைப் பாராயணம் பண்ணி, அறம் பொருள் இன்பம் வீ
என்னும் உறுதிப்பொருள் நான்கையும் ஒருங்கே அடைய
பெறுவார்களென்பதும் உரைக்கவேண்டுமோ? இதுவே ந
நூலாசிரியர் அபிப்பிராயமுமாகும். உலகத்தார் எல்லோரு
இந்த ஸாரத்தைப் படித்துப் பரமசுகம் அடையவேண்டு
என்பது அவர் முழுவிருப்பமும் கருத்துமாகும்.

திருக்குடந்தை மாநகருக்கு மூன்றுமணிகள்போல் விளங்கும் பண்டிதராஜ, அபிநவபட்டபாண, மஹாமஹோபாத்தியாய ஸ்ரீ உ. வே. ஆர். வி. கிருஷ்ணமாசார்யஸ்வாமிகள் வடமொழியிலும், பாஷாபாரததுரந்தரர், மஹாமஹோபாத்தியாயர் ஸ்ரீ ம. வீ. ராமாநுஜாசார்யஸ்வாமிகள் தென்மொழியிலும், ரிடயர்ட் டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜ் மகா-ள-ள-ஸ்ரீ திவான்பகதூர் கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரிகளவர்கள் ஆங்கிலமொழியிலும், அழகாயும் விரிவாயும் இனிமையாயும் உள்ள முகவுரைகளை வரைந்து அநுக்கிரகித்துக்கொடுத்தது, இந்நூலுக்கு முகம்போல விளங்குகின்றது. அம்மூவருரையும் மூவர்மொழிபோலும் சிறப்புடையனவாகும். இம்மூன்று மணிகளின் மொழிகளை முன்பெற்று வந்துள்ள ஸ்ரீமத் ராமாயணஸாரத்தை உலகத்தார் எல்லாரும் சிரமேல்வைத்து உவப்பார்களென்பது உறுதியாம். முன்னுரைகளை அநுக்கிரகித்த அம்மகாநுபாவர்களுக்கு அடியேன் மனமார்ந்த வந்தனம் செலுத்தக் கடமைப்பட்டவனாவேன்.

எல்லோரும் மகிழ்வுடன் இப்புத்தகத்தை வாங்கி வாசித்தறிந்து மனங்களிக்கும்வண்ணம் ஸ்ரீராமனைப் பிரார்த்திக்கிறேன். இந்நூல் இந்தச் சொரூபத்தை அடையும்வரையில் நேர்ந்திருக்கும் சிரமத்தை நோக்குமிடத்து இதற்கு ஏற்படுத்தியிருக்கும் விலை மிகவும் சொற்பமேயாகும்.

இதனை மிகுந்த அழகாக வழுவின்றிக் கூடியவிரைவில் சிரத்தையுடன் அச்சிட்டுக்கொடுத்த "யதார்த்தவசனீ" அச்சியந்திரசாலைச் சொந்தக்காரர் மகா-ள-ள-ஸ்ரீ டி. வி. கோவிந்தசாமிபிள்ளை அவர்களுக்கும் என் நன்றி என்றும் உரியதாகும்.

சித்ர ராமாயண புத்தகம் அச்சில் வெளிவந்ததும், ஸ்ரீமத் ராமாயணஸாரம் அச்சிடப்பட்டு முன்வந்ததும், கும்பகோணம் ஸ்ரீராமன் ஸந்நிதியில் ஸ்ரீராம சரிதம் 220 வர்ணப்படங்கள் ரூபமாக சுவர்களில் அமைந்ததும், ஒரேகாலத்திலேயே. இச் செயல்களை அடியேனை ஆட்கொண்டு ஸ்ரீராமனே நடத்திவைத் தார். கர்வமின்றி ஸ்ரீராமனை ஸதா ப்ரார்த்தித்துக்கொண்டு ஸ்ரீராமன் கைங்கர்யத்தைச் செய்ய முயற்சி செய்கிறவர்களுக்கு அவன் ப்ரஸாதம் கிடைக்கும் என்பதற்கு இதுவே ஓ உதாரணம்.

ஸ்ரீராம நிலையம்,
57, பெரியதெரு,
கும்பகோணம்.
5-8-1936.

ஸ்ரீராமதாஸன்,
வி. விஜயராகவாசாரியன்,
ரிடயர்டு டிப்டி இன்ஸ்பெக்டர் ஆவ் ஸ்கூல்ஸ்.

---

॥ श्रियै नमः ॥

## ॥ भूमिका ॥

---

["अभिनवभट्टबाण", "पण्डितराज", "महामहोपाध्याय" बिरुदभूषितानां रायम्पेट्टै उक्कवति कृष्णमाचार्याणाम्].

अस्ति सकलभारतवर्षीयजनसमुदायस्य आदिकाव्यस्य इतिहासरत्नस्य श्रीमतो रामायणस्य द्राविडभाषया बहवो विवृतयः। तेषु च केचन प्रतिपदम्, अन्ये च कथासंग्रहपरा विवरीतारः। उभयविधेष्वप्येतेषु प्रायो न कया [illegible] सारवत्तत्त्वार्थावबोध [illegible] संवर्धितं [illegible]। कथासंग्रहपरेषु च सर्वेषु प्रायेण [illegible] न कृता। प्रकरणानुरोधेन परिगृहीतः [illegible] बहुत्र नष्टं न परिगृहीतः। विवृतिकेषु च बहुधा [illegible] शास्त्रसाहित्यपरिचयपरिष्कृतं च न च संस्कृतभाषायां प्रावीण्यमपेक्ष्यते, नापि [illegible] शास्त्राभ्यासपरिणामतः संस्कारविज्ञानम्; अपरा ये प्रवृत्ता [illegible] विवृतयस्तत्र [illegible] नियतमेवावश्यं [illegible]। न केवलमेतावत्, [illegible] वाक्यानि, [illegible] नि [illegible] ति, [illegible] भावानि सन्ति न च [illegible] भवन्ति।

संप्रति निवृत्ते [illegible] नापि [illegible] पूर्वाणामुपाख्यानानाम्। [illegible] अपि प्रायः [illegible] प्रवाहितः। [illegible] कथा [illegible] निवेशिताः। संक्षिप्ते [illegible] निर्णयेन गृहीता गृहीतव्याः, त्यक्ताश्च त्यक्तव्या विषयाः। यत्र [illegible]

𑌤𑌾𑌯𑍁𑌷𑍍𑌯, 𑌯𑌤𑍍𑌰 𑌚 𑌉𑌤𑍍𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌿𑌦𑍇𑌶𑌃, 𑌯𑌤𑍍𑌰 𑌵𑌾 𑌰𑌵𑌵𑌿𑌶𑍍𑌰𑌾𑌮𑌵𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌃, 𑌤𑌾𑌦𑍃𑌶𑌸𑍍𑌵𑌰𑌸𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌸𑌮𑌾𑌪𑌜𑌕𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑌃 𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌦𑌾𑌯 𑌏𑌵 𑌵𑌿𑌵𑌰𑌿𑌤𑌵𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌨𑌨𑍍𑌦𑌨𑍀𑌯𑌕𑌨𑌕𑌕𑌮𑌲𑌸𑍍𑌯 𑌕𑌮𑌨𑍀𑌯 𑌕𑍂𑌰𑍍𑌮𑍋𑌦𑌃 । 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌰𑌮𑌣𑍀𑌯𑌾𑌨𑌿 𑌚 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤𑌾𑌨𑌿 𑌵𑌿𑌵𑌰𑌿𑌤𑌾𑌨𑌿 𑌤𑌤𑍍𑌤𑌦𑍍𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌶𑍇𑌷𑌜𑍍𑌞𑌃 । 𑌵𑌿𑌵𑌰𑌿𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌸𑍍𑌪𑌷𑍍𑌟𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌶𑌿𑌕𑍍𑌷𑌃 𑌸𑌕𑌮𑌕𑌮𑌕𑌾𑌶𑍍𑌯𑌪𑌗𑍋𑌤𑍍𑌰𑌾𑌯 𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌃 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌦𑌾𑌸𑌨𑌿𑌷𑍍𑌣𑌾𑌤𑌃 𑌸𑌦𑌾𑌚𑌾𑌰𑌸𑌮𑍍𑌪𑌨𑍍𑌨𑌃 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌮𑌹𑌾𑌶𑌯 𑌇𑌤𑌿, 𑌸𑌹𑌕𑌾𑌰𑍀 𑌚𑌾𑌸𑍍𑌯 𑌤𑌾𑌦𑍃𑌶 𑌏𑌵 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌮𑌣𑌿𑌃 𑌶𑍍𑌰𑍀𑌨𑌿𑌵𑌾𑌸𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌃 𑌇𑌤𑌿 𑌚 𑌨𑌿𑌵𑍇𑌦𑌨𑍇𑌨𑍈𑌵, 𑌮𑌨𑍋𑌪𑌯𑍁𑌕𑍍𑌤𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑌿𑌵𑌰𑌣𑌾𑌮𑌾𑌨𑍍𑌯 𑌪𑌰𑌿𑌶𑍍𑌰𑌮𑌸𑍍𑌯 । 𑌅𑌤𑍍𑌰 𑌚 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰, 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯 𑌉𑌪𑍋𑌦𑍍𑌘𑌾𑌤𑍇 𑌚 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌿𑌤𑌾 𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑌿𑌸𑌰𑌣𑌿𑌃, 𑌅𑌹𑌿𑌯𑌾𑌂𑌕𑍇𑌤𑍍𑌰𑌾𑌦𑍍𑌵𑍍𑌯𑌷𑍍𑌯𑌮𑌾𑌣𑌾𑌂 𑌮𑌨𑍋𑌹𑍃𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑌿𑌵𑍇𑌦𑌤𑌾𑌂 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌸𑌮𑍍𑌪𑌾𑌦𑌯𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌨𑌿 𑌚𑌾𑌤𑍍𑌰 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌣𑌿 𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌯𑍋𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌣𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 𑌶𑍍𑌰𑍂𑌯𑌨𑍍𑌤𑍇 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌦𑌿𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌸𑌮𑍍𑌪𑌨𑍍𑌨𑌾 𑌚 𑌸𑌨𑍍𑌤𑌿 𑌸𑌕𑌲𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌪𑌿 𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑍋 𑌜𑌨𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑍍𑌯𑍇 ॥

𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑌹𑌾𑌶𑌯𑌾𑌦𑍇𑌶𑌂 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑍇𑌨𑌾𑌸𑍍𑌮𑌂 𑌶𑍍𑌰𑍀𑌪𑌾𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌭𑍇𑌦𑌂 𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌵𑍇𑌕𑌯𑍋𑌗𑍍𑌯𑌂, 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰 𑌮𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌧𑍁𑌰𑍇 𑌪𑍍𑌰𑌯𑌤𑍍𑌨𑌸𑌮𑍍𑌪𑌾𑌦𑌨𑌂 𑌶𑍍𑌰𑍀𑌤𑌦𑌨𑍁𑌗𑌤𑌵𑌾𑌨𑌸𑍍𑌮𑌿 — 𑌯𑌦𑍍𑌤𑍍𑌰 𑌸𑌪𑌾𑌤𑍍𑌰𑍀𑌯 𑌪𑍍𑌰𑌰𑌸𑌿𑌕 𑌏𑌵𑌾𑌯𑍁𑌃 𑌪𑌰𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌃, 𑌕𑍃𑌤𑌾 𑌚 𑌯𑌥𑌾𑌯𑌥 𑌸𑌨𑍍𑌦𑍇𑌹𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑌿𑌤𑌿 ।

𑌤𑌦𑌤𑍍𑌰, 𑌵𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑌸𑌿𑌦𑍍𑌧𑌿, 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌾𑌪𑌿 𑌨𑍍𑌯𑍂𑌨𑌤𑌾, 𑌯𑌾 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍 𑌪𑌰𑌿𑌹𑌰𑌣𑍀𑌯𑌾 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 । 𑌅𑌪𑌿 𑌚 𑌮𑌹𑌤𑍀 𑌗𑍁𑌣𑌵𑍃𑌦𑍍𑌧𑌿𑌃, 𑌯𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌚 𑌸𑍍𑌵𑌾𑌸𑍍𑌥𑍍𑌯𑌾𑌯 𑌭𑌵𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑌾𑌣𑌾𑌂 𑌮𑌾𑌸𑌮𑍍 । 𑌤𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌯 𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑍇𑌣 𑌵𑌿𑌵𑌰𑌣𑌾𑌗𑍍𑌰𑌹𑍇𑌣 𑌪𑌰𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑍇𑌨 𑌯𑌨𑍍𑌤𑍍𑌰𑌃 𑌸𑌹𑍃𑌦𑌯𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 𑌸𑍌𑌹𑍃𑌦𑌂 𑌸𑌮𑍁𑌪𑌶𑍍𑌰𑌂 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌦𑍍𑌵𑍈𑌤𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯, 𑌕𑍃𑌤𑌜𑍍𑌞𑌤𑌾𑌕𑍃𑌤𑌾𑌰𑍍𑌥𑌤𑌾𑌸𑍍𑌵𑌾𑌦𑌪𑌕𑍍𑌷𑌿𑌤𑍍𑌵𑌾 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌂 𑌸𑌾𑌨𑌨𑍍𑌦𑌯𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌯𑌶𑌯𑍇 ॥

𑌰𑌾. 𑌚. 𑌵𑌿. 𑌕𑍃𑌷𑍍𑌣𑌮𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌃

ஸ்ரீ:

# முன்னுரை.

—ooo—

( பாஷாபாரததுரந்தரர், மஹாமஹோபாத்தியாயர்,
**ம. வீ. இராமாநுஜாசார்யஸ்வாமி**
அருளிச்செய்தது.)

---

வேதார்த்தத்தை நிச்சயிக்கவந்தநூல்களுள் **ஸ்ரீமத்ராமாயணம்** மிகச் சிறந்த பிரமாணமானதென்றும், தத்வஹித புருஷார்த்தங்களை உள்ளங்கை நெல்லிக்கனிபோல நன்கு விளக்குவதென்றும் பெரியோர் கூறுவர்.

ராமாயணம் படிப்போர் கேட்போர்களுக்குப் போக மோக்ஷங்களை அளிக்கவல்லதென்பது ஹிந்துமதத்தினர் யாவராலும் கருத்துவேறுபாடின்றி ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மை. இப்படி ஸர்வஸம்மதமாக ஒப்புக்கொள்ளப்பட்ட நூல் வேறில்லை. ஹிந்து குடும்பங்களில் ராமாயணத்தைப் படிப்பதும் படிப்பித்துக்கேட்பதும் வழக்கத்திலிருப்பது யாவரும் அறிந்தது. இதனைப் படிப்பதாலும் கேட்பதாலும் அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் உண்டாகும் என்னும் நம்பிக்கை நம்மவர்க்குள் உறுதியாயிருக்கிறது. இதன்பொருளை அறிந்துகொள்ளும் சக்தியில்லாத பலர் இதனைப் படிப்பதனாலேயே தமக்கு நன்மை உண்டாகும் என்னும் நம்பிக்கையுடன் இதனை நாள்தோறும் நியமமாகப் பாராயணம் பண்ணிவருதலைப் பார்க்கிறோம்.

'ராம' நாமம் தனிப்பெருஞ்சிறப்பு வாய்ந்ததென்பது பல அறிஞர்களுடைய கொள்கை.

> "நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
> தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
> சென்மமு மரணமு மின்றித் தீருமே
> இம்மையே ராமவென் றிரண்டெ ழுத்தினால்"

என்னும் கம்பநாட்டாழ்வார் பாசுரமும் அக்கொள்கைக்கு ஓர் ஆதாரமாகும். இத்தகைய பெருமைகளையெல்லாம் திருவுளத்திற்கொண்டன்றோ, "கற்பார் இராம பிரானை யல்லால் மற்றுங் கற்பரோ" என்று ஆழ்வாரும் அருளிச்செய்தார்.

ஸ்ரீமத் ராமாயணம் ஸகல தர்மங்களையும் நீதிகளையும் மனி
தர்கள் அறிந்துகொள்ளவேண்டிய மற்ற விஷயங்களையும் தெரி
விக்கிற நூலாதலால் ஒவ்வொருவரும் இதனைப் படித்துப் பயன்
பெறுதல் அத்தியாவசியமாகும்.

மிக்க பெருமைவாய்ந்ததும் புண்யத்தைத் தருவதுமாகிய
ராம சரிதையை வால்மீகிமகரிஷி ஆதியில் வடமொழியில் சொற்
சுவை பொருட்சுவைகள் ததும்பப் பாடியருளினர். அது
வடமொழிவல்லார்க்கன்றி ஏனையோர்க்குப் பயன்படாமையி்ன்,
அறிஞர் சிலர் அதனைத் தென்மொழியாகிய தமிழிலே மொழி
பெயர்த்து வெளியிடலாயினர்.

ராமாயணம், ராமசரிதங்கூறும் அடைவிலே, நாட்டுவரு
ணனை, நகரவருணனை, மலைவருணனை, காலவருணனை முதலிய
வருணனைகளும், சில தேவர்கள் ரிஷிகள் முதலாயினோர்களுடைய
வரலாறுகளும் கலந்து பெருகியிருத்தலாலும், குடும்பப் பாது
காப்புக்கு உபாயம் தேடுவதற்கே பொழுது போதாமல்
இருக்கிற இக்காலத்தினருக்கு அவ்வளவு பெரியநூலைப் படிப்
பதில் ஊக்கம் உண்டாகாமையாலும், அவர்களுக்கு உபயோக
மாகும்படி சுருக்கமாகவும் முக்கிய கதைப்பகுதி சிறிதும் விடப்
படாமலும் சுவைக்குறைவு இல்லாமலும் ஒரு மொழிபெயர்ப்பு
இல்லாதிருந்தமை தமிழ்நாட்டிற்கு ஒரு குறையாய் இருந்தது.

அக்குறையை நீக்கக்கருதி, நம் அரசாங்கத்தில் பெரிய
பதவிகளைத் திருத்தமுற வகித்தவர்களும், தேசநன்மைக்காப்
பல வருஷங்கள் அரிய பாடுபட்டவர்களும், உபயவேதாந்த
ப்ரவர்த்தகர்களும், இளமை தொடங்கி நல்லொழுக்கத்தை
உயிரெனக்கொண்டொழுகுபவர்களும், பரமசீலர்களும், திருக்
குடந்தைமாநகருக்கு ஒரு திலகமாய் விளங்குபவர்களுமாகிய
திவான்பகதூர் ஸ்ரீமான் V. K. ராமாநுஜாசாரியஸ்வாமிகளவர்கள்
வடமொழி வால்மீகி ராமாயணத்தைச் சருக்கந்தோறும் கதை
ஒருசிறிதும் விடாமலும் முதனூலின் அழகும் சுவையும் குறைவு
படாமலும் மொழிபெயர்த்து ராமாயணஸாரம் என்னும் பெய
ரால் வெளியிட்டு உதவியிருக்கிறார்கள். இது ராமாயணசரிதத்
தையைப் படிக்கவிரும்புபவர்களுக்கு ஒரு நல்விருந்தாகும் என்பதில்
ஐயமில்லை.

[ ஸ்ரீமான் V. K. ராமாநுஜாசாரியஸ்வாமிகளவர்களுக்கு இப்போது திருநக்ஷத்திரம் 85 ஆகிறது. திருமேனி அசக்தியோ மிக அதிகம். நேத்ர பாடவம் மிகக்குறைவு. தாமே படிக்கவும் எழுதவும் சக்தியில்லை. இந்தக் காரியங்களை நம்பிக்கையுள்ள ஸகாயர்களைக்கொண்டே நடத்திக்கொள்கிறார்கள். இந்த நிலைமையில், அவர்கள் சரீரச்ரமத்தையும் பொருட்செலவையும் சிறிதும் பொருட்படுத்தாமல், லோகோபகாரம் ஒன்றையே பயனாகக் கருதிப் பல அரியநூல்களை எழுதி வெளியிட்டிருக்கிறார்கள்; இடையிடையே, ஸ்ரீபாஷ்யம் முதலிய கிரந்தங்களைப் பாடஞ் சொல்லியும் வருகிறார்கள். அவர்களுடைய புத்திவன்மையையும் ஊக்கமிகுதியையும் என்னவென்று பாராட்டுவது! இன்னும் ஒரு விஷயத்தை இங்கே தெரிவிக்க விரும்புகிறேன். ஸ்ரீமான் ஆசாரியரவர்களுடைய ஸௌ. தேவியாரவர்களுக்குப் பிராயம் இப்பொழுது எண்பத்துநான்கு. இவர்கள் வற்றி என்பெழுந்து மிக்க தளர்ச்சியுற்ற திருமேனியுடையவராயிருந்தும் பதிசுச்ரூஷையில் சிறிதும் தளர்ச்சியடைவதில்லை. ஸ்ரீமான் ஆசாரியரவர்களுக்கு வேண்டிய எல்லாக் காரியங்களையும் இவர்களே செய்துவருகிறார்கள். ஆசாரியரவர்களுக்கு நீராட்டத்துக்குக் காவிரியிலிருந்து தீர்த்தம் கொணர்தல் வஸ்திரம் துவைத்தல் முதலிய ஸகல கைங்கரியங்களையும் இவர்களே செய்கிறார்கள். தம்பதிகளுக்குள் இருக்கும் அன்புக்கு அளவில்லை. இப்படிப்பட்ட தாம்பத்தியம் நூல்களிற் கேட்கப்படலாமேயன்றி உலகத்திற் காண்டல் மிகவும் அரிது. இவ்விருவர்களையும் நான் காணுந்தோறும் ‘ இவர்கள் என்ன புண்ணியஞ்செய்தார்களோ ’ என்று வியப்பதுண்டு. இந்த விஷயத்தை இங்கே விவரித்தது, இதனைப் படிக்கும் இளைஞர்களுக்கு ஊக்கம் உண்டாவதற்காக.]

ஆசார்யரவர்கள் வெளியிட்டிருக்கிற நூல்களாவன :—

## தமிழ்.

1. ரஹஸ்யத்ரயஸாரச் சுருக்கம்.
2. கீதாபாஷ்யம்.
3. ச்ரௌதம்.
4. அதிகாரஸங்கிரகம் (பாட்டு.)
5. ௸ சுலோகம்.

6. ரஹஸ்யத்ரயஸாரத்தின் பிரமாணத்திரட்டு.
7. நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழி (உரையுடன்.
8. யதீந்த்ரமததீபிகை. ,,
9. அதிகரணஸாராவளி. ,,

# English.

1. Sri Bhashyam.
2. Sri Bhagavatam.
3. Three Tatvas.
4. Gitartha Sangraham.
5. Elements of Vedic Religion.

இவையெல்லாம் ஒவ்வொரு வகையார்க்கே உபயோகமாவன இந்த ராமாயணஸாரமோ அப்படியன்று. எல்லாராலும் விரும்பி ஏற்றுக்கொள்ளும்படியான தகுதிவாய்ந்தது.

ஸ்ரீமான் ஆசாரியாவர்கள் இந்நூலை எழுதி வெளியிடுவதற்கு ஸ்கூல் டிப்டி இன்ஸ்பெக்டராக இருந்தவர்களும், தம் வாழ்நாளை வீழ்நாளாக்காமல் ஸ்ரீராம கைங்கர்யத்தையே பொழுதுபோக்கா கக்கொண்டவர்களுமான ஸ்ரீமான் V. விஜயராகவபாட்டாசாரிய ஸ்வாமிகளவர்கள் தூண்டுகோலாயிருந்து, இதனை நிறைவேறச் செய்து தமிழுலகிற்குப் பேருதவிசெய்திருக்கிறார்கள், அவர்களு டைய உபகாரத்தன்மை என்றும் மறக்கற்பாலதன்று. அவர்கள் இவ்வூர் ஸ்ரீராமன் திருக்கோயில் பிராகாரத்திலே எழுதப்படுகிற சித்திரராமாயண கைங்கர்யத்தைத் தலைக்கட்டிவைக்க உழைத்து முயற்சிசெய்துவருகிறார்கள்; இதனையும் வேறுசில ஸத்கைங்கர்யா களையும் இந்தப் புஸ்தக விற்பனையால்வரும் பொருளைக்கொண்டு நடத்த உத்தேசித்திருக்கிறார்கள். ஆஸ்திக ஸஜ்ஜனர்கள் இந்தப் புஸ்தகத்தைத் தாங்கள் வாங்கியும் தங்கள் நண்பர்களைக்கொண்டு வாங்கச்செய்தும் இந்த ஸத்காரியங்களை நிறைவேற்ற வேண்டு கிறேன். இப்படிச் செய்வதனால், தாங்கள் இந்தப் புஸ்தகத்தைப் படித்துப் பெரும்பயன் அடைவதோடு ஸத்கைங்கர்யங்களுக்கு உதவிசெய்தவர்களுமாவார்கள்.

திருக்குடந்தை. 22—7—36.

ம. வீ. இராமநுஜாசாரியர்,
எடிட்டர், தமிழ் மகாபாரதம்.

# FOREWORD.

(By Dewan Bahadur K. S. Ramaswami Sastrial.)



This IS NOT a foreword but a tribute. I feel impelled to offer it because my reverence for the author is so great that it gives me no rest till I lay this humble token and tribute of admiration at his feet. He held high office and was later on a tribune of the people and is now a valiant soldier of God. With my own ears I heard the late Sir T. Sadasiva Iyer say once at Sri-Rangam that to live like Dewan Bahadur V. K. Ramanujachariar was a consummation most devoutely to be wished. The great author's son-in-law Mr. V. Vijayaraghavachariar is a sincere devotee of Sri Rama and is giving this work **Ramayana Saram** to the world. I feel it to be a privilege to mingle my name with theirs and that is the secret of my mustering up courage to write these words.

Mahatma Gandhi has made the word Râma Rájya a word to conjure with today. From end to end in India our nerves tingle and our blood leaps and courses like a cataract when we hear the name of Râma. What is the secret of this magic ? Why do we want Râma Râjya back again ? No one seems to want Agammennon or Aeneas back again? " Everyone says: Let the dead past bury its dead." But the past which incarnated itself in the Rámáyana is not the past alone. It is Past and Present and Future rolled into one. In fact it is an eternal Present. It is said that Time and Tide wait for no

man. But Time and Tide not only waited but als vanished so far as Râma is concerned. Why did thi miracle happen ?

Why should I reply ? The Ramâyana itsel replies. It begins with the quest of the perfect mar It ends with the description of the perfect God. A sage asks another sage about the perfect man. A the Gods,–Brahma and Siva included–reply by re vealing the perfect God who came into the earth i a human form to show the human way to the divin goal. The Râmâyana begins with the thirst to knov a Nara, and concludes by eventually knowing an showing Nârâyana. We have in it a game of hid and seek-the seeking Nara and the hiding Nârâyana Or you may put it the other way also. You have th hidden Nara and the seeking Nârâyana. In th Brahma Sutras, (1, 3, 19) we are shown the fusio point where the freed and blissful soul and the ever blissful Oversoul meet and mingle in bliss.

As for Râma Râjya, let us not forget that th work begins with Dasaratha Râjya and then describe Râvana Râjya and proceeds to glorify Rama Râjya Is it not an indication to us to attain Dasaratha Rajy first and then avoid the pitfall of Râvana Râjy and eventuallay attain Rama Râjya. Dasarath Râjya was an ethical State. Râvana Râjya was hedonistic state. Ràma Ràjya was a divine stat The poem says :

[illegible] |
[illegible] ||

Every citizen looked to Ràma as his ideal and h realisation was so intense and thorough that he b

came Ràma. Is there any wonder, then, that all the citizens became worthy of the Civitas Dei by attaining a preliminary fitness to belong to the Civitas Humani after rising above the temptations of the Civitas Diaboli ? Is there any wonder that they were all taken to Paradise ? That is the best State wherein men and women live in such a way as fits them to become divine.

There is an old and venerable controversy in this country as to whether the Ràmáyana is a Kávya or a Sàstra. There is another venerable controversy as to whether it is a Dharma Sástra or a Saranágathi Sástra or a Moksha Sâstra. It is very one of these and all of these. As a poet created it, it is a poem. As a saint created it, it is a Sàstra. As a man of purity composed it, it is a Dharma Sàstra or a scripture of the good life. As a man of piety composed it, it is a Saranàgathi Sàstra or a scripture of surrender. As a man of renunciation composed it, it is a Moksha Sàstra or a scripture of liberation. The poem says that like the ocean it is the abode of gems ஸமுத்ர இவ ரத்நாட்ய:. It calls itself as KÁVYAM and CHARITAM and ÁKHYANAM. It calls itself also as GEETHAM and so can well be called the Rama Geetham, and it specially refers to its being sweet when read and sung பாட்யே கேயே ச மதுரம். It refers also to its shining with all the Rasas, and it deals with the Lord who is himself called in the Vedas as Rasa. The Ràmáyana is the Adi-Kávya and Valmiki is the Ádi-Kavi. He is the Poet's poet and it is the poem of poems. பரங்கவீநாமாதாரம் He is a Saint's saint and it is the scripture of scriptures.

We are glad that in this work the autho has followed Válmiki with the fidelity and loyal lov with which Vàlmiki followed Nárada. Most ex pounders of the Rámáyana stray into the side-walk and flowery arbours of other Rámáyanas in Sanskri and in the Vernaculars and even into Dramas and prc bably would hereafter stray also into the Cinem: Studios abandoning sunlight for the fierce pitiles glare of the electric light. All such endeavour is bu a delusion and a snare. It will be well for us if w walk along Vàlmiki's royal road–Rája Márga–as th author has done.

It may be asked why I have written this un usual kind of foreword, saying but little about th great work of the author. It is because I feel trepidation–a palpitation of the heart so to say–whe: I assay to reach and feel and show the many swee fruits on the tree which I, like a dwarf with lifte hands, cannot possibly reach.

പ്രാംശുലഭ്യേഫലേ ലോഭാദുദ്ബാഹുരിവ വാമനഃ ॥

I leave the reader to go straight to the author an find out for himself how fully the author has caugh and has been caught by the spirit of the Ramayana The author has given us a simple and clear narrativ through which Dharma shines out the suprem Dharma of seeking God as refuge and saviour shir ing out brightest of all.

*K. S. Ramaswami Sastri,*

Retired District and Sessions Judg

---

# விஷயஸூசிகை.

## பாலகாண்டம்.

பாரா. பக்கம்.

அவதாரிகை.

## அயோத்யாகாண்டம்.

பாரா. பக்கம்.

பாரா. பக்கம்.

பாரா. பக்கம்.

## ஆரண்யகாண்டம்.

# கிஷ்கிந்தாகாண்டம்.

பாரா. பக்கம்.

பாரா. பக்கம்.

## ஸுந்தரகாண்டம்.

பாரா. பக்கம்.

---

## யுத்தகாண்டம்.

---

| பாரா. | | பக்கம். |
| --- | --- | --- |

பாரா. பக்கம்.

## அநுபந்தம்.



ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ।
ஸ்ரீ [illegible]
ஸ்ரீ [illegible] நம: ॥

# அவதாரிகை.

ஸ்ரீமத் ராமாயணமும் மஹாபாரதமும் இதிஹாஸங்கள் என்று சொல்லப்படுகின்றன. இதிஹாஸம் என்கிற பதத்துக்கு "இப்படியன்றோ இதிலிருப்பது" என்பது பொருள். ஆகையால் இதிஹாஸம் ஒரு மஹாபுருஷன் அவதாரம்செய்து இங்கே இருந்தவரையில் அவன் செய்த வியாபாரங்களையும், அவனுடைய நல்ல குணங்களையும் காட்டுகிற ஓர் க்ரந்தம். மஹாபாரதத்துக்கு நாயகன் பாண்டவர்களில் மூத்தவனான தர்மபுத்ரன். அவனுடைய பொறுமையையும், அவனுக்குத் தர்மத்தில் இருந்த ருசியையும், பாபம் செய்வதில் பயத்தையும், தனக்கு விரோதங்களைச் செய்த பெரியதகப்பனான த்ருதராஷ்டிரனிடத்திலும் கௌரவமுள்ளவனாய் அவன் சொன்னதை ஸந்தோஷத்துடன் செய்ததையும் மஹாபாரதம் காட்டுகிறது. மேலும், அண்ணன் தம்பிகளோ, அண்ணன் தம்பி பிள்ளைகளோ சண்டைசெய்தால், அவர்கள் எல்லோரும் நாசம் அடைவார்கள் என்பதும், ஒருவன் தனக்கு சக்தியில்லாமையை அறிந்து பகவானையே தனக்குத் துணையாக எண்ணி, அவனிடத்தில் பக்தி செய்தால், அவனுக்கு எல்லாவிதத்திலும் க்ஷேமம் உண்டாகும் என்பதும், ச்ருதி ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்ட பகவானுடைய ஆஜ்ஞையை மீறிக் கெட்டபுத்தி உள்ளவனும், நல்லவர்களிடத்தில் அஸூயையுள்ளவனும், பெரியோர்கள் வார்த்தையைக் கேளாதவனுமாக ஒருவனிருந்தால், அவன் குடும்பத்துடன் நாசத்தை அடைவன் என்பதும், தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் சண்டையுண்டானால் தர்மமே ஜயிக்கும் என்பதும் பாரதத்தினால் தெளிவாய் விளங்கும்.

2. ஸ்ரீமத் ராமாயணத்துக்கு நாயகன், தேவர்கள் வேண்டு கோளின்படி தசரத சக்ரவர்த்தியின் திருமகனாய் அவதரித்த ராமன். அவன் தன் சிறு தாயாருடைய விருப்பத்தை நிறை வேற்றத் தண்டகாரண்யத்துக்குப்போய், அங்குள்ள ருஷிகளை ராக்ஷஸர்களிடமிருந்து ரக்ஷித்துக்கொண்டிருக்கையில், அவன் ஆச்ரமத்திலில்லாதவேளையில் அவன் மனைவியான ஸீதையை ராக்ஷஸராஜாவான ராவணன் கொண்டுபோய்த் தன் நகரமான லங்கையில் வைத்து, அவளைத் தன்வசப்படுத்திக்கொள்ளப் பல முயற்சிகள் செய்தான். அவைகள் பயன்படவில்லை. ராமன் அவளைத் தேடிக்கொண்டுபோய், ஸுக்ரீவனுடன் ஸக்யம் செய்து கொண்டு, அவன் தமையனை வாலியைக் கொன்று, ஸமுத்ரத்தில் அணைகட்டி, லங்கைக்குப்போய், ராவணனைத் தம்பியுடனும் பிள்ளைகளுடனும் பந்துக்களுடனும் மந்திரிகளுடனும் கொன்று, அவன் தம்பி விபீஷணனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து, ஸீதையுடன் தன் நகரமான அயோத்திக்குத் திரும்பிப்போய்ப் பட்டாபிஷேகம் செய்துகொண்டு ஜனங்களை வெகுகாலம் பரிபா லனம் பண்ணிக்கொண்டிருந்தான்.

3. ஸ்ரீராமன் ராக்ஷஸர்களை ஸம்ஹாரம் பண்ணுவதற்காக வும், அவர்களால் ஹிம்ஸிக்கப்பட்ட தேவர்களையும் ருஷிகளையும் ப்ரஜைகளையும் ரக்ஷிப்பதற்காகவும் தேவர்களால் வேண்டப் பட்டு அவதாரம் செய்தான். இந்த முக்யமான காரியங்களை ஒருபோதும் அவன் மறக்கவில்லை. ப்ரம்மாவின் வரத்தினால், ராவ ணனுக்கு மனிதர்களைத் தவிர வேறு ஒருவராலும் வதம் வராது என்பதை அறிந்து, ப்ரம்மாவின் வரத்துக்கு கௌரவம்செய்து, தன்னை மனிதனாகக் காட்டிக்கொண்டு, தகுந்த வயது வருகிற வரையில் ஒரு வியாஜத்தை எதிர்பார்த்துக்கொண்டு, அயோத்தி யில் இருந்தான். பதினாறுவதுவயதில் விசுவாமித்ரனின் யாக ரக்ஷ ணத்தை வியாஜமாகக்கொண்டு, ஸுபாஹு முதலான ராக்ஷஸர் களைக் கொன்று, மாரீசனைப் பாணத்தாலே ஸமுத்ரத்தில் தள்ளி விட்டான். கைகேயி கேட்ட வரங்களை வியாஜமாகக்கொண்டு தண்டகாரண்யத்துக்குச் சென்றான். ஸீதையும் "உனக்குமுன் னாலே போகிறேன்" என்று சொல்லி, அவனுடன் காட்டுக்குப் போனாள். அவள் கருத்து—"ராவணனால் கொண்டுபோகப்பட்டு நான் லங்கைக்கு முன்னாலே போகிறேன். நீர் பின்னால் வந்து

வந்தகாரியத்தை முடிக்கவேண்டும்" என்பது. ருஷிகளுடைய சரணுகதியை வியாஜமாகக்கொண்டு, அவர்களின் ஆச்ரமம் ஒவ்வொன்றுக்கும்போய், அவைகளில் கொஞ்சகாலமிருந்து, அவர்களுக்கு ஹிம்ஸைசெய்த ராக்ஷஸர்களைக் கொன்ருன். சூர்ப்பனகைக்கு வைரூப்யத்தைச் செய்து, அந்த வழியாக ஜனஸ்தானத்திலிருந்த ராக்ஷஸர்களை ஸம்ஹாரம் பண்ணினுன். ஸீதையை ராவணன் கொண்டுபோனதை வியாஜமாக வைத்துக்கொண்டு, வானரஸேனையுடன் லங்கைக்குப்போய், ராவணனைக் குடும்பத்துடனும் அவனை அடுத்தவர்களுடனும் ஸம்ஹாரம் செய்தான். இப்படித் தேவர்களின் காரியத்தைத் முடித்தான். இதுவே ராமாயணத்தின் விஷயம் என்பதற்கு அடையாளங்கள் இருக்கின்றன. தண்டகாரண்யத்தில் இருந்த ருஷிகள் சரணுகதி பண்ணினபோது "இந்தக் கார்யத்தை நானே செய்யவேண்டியவன், அதற்கு யதூஹயா (தற்செயலாய்) பித்ருவாக்யபரிபாலனம் என்கிற வியாஜம் நேர்ந்தது" என்று ராமன் சொன்னுன். ஸுக்கிரீவனுக்கும் ராமனுக்கும் ஸக்கியம் உண்டானபோது ப்ரம்மாவும், க்ருதம் கார்யம் (நான் பகவானை வேண்டினகாரியம் செய்யப்பட்டது) என்று ஸந்தோஷப்பட்டான்.

4. இந்தக் கதையைச்சொல்லி வால்மீகிமஹர்ஷி வேதம் சொல்லுகிற தர்மங்களை வெளியிடுகிருர் :—

## ஸாமான்ய தர்மங்கள்.

(1) பிள்ளையின் தர்மம் :—பிள்ளை தகப்பன் சொன்னதை அனிஷ்டமாயிருந்தாலும் கேட்கவேண்டும். இஷ்டமானதை எந்தப் பிள்ளையும் கேட்பன். அனிஷ்டமானதைக் கேட்பது அரிது. ராமன் தகப்பனுன தசரதனுடைய அபிப்ராயத்தை அறிந்து ஸந்தோஷமாய்க் காட்டுக்குப்போனுன். இஃது எவ்வளவு கஷ்டமானது என்பதைக் காட்டுவதற்காக, அவனை யுவராஜாவாகப் பட்டாபிஷேகம் பண்ணத் தசரதன் ஆசைப்பட்டுச் செய்த ஏற்பாடுகளை விரிவாய் வர்ணிக்கிருர். இது கைக்கெட்டினது வாய்க்கு எட்டவில்லை என்பதுபோலாயிற்று.

(2) ராஜாவின் தர்மம் :—தண்டகாரண்யவாஸிகளான ருஷிகளுக்கு ராமன் அபயப்ரதானம் பண்ணினபோது ஸாதுக்களை ரக்ஷிப்பது ராஜாக்களின் கடமையென்றும், வாலி, தன்னை நிந்தித்தபோது பதில் சொல்லுகையில், ராஜா தன் தேசத்திலிருந்து அபராதம் பண்ணினவர்களைத் தண்டிக்கவேண்டியது என்றும், அப்படிச் செய்யாவிட்டால், அவன் குற்றவாளியாவான் என்றும், தண்டித்தால், தண்டிக்கப்பட்டவர்கள் தோஷம் போய் அவர்கள் சுத்தர்களாக ஆகி நல்லகதியை அடைவார்கள் என்றும் சொல்லி ராஜதர்மத்தைக் காட்டினான்.

(3) பர்த்தாவின் தர்மம் :—ஸீதையைவிட்டுப்பிரிந்து ராமன் துக்கப்பட்டு, அவளைத் தேடிக்கொண்டுபோய், ராவணனைக் கொன்று அவளைத் திருப்பி அழைத்துவந்தான். இதனால், பர்த்தா தன் மனைவியை எவ்விதத்தாலும் ரக்ஷிக்கவேண்டும் என்பது காட்டப்பட்டது. ராமன் துக்கப்பட்டது அபிநயம் மாத்ரம்.

(4) நல்ல பார்யையின் தர்மம் :—பார்யை புருஷனுடன் கூடவே இருக்கவேண்டும் என்று ஆசைப்படவேண்டும். அவனை விட்டுப் பிரிந்தால் மிகவும் துக்கப்பட்டு எப்போது அவனுடன் சேரப்போகிறோம் என்று ஆவலுள்ளவளாயிருக்கவேண்டும். தன் பர்த்தாவைத் தவிர வேறு புருஷனை மனதால்கூட தொடக்கூடாது. பர்த்தாவே தன்னை ரக்ஷிக்கக்கடவன் என்றும், வேறு ஒருவனும் தனக்குத் தஞ்சம் அல்லன் என்றும் தீர்மானத்துடன் இருக்கவேண்டும். இதை ஸீதை நன்றாக வெளியிட்டாள். ராமன் காட்டுக்குப் போகும்போது "நான் கூட வருவேன்" என்று நிர்ப்பந்தம் செய்தாள். ராவணன் தன்னைக் கொண்டுபோனபோது துக்கஸமுத்ரத்தில் முழுகி ஒன்றையும் பாராமல் ராமனிடத்திலேயே மனத்தைவைத்துக் கொண்டிருந்தாள். ஹநுமான் தன்னை ஸ்ரீராமனிடம் அழைத்துக்கொண்டுபோவதாகச் சொன்னபோது பர்த்தாவினிடத்தில் இருக்கும் பக்தியைமுன்னிட்டு ராமனைத்தவிர வேறு ஒருவனுடைய உடம்பையும் தொடமாட்டேன் என்று சொன்னாள். இது ஹநுமானுக்குத் தெரியும். இந்தத் தர்மத்தை வெளியிட ஹநுமான் அப்படிக் கேட்டது.

(5) பகவானுக்கும் பாகவதர்களுக்கும் சேஷமாயிருப்பது :— லக்ஷ்மணனும் பரதனும் ஸ்ரீராமனிடத்தில் மிகுந்த பக்தியுள்ளவர்களாய், தங்களுடைய ஸுகத்தைக் கொஞ்சமும் தேடாமல் அவனுக்குக் கைங்கர்யம்செய்து, அவனை ஸந்தோஷப்படுத்துவதே தங்களுக்கு ஸ்வரூபம் என்று எண்ணி, அப்படியே நடந்துவந்தார்கள். இரண்டுபேர்களும் மஹாபாகவதர்கள். அவர்களில் லக்ஷ்மணன் எம்பெருமானைவிட்டு ஒருக்ஷணமும் பிரியஸஹியாதவன். பரதன் ஸ்ரீராமன் சொன்னதைத் தடுக்கக்கூடாது என்று அவன் பிரிவைப் பொறுத்துக்கொண்டு நந்திக்ராமத்தில் இருந்து, ஸ்ரீராமனுடைய பாதுகைகளுக்குத் தாஸனாக இருந்து ராஜ்யத்தைப் பரிபாலனம் பண்ணினான். இப்படி பாகவதர்களில் இரண்டு வகுப்புக்கள் உண்டு. எவன் தன்னைப் பகவானுக்குச் சேஷமாக எண்ணிக்கொண்டு அவன் கைங்கரியங்களைச் செய்கிறானோ, அவன் பாகவதர்களுக்கும் சேஷனாயிருக்கவேண்டும். ஸந்தோஷமாய் அவர்களுக்குக் கைங்கர்யங்களைச் செய்யவேண்டும் என்பதை சத்ருக்னன் தன் அநுஷ்டானத்தாலே காட்டினான்.

(6) மந்திரியின் தர்மம் :—ஹநுமான் நல்லமந்திரி எப்படி இருக்கவேண்டுமென்பதைத் தன் நடத்தையால் வெளியிட்டான். ஸுக்கிரீவன் ஸ்ரீராமனைக்கண்டு பயந்து ஓடினபோது, பயத்துக்குக் காரணமில்லையென்று அவனைத் தேற்றினான். ஸுக்ரீவன், மழைக்காலம் போயும் குடிமயக்கத்தாலே அறிவையிழந்து ஸ்ரீராமன் காரியத்தைச் செய்யாமல் இருந்தபோது, ஹநுமான் அவன் குற்றத்தை நிரூபணம்செய்து, வானரக்கூட்டங்களை வருவிக்க ஏற்பாடு செய்வித்தான். ஸீதையைத் தேடிப்போன அங்கதன் முதலானவர்கள் அவளைக் காணாமல் ப்ராயோபவேசம் பண்ணத் தீர்மானித்தபோது, தாரன் "இங்கேயே அங்கதனை ராஜாவாக வைத்துக்கொண்டு இருப்போம்" என்று துர்ப்புத்தி சொன்னான். ஹநுமான், அது சரியானது அன்று என்று நிரூபணம்செய்து, மறுபடியும் ஸீதையைத்தேட ப்ரயத்னம் செய்வித்தான். விபீஷணன் சரணாகதிபண்ணினபோது, "அவன் ராக்ஷஸன்; சத்ருவின் தம்பி; மித்ரன்போல் வந்திருக்கிறான்; அவனை ரக்ஷிக்கக்கூடாது" என்று ஸுக்ரீவன் முதலானவர்கள் சொன்னார்கள். அப்போது ஹநுமான் அவர்கள் சொன்னவை

களைக் கண்டித்து அவனை அங்கீகரிக்கவேண்டும் என்று சொன்னான். இது ஸ்ரீராமனுடைய அபிப்ராயத்துக்கு ஒத்திருந்தது.

(7) தூதனின் தர்மம் :— தூதனாக அனுப்பப்பட்டவன் எப்படித் தன் காரியத்தைச் செய்யவேண்டியது என்பதையும் ஹநுமான் உலகத்துக்கு விளக்கினான். தூதர்களில் மூன்றுவகை உண்டு; அதமன்—சொன்னதை முழுவதும் செய்யாதவன்; மத்யமன்—சொன்னதையே செய்கிறவன்; தெருவில் போகிற வண்டி என்னவண்டி என்று யஜமானன் கேட்டால், தூதன் நெல்வண்டி என்று சொல்லுகிறான்; எங்கேயிருந்து வருகிறது என்று கேட்டால், மறுபடியும்போய் விசாரிக்கிறான்; இப்படிப் பட்டவன் மத்யமன்; உத்தமன்—யஜமானன் சொன்னதை முழுவதும் முடித்துவிட்டு, யஜமானனுக்கு இஷ்டமாயிருக்கும் வியாபாரங்களையும் அதிகமாகச் செய்பவன். ஹநுமான் ஸீதை யைத்தேட அனுப்பப்பட்டான். அது முடிந்தது. பிறகு ராவணனுடைய பலத்தை அறிவதற்காக அசோகவனத்தை அழித்துத் தன்னுடன் சண்டைக்கு அனுப்பப்பட்டவர்களை எல்லாம் கொன்று, கயிற்றால் கட்டப்பட்டு ராவணனிடம்போய்த் தன்னை ஸுக்ரீவராஜாவின் தூதனாகச் சொல்லி, ஹிதத்தை உபதேசித்தான். சண்டை நடந்த காலத்தில் மிருதஸஞ்ஜீவினி என்கிற ஔஷதியைக் கொண்டுவர அனுப்பப்பட்டபோது, அந்த ஔஷதியிருக்கும் மலையையே கொண்டுவந்தான்.

(8) துர்ஜன ஸஹவாஸம் கூடாது :— ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகம் பண்ண ராஜா செய்த ஏற்பாடுகளைக்கண்டு, மந்தரை என்கிற கூனி கைகேயியினிடம் வந்து அதைத் தெரிவித்தாள். கைகேயி ஸந்தோஷப்பட்டுத் தன் கழுத்திலிருந்த முத்து மாலையை அவள் கழுத்தில் போட்டாள். அவள் கோபித்துக்கொண்டு, முத்துமாலையை எறிந்துவிட்டு, “உடனே உனக்குவரும் ஆபத்தை அறியவில்லையே; நீ, ராஜாவின் அபிமானமிருக்கிறது என்று கௌஸல்யையைப் பலவிதமாய் அவமானப்படுத்தியிருக்கிறாய். அவள் பிள்ளை ராஜாவானால், உனக்கும் உன் பிள்ளைக்கும் என்ன நேரிடும்?” என்று அவள் மனதைக் கலக்கினாள். “கோபகிருஹத்தில்போய்ப் படுத்திரு; ராஜா வந்து என்ன நல்லவார்த்தை சொன்னாலும், உனக்கு முன்னாலே அவன் கொடுப்பதாகச்

சொன்ன இரண்டு வரங்களைக் கொடுப்பதாகச் சொல்லுகிறவரை யில் பேசாதே ; ராமன் பதினான்குவர்ஷம் காட்டில் வஸிக்க வேண்டும் என்றும் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்துவைக்க வேண்டும் என்றும் இரண்டு வரங்களைக் கேள் ” என்று யுக்தியும் சொல்லிக்கொடுத்தாள். கைகேயியும் அவள் சொன்னபடியே செய்து இரண்டு வரங்களைப் பெற்றாள். இதனால் ஸாதுவுக்கு துர்ஜனனுடைய ஸஹவாஸம் கூடாது என்று காட்டப்படுகிறது.

(9) பகவத் கைங்கர்யத்தின் பலன் :—ஸம்பாதியும் ஜடாயுவும் ப்ராதாக்களான கழுகுகள். ஸம்பாதி வாக்கினால்மாத்திரம் ராமனுக்கு உதவிசெய்யக்கூடும் என்று சொல்லி ஸீதை லங்கையில் இருப்பதைச் சொன்னான். உடனே, போயிருந்த சிறகுகள் முளைத்தன. ஜடாயு தசரதனுக்குத் தோழனையும் ராமனிடத்தில் அபிமானமுள்ளவனாயுமிருந்து, ஸீதையைக்கொண்டு போன ராவணனுடன் சண்டைசெய்து உயிரை இழந்தான். அவன் உயர்ந்த லோகங்களை அடைந்தான். இதனால் பகவானுக்குச் செய்கிற கைங்கர்யம் வீணாய்ப்போகாது என்று காட்டப்படுகிறது.

(10) அயலானுடைய ஸொத்தை அபஹரித்துக்கொண்டும் வேண்டியவர்களும் பெரியோர்களும் சொன்னதைக் கேளாமலும் எவன் இருக்கிறானோ அவன் குடும்பத்தோடு நாசத்தை அடைவன் என்பது ராவணனுடைய விருத்தாந்தத்தால் விளங்கும்.

5. முமுக்ஷுவானவன் அறியவேண்டியவிஷயம் :—ராமன் ஸ்ரீமானான நாராயணன் ; ஸீதை ஜீவன் ; லங்கை அவன் உடம்பு ; ராவணன் அவன் மனது ; அவனுடைய பத்துத் தலைகள் ஜீவனுடைய பத்து இந்திரியங்கள் ; ஜீவன் தனக்கு ஸகாவாக ஹ்ருதயத்தில் இருக்கும் பகவானுடன் சேர்ந்திருக்கிறான். ப்ராரப்தகர்மத்தாலே அல்பவிஷயத்தில் சபலமிருந்தால் அவன் ஹார்த்தனை மறந்துவிடுகிறான். இது, ஸீதை மானைக்கண்டு ஆசைப்பட்டதால் காட்டப்படுகிறது. உடனே ராவணன் இவளைக் கொண்டுபோய்விட்டான். ராவணன் மனது ; அது ஜீவனைக் கொண்டுபோய்த் தன்வசத்தில் இருக்கும்படி செய்கிறது. பகவானும் “ ஐயோ ! விஷயங்களை ஆசைப்பட்டு ஜீவன்

என்னை விடுகிறானே" என்று வருத்தப்பட்டுத் தானும் விலகு கிறான். இதற்கு ஸீதையைக் காணாமல் துக்கப்பட்டது உதா ரணம். இப்படி விஷயத்தில் மனம் படிந்தவனை மனதும் இந்தி ரியங்களும் வேறுவிஷயங்களில் பலாத்காரமாய் இழுக்கின்றன. இதற்குப் பத்துத்தலையுள்ள ராவணன் உதாரணம். ஜீவனுக்கு விவேகம்வந்தால் விஷயங்களின் அநுபவத்தில் இருக்கும் தோஷ ங்களை அறிந்து, அவைகளை வெறுத்து, பகவானிடம் போக வேண்டும் என்று ஆசையுண்டாகும். ராவணன் சொன்ன பல விதமான ப்ரலோபனங்களைக் கேளாமல் அவனை த்ருணமாக எண்ணி, ராமனிடம் எப்போது போகப்போகிறோம் என்று இருந்த ஸீதை இதை வெளியிட்டாள். இப்படி ஒருவன் முமுக்ஷுவானவுடன் ஓர் ஆசாரியன் அவனிடம் வந்து அவன் ஸ்வரூபத்தையும், பகவானுடைய அழகையும் குணங்களையும், ஜீவனின் ஸ்வரூபத்துக்குப் பொருந்தின புருஷார்த்தத்தையும், அதற்குத்தகுந்த உபாயத்தையும் உபதேசிக்கிறான். இப்படியே ஹநுமான் ஸீதையிடம்வந்து ராமனுடைய இருப்பை அறி விக்கிறான். ஜீவன், ஆசாரியன் அநுக்ரஹத்தினால் பகவா னிடத்தில் பலமான ஆசையை அடைந்து, தன் இருப்பை அவ னிடம் தெரிவிக்கவேண்டுமென்றும், அவன் சிக்கிரம் வந்து ரக்ஷிக்காவிட்டால் தரிக்கமாட்டேன் என்று விஜ்ஞாபனம்செய்ய வேண்டும் என்றும் ப்ரார்த்திக்கிறான். இதை ஸீதை ஹநுமா னுக்குச் சொன்ன பதிலில் காணலாம். ஆசாரியனும் சிஷ்யன் இருப்பைத் தெரிவித்து, அவனை ரக்ஷிக்கும் பரத்தை எம்பெரு மானிடம் ஸமர்ப்பிக்கிறான். இது ஹநுமான் திரும்பிவந்து ராமனிடம் விஜ்ஞாபனம் செய்ததாலே ஏற்படுகிறது. இது தான் சரணாகதி. இதைப் பெற்றுக்கொண்ட பகவான் உடனே புறப்பட்டு ஜீவன் தன்னிடம் வருவதற்கு இடையூறுகளாயிருக் கும் கர்மங்களை நாசம்செய்து அர்ச்சிராதி மார்க்கத்தாலே வைகுந்தத்துக்குக் கொண்டுபோய்த் தனக்குக் கைங்கரியம் பண் ணும்படி செய்கிறான். இதை, ராமன் ஸமுத்ரத்தில் அணையைக் கட்டி லங்கையில் இருந்த ராக்ஷஸர்களை ஸம்ஹாரம் செய்து, ஸீதையை அழைத்துக்கொண்டு அயோத்திக்குத் திரும்பிவந்து பட்டாபிஷேகம் செய்துகொண்டதால் அறியலாம். ஜீவனுக்குள்ள கர்மங்கள் ராக்ஷஸஸேனை; ஜீவனை உடம்பைவிட்டுப் பிரிப்பது,

லங்கையிலிருந்து ஸீதையை அழைத்துக்கொண்டுபோவது. புஷ்பகவிமானம் அர்ச்சிராதிமார்க்கத்தில் போவதற்கு ஸாதனம். அயோத்தி—வைகுந்தம். அதற்கும் இந்தப் பெயர் உண்டு.

(2) பகவான் ஸௌஹார்த்தத்தாலே ஜீவனை எப்போது ரக்ஷிக்கலாம், எந்த வியாஜம் கிடைக்கும் என்று பார்த்துக்கொண்டிருந்து, எந்த ஜீவன் ஹிதோபதேசத்தை ஏற்றுக்கொள்ளும் அவஸ்தையை அடைகிறானோ, அந்த ஜீவனிடம் ஆசாரியனை அனுப்புகிறான். இதுதான் ராமன் ஹநுமானை ஸீதையினிடம் அனுப்பினதின் பொருள்.

(3) ஆசாரியனும், சிஷ்யனுக்கு உபதேசத்தைப் பெறத் தகுந்த அவஸ்தை வருகிறதா என்று அவனைப் பலவிதமாய்ப் பரீக்ஷிக்கிறான். ஹநுமானும் ஸீதையின் இருப்பை அறிவதற்காக மரத்தில் மறைந்துகொண்டிருந்து, ராவணன் அசோகவனத்துக்கு வந்ததையும் அவன் செய்த ப்ரலோபநங்களையும், ஸீதையின் பதிலையும், ஸீதை சோகத்தினால் ப்ரலபித்ததையும் பார்த்துக்கொண்டிருந்தான். சிஷ்யனும், தனக்குக் கிடைத்த ஆசாரியன் தகுந்தவனா என்றும், ஆசாரியனுக்கு இருக்கவேண்டிய குணங்கள் அவனுக்கு இருக்கின்றனவா என்றும் ஆலோசனை செய்கிறான். இப்படியே ஸீதையும் ஹநுமான் உண்மையில் ராமனுடைய தூதனோ, அல்லது அந்த ரூபத்துடன் வந்த ராவணனோ என்று ஸந்தேஹப்பட்டு, பிறகு ஹநுமானுடைய வார்த்தையாலே தேறுதலை அடைந்தாள்.

(4) ப்ரபந்நன் பாகவதர்களிடம் அபசாரப்படக்கூடாது. ஸீதை லக்ஷ்மணனுடையவும் பரதனுடையவும் ப்ரபாவத்தை அறிந்தவள். ஆனாலும் லக்ஷ்மணனைப்பார்த்து, “என்னைப் பாரியையாக வைத்துக்கொள்ள எண்ணுகிறாயா?” என்றும், “பரதன் உன்னை அனுப்பினானோ?” என்றும் கடுமையாகச் சொன்னதிலிருந்து பாகவதர்களிடம் செய்யும் அபராதம் உடனே பெரிய கஷ்டத்தை உண்டுபண்ணும் என்பது காட்டப்படுகிறது. உடனே ராவணன் வந்து தனக்குப் பாரியையாயிருக்கும்படி சொல்லி ஸீதையைக் கொண்டுபோனான். அந்த அபராதம் நேர்ந்தால், உடனே அபராதம் பண்ணப்பட்ட பாகவதர்களிடம்

போய்ப் பொறுத்தருளும்படி ப்ரார்த்திக்கவேண்டும். இதை ஸுக்ரீவன் தன் குற்றத்தைப் பொறுக்கும்படி லக்ஷ்மணனை வேண்டினதாலும், லக்ஷ்மணன் கடுமையாகப் பேசினதற்காக ஸுக்ரீவனைப் பொறுக்கும்படி கேட்டதாலும் காட்டப்படுகிறது.

6. கீழ்ப்பாராவில் சரணாகதியைப்பற்றி ப்ரஸ்தாவம் செய்யப்பட்டது; இது வேதத்தில் ரஹஸ்யமாகவைக்கப்பட்டிருந்தது. அதை வால்மீகி பகவான் ஸ்ரீமத் ராமாயணத்தில் நன்றாய் வெளியிட்டிருக்கிறார். ஒவ்வொரு காண்டத்திலும் ஒவ்வொரு சரணாகதி ப்ரகரணம் இருக்கிறது. அதைச் செய்தவர்கள்—பாலகாண்டத்தில்—தேவர்கள்; அயோத்யாகாண்டத்தில்—லக்ஷ்மணனும் பரதனும்; ஆரண்யகாண்டத்தில்—தண்டகாரண்யவாஸிகளான ருஷிகள்; கிஷ்கிந்தாகாண்டத்தில்—ஸுக்ரீவன்; ஸுந்தரகாண்டத்தில்—த்ரிஜடை; யுத்தகாண்டத்தில்—விபீஷணன். சரணாகதி செய்வதற்கு அதிகாரம் ஓர் இஷ்டத்தை அடைவதற்காகவாவது, அநிஷ்டத்தை விலக்குவதற்காகவாவது ஆசைப்பட்டு, அதற்குவேண்டிய உபாயத்தைச் செய்யமுடியாமல் துக்கப்படுவது. இதற்கு ஆகிஞ்சந்யம் என்று பெயர். சரணாகதி செய்யும் காலத்தில் ஆகிஞ்சந்யத்தை அழுகையாலும் மற்ற அடையாளங்களாலும் காட்டுவது கார்ப்பண்ணியம் என்கிற அங்கம். இது கீழ்ச்சொன்ன எல்லாரிடத்திலும் இருந்தது. தேவர்களிடத்திலும் தண்டகாரண்யவாஸிகளிடத்திலும் ராக்ஷஸர்களுடைய ஹிம்ஸையைப் பொறுக்கமுடியாமையால்; ஸுக்ரீவனிடத்தில் வாலியிடமிருந்து பயத்தாலே; த்ரிஜடையிடத்தில், ஸீதையைத் துன்பப்படுத்தின ராக்ஷஸிகளுக்கும் தனக்கும் ராமனுடைய கோபத்தினால் என்ன வருமோ என்கிற பயத்தினாலே; விபீஷணனிடத்தில் ராவணனிடமிருந்த பயத்தாலே. லக்ஷ்மணனுக்கு, தன்னைக் கூடவே தண்டகாரண்யத்துக்கு அழைத்துப் போகவேண்டும் என்கிற தீவ்ரமான ஆசை. பரதனுக்கும் ராமன் ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு திரும்பிவரவேண்டும் என்கிற ஆசை. என்ன அபராதம் செய்திருந்தபோதிலும் ப்ரார்த்தித்தால் பகவான் கட்டாயம் ரக்ஷிப்பன் என்கிற மஹாவிச்வாஸம் ஓர் அங்கம். இதுவும் எல்லாரிடத்திலும் இருந்தது. ராக்ஷஸனாய்ச் சத்ருவின் தம்பியாயிருந்தபோதிலும் தன்னை

ஸ்ரீராமன் கட்டாயம் ரக்ஷிப்பன் என்கிற மஹா விச்வாஸம் விபீஷணனுக்கு இருந்தது என்பது அவன் கூசாமல் வந்ததாலே காட்டப்படுகிறது. ராக்ஷஸிகள் ஸீதையினிடம் பலவிதமான அபகாரங்களைச் செய்திருந்தபோதிலும், ஸீதையை வேண்டினால் அவள் அவர்களை ரக்ஷிப்பள் என்கிற நம்பிக்கை த்ரிஜடைக்கு இருந்தது. ஸுக்ரீவனுக்குமாத்திரம் விசுவாஸம் மந்தமாயிருந்தது, ஒரே பாணத்தால் ஏழு ஸாலமரங்களைத் துளையிட்டு ராமன் அவன் விசுவாஸத்தைப் பூர்ணமாகப் பண்ணினான். எல்லாரும் தங்களை ரக்ஷிக்கவேண்டும் என்று ராமனைப் பிரார்த்தித்தார்கள். இது கோப்த்ருத்வவரணம் என்கிற அங்கம். விபீஷணன், ராவணன் இருந்த ஊரிலிருக்கக்கூடாது என்று அதைவிட்டு வந்ததாலே ப்ராதிகூல்யத்தை விடுவது என்கிற அங்கமும், அநுகூலனாயிருப்பேன் என்கிற ஸங்கல்பமும் காட்டப்படுகின்றன. இந்த இரண்டு அங்கங்களும் த்ரிஜடைசெய்த சரணாகதியிலும் பார்க்கலாம். அபராதம் பண்ணினவனுக்கு எல்லாம் அறிந்து எதையும் செய்யச் சக்தியுள்ள எம்பெருமானிடம்போகக் கூச்சமுண்டாகும். அவனைக் கருணையுள்ள ஒருவன் பகவானிடம் சேர்ப்பிக்கவேண்டும். சேர்ப்பிக்கிறவனுக்குப் புருஷகாரம் என்று பெயர். லக்ஷ்மணன் செய்த ப்ரபத்தியில் ஸீதை புருஷகாரமாக இருந்தாள். இப்படியே எல்லாச் சரணாகதியிலும் பிராட்டி புருஷகாரமாக இருக்கிறாள். த்ரிஜடை ஸீதையினிடம் சரணாகதி பண்ணினாள். இதனால் ப்ரபத்தியைப் பெற்றுக்கொள்ளுவதில் பிராட்டிக்கு அதிகாரம் இல்லை என்றும், பகவான் தனியாகவே சரணாகதனை ரக்ஷிக்கிறான் என்றும், சிலர் சொல்லுகிற மதங்கள் ஸ்ரீமத் ராமாயணத்துக்கு விருத்தங்கள் என்பது ஏற்படுகிறது. சரணாகதி பண்ணினவுடன் பகவான் ப்ரபந்நனை ரக்ஷிக்கிறான். காலதாமதமுண்டாகுமானால் அது ப்ரபந்நனுடைய வேண்டுகோளால் வருகிறது. ஸீதை ஒருமாதம் ஸ்ரீராமனிடம் போகாமல் இருக்க ஸம்மதித்து அதற்குமேல் ஒருக்ஷணம் இருக்கமுடியாது என்று சொன்னாள். பாதன் பண்ணின சரணாகதிக்கு உடனே பலம் கிடைக்காதிருப்பதற்குக் காரணம்:—தேவர்கள் பரதனுக்கு முன்னாலே சரணாகதி பண்ணினபடியாலே அதற்குப் பலனை முன்னாலே கொடுக்கவேண்டியதாயிருந்தது. ஆனபோதி

னும் ராமனுக்கு ப்ரதிநிதியாகப் பாதுகைகள் திரும்பிவந்து ராஜ்யத்தை ஒப்புக்கொண்டன. இதனால் கைகேயியின் கலஹத்தாலே பரதனிடம் ஏற்பட்ட அவத்யமும் விலக்கப்பட்டது. சிலரைச் சரணாகதியால் ரக்ஷித்தும் அவர்களுக்கு ஸ்வல்ப அநிஷ்டத்தையும் ஸ்ரீராமன் செய்தான். இதற்குக் காரணம்— காகாஸுரன் துஷ்டப்ரக்ருதியாயிருப்பதும், ஸமுத்ரராஜன் ஸ்ரீராமனுடைய மஹிமையை அறியாமல் அலக்ஷியம் பண்ணினதும், பரசுராமன் தன்னுடைய பராக்ரமத்தால் உண்டான கர்வத்தாலே ஸ்ரீராமனை த்வந்த்வயுத்தத்துக்குக் கூப்பிட்டதும். சரணாகதி ஒருபோதும் வேண்டின பலனைக் கொடுக்காதிராது. இந்த உயர்ந்த தர்மத்தை ராமாயணம் வெளியிடுவதாலே இதைச் சரணாகதிவேதம் என்றும், விபீஷணனின் சரணாகதி ப்ரகரணத்தை உபநிஷத்பாகம் என்றும் ஸ்ரீதேசிகன் அருளிச் செய்திருக்கிறார்.

7. கீழே ஸ்ரீராமன் முதலானவர்களின் அநுஷ்டானங்களாலே அறியக்கூடிய தர்மங்கள் சுருக்கமாய்க் காட்டப்பட்டன. உபதேசத்தாலே பலவிடங்களில் பலராலே காட்டப்பட்ட தர்மங்களை விவேகமும் பக்தியுமுள்ளவர்கள் எளிதாய் அறிந்துகொள்ளலாம்.

8. விசிஷ்டாத்வைத மதத்திலேயே ராமாயணத்துக்கு நோக்கு. ஸீதை பத்துத்தலை ராவணனால் ஆளப்பட்ட லங்கையைவிட்டு ராமனிடம் போகவேண்டும் என்று மிகுந்த பரபரப்புள்ளவளாயிருந்தாள். ஸீதை ஜீவன்; லங்கை அவன் உடம்பு; ராவணன் அதை ஆளும் மனது. இதனால், விவேகமுள்ள ஜீவன் ப்ரக்ருதிஸம்பந்தத்தை அறுத்துப் பகவானிடம் போகவேண்டும் என்று ஆசைப்படுகிறான். உடம்பு ப்ரக்ருதியிலிருந்து உண்டானது. ஆகையால், ப்ரக்ருதி, ஜீவன், பகவான் என்கிற மூன்றும் வெவ்வேறு தத்துவங்கள் என்று காட்டப்பட்டது.

---

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | 10 | devoutely | devoutly |
| 4 | 5 | fiowery | flowery |
| 3 | 14 | very | every |
| | | **அவதாரிகை.** | |
| ix | 2 | அர்ச்ராதி | அர்ச்சிராதி |
| | | **ராமாயணஸாரம்.** | |
| 12 | 10 | ஒருவனு | ஒருவரா |
| 14 | 13 | [illegible] | [illegible] |
| 15 | 9 | த்வந்தவ | த்வந்த்வ |
| ,, | 21 | ,, | ,, |
| 29 | 27 | ஸௌஹ்ருதது | ஸௌஹ்ருத்து |
| 31 | 1 | கௌஸல்யையும் | கௌஸல்யையையும் |
| ,, | ,, | ஸுமித்ரையும் | ஸுமித்ரையையும் |
| 32 | 12 | க்ருஹத்துககு | க்ருஹத்துக்கு |
| ,, | 21 | விஷ | விஷய |
| ,, | 29 | சொல்விகொண்டு | சொல்விக்கொண்டு |
| 48 | 17 | நாணும் | நானும் |
| 49 | 20 | மிலைாத | மில்லாத |
| 56 | 4 | 47 | 48 |
| 57 | 6 | மரிவுரியை | மரவுரியை |
| 67 | 6 | அர்க்கயத்தை | அர்க்கியத்தை |
| 69 | 12 | அயோத்யைவிட்டு | அயோத்யையைவிட்டு |
| 72 | 11, 26 | சித்ரக்கூட | சித்ரகூட |
| 108 | 2 | பாதுகைகளுககு | பாதுகைகளுக்கு |
| 111 | 3 | [illegible] | [illegible] |
| 115 | 19 | [illegible] | [illegible] |
| 116 | 10 | [illegible] | [illegible] |
| 120 | 25 | 35-7-2 | 37-2 |

| | | | | |
|---|---|---|---|---|
| 123 | .... 31 | கமுகு | .... | கமுகு |
| 130 | .... 17 | 125 | .... | 123 |
| 131 | .... 1 | கைளில் | .... | கைகளில் |
| 132 | .... 25 | திருவடிகட்டை | .... | திருவடிக்கட்டை |
| 134 | .... 2 | 16-37 | .... | 16-3 |
| ,, | .... 7 | 16-85 | .... | 16-5 |
| 135 | .... 17 | களை தின்று | .... | களைத் தின்று |
| 149 | .... 18 | 30-87 | .... | 30-81 |
| 151 | .... 2 | [illegible] | .... | [illegible] |
| 153 | .... 33 | [illegible] | .... | [illegible] |
| ,, | .... 33 | [illegible] | .... | [illegible] |
| 164 | .... 2 | சரனும் | .... | கரனும் |
| 183 | .... 20 | 34-1 | .... | 34-6 |
| 184 | .... 34 | கிரமம் | .... | கிரமமுள் |
| 204 | .... 6 | [illegible] | .... | [illegible] |
| ,, | .... 25 | யோக்ய | .... | போக்ய |
| 258 | .... 22 | 87-27 | .... | 87-24 |
| 260 | .... 7 | 91-71 | .... | 91-74 |
| 264 | .... 21 | 10-2-12 | .... | 102-12 |
| 267 | .... 18 | ராத்ரிபில் | .... | ராத்ரியில் |
| 276 | .... 28 | 166-44 | .... | 116-44 |
| 277 | .... 6 | 166-45 | .... | 116-45 |

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம:||

# ஸ்ரீமத் ராமாயண ஸாரம்.

## பாலகாண்டம்.

(1) முன்காலத்தில் கோஸலதேசத்தில் அயோத்யை என்கிற நகரத்தில் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த தசரதன் என்கிற ராஜா வஸித்துக்கொண்டு, இந்தப் பூமியை நன்றாய்ப் பரிபாலநம் பண்ணிவந்தான். அவன் தர்மங்களை அறிந்தவன். சொன்னதைத் தவறுகிறதில்லை. அவனுடைய பராக்ரமம் பிரஸித்தமாயிருந்தது. அவன் பிரஜைகள் ஒருவிதமான குறைவுமில்லாமல் ஸுகமாயிருந்தார்கள். மந்திரிகளுக்கு இருக்க வேண்டிய குணங்கள் நிறைந்தவர்களாய் எட்டு மந்திரிகள் அந்த ராஜாவுக்கு இருந்தார்கள். அவர்களில் ஸுமந்த்ரன் என்பவன் ஒருவன். வஸிஷ்டரும் வாமதேவரும் அவனுக்கு யாகங்களைச் செய்விக்கிறவர்களாயிருந்தார்கள். (ஸர்க்கம்-5-6-7)

(2) தசரதனுக்கு வம்சத்தை விருத்திபண்ணும்படியான பிள்ளை இல்லையென்று மிகுந்த வருத்தம் உண்டாயிருந்தது. ஒருநாள் இதைப்பற்றி யோசித்துக்கொண்டிருக்கையில் அச்வமேதம் என்கிற யாகத்தைச் செய்யவேண்டும் என்கிற புத்தி அவனுக்கு உண்டாயிற்று. அதை வஸிஷ்டர் முதலானவர்களுக்கு அவன் தெரிவிக்க, அவர்கள் அதை ஒப்புக்கொண்டு ராஜாவைக் கொண்டாடினார்கள். ராஜா, மந்திரிகளைக் கூப்பிட்டு ஸரயு நதிக்கு வடகரையில் யஜ்ஞசாலையை ஏற்படுத்தவும், யாகத்துக்கு வேண்டிய ஸம்பாரங்களைச் சேகரிக்கவும், உபாத்யாயருடனும் தகுந்த காவலாளிகளுடனும் குதிரையை அனுப்பவும், ஒருவிதக் குறைவுமில்லாதபடி எல்லாக் காரியங்களையும் செய்யவும் கட்டளையிட்டான். அவன் அந்தப்புரத்துக்குப் போய் பத்னிகளை யாகத்துக்காக தீக்ஷை செய்துகொள்ளும்படி சொல்ல, அவர்களும் ஸந்தோஷத்தினால் முகமலர்ச்சியுடன் சொன்னபடி செய்தார்கள். (ஸ-8.)

(3) அப்போது ஸுமந்த்ரன் ராஜாவுக்குப் பிள்ளையுண்டாகிற விஷயமாய் ஸநத்குமாரர் முன்னாலே சொல்லியிருந்ததை ராஜாவினிடம் விஜ்ஞாபனம் செய்தான். ஸநத்குமாரர் சொன்னது—"அங்கதேசத்தில் ராஜாவின் குற்றத்தால் மழையில்லாமல் பஞ்சம் உண்டாகும். ராஜா பெரியோர்களைக் கூப்பிட்டு தகுந்த ப்ராயச்சித்தத்தைச் செய்யும்படி வேண்டுவன். அவர்கள் விபண்டகர் என்னும் ரிஷியின் பிள்ளையான ருச்யச்ருங்கரை அழைத்துவந்தால் உடனே மழைபெய்யும் என்று சொல்லுவார்கள். எல்லாரும் அவரை எப்படி அழைத்துவருவது என்று பயப்படுகையில், மந்திரிகளின் ஆலோசனைப்படி கணிகைகளை அனுப்பி உபாயத்தால் ராஜா அவரை வருவிப்பன். அவர் வருவர். மழையும் பெய்யும். ராஜாவும் ஸந்தோஷப்பட்டு தன் பெண்ணான சாந்தையை அவருக்கு விவாஹம் செய்து கொடுப்பன். அந்த ரிஷி தசரதனுக்குப் பிள்ளைகள் உண்டாகும்படி செய்வர்" என்பதாம் (ஸ-9)

(4) இந்தக் கதையை ஸுமந்த்ரன் சொல்லி, ராஜா தானே அங்கதேசத்துக்குப்போய் ருச்யச்ருங்கரை அழைத்துவரவேண்டும் என்று விண்ணப்பம் செய்தான். ராஜா அப்படியே செய்து சாந்தையுடன் ருச்யச்ருங்கரை அழைத்துவந்து அந்தப்புரத்துக்கு அழைத்துப்போய் தன் பத்னிகளுடன் அவருக்குத்தகுந்த பூஜையைச் செய்தான். ஒரு வர்ஷம் ஆனபிறகு குதிரை திரும்பி வந்தது. வஸந்தருதுவில் அசுவமேதம் விதிப்படி நடந்தது. பிறகு ருச்யச்ருங்கர் புத்ரகாமேஷ்டியைச் செய்வித்தார். அதில் பிரம்மாவும் தேவர்களும் தங்கள் ஹவிர்பாகங்களை வாங்கிக் கொள்ள வந்தார்கள். அவர்கள் ப்ரம்மாவைப்பார்த்து, "ராவணனுக்கு வேண்டிய வரத்தை கொடுத்தீரே, அவன் எங்களையும் பிராமணர்களையும் பலவிதமாய் ஹிம்ஸிக்கிறான். அவனைக்கொல்ல உபாயத்தைச் சிந்திக்கவேண்டும்" என்று ப்ரார்த்தித்தார்கள். பிரம்மாவும் "மனிதனைத்தவிர வேறொருவராலும் அவனுக்கு வதமுண்டாகாது. மனிதன்தான் அவனைக் கொல்லவேண்டும்" என்று சொல்லிக்கொண்டிருக்கையில், பகவான் சங்க சக்ரகதாதரனாய் பீதாம்பரத்துடன் அங்கே எழுந்தருளினான். அவனிடத்தில் தேவர்கள் சரணாகதி பண்ணினார்கள். பகவானும்

தான் தசரதன் பிள்ளையாக் அவதாரம்செய்து, ராவணனை பிள்ளைகளுடனும், பந்துக்களுடனும், மந்திரிகளுடனும் கொல்லு வதாக வாக்களித்து, அவர்களுக்கு ஆறுதலைச் செய்தான். (ஸ-15)

(5) இதன் பிறகு, யஜ்ஞ பூமியிலிருந்த அக்னியிலிருந்து ப்ராஜாபத்ய புருஷன், வெளிக்கிளம்பி பகவானால் செய்யப்பட்ட பாயஸம் நிறைந்த ஒரு தங்கபாத்ரத்தைத் தசரதனிடம்கொடுத்து, "இந்தப் பாயஸத்தை உன் பத்னிகளுக்குக் கொடு; நீ ஆசைப்பட்டபடி புத்ரர்களை அடைவாய்" என்று சொல்லி மறைந்துவிட்டான். தசரதனும் அதைப் பெற்றுக்கொண்டு அந்தப்புரத்துக்குப்போய் கௌஸல்யைக்குப் பாயஸத்தில் பாதியையும், ஸுமித்ரைக்கு மீதியிலிருந்ததில் பாதியையும், கைகேயிக்கு மீதியிருந்த கால்பாகத்தில் பாதியையும் கொடுத்து யோசித்து மீதியிருந்த எட்டில் ஒருபாகத்தை ஸுமித்ரைக்கு மறுபடியும் கொடுத்தான். உடனே அவர்கள் எல்லாரும் கர்ப்பம் தரித்தார்கள். (ஸ-16)

(6) பகவான் தசரத புத்ரனாக அவதாரம் பண்ணுவதை அறிந்து ப்ரம்மா, அவனுக்குத் துணையாயிருக்கும்படி அப்ஸரஸுக்களிடத்திலும், கந்தர்வ ஸ்திரீகளிடத்திலும், வானர ஸ்திரீகளிடத்திலும், மற்ற ஸ்திரீகளிடத்திலும் மிகுந்த பலமும் பராக்ரமுமுள்ள பிள்ளைகளை உண்டுபண்ணும்படி தேவர்களுக்குக் கட்டளையிட்டான். அவர்களும் அப்படியே செய்தார்கள். வேண்டிய ரூபங்களை எடுத்துக்கொள்ளுகிறவர்களும் மிகுந்த பராக்ரமமுள்ளவர்களும், நினைத்ததைச் செய்யச் சக்தியுள்ளவர்களுமான வானரங்கள் ஆயிரக்கணக்காய் பிறந்து பூமியில் எங்கும் நிறைந்தார்கள். அவர்களுள் ஸூரியபுத்ரன் ஸுக்ரீவன்; இந்த்ர புத்ரன் வாலி; வாயு புத்ரன் ஹநுமான்; ப்ரம்மாவின் புத்ரன் ஜாம்பவான்; இவன் முன்னாலேயே உண்டுபண்ணப்பட்டிருந்தான். வாலி ராஜாவாக இருந்து இவர்களைப் பரிபாலநம் பண்ணிக்கொண்டிருந்தான். (ஸ-17)

(7) பன்னிரண்டாவது மாதத்தில் புனர்வஸு நக்ஷத்ரம் கூடிய சைத்ர நவமியில் கடகலக்னத்தில், கௌஸல்யை ராமனையும், புஷ்ய நக்ஷத்திரத்தில் மீனலக்னத்தில் கைகேயி பரதனையும்,

ஆயில்ய நக்ஷத்ரத்தில் கடகலக்னத்தில் ஸுமித்ரை லக்ஷ்மணனை யும், சத்ருக்னனையும் பெற்றார்கள். தேவர்கள் ஸந்தோஷப் பட்டு புஷ்பவர்ஷம் வர்ஷித்தார்கள். தேவதுந்துபி வாத்யங்கள் முழங்கின. அப்ஸரஸுக்கள் நர்த்தனமாடினார்கள். அயோத் யையில் பெரிய உத்ஸவம் நடந்தது. ராஜா பிராம்மணர்களுக்கு ஆயிரக்கணக்காகக் கோதானம் பண்ணினான். பதினோராவது தினத்தில் வஸிஷ்டரைக்கொண்டு குழந்தைகளுக்கு நாமகரணம் பண்ணி செய்யவேண்டிய மற்ற வைதிக கர்மங்களையும் செய்வித் தான். தசரதன் மிகுந்த பிரீதியுடன் குழந்தைகளை வளர்த்து வந்தான். தகுந்தகாலத்தில் அவர்களுக்கு வேதாத்யயனத்தைப் பண்ணுவித்து, தனுர்வேதத்தில் திறமையை அடையும்படி செய்தான். இவர்களில் லக்ஷ்மணன் ராமனுடன்கூட எப்போதும் இருந்தான். அவனைவிட்டு ராமன் சாப்பிடுகிறதுமில்லை; தூங்கு கிறதுமில்லை. ராமன் வேட்டைக்குக் குதிரையில் ஏறிப்போகும் போது லக்ஷ்மணன் கூடப்போவான். இப்படியே சத்ருக்னனும் பரதனுடன் கூடவே இருந்தான். (ஸ-18)

(8) ராமனுக்குப் பதினாறு வயது நிரம்புவதற்கு சிலநாளி ருக்கையில், விசுவாமித்ரர் என்கிற பெரிய ருஷி அயோத்திக்கு வந்தார். தசரதன் அவரை எதிர்கொண்டு அழைத்துவந்து தகுந்த பூஜைசெய்து "உம்முடைய வரவால் மிகுந்த ஸந்தோஷ த்தை அடைந்தேன். இங்கே வந்த காரியத்தைத் தெரிவிக்க வேண்டும். அதை நான் ஸந்தோஷத்துடன் செய்கிறேன்" என்று சொன்னான். ருஷி தான் வந்தகாரியம் முடிந்ததென்று நினைத்து ஸந்தோஷத்தை அடைந்து—"நான் யாகம் பண்ணிக் கொண்டிருக்கையில் ஸுபாஹு மாரீசன் என்கிற இரண்டு ராக்ஷஸர்கள் வந்து ரக்தத்தையும் மாம்ஸத்தையும் வேதியில் வர்ஷித்து யாகத்தை முடிக்கமுடியாமல் செய்கிறார்கள். அவர் களைக் கண்டிக்க எனக்குச் சக்தியுண்டு. ஆனால், அது கோபித் துக்கொள்ளத் தகுந்தகாலம் அன்று. அவர்களைக்கொன்று என் யாகத்தைப் பூர்த்தி பண்ணிவைக்க உன் மூத்த பிள்ளை ராமனை என்னுடன் அனுப்பு. அவனைத்தவிர வேறு ஒருவனும் இந்த ராக்ஷஸர்களைக் கொல்லச் சக்தியுள்ளவன் அல்லன். ராமன் சிறு பிள்ளையென்று மலைக்காதே.

𑌅𑌹𑌂 𑌵𑍇𑌦𑍍𑌮𑌿 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌰𑌾𑌮𑌂 𑌸𑌤𑍍𑌯𑌪𑌰𑌾𑌕𑍍𑌰𑌮𑌮𑍍 ।
𑌵𑌸𑌿𑌷𑍍𑌠𑍋𑌽𑌪𑌿 𑌮𑌹𑌾𑌤𑍇𑌜𑌾 𑌯𑍇 𑌚𑍇𑌮𑍇 𑌤𑌪𑌸𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 ॥ (19-14)

அவன் மஹாத்மா என்றும் அவனுடைய பராக்ரமத்துக்கு ஒரு போதும் தடையிராது என்றும், தபஸ் செய்துகொண்டிருக்கிற நான் அறிகிறேன். அப்படியே மிகுந்த தேஜஸையுடைய வஸிஷ்டரும், தபஸு செய்துகொண்டிருக்கிற இந்த ருஷிகளும் அறிகிறார்கள். அவனுக்குப் பலவிதமான ச்ரேயஸை உண்டுபண்ணுவேன். அதினால் அவனுக்கு மூன்று உலகத்திலும் கீர்த்தி உண்டாகும்'' என்று சொன்னார். (ஸ-18-19)

(9) இதைக்கேட்டு தசரதன் பயத்தாலே மூர்ச்சையை அடைந்தான். ஒரு முஹூர்த்தம் கழிந்தபிறகு பிரஜ்ஞை திரும்பி வந்தது. அவன்—"ராமனுக்கு பதினாறு வயது நிரம்பவில்லை. அப்போதுதான் யுத்தம் செய்யச் சக்தியுண்டாகும். அவனுக்கு இப்போது * பன்னிரண்டு வயதுதான். அவன் சிறு பிள்ளை; தனுர் வித்தையில் சிக்ஷையை அடையவில்லை; அவனுக்கு இது பலமுள்ளது, இது பலமில்லாதது என்பது தெரியாது. அவன் மாயாவியான ராக்ஷஸர்களுடன் சண்டைபோடத் தகுந்தவன் அன்று. அவனைவிட்டுப் பிரிந்தால் என்னால் ஒரு முஹூர்த்தமும் பிழைத்திருப்பது முடியாது அறுபதினாயிரம் வர்ஷம் பிள்ளையில்லாமலிருந்து மிகுந்த ப்ரயாஸத்தால் அவனைப் பிள்ளையாகப் பெற்றேன். இந்தக் காரணங்களாலே அவனை நீர் அழைத்துக்கொண்டு போகக்கூடாது. அவனுக்குப்பதிலாக நானே சதுரங்க ஸேனைகளுடன் உம்முடன் வந்து உம்முடைய யாகத்தை முடித்து வைக்கிறேன்'' என்று சொன்னான். (ஸ-20) இதைக்கேட்டு விசுவாமித்ரர் மிகுந்த கோபம் அடைந்து, "முதலில் ஒன்றை பிரதிஜ்ஞை பண்ணி, அதை விட விரும்புகிறாய். இது ரகுவம்சத்துக்குத் தகுந்தது அன்று. இது உனக்குத் தகுந்தது என்று நீ எண்ணினால் நான் வந்தவழி திரும்பிப் போகிறேன். பொய்யான ப்ரதிஜ்ஞை பண்ணின நீ பந்துக்களுடன் ஸுகமாயிரு'' என்று சொன்னார். அப்பொழுது

* இதுமேலே மாரீசன் சொல்லுவதாலே ஏற்படுகிறது.

பூமிமுழுவதும் நடுங்கிற்று. அப்போது வஸிஷ்டர் தசரதனைப்பார்த்து, "உன்னைத் தர்மஜ்ஞன் என்று எல்லாரும் அறிந்திருக்கிறார்கள். உன் தர்மத்தைக் கைவிடாதே. ஒன்றைச் செய்வதாகச் சொல்லி, அதைச் செய்யாதவனுடைய யாகங்களும், கிணறு வெட்டுவது முதலான பொதுநன்மைக்குச் செய்யப்படும் தர்மங்களும் நாசத்தை அடையும். ஆகையால் ராமனை அனுப்பு, ராமன் அஸ்த்ரத்தில் பழக்கமுள்ளவனோ இல்லாதவனோ என்று விசாரிக்கவேண்டாம். விசுவாமித்ரரால் ரக்ஷிக்கப்பட்ட அவனுக்கு ஒருவனாலும் ஒரு கெடுதியையும் செய்யமுடியாது. அவருக்கு எல்லா அஸ்திரங்களும் தெரியும். அவரே ராக்ஷஸர்களைக் கண்டிக்கச் சக்தியுள்ளவர். உன் பிள்ளைக்கு ஹிதத்தைச் செய்வதற்காக உன்னை யாசிக்கிறார்" என்று சொன்னார். (ஸ-21)

(10) தசரதன் மனம் தெளிந்து லக்ஷ்மணனுடன்சேர்த்து ராமனை விச்வாமித்திரரோடுகூட அனுப்பினான். விச்வாமித்ரர் முன்னாலே போனார். இரண்டு பிள்ளைகளும் வில்லும் கையுமாய் பின்னாலேபோனார்கள். அவர்கள் ஒன்றரை யோஜனை ஸரயூவின் தென்கரை வழியாய்ப் போனபிறகு விசுவாமித்ரர் "அஸ்த்ரங்களையும், 'பலை அதிபலை' என்கிற மந்திரங்களையும் பெற்றுக்கொள். அப்போது உனக்குப் பசியும் தாஹமும் சிரமமும், ஜ்வரமும், நிறத்தின் வேறுபாடும் உண்டாகா. நீ தூங்கினாலும், வேறு நினைவுள்ளவனாயிருந்தாலும் ராக்ஷஸர்களால் உனக்கு ஒரு கெடுதியும் செய்யமுடியாது. இவைகளைப் பெற்றுக்கொண்டபிறகு மூன்று உலகங்களிலும் உனக்கு ஸமனாக ஒருவனும் இரான்." என்று சொல்லி, அந்த மந்திரங்களை ராமனுக்கு உபதேசம் பண்ணினார். ராமன் அதைப்பெற்றுக்கொண்டு மிகுந்த பராக்ரமமுள்ளவனாய் விளங்கினான். அன்று ராத்திரி ஸரயூவின்கரையில் வஸித்தார்கள். (ஸ-22) மறுநாள் விடியற்காலத்தில் அவர்களை எழுப்பவந்த விசுவாமித்ரர், தூங்கும்போது ராமனுக்கு இருந்த அழகைப்பார்த்து, இவனைப்பெற்ற கௌஸல்யை என்ன பாக்யம் பண்ணினாளோ என்று ஆச்சரியப்பட்டு "கௌஸல்யா ஸுப்ரஜா" (கௌஸல்யை நல்ல பிள்ளையைப்பெற்றாள்) என்று சொல்லி, ராமன் தன் குணங்களாலே எல்லாரையும் ஸந்தோஷப்படுத்துகிறவன். ஆகையால் அவனுக்கு ராமன் என்பது தகுந்த பெயரென்று நினைத்து அந்தப் பெய

ரால் கூப்பிட்டு, "காலை ஸந்த்யை வந்திருக்கிறது. புருஷச்ரேஷ்டனே! தெய்வத்துக்குச் செய்யவேண்டிய கடன்களைச் செய்யவேண்டும்; எழுந்திரு" என்று அவனை எழுப்பினார். ராமனும் லக்ஷ்மணனும் எழுந்திருந்து, ஆன்னிகங்களைச் செய்துவிட்டு ருஷிக்கு அபிவாதநம்செய்து புறப்பட்டார்கள். கங்கையுடன் ஸரயுசேருமிடத்துக்குப்போய், பல மஹர்ஷிகள் வஸிக்கும் ஓர் ஆச்ரமத்தைப் பார்த்தார்கள். "இது யாருடைய ஆச்ரமம்" என்று ராமன் கேட்க, அது முன்பு மன்மதன் ஆச்ரமமாயிருந்ததென்றும், விவாஹம் செய்துகொண்டு இங்குவந்த ருத்ரனை மன்மதன் எதிர்த்தான் என்றும், அவன் ருத்ரன் கண்ணால் எரிக்கப்பட்டான் என்றும், அவன் தன் உடம்பைவிட்டதால் அந்த தேசத்துக்கு அங்கதேசம் என்று பெயர் வந்ததென்றும், அதில் பெரிய ருஷிகள் வஸிப்பதாலே புண்ணியமான ஆச்ரமம் என்றும், அதில் ராத்ரி இருப்போம் என்றும் சொல்லி விசுவாமித்ரர் இரண்டு பிள்ளைகளையும் அழைத்துக்கொண்டு அவ்விடம் போனார். ருஷிகள் இவர்களுக்கு அதிதி பூஜைசெய்தார்கள். அங்கு ராத்ரியை ஸுகமாகப் போக்கினார்கள். தூக்கம் வருவதற்கு முன்னாலே விசுவாமித்ரர் ராமலக்ஷ்மணர்களுக்குச் சில கதைகளைச்சொன்னார். (ஸ-23)

(11) மறுநாள் காலையில் விசுவாமித்திரரும் ராஜகுமாரர்களும் ருஷிகள் கொண்டுவந்த ஓடத்தில் ஏறிக் கங்கையின் தென்கரை சேர்ந்தார்கள். கங்கையின் நடுவில் ஒரு பெரிய சப்தத்தைக் கேட்டு, அது என்ன என்று ராமன் வினவ, விசுவாமித்திரர்— 'கைலாஸ மலையில் பிரம்மா மனத்தால் ஒரு ஸரஸ்ஸை உண்டு பண்ணினான். அதற்கு மானஸஸரஸ் என்று பெயர். அதிலிருந்து ஸரயூ என்கிற நதி பெருகி அயோத்தியைச் சுற்றிக்கொண்டு கங்கையில் விழுகிறது. அதனுடைய சப்தம் தான் உன் காதில் விழுகிறது' என்று சொன்னார். கங்கையின் தென்கரை சேர்ந்த பின், கோரமான ஒரு வனத்தைப்பார்த்து ராமன் கேட்க, விசுவாமித்ரர் *தாடகையின் வரலாற்றைச் சொல்லி, அவளைக் கொல்லும்படி ராமனை ஏவினார்—"இவள் கெட்ட நடக்கை

---

* அநுபந்தத்தைப் பார்க்க.

உள்ளவள்; மிகவும் கொடுமையானவள். பிராம்மணர்களுக்கும் கோக்களுக்கும் ஹிதம் செய்வதற்காக, இவளைக் கொல்லவேண்டும். மூன்று உலகங்களிலும் இவளைக் கொல்லுவதற்கு ஒருவனுக்கும் சக்தி இல்லை. நீதான் அவளைக் கொல்ல ஸமர்த்தன்; இவள் ஸ்திரீ என்று இவளிடம் இரக்கப்படவேண்டாம். நான்கு வர்ணத்தார்களும் ஸௌக்யமாயிருப்பதற்காக இவளைக் கொல்லலாம். இது ராஜ தர்மம். முன் காலத்தில் பூமியை நாசம்பண்ண யத்னம் செய்த விரோசனன் பெண்ணை மந்தரை என்பவளை இந்திரனும், தாயாரைப் பரசுராமனும் கொன்றார்கள்." என்றும் சொன்னார். (ஸ-25) இதைக் கேட்டு ராமன், "இந்த ருஷி சொல்லுவதை ஸந்தேஹப்படாமல் செய், என்று ருஷிகள் மத்தியில் என் தகப்பனார் கட்டளையிட்டார். அதை வெகுமதித்து தாடகையைக் கொல்லுகிறேன்." என்று சொல்லி, வில்லில் நாணைப்பூட்டி காடு நிறையும்படி நாண் சப்தத்தைச் செய்தான். இந்த சப்தத்தைப் பொறுக்காமல் தாடகை கோபித்துக் கொண்டு எதிர்த்து வந்தாள். அவளைப் பார்த்து ராமன், "இவள் ஸ்திரீயாகையால் இவளைக் கொல்ல எனக்கு மனமில்லை. இவள் மூக்கையும் காதுகளையும் அறுத்துவிடுகிறேன்" என்று லக்ஷ்மணனிடம் சொன்னான். அவள் தூளிகளைக் கிளப்பி அவர்களை மோஹம் அடையும்படி செய்தாள். அவள் மாயையினால் கருங்கற்களை அவர்கள் மேல் வர்ஷித்தாள். ராமன் கோபங்கொண்டு அவள் கைகளை அறுத்து விட்டான். லக்ஷ்மணன் அவள் காதுகளையும் மூக்கு நுனியையும் அறுத்துவிட்டான். அவள் மாயையினால் மறைந்துகொண்டு கல்மாரி பெய்தாள். விசுவாமித்திரர்—"இவளிடத்தில் இரக்கப்படாதே; ஸந்த்யாகாலம் வருவதற்குள் இவளைக் கொல்லு. அந்தக் காலத்தில் அவளுக்குப் பலம் விருத்தியாகும்" என்று சொன்னார். அவள் குரலைக்கொண்டு இருக்குமிடம் தெரிந்து தாக்கும் பாணங்களால் ராமன் அவளை எதிர்த்தான். அப்போது அவள் நேரில் வர, ஒரே பாணத்தாலே அவள் மார்பைப் பிளந்தான். அவளும் கீழேவிழுந்து இறந்தாள். தேவர்களும் ருஷிகளும் தேவேந்திரனும் கொண்டாடினார்கள். (ஸ-26)

(12) அன்று ராத்திரி அங்கேயே மூவரும் இருந்தார்கள். தாடகை மரணமடைந்தவுடன் அந்த வனம் முன்போல் செழ்

வம் நிறைந்ததாக ஆயிற்று. மறுநாள் காலையில், விசுவாமித்ரர்— "உன்னிடத்தில் எனக்கு மிகுந்த ஸந்தோஷமுண்டாயிருக்கிறது. எல்லா அஸ்த்ரங்களையும் உனக்குக் கொடுக்கிறேன். அவைகளைப் பெற்றுக் கொள்" என்று சொல்லி, அஸ்த்ர தேவதைகளை நினைத்துக்கொண்டு அவைகளை அவனுக்குக் கொடுத்து, பிரயோகிக்கும் மந்திரங்களையும் திரும்பிவரும்படிசெய்யும் மந்திரங்களையும் தேவதைகளையும் ரூபங்களுடன் உபதேசம் பண்ணினான். அந்த அஸ்திரங்கள் ராமனிடம் வந்து, "நாங்கள் உம் வேலைக்காரர்கள்" என்று விண்ணப்பஞ் செய்தார்கள். ராமன் அவைகளைக் கையாலே தொட்டு, தான் நினைத்தபோது வரும்படி கட்டளையிட்டு அவைகளை அனுப்பிவிட்டான். பிறகு கொஞ்சதூரம் சென்ற பிறகு, மலையின் பக்கத்தில் ஓர் ஆச்ரமத்தைப் பார்த்து, ராமன் "இது யாருடைய ஆச்ரமம்? நான் எந்த ராக்ஷஸர்களைக் கொன்று உம்முடைய யாகத்தை நிறைவேற்றுகிறது." என்று கேட்டான். (ஸ-27-28) விசுவாமித்ரர், அது ஸித்தாச்ரமம் என்று அதன் வரலாற்றைச் சொல்லி, ராம லக்ஷ்மணர்களுடன் அந்த ஆச்ரமத்துக்குப்போய் "இது எனக்கு எப்படி ஸொத்தோ, அப்படியே உங்களுக்கும் ஸொத்து" என்று சொன்னார். உடனே யாகத்துக்காக விசுவாமித்ரர் தீக்ஷை செய்துகொண்டார். (ஸ-29)

(13) அந்த யாகம் ஆறுநாளில் முடியத்தகுந்தது. ராமனும் லக்ஷ்மணனும் தூங்காமல் ராக்ஷஸர்கள் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆறுவது நாளில் மாரீசனும் ஸுபாஹுவும் அவர்களைச்சேர்ந்த ராக்ஷஸர்களும் வேதியில் ரக்தத்தை வர்ஷித்தார்கள். ராமன் மாநவாஸ்த்ரத்தாலே மாரீசனை மார்பில் அடித்து நூறு யோஜனைதூரம் ஸமுத்ரத்தில் விழும்படி செய்தான். ஆக்னேயாஸ்த்ரத்தால் ஸுபாஹுவையும், வாயவ்யாஸ்த்ரத்தால் மற்றவர்களையும் கொன்று, யாகத்துக்கு உண்டாயிருந்த இடையூறுகளை விலக்கினான். யாகம் நன்றாய் முடிந்தது. விசுவாமித்ரரும் மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்தார். (ஸ-30)

(14) யாகம் முடிந்த மறுநாள் விசுவாமித்ரரும், அவருடன் கூடி இருந்த ருஷிகளும் மிதிலாநகரத்துக்குப் போகப் புறப்பட்டு, "அந்த நகரத்தில் பெரிய யாகம் நடக்கப்போகிறது;

அதற்காக நாங்கள் அங்கே போகிறோம்; அவ்விடத்தில் ஓர் ஆச்சரியமான வில் இருக்கிறது. அதைத் தேவர்களில் ஒருவராலும் தூக்கி நாணேற்ற முடியவில்லை. அதை மனிதர்களால் நாண் ஏற்ற முடியாது என்பது சொல்லவும் வேண்டுமோ? அதை நீங்கள் பார்க்கலாம்'' என்று சொல்லி, ராம லக்ஷ்மணர்களைக் கூட்டிக்கொண்டு போனார்கள். அஸ்தமன காலத்தில் சோண நதியின் கரையில் வந்துசேர்ந்து அந்த ராத்ரி அங்கே இருந்தார்கள். (ஸ-31) ராமனால் வேண்டப்பட்டு விசுவாமித்ரர் * தன் குலவிருத்தாந்தத்தைத் தூக்கம் வருகிறவரையில்சொன்னார். (ஸர்-32, 33, 34) மறுநாள் காலையில் எல்லாரும் சோண நதியைத்தாண்டி வெகுதூரம்சென்று மத்யான்னகாலத்தில் கங்கைக் கரைக்கு வந்து சேர்ந்தார்கள். ராமனால் வேண்டப்பட்டு விசுவாமித்ரர், கங்கையின் உத்பத்தியையும், அதைச்சேர்ந்த கதைகளையும் சொன்னார். *(ஸ-35+44) அவ்விடத்தில் ராத்ரி முழுவதுமிருந்து பொழுது விடிந்தபோது ருஷிகள் கொண்டுவந்த ஓடத்தாலே கங்கையைத்தாண்டி, அதின் வடகரையிலிருந்த விசாலை என்கிற நகரத்துக்குப் போனார்கள். விசுவாமித்ரர் அமிருத மதந கதையையும் மருத்துக்களின் உத்பத்தி கதையையும் சொல்லி "இந்த நகரம் திதி மூன்னாள் தபஸு செய்த இடம். அதில் இக்ஷ்வாகுவின் பிள்ளையான விசாலன் என்பன் விசாலை என்கிற நகரத்தை நிர்மாணம் செய்தான். அவன் வம்சத்தில் பிறந்த ஸுமதி என்கிற ராஜா இப்போது அதில் இருக்கிறான். இவ்விடம் ராத்ரி யிருந்து நாளை மிதிலைக்குப்போவோம்'' என்று விசுவாமித்ரர் சொல்லிமுடித்தார். (ஸ-47) ஸுமதி விசுவாமித்ரர் வந்ததை அறிந்துகொண்டு, அவருக்கும், ராம லக்ஷ்மணர்களுக்கும் ஆதித்யம் செய்தான். விசுவாமித்ரர் அதைப்பெற்றுக்கொண்டு, ராஜகுமாரர்களின் விருத்தாந்தத்தை ராஜாவுக்குச் சொன்னார். அவர்கள் அங்கு அந்த ராத்ரியைப் போக்கினார்கள். (ஸ-48)

(15) மறுநாள் காலையில் விசுவாமித்ரர் முதலானவர்கள் மிதிலைக்குப்போய்ச்சேர்ந்தார்கள். அதின் பக்கத்திலிருந்த ஒரு தோட்டத்தில் சூன்யமாயிருந்த ஆச்ரமத்தைக்கண்டு, ராமன்

* அநுபந்தத்தைப் பார்க்க.

அதைப்பற்றிக் கேட்க, விசுவாமித்ரர் * அஹல்யை கதையைச் சொல்லி, "ராம! இந்த ஆச்ரமத்துக்குப் போய் அவளைச் சாபத்திலிருந்து விடுவி." என்று சொன்னார். எல்லாரும் ஆச்ரமத்துக்குள் போனார்கள். அஹல்யை சாபத்திலிருந்து விடுபட்டு தன் ரூபத்துடன் விளங்கினாள். ராமனும் லக்ஷ்மணனும் அவளுக்கு நமஸ்காரம்பண்ண, அவளும் அவர்களுக்கு ஆதித்யம் பண்ணினாள். கௌதமரும்வந்து தன் பத்தினியான அஹல்யையுடன் சேர்ந்தார். (ஸ-49)

(16) விசுவாமித்ரர் வருவதைக்கேட்டு ஜனகமஹாராஜா அவரை எதிர்கொண்டு அழைத்துவந்து தகுந்தபடி பூஜைசெய்தான். அவர் ஆஸனத்தில் உட்கார்ந்த பிறகு ராஜா அவரை ஸ்தோத்ரம்பண்ணி ராஜகுமாரர்களின் அழகை வர்ணித்து அவர் யார் என்று கேட்டான். விசுவாமித்ரர், தசரதன் பிள்ளைகளென்று நடந்த விஷயங்களைச் சொல்லி, இங்கே இருக்கும் தனுஸைப் பார்க்க வந்திருக்கிறார்களென்று பதில் சொன்னார். (ஸ-50) விசுவாமித்ரர் சொன்னதைக்கேட்டு ஜனகன் புரோஹிதனும் அஹல்யையின் புத்ரனுமான சதாநந்தன் தன் தாயாருக்குச் சாபவிமோசனமானதை அறிந்து, ராமனைக்கொண்டாடி, அவனுக்கு *விசுவாமித்ரர் ப்ரபாவத்தை தெரியப்படுத்த, அவர் கதையை விஸ்தாரமாய்ச் சொன்னார். (ஸ-51) அதை எல்லாரும் கேட்டு அவரைக் கொண்டாடினார்கள். ஜனகன் மறுநாள் காலையில் வரும்படி பிரார்த்தித்து, விசுவாமித்ரரையும் ராஜ குமாரர்களையும் அனுப்பிவிட்டான். (ஸ-65) மறுநாள் காலையில் ஜனகன் விசுவாமித்ரரை வருவித்து அவருக்குத்தகுந்த பூஜை செய்தான். அவர் "உன்னிடமிருக்கும் தனுஸை இவ்விருவர்களுக்கும் காண்பி" என்று சொல்ல, ராஜா தனுஸின் பிரபாவத்தை வர்ணித்தான்—"முன்னாலே தக்ஷன் என்கிற பிரஜாபதி யாகம் பண்ணுகையில் ருத்திரனுக்கு ஹவிர்பாகம் கொடுக்கப்படாமையால் அவன் கோபித்துக்கொண்டு தன்னுடைய தனுஸை எடுத்துக்கொண்டு 'உங்களைக் கொல்லுகிறேன்' என்று சொன்னான். அவர்கள் நல்ல வார்த்தை சொல்ல,

* அநுபந்தத்தைப் பார்க்க.

அவன் மனம் தெளிந்து நிமி சக்ரவர்த்திக்கு ஆறுமவனும் என் முன்னோர்களில் ஒருவனுமான தேவராதனிடத்தில் அந்த வில்லை அடைக்கலமாகக் கொடுத்தான். அதுமுதல் எங்களிடம் அது இருந்து வருகிறது. நான் யாகம் செய்வதற்காகப் பூமியைக் கலப்பையால் உழும்போது ஒரு ஸ்திரீரத்னம் அகப்பட்டாள். அவளுக்கு ஸீதையென்று பெயர்வைத்து, அவளை வளர்த்துவரு கிறேன். அவளுக்கு யௌவனம் வந்தபோது, "அந்த வில்லை யார் தூக்கி நாண் பூட்டுகிறார்களோ அவருக்கு ஸீதையைக் கன் னிகாதானம் பண்ணுகிறேன்" என்று பிரதிஜ்ஞை செய்தேன். அநேக ராஜாக்கள் வந்து ப்ரயத்தனம் பண்ணினார்கள். ஒருவனு வும் அதைத் தூக்கி நாணேற்ற முடியவில்லை. அவர்கள் எல்லா ரும் என்னால் அவமானம் செய்யப்பட்டதாக எண்ணி, ஒன்றாய்ச் சேர்ந்து மிதிலையைத் தகைந்தார்கள். ஒரு வர்ஷகாலம் அதைப் பொறுத்துக்கொண்டு தபஸ் செய்தேன். அப்போது தே வர்கள் ஸந்தோஷப்பட்டு எனக்குக் கொடுத்த ஸேனையாலே அந்த ராஜாக்களை விரட்டிவிட்டேன்" இப்படி வில்லின் பிரபாவ த்தை வர்ணித்து, "ராமன் இந்த வில்லில் நாண்பூட்டினால் ஸீதையை அவனுக்குக் கொடுக்கிறேன்" என்று சொன்னான். (ஸர்-66)

(17) இப்படிச்சொல்லி ராஜா வில்லைக் கொண்டுவரும்படி வேலைக்காரர்களுக்குக் கட்டளையிட்டான். ஐயாயிரம் பேர்கள் எட்டு சக்கரங்கள் பூட்டிய வில் வைத்திருந்த பெட்டியை இழுத் துக்கொண்டு வந்தார்கள். விசுவாமித்ரர் "குழந்தை! ராமா! தனுஸைப்பார்" என்று சொன்னார். ராமனும், "இதைக் கை யாலே தொடுகிறேன். அதை வளைப்பதிலும் நாண் பூட்டுவதிலும் யத்னம் செய்கிறேன்" என்று சொன்னான். அப்படியே செய் என்று ஜனகனும் மஹர்ஷியும் சொன்னார்கள். ராமன் விளை யாட்டாக தனுஸை நடுவில் பிடித்துக்கொண்டு, நாணைப்பூட்டி அதைக் காதுவரையில் இழுத்தான். அது நடுவில் ஒடிந்து விட்டது. அதனால் இடிபோல ஒரு பெரிய சப்தமுண்டா யிற்று. பூமியில் நடுக்கமுண்டாயிற்று. அதனால் மூர்ச்சையடை ந்து எல்லாரும் கீழே விழுந்தார்கள். கீழே விழாதவர்கள் ஜனகனும், விசுவாமித்ரரும், இரண்டு ராஜகுமாரர்களும்தான். "இவன் வில்லில் நாண்பூட்ட சக்தனோ" என்று ஜனகனுக்கு

இருந்த பயம் போயிற்று. மிகுந்த ஸந்தோஷம் அடைந்து ராஜா "ராமனுடைய வீர்யத்தைப் பார்த்தேன். அவன்செய்த காரியம் மிகவும் ஆச்சரியமானது. ஸீதை அவனைப் பர்த்தாவாக அடைந்து ஜனகன் குலத்துக்கு மிகுந்த கீர்த்தியையுண்டுபண்ணுவள். என் பிரதிஜ்ஞை நிறைவேறிற்று. என் பிராணனைக் காட்டிலும் அதிக அபிமானம் வைக்கப்பட்ட ஸீதையை ராமனுக்குக் கொடுக்கிறேன்." என்று சொல்லி, விசுவாமித்ரரின் அநுமதியின்படி தசரதனைக் கலியாணத்துக்கு அழைத்துவர மந்திரிகளை அனுப்பினான். (ஸ-67) தூதர்கள் மூன்று ராத்ரி வழிநடந்து தசரதனிடம்போய் ஜனகனுடைய வார்த்தையைத் தெரிவித்தார்கள். அவனும் மிகுந்த ஸந்தோஷத்தையடைந்து வஸிஷ்டர் அநுமதிப்படி எல்லாருடனும் மிதிலைக்குப்புறப்பட்டான். (ஸ-68) தசரதன் மிதிலையைச் சேர்ந்தவுடன் ஜனகன் அவனையும் ருஷிகளையும் எதிர்கொண்டு அழைத்துவந்து, அவர்கள் வரவாலே தனக்குண்டான ஸந்தோஷத்தைத்தெரிவித்து, நாளையதினம் காலையில் பெரியோர்களுக்கு ஸம்மதமான விவாஹத்தை முடித்து வைக்கவேண்டும் என்று வேண்டினான். ராத்திரி எல்லாரும் ஸுகமாயிருந்தார்கள். (ஸ-69) மறுநாள் காலையில் ஜனகன், ஸாங்காசியத்தில் இருந்த தன் தம்பியான குசத்வஜனை வருவித்து, அவனுடன் ஸபையிலிருந்துகொண்டு தசரதனை வருவித்தான். தசரதன் வஸிஷ்டர் முதலானவர்களுடன் வந்து ஆஸனத்தில் உட்கார்ந்த பிறகு, மேல்நடக்கவேண்டியதை வஸிஷ்டர் சொல்லுவர் என்று சொன்னான். வஸிஷ்டர் இக்ஷ்வாகுவம்சத்தின் பிரபாவத்தைச்சொல்லி, ராமலக்ஷ்மணர்களுக்காக உன் பெண்களை வரிக்கிறேன் என்று சொன்னார். (ஸ-70) ஜனகன் தன் வம்சத்தின் பிரபாவத்தைச்சொல்லி, "ராமனுக்கு ஸீதையையும், லக்ஷ்மணனுக்கு என்னுடைய இன்னொரு பெண்ணான ஊர்மிளையையும் தானம்பண்ணுகிறேன். இன்று மகாநக்ஷத்திரம். நாளைக்கு மறுதினம் உத்தரபல்குனி நக்ஷத்திரத்தில் விவாஹம் நடக்கட்டும்." என்று சொன்னான். அப்போது விசுவாமித்ரர் "இக்ஷ்வாகுவம்சமும் ஜனகன் வம்சமும் மிகச்சிறப்புள்ளவைகள், ஒன்றுக்கொன்று தகுந்தவைகள். ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் உன் பெண்களைச் சொன்னபடி கொடு. தசரதன் பிள்ளைகளாகிய பரதனுக்கும் சத்ருக்னனுக்கும் உன் தம்பி

பெண்களை வரிக்கிறேன். விவாஹம் உத்தரபல்குனியில் நடக்கட்டும்." என்று சொன்னார். ஜனகனும் அதை ஒப்புக்கொண்டான். தசரதன் தன்னுடைய இருப்பிடத்துக்குப்போய் அப்யுதயச்ராத்தத்தையும் மறுநாள் கோதானத்தையும் செய்தான். (ஸ-72)

(18) மறுநாள் தசரதன் வஸிஷ்டருடன் தன் பிள்ளைகள் நால்வரையும் அழைத்துக்கொண்டு வந்தான். வஸிஷ்டர் ஜனகனைப்பார்த்து "தசரதன் பிள்ளைகளை அழைத்து வந்திருக்கிறான். நீ செய்யவேண்டிய கன்யாதானத்தை எதிர்பார்க்கிறான். விவாஹம் செய்விப்பதாய் சொன்ன பிரதிஜ்ஞையை நிறைவேற்று" என்று சொன்னார். ஜனகன், "ஏன் சீக்கிரம் உள்ளே வரக்கூடாது! எவருடைய ஆஜ்ஞையை எதிர்பார்க்கவேண்டும்? ஸ்வக்ருஹே கோ விசாரோஸ்தி யதா ராஜ்யமிதம் தவ। (73-15) ஸொந்த வீட்டில் ஆலோசிக்கவேண்டியது என்ன? உம்முடைய ராஜ்யம்போல் இதுவும் உம்முடையதே. நான் கன்யகைகளுடன் வந்து ஸித்தமாயிருக்கிறேன்" என்று சொன்னான். பிறகு ராமனை ஸீதையையும், லக்ஷ்மணனை ஊர்மிளையையும், பரதனை மாண்டவியையும், சத்ருக்னனை ச்ருதகீர்த்தியையும் பாணிக்ரஹணம் பண்ணும்படி சொல்லி, அவரவருக்கு அந்தந்தப் பெண்ணைத் தானம்பண்ணினான். அவர்களும் அந்தப் பெண்களைப் பாணிக்ரஹணம் பண்ணிக்கொண்டார்கள். விவாஹங்கள் வெகு அழகாக நடந்தன. (ஸ-73) மறுநாள் காலையில் விசுவாமித்ரர் இரண்டு அரசர்களிடமும் விடைபெற்றுக்கொண்டு தபஸு பண்ணப் போய்விட்டார். தசரதனும் ஜனகனிடம் விடைபெற்றுக்கொண்டு அயோத்திக்குப் புறப்பட்டான். ஜனகனும் பெண்களுக்குத்தகுந்த சீர்களை அனுப்பி யஜ்ஞ பூமியிலிருந்து தன் பட்டணத்துக்குச் சென்றான். (ஸ-74)

(19) தசரதன் ஊருக்குத் திரும்பிப்போகையில், நடுவழியில் துர்நிமித்தங்களைக்கண்டு, வஸிஷ்டரைக் கேட்டான். அவர் "கோரமான பயம் வருவதைப் பக்ஷிகள் தெரிவிக்கின்றன; மிருகங்கள் அது போய்விடும் என்று காட்டுகின்றன; பயப்பட வேண்டாம்" என்று சொல்லி பேசிக்கொண்டிருக்கையில், கடுங்

காற்று பூமி நடுங்கும்படியும், மரங்கள் கீழேவிழும்படியும் செய்துகொண்டு வீசிற்று. ஸூர்யனின் ஒளி மழுங்கிற்று. திக்குகள் விளங்கவில்லை. ஸேனை தூளிகளால் மூடப்பட்டது. அப்போது பரசுராமன் வில்லும் கையுமாய்த் தோன்றினன். வஸிஷ்டர் முதலான ருஷிகள்செய்த பூஜையைப் பெற்றுக்கொண்டு, ராமனிடம்போய் சொன்னன். (ஸ-74) "நீ மிதிலையில் வில்லை முறித்ததைக்கேட்டு இங்கே வந்திருக்கிறேன். இந்த என்னுடைய வில்லை வளைத்து நாண்பூட்டு. அதைப்பார்த்து பின்னலே உன்னுடன் த்வந்தவயுத்தம் செய்கிறேன்" என்று சொன்னன். இதைக்கேட்டு தசரதன் துக்கம் தோன்றும் முகத்துடன் அவரைப்பார்த்து—"க்ஷத்ரியர்களிடமிருந்த உம்முடைய கோபம் போய்விட்டதே. நீர் மிகுந்த கீர்த்தியையுடைய பிராமணன். சிறுவர்களான என் பிள்ளைகளுக்கு அபயத்தைக்கொடும். இந்திரனுக்குப் பிரதிஜ்ஞைசெய்து சஸ்திரங்களை எறிந்துவிட்டீர். பூமி முழுவதையும் கச்யபருக்குக் கொடுத்து, மஹேந்த்ர மலைக்குப் போய் அங்கே வஸிக்கிறீர். எங்கள் எல்லாருக்கும் நாசமுண்டாவதற்காகவா இங்கே வந்திருக்கிறீர்? ராமனை நீர் கொன்றால், நாங்கள் ஒருவரும் பிழைத்திருக்கமாட்டோம்." என்று புலம்பினன். தசரதனை அலக்ஷ்யம்செய்து பரசுராமன், ராமனிடத்தில் தன் வில்லின் *பிரபாவத்தைச் சொல்லி முன்போலவே, அதை நாணேற்றும்படியும் பிறகு த்வந்தவ யுத்தம் செய்யும்படி

* விஷ்ணுவுக்கும் ருத்ரனுக்கும் இருக்கும் பலாபலத்தை அறிய தேவர்களால் ஏவப்பட்டு ப்ரம்மா இரண்டு விற்களைச் செய்து, ஒன்றை விஷ்ணுவுக்கும், மற்றொன்றை ருத்ரனுக்கும் கொடுத்து, இரண்டுபேருக்கும் சண்டையை உண்டுபண்ணினன். அதில் விஷ்ணு 'ஹூம்' என்று சொல்லி ருத்ரன் வில்லைச் சக்தியில்லாததாகச் செய்தான். ருத்ரன் தன் வில்லைத் தேவராதனிடம் கொடுத்தான். விஷ்ணுவின் வில் ருசீகரிடம் வந்தது. அது அவரிடமிருந்து அவர் பிள்ளை ஜமதக்னிவழியாய் பரசுராமனிடம் வந்தது. இதனல் ருத்ரனைக்காட்டிலும் விஷ்ணு மேற்பட்டவன் என்பது காட்டப்பட்டது. இப்படியே ஸ்ரீதேசிகன் அபயப்ரதானஸாரத்தில் அருளிச்செய்கிருர். அந்த வில்லில் நாண்ஏற்றிப் பூட்டினதாலே ராமனே விஷ்ணு என்றும் ஏற்படுகிறது.

யும் சொன்னான். (ஸ-75) ராமன் நீர் உம்முடைய பிதாவின் கடனைத் தீர்ப்பதற்காக நீர் செய்த கர்மத்தை நான் கேட்டிருக்கிறேன். என்னை வீரியமில்லாதவனாகவும், அசக்தனாகவும் எண்ணி அவமானம் பண்ணுகிறீர். இப்போது என் பராக்ரமத்தைப்பாரும் என்றுசொல்லி, அவரிடமிருந்து வில்லையும் பாணத்தையும் வாங்கிக்கொண்டு வில்லில் நாணேற்றி, அதில் பாணத்தை வைத்து, "நீர் பிராமணனாயிருப்பதற்காகவும், விசுவாமித்ரருக்காகவும், உமது பிராணனை வாங்க பாணத்தை விடவில்லை. உமக்கு இஷ்டமானால் உம்முடைய கால் நடையையாவது, நீர் தபஸால் ஸம்பாதித்த சுபலோக ப்ராப்தியையாவது கெடுத்துவிடுகிறேன். இந்த பாணம் வீணாய்ப் போகக்கூடாது" என்று சொன்னான். பரசுராமன் இரண்டாவதை ஒப்புக்கொண்டான். "இந்த தனுவை வாங்கிக்கொண்டு நாண் ஏற்றினதால் நான் உன்னை விஷ்ணு என்று அறிகிறேன். மூன்று உலகங்களுக்கும் நாதனான உன்னால் நான் அபஜயத்தை அடைந்ததில் எனக்கு வெட்கமில்லை" என்றுசொல்லி, ராமனைப் பிரதக்ஷிணம் செய்து தன் இருப்பிடம் போனான். (ஸ-76) ராமன் பரசுராமன் வில்லை வருணனிடம் கொடுத்து ப்ரஜ்ஞையிழந்திருந்த தசரதனிடம்போய், 'பரசுராமன் போய்விட்டார்; ஸைந்யத்துடன் ஊருக்குப்போவோம்" என்று சொல்ல, தசரதன் ராமனைக் கட்டிக்கொண்டு, அவனும் தானும் மறுபடியும் பிறந்ததாக எண்ணினான். எல்லாரும் அயோத்திக்குப்போய்ச்சேர்ந்தார்கள். பரதன் சத்ருக்னனைக் கூட்டிக்கொண்டு அம்மானுடன் பாட்டனார் நகருக்குப்போனான். ராமன் தகப்பனாரையும் தாய்மார்களையும் குருக்களையும் பட்டணத்து ஜனங்களையும் ஸந்தோஷப்படுத்திக்கொண்டு ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் ஸுகமாக அநேக வருஷங்கள் வஸித்துகொண்டிருந்தான். (ஸ-77)

---

பாலகாண்டம் முற்றிற்று.

---

# அயோத்யாகாண்டம்.

(20) தசரதனுக்கு நான்கு பிள்ளைகளிடமும் மிகுந்த பிரீதி இருந்தது. ஆனபோதிலும், ராமனிடத்தில் அதிக ப்ரீதி. ராமனுக்கு ஒருபோதும் கோபம் கிடையாது. ஒருவன் கடுமையாகப் பேசினாலும், அதற்குப் பதில் சொல்லுகிறதில்லை; அவனிடத்திலும் மிருதுவாகவே பேசுகிறவன். * எப்படியாவது செய்த ஓர் உபகாரத்தாலும் ஸந்தோஷம் அடைகிறவன். கணக்கில்லாத அபராதங்களைச் செய்தாலும் அவைகளை நினைக்கிறதில்லை. இவைகளுக்குக் காரணம்—அவனுக்கு மனது வசமாயிருந்ததே. உபகாரம் செய்யவேண்டும் * என்று ஒருவன் எண்ணினாலும் ஸந்தோஷம் அடைகிறவன். சீலத்தாலும் ஜ்ஞானத்தாலும், வயதாலும் பெரியோர்களாயிருப்பவர்களுடன் எப்போதும் சேர்ந்திருப்பவன். முதலில் பேசுகிறவன்; மதுரமாகப் பேசுகிறவன்; பிரியத்தையே பேசுகிறவன்; வீர்யமுள்ளவன். ஆனாலும் கர்வப்படுகிறதில்லை. ப்ரஜைகளிடத்தில் ப்ரீதியுள்ளவன். அவர்களும் அவனிடத்தில் ப்ரீதியுள்ளவர்கள். இரக்கமுள்ளவன். வருத்தப்படுகிறவர்களைக் கண்டால் கண்டவிடத்திலேயேயிருந்து அவர்களுக்கு வேண்டியதைச் செய்துகொடுத்துக் கௌரவம் பண்ணுகிறவன். தன் குலத்துக்குத் தகுந்த சரணாகதரக்ஷணம் முதலானவைகளை எப்போதும் நினைத்துக்கொண்டு இருக்கிறவன். ஸாதுக்களை ரக்ஷித்து துஷ்டர்களை நிக்ரஹித்து பிரஜைகளைப் பரிபாலனம் பண்ணுவதாகிய க்ஷத்ரிய தர்மத்தை நன்றாய் அறிந்தவன். சொக்கட்டான் முதலான விளையாட்டுக் காரியங்களிலும் தர்மவிருத்தமான விஷயங்களிலும் ருசியில்லாதவன். வேதத்தையும், அதின் அங்கங்களையும், அஸ்த்ரவித்யையையும் நன்றாய் அறிந்தவன். சோம்பலும் கவனக்குறைவுமில்லாதவன். பரதோஷத்தைப்போல் தன் தோஷத்தையும் பார்க்கிறவன். கண்டவுடன் ஒருவன் ஸ்வபாவத்தை உள்ளபடி அறிகிறவன். இந்தக் குணங்களாலே எல்லாருக்கும் வேண்டியவனாயிருந்தான். (ஸ-1)

---

* செய்யவேண்டுமென்று எண்ணமில்லாமல் செய்வது; வேறு ப்ரயோஜநத்தை எண்ணிச் செய்வது.

(21) தசரதன் ராமனுடைய இந்தக் குணங்களைக்கண்டு, தான் ஜீவித்திருக்கும்போதே அவன் ராஜாவாயிருப்பதைப் பார்த்து ஸந்தோஷம் அடைந்து ஸ்வர்க்கம் போகவேண்டும் என்கிற ஆசையாலே மந்திரிகளையும் தனக்குட்பட்ட அரசர்களையும் வருவித்தான். ஜனகனையும் கேகயராஜாவையும் மாத்திரம் கூப்பிடவில்லை. (ஸ - 1) (அவர்கள் எல்லோரும் உட்கார்ந்த பின், அவர்களைப் பார்த்து தசரதன் "என் முன்னோர்களிடமிருந்து எனக்கு வந்த ராஜ்யத்தைப் பரிபாலநம்பண்ணிக்கொண்டு வந்தேன். என் உடம்பு ஜீர்ணமாகிவிட்டது. விச்ரமத்தைத் தேடுகிறேன். ராமனை யுவராஜாவாகப்பண்ணி, அவனிடத்தில் இந்தப் பாரத்தை வைக்க இச்சிக்கிறேன். அவன் உங்களுக்கு தகுந்த ராஜா. மூன்று உலகங்களுக்கும் இவனே நாதனாகஇருக்கத் தகுந்தவன். இது உங்களுக்கு ஸம்மதமா?" என்று கேட்டான். எல்லாரும் ஒரே மனதாய் ராஜா சொன்னதை ஒப்புக்கொண்டு,

இச்சாமோ ஹி மஹாபாஹும் ரகுவீரம் மஹாபலம்।
கஜேந மஹதா யாந்தம் ராமம் சத்ராவ்ருதாநநம்॥

"மஹாபாஹுவும் மஹா பலமுள்ளவனுமான ராமன் பெரியயானையின்மேல் ஏறிக்கொண்டு வெண்குடை நிழலின்கீழ் வருவதை நாங்கள் பார்க்க ஆசைப்படுகிறோம்" என்று பதில் சொன்னார்கள். தசரதன் அவர்கள் அபிப்ராயத்தை உள்ளபடி அறிய, அறியாதவன்போல் "எனக்கு ஒரு ஸம்சயமுண்டாகிறது; என்னைவிட்டு ராமனை ராஜாவாகப் பார்க்க ஆசைப்படுகிறீர்களே; நான் ராஜ்யத்தைத் தர்மமாகப் பரிபாலனம் செய்கையில், வேறொருவனை ராஜாவாகப் பார்க்க ஏன் ஆசைப்படுகிறீர்கள்" என்று கேட்டான். அவர்கள் ராமனுடைய குணங்களை விரிவாய்ச் சொல்லி, "இந்தக் குணங்கள் உள்ளவனாகையால் அவன் ராஜாவாயிருப்பதை விரும்புகிறோம்") என்று பதில் சொன்னார்கள். (ஸ-2) தசரதன் வஸிஷ்டரைப் பார்த்து, ராமனுடைய அபிஷேகத்துக்கு வேண்டிய காரியங்களைச் செய்யவேண்டுமென்று ப்ரார்த்திக்க, அவரும் வேலைக்காரர்களை இன்னின்ன காரியங்களைச் செய்யவேண்டும் என்று கட்டளையிட்டார். (ஸ-3)

(22) பிறகு தசரதன், ராமனை அழைத்துவரும்படி ஸுமந்த்ரனுக்குக் கட்டளையிட்டான். அவனும் ராமனை ரதத்

தில் ஏற்றிக்கொண்டு வந்தான். ராமன் அதிலிருந்து இறங்கித் தகப்பனரிடம் போய் நமஸ்காரமும் அபிவாதநமும் செய்து அஞ்ஜலி பண்ணிக்கொண்டு நின்றான். தசரதன், அவனைக் கையைப்பிடித்துக் கட்டிக்கொண்டு பக்கத்திலிருந்த ஓர் ஆஸனத்தில் உட்காரச்சொல்லி, "நீ என் மூத்த பாரியையிடம் பிறந்தவன். நல்ல குணங்கள் நிறைந்தவன். எனக்குப் பிரியமான பிள்ளை. உன் குணங்களால் இந்த ப்ரஜைகளை ஸந்தோஷப்படுத்துகிறாய். ஆகையால் உன்னை யுவராஜாவாக அபிஷேகம் பண்ணப்போகிறேன். நீ இயற்கையாகவே விநயமுள்ளவன். நல்ல குணமுள்ளவன். ஆனபோதிலும், உன்னிடத்திலுள்ள ஸ்நேஹத்தால் உனக்கு ஹிதத்தைச் சொல்லுகிறேன். எப்போதும் விநயமுள்ளவனும் இந்திரியங்களை ஜயித்தவனுமாகஇரு. காமத்தாலும் கோபத்தாலும் உண்டாகும் * வியஸனங்களை விடு. பிரத்யக்ஷமாகவும் சாரர்களைக்கொண்டும் அறியவேண்டியவைகளை அறிந்து, மந்திரிகளையும் ஜனங்களையும் ஸந்தோஷப்படுத்து. தான்ய கிருஹங்களையும் ஆயுதசாலைகளையும் நிரப்பிக்கொண்டு, ஜனங்களை ஸந்தோஷப்படுத்தி, அவர்களைத் தான் சொன்னதைக் கேட்கும்படி செய்து, எவன் ராஜ்யத்தைப் பரிபாலனம் பண்ணுகிறானே, அவனிடம் அமிருதத்தைக் கண்ட தேவர்களைப்போல் மித்ரர்கள் ஸந்தோஷப்படுவார்கள்" என்று சொன்னான். இதைக்கேட்டு ராமன் ராஜாவுக்கு அபிவாதனம்பண்ணி ரதத்தில் ஏறி, தன் கிருஹத்துக்குப் போனான். நடந்ததை ராமனுக்கு வேண்டியவர்கள் அவன் தாயார் கௌஸல்யையிடம் போய் சொல்லஅவளும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்து, அவர்களுக்கு வேண்டியபடி ஸம்மானத்தைச் செய்தாள். (ஸ-3)

(23) தசரதன் மந்திரிகளுடன் ஆலோசித்து "நாளையதினம் புஷ்யம், அதில் அபிஷேகம் நடக்கட்டும்" என்று சொல்லி, ஸுமந்திரனைக்கொண்டு ராமனை தன் கிருஹத்துக்கு மறுபடியும் வருவித்தான். வந்து நமஸ்காரம் பண்ணின அவனைக் கட்டிக் கொண்டு ஆஸனத்தில் உட்காரவைத்து, தசரதன் "நான் விருத்

* வியஸனங்கள்—ஸ்திரீ, சூதாடுவது, வேட்டையாடுவது, மத்யம், கடுமையாகப் பேசுவது, உக்ரமான தண்டனையைச் செய்வது, திரவ்யத்தை நாசம் பண்ணுவது—என்பவைகளாம்.

தனுப்பிவிட்டேன்; நான் எல்லாப் போகங்களையும் அநுபவித்தேன்; யாகங்களைத் தகுந்தபடி செய்தேன்; தேவர்களுக்கும் ருஷி களுக்கும் பித்ருக்களுக்கும் உள்ள கடன்களைத் தீர்த்துவிட்டேன்; உனக்கு அபிஷேகம் செய்வதைத்தவிர எனக்குச் செய்யவேண் டியது ஒன்றுமில்லை; ராஜாவுக்கு மரணத்தைக் காட்டும் கெட்ட ஸ்வப்நங்களைக் காண்கிறேன்; என் எண்ணம் மாறுவதற்குமுன் னால் இந்தக் காரியம் நடக்கவேண்டும்; உஜா ஷி ஷூாணி நாං 8 தி: மனிதர்களின் புத்தி சஞ்சலம். இன்றையதினம் புனர்வஸு; நாளைக்குப் புஷ்யம். அதில் அபிஷேகத்தைப் பண்ணிக்கொள். இன்றையதினம் நீயும் உன் பத்னியும் உபவாஸமிருந்து தர்ப்பத் தில் படுத்திருங்கள். உங்களை வேண்டியவர்கள் ஜாக்கிரதையாய் சுற்றிலுமிருந்து ரக்ஷிக்கட்டும். பரதன் அம்மான் வீட்டுக்குப் போயிருக்கிறான். அவன் வருவதற்குள் இந்தக் காரியம் முடிய வேண்டும். பரதன் உன் இஷ்டப்படி நடக்கிறவன். ஸத்துக் களின் தன்மையிலிருக்கிறவன். இந்திரியங்களை ஜயித்தவன். ஆனபோதிலும் மனிதர்கள் மனது நிலையில்லாதது என்று எண் ணுகிறேன்" என்று சொன்னான். ராமன் இதைக் கேட்டு, ராஜாவுக்கு அபிவாதநம் பண்ணி, தாயார் கிருஹத்துக்குப் போனான். நடக்கப்போகிற அபிஷேகத்தைக் கேட்டு ஸீதை யும் லக்ஷ்மணனும் அவன் தாயார் ஸுமித்ரையும் அங்கே வந்திருந்தார்கள். ராமன் தாயாரைப் பார்த்து, "அம்மா! பிரஜைகளைப் பாலநம் பண்ணும்படி எனக்குத் தகப்பனார் கட் டளை பண்ணியிருக்கிறார். அதற்காக நாளையதினம் அபிஷேகம் நடக்கப்போகிறது. இன்று ராத்திரி ஸீதையுடன் நான் உப வாஸமிருக்கவேண்டியது. இந்த விஷயத்தில் எனக்கும் ஸீதைக் கும் என்ன என்ன மங்களமான காரியங்களைச் செய்யவேண்டி யதோ, அவைகளைச் செய்." என்று சொன்னான். இதைக் கேட்டு கௌஸல்யை "குழந்தை! ராம! சிரஞ்சீவியாயிரு. உனக்கு விரோதிகள் ஒழியட்டும். என் பந்துக்களையும் ஸுமித் ரையின் பந்துக்களையும் ஸந்தோஷப்படுத்து. நீ நல்ல நக்ஷத் திரத்தில் என்னிடம் பிறந்தாய். நீ உன் குணங்களால் தகப்ப னாரை ஆராதித்தாய். தாமரைக்கண்ணனை பகவானை உத்தே சித்து நான் செய்த வ்ரதங்களுக்குப் பலன் உண்டாயிருக்கிறது. இக்ஷ்வாகுராஜாக்களின் ஸம்பத்து உன்னை அடையப்போகிறது."

என்று சொன்னாள். ராமன், அஞ்ஜலி பண்ணிக்கொண்டு வணக்கமாயிருந்த லக்ஷ்மணனைப் பார்த்து, "லக்ஷ்மணா! இந்த பூமியை என்னுடன்கூட நீ ஆளு. நீ எனக்கு இரண்டாவது ஆத்மா. உன்னையும் இந்த ஸ்ரீ அடைந்திருக்கிறது. அப்பா! ராஜ்ய ஸுகங்களையும் வேண்டிய போகங்களையும் அநுபவி. உனக்காகவே ஜீவித்திருப்பதையும் ராஜ்யத்தையும் ஆசைப்படுகிறேன்" என்றான். இப்படிச் சொல்லிவிட்டு, தாயார்களிடம் அநுமதி பெற்றுக்கொண்டு ஸீதையுடன் தன் கிருஹத்துக்குப் போனான். (ஸ-4) ராஜாவால் வேண்டப்பட்டு வஸிஷ்டர் வந்து ராமனை உபவாஸமிருக்கும்படி செய்து, ராஜாவிடம் போய் அதைத் தெரிவித்தார். (ஸ-5)

(24) மறுநாள் விடியற்காலத்தில் ராமன் தன் கிருஹத்துக்கு அலங்காரம் செய்வித்தான். புண்யாஹவாசகம் நடந்தது. அதின் கோஷம் ஊரில் நிறைந்தது. ஜனங்களும் நகரத்தைப் பலவிதமாய் அலங்காரம் செய்தார்கள். வெளியிலிருந்து ஜனங்களும் ராமனுடைய அபிஷேகத்தைப் பார்க்க வந்துசேர்ந்தார்கள். ஜனங்கள் கூட்டங் கூட்டமாய் வீதிகளிலிருந்துகொண்டு ஸந்தோஷமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள்.—"இந்த ராஜா மஹாத்மா. தான் வ்ருத்தனாயிருப்பதை அறிந்து ராமனுக்கு அபிஷேகம் பண்ணப்போகிறான். நமக்குத் தெய்வம் அநுக்ரஹம் செய்திருக்கிறது. ராமன் வெகுகாலம் ஜனங்களை ரக்ஷித்துக்கொண்டு ஜீவிக்கவேண்டும். ராமன் தம்பிகளிடத்தில்போலவே நம்மிடத்திலும் பிரீதியுள்ளவன். ராமனுடைய அபிஷேகத்தை நாம் பார்க்கும்படி செய்கிற தசரதனும் சிரஞ்சீவியாயிருக்கட்டும்" என்று. (ஸ-6)

(25) இது நிற்க, கைகேயின் பந்துவும் வேலைக்காரியுமான மந்தரை என்பவள் தற்செயலாய் மாடியில் ஏறி நகரத்திலிருந்த கோலாஹலத்தைப் பார்த்தாள். விசாரித்து மறுநாள் ராமனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் ஆகப்போவதை அறிந்து, கீழே இறங்கி கைகேயினிடம் வந்து, "அறிவில்லாதவளே! எழுந்திரு. ஏன் படுத்திருக்கிறாய்? பயம் உனக்கு வந்திருக்கிறது. அதை நீ அறியவில்லையே, 'என் பர்த்தா என் இஷ்டப்படி நடக்கிறவன்' என்று உன் ஸௌபாக்யத்தைச் சொல்லிக்கொண்டிருந்

தாயே, வெய்யில்காலத்தில் ஆற்றின் பிரவாஹம்போல், அது குறைந்துபோய்விட்டது" என்று கடுமையாகப் பேசினாள். இதைக் கேட்டு கைகேயி துக்கப்பட்டு "என்ன பயம்" என்று கேட்க, மந்தரை "ராஜா ராமனை யுவராஜாவாக அபிஷேகம் பண்ணப்போகிறான். நான் நெருப்பினால் சூழப்பட்டவள்போல் இருக்கிறேன். உனக்கு ஹிதத்தைச் செய்யவே இங்கு வந்திருக்கிறேன். உன் துக்கத்தால் எனக்கும் துக்கம் உண்டாகும். உனக்கு க்ஷேமம் வந்தால் எனக்கும் க்ஷேமம் உண்டு. நீ ராஜ குலத்தில் பிறந்தவள். நீ ராஜாவின் மஹிஷியாக இருக்கிறாய். ராஜ தர்மங்கள் உக்ரங்களாயிருக்கும் என்பதை நீ ஏன் அறியவில்லை? உன் பர்த்தா தர்மம் பேசுகிறவன்போல் நடனம் பண்ணுகிறான். உண்மையில் வஞ்சகன்; அவன் பேச்சு மிருதுவாயிருக்கிறது; செய்கையோ கொடுமையாயிருக்கிறது. அவனை நல்ல ஸ்வபாவமுள்ளவன் என்று எண்ணுகிறாய். ஆகையால்தான் நீ ஏமாந்திருக்கிறாய். அவன் உன்னுடன் சேர்ந்திருக்கும் காலத்துக்குத் தகுந்த நல்ல பேச்சுக்களைப் பேசுகிறான். உன் காரியங்களை நாசம் பண்ணுகிறவன். இப்போது கௌஸல்யையிடம் ஸம்பத்தைச் சேர்க்கப்போகிறான். உன் பிள்ளை பரதனை உன் பந்துக்களிடம் அனுப்பி, இடையூறு இல்லாமல் செய்து, நாளைக் காலையில் ராமனை ராஜ்யத்தில் ஸ்தாபிக்கப்போகிறான். ராஜா உனக்குப் பர்த்தா என்று பெயர் வைத்துக்கொண்டிருக்கிற சத்ரு. பாம்பு தன் குட்டியை வளர்ப்பதுபோல், அவனை நீ மடியில் வைத்து லாளநம் பண்ணினாய். சத்ருவும் பாம்பும் கவனிக்காமல் விடப்பட்டால் கெடுதியைச் செய்யும். அப்படியே தசரதன் உன் பிள்ளைக்கும் உனக்கும் கெடுதலைச் செய்யப்போகிறான். ஆகையால், தகுந்தகாலம் போவதற்கு முன்னாலேயே செய்யவேண்டியதைச் செய்து, உன்னையும் உன் பிள்ளையையும் ரக்ஷித்துக்கொள்; என்னையும் ரக்ஷி." என்று சொன்னாள். இதைக் கேட்டு கைகேயி ஸந்தோஷத்துடன் எழுந்திருந்து, தன்னுடைய உயர்ந்த ஆபரணத்தைக் கொடுத்து, "எனக்கு

மிகவும் பிரியத்தைச் சொல்லுகிறாய். இதைச் சொன்ன உனக்கு இன்னும் என்ன செய்வேன்? ராமனுக்கும் பரதனுக்கும் நான் வித்தியாஸத்தைக் காணவில்லை. ஆகையால், ராமனுக்கு அபிஷேகம் ஆகப்போவதைக்கேட்டு ஸந்தோஷப்படுகிறேன்" என்று சொன்னாள். (ஸ-7) இப்படிச் சொன்ன கைகேயியைப் பார்த்து மந்தரை ஆபரணத்தை எறிந்து, கோபத்துடனும் துக்கத்துடனும் "மூட்டாளே! தகாத விஷயத்தில் ஸந்தோஷப்படுகிறாய். துக்கஸமுத்ரத்தின் நடுவில் இருக்கிறாய். இதை ஏன் அறியவில்லை? ஸபத்நியின் பிள்ளை சத்ரு. அவன் அபிவிருத்தியைக் கண்டு புத்தியுள்ள எவள் ஸந்தோஷப்படுவள்? உன் அறியாமையைப்பார்த்து நான் துக்கப்படுகிறேன். ராஜ்யம் இரண்டுபேருக்கும் பொதுவானது. அதனால், ராமனுக்குப் பரதனிடம் பயமுண்டு. அவனுக்கு ராமனால் பயமுண்டாகுமே. ஹிம்ஸீதாஸி ஜாயதே பயப்பட்டவனிடமிருந்து பயமுண்டாகும். இது பிரஸித்தமான தன்றோ? எல்லாப் பிள்ளைகளுக்கும் ராஜ்யம் பொதுவன்றோ என்று கேட்கிறாயோ? பரதன்தான் ராமனுக்கு அடுத்தபடி ராஜ்யத்தை அடையவேண்டியவன்; அவனுக்குப்பிறகு லக்ஷ்மணனும் சத்ருக்னனும். ஆகையால், ராமனுக்குப் பரதனிடமிருந்து தான் பயமுண்டாகும். அவனைக் கொல்ல அவன் இச்சிக்கமாட்டானா? ராமன் ராஜநீதியை அறிந்தவன்; தகுந்த காலத்தில் தாமதமில்லாமல் வேலை செய்கிறவன்; அவனிடமிருந்து உண்டாகும் பயத்தை நினைத்து, உன்பிள்ளையான பரதனைப் பற்றி நடுங்குகிறேன். கௌஸல்யை பாக்யம் பண்ணினவள்; அவள்பிள்ளைக்கு நாளைக்கு அபிஷேகம் நடக்கப்போகிறது. அவளுக்கு நீ வேலைக்காரிபோல் அஞ்ஜலி பண்ணிக்கொண்டு அவளிடம் நிற்கப்போகிறாய். உன்பிள்ளையும் ராமனுக்கு வேலைக்காரனாகப்போகிறான். ராமன்பத்னிகள் ஸந்தோஷப் படப்போகிறார்கள். உன் மருமகள்கள் பரதனுக்கு நேரிடும் துக்கத்தைக்கண்டு துக்கப்படுவர்கள்" என்று சொன்னாள். கைகேயி மனது கலங்காமல் ராமனுடைய குணங்களை ஸ்தோத்ரம் பண்ணினாள்—"ராமன் தர்மம் அறிந்தவன்; பெரியோர்களால் சிக்ஷிக்கப்பட்டவன்; நல்லபிள்ளையிருக்கவேண்டிய நிலைமையை அறிந்தவன்; அவன் ராஜாவுக்கு மூத்தபிள்ளை; அவன் தான் ராஜ்யத்தை அடையத்தகுந்தவன். அவன் தம்பிகளையும்

வேலைக்காரர்களையும் தகப்பனையிருந்து ரக்ஷிப்பன். ராமனுக்குப் பிறகு நூறு வருஷமானாலும் பரதனுக்கு ராஜ்யம் கிடைக்கும். எப்படி என்றால் பரதன் வெகுமானம் செய்யத்தகுந்தவனோ, அப்படியே ராமனும். அவன் கௌஸல்யையைக்காட்டிலும் அதிகமாக எனக்குப் பணிவிடை செய்கிறவன். ராமனுக்கு ராஜ்யம் வந்தால் பரதனுக்கு வந்ததுதான். அவன் தன்னைப்போலவே தம்பிகளையும் பார்க்கிறவன். இப்படியிருக்க, நீ எதற்காகத் தபிக்கிறாய்?" என்று சொன்னாள். இதைக் கேட்டு மந்தரை மிகுந்த துக்கம் அடைந்து, பெருமூச்சுவிட்டு, மறுபடியும் கைகேயியைப்பார்த்து "நீ ஒன்றையும் ஆலோசித்துப் பார்க்காதவள். உனக்குக் கெடுதலையே நல்லதாக எண்ணுகிறாய். உன் பிள்ளை ராஜ்யத்தை அடையாமலும், நீ ஸபத்னிக்கு வேலைசெய்யும்படி நேர்ந்தும் துக்கஸமுத்ரத்தில் முழுகப்போகிறாய். ராமன் ராஜாவானால், அவனுக்குப்பிறகு அவன் பிள்ளையன்றோ ராஜாவாயிருக்கவேண்டியது. பரதனுக்கு ராஜ்யமே கிடைக்காது. ராஜாவின் பிள்ளைகள் எல்லாருக்கும் ராஜ்யம் கிடைப்பது என்பதில்லை. அவர்கள் எல்லாரையும் ராஜாவாக வைப்பது ராஜநீதிக்கு விரோதம். ஆகையாலே, மற்றப் பிள்ளைகள் குணமுள்ளவர்களாயிருந்தாலும் அவர்களை விட்டு விட்டு மூத்த பிள்ளைக்கே ராஜ்யத்தைக் கொடுக்கிறார்கள். பரதன் ராஜாவாக இல்லாமல் போனபோதிலும் ராஜஸௌகம் கிடைக்கும் என்று எண்ணுகிறாயோ? அதுவும் கிடைக்காது. பரதன் கிட்ட இருந்தால் அவனிடத்தில் ராஜாவுக்குப் பிரீதி இருக்கும். அவனோ அம்மான் வீட்டில் வெகுநாளாயிருக்கிறான். கிட்ட இருந்தால்தான் உலகத்தில் ஒருவருக்கு ஒருவனிடத்தில் பிரீதி உண்டாகும்.

ஸந்நிகர்ஷாத்து ஸௌஹார்தம் ஜாயதே ஸ்தாவரேஷ்வபி (8-28)

இதை ஸ்தாவரங்களிலும் பார்க்கலாம். உன் பர்த்தா நீ சொன்னபடி கேட்கிறான் என்று கர்வத்தால் ராமன் தாயாரைப் பலவிதமாய் அவமானப்படுத்தினாய். அவள் அவைகளை நினைத்துக்கொண்டு, ஏன் உனக்கு விரோதம் செய்யமாட்டாள். ஆகையால் உன் பிள்ளை ராஜ்யம் அடைவதையும், ராமன் தேசத்தை விட்டுவிரட்டப்படுவதையும் எப்படிச் செய்யலாம் என்று ஆலோசிப்பாய்" என்று முடித்தாள். (ஸ-8)

(26) மந்தரை பல காரணங்களைச்சொல்லி நிரூபணம் செய்ததைக்கேட்டு, * கைகேயி மனம் கலங்கி, "இப்போதே ராமனைக் காட்டுக்கு அனுப்பிப் பரதனுக்கு அபிஷேகம் செய்விக்கிறேன். இதற்கு என்ன உபாயம்?" என்று கேட்டாள். மந்தரை, "உன் பர்த்தா இந்திரனுக்குத் துணையாக சம்பரன் என்கிற அஸுரனுடன் சண்டைக்குப் போனானே. அப்போது அந்த அஸுரனால் அடிக்கப்பட்டபோது நீ அவனை யுத்தகளத்திலிருந்து கொண்டுவந்து ரக்ஷித்தாயே. ராஜா ஸந்தோஷப்பட்டு உனக்கு இரண்டு வரங்களைக் கொடுப்பதாகச் சொன்னானே. வேண்டிய வேளைகளில் அவைகளைக் கேட்கிறேன் என்று சொன்னாயே. அவைகளைக் கேட்பதற்கு இதுதான் ஸமயம். நீ கோபமுள்ளவள் போல் கோபகிருஹத்துக்குப்போய் உன் ஆபரணங்களையும் நல்ல வஸ்த்ரங்களையும் எறிந்துவிட்டு தரையில் படுத்திரு. ராஜா வந்து உன்னை நல்ல வார்த்தை சொல்லுவன். எதைக் கொடுப்பதாகச் சொன்னாலும் ஒப்புக்கொள்ளாதே. இரண்டு வரங்களையும் கொடுப்பதாக அவன் வாக்குத்தத்தம் பண்ணினாலல்லது எழுந்திராதே. வரங்களை கொடுப்பதாகச் சொன்னபிறகு, ராமன் காட்டுக்குப் பதினாலு வருஷம் போயிருக்கவேண்டுமென்பதை ஒரு வரமாகவும், பரதனுக்கு யுவராஜாவாகப் பட்டாபிஷேகம் செய்யவேண்டும் என்பதை மற்றொரு வரமாகவும் கேள். ராமன் காட்டுக்குப்போய்விட்டால், பரதனிடத்தில் எல்லாரும் பிரீதியுள்ளவர்களாவர்கள். அவன்ராஜ்யத்துக்கு வேர் உண்டாய் பலப்படும். ராமன் திரும்பி வந்தாலும், அவனால் ஒன்றும் செய்ய முடியாது" என்று உபாயத்தைச் சொல்லி கொடுத்தாள். (ஸ-9).

(27) ராஜா, ராமனுடைய அபிஷேகத்துக்காக வேண்டிய கட்டளைகளையிட்டுவிட்டு, நடந்த விஷயத்தைக் கைகேயிக்குச் சொல்லுவதற்காக, அவள் கிருஹத்துக்குப்போனான். அவளை அங்கே காணவில்லை. விசாரித்து அவள் கோபகிருஹத்திலிருப்

* கெட்டவனுடைய சேர்க்கையால் ஒருவனுக்கு இருக்கும் நல்ல எண்ணமும் போய்விடும் என்பது மந்தரையின் பேச்சைக்கேட்ட கைகேயியின் செய்கையால் விளங்குகிறது. இதனால்தான் நாஸ்திகனோடு சேரக்கூடாது என்று சாஸ்திரம் சொல்லுகிறது. அவன் சொல்லும் குயுக்திகளைக் கேட்டு தெய்வமிருக்கிறது என்கிற எண்ணமுள்ளவனுக்கும் அந்த எண்ணம போய்விடும். இப்படிப்பட்டவனை "𑌮𑌾𑌯𑌯𑌾𑌪𑌹𑍃𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌃" (அ-7) என்று கீதைசொல்லுகிறது. இதன்பொருள்—குயுக்திகளால் தெய்வவிஷயமான ஜ்ஞானத்தை இழந்தவர்களென்பது.

பதை அறிந்து அங்கே போய், அவளிருப்பைப்பார்த்து, அவளைத் தடவிக்கொடுத்து, மிகுந்த துக்கத்துடன் "உனக்குக் கோபம்வரக் காரணம் என்ன? வியாதியா? நல்ல வைத்யர்கள் இருக்கிறார்கள். அவர்கள் அதைத் தீர்ப்பார்கள். உன்னிடம் யாராவது கடுமையாகப் பேசினார்களா? உன்னை அவமானம் செய்தார்களா? நான் என்ன செய்யவேண்டும்? வதம் செய்யத்தகாத எவனையாவது வதம் செய்யவேண்டுமா? அல்லது வதஞ் செய்யத்தகுந்த எவனையாவது விடவேண்டுமா? எந்த தரித்ரனை பணக்காரனாக்கவேண்டும்? எந்தப் பணக்காரனை ஏழையாக்கவேண்டும்? நானும் என்னைச்சேர்ந்தவைகளும் உனக்கு அதீனங்கள். உன் அபிப்ராயம் எதையும் மாற்ற எனக்குத் தைரியமில்லை. உன் அபிப்ராயத்தை நிறைவேற்றுவதற்காக என்பிராணனையும் விடுவேன். உன்பலம் உனக்குத் தெரியாதா? என்னிடம் ஏன் ஸந்தேஹப்படுகிறாய். உன் இஷ்டத்தைச் செய்கிறேன். நான் செய்த புண்யத்தின்மேல் ஆணையிடுகிறேன். உன் மனதால் எதை வேண்டுகிறாயோ, அதை எங்கிருந்தாலும் வருவித்துக் கொடுக்கிறேன். எழுந்திரு எழுந்திரு" என்று நல்ல வார்த்தை சொன்னான். (ஸ-10).

(28) இதைக் கேட்டு கைகேயி "எனக்கு ஒருவரும் அப்ரியத்தைச் செய்யவில்லை; ஒருவரும் என்னை அவமானம் செய்யவில்லை. எனக்கு ஓர் அபிப்ராயமிருக்கிறது. அதை நீர் செய்யவேண்டும் என்று ஆசைப்படுகிறேன். அதைச் செய்ய உமக்கு இஷ்டமிருந்தால் ப்ரதிஜ்ஞை பண்ணும். பிறகு அதை இன்னது என்று சொல்லுகிறேன்" என்று சொன்னாள். இதைக்கேட்டு தசரதன் கொஞ்சம் சிரித்துக்கொண்டு, அவள் தலையைக் கையால் எடுத்து தன் மடியில் வைத்துக்கொண்டு "உன்னைக்காட்டிலும் எனக்குப் பிரீதியுள்ளவள் வேறொருத்தியுமில்லை. புருஷர்களுக்குள் ராமனைத்தவிர எனக்கு அதிகப் பிரியமானவன் இல்லை. அவன் என் உயிரைக்காட்டிலும் பிரீதிபண்ணத் தகுந்தவன். அவனைவிட்டுப் பிரிந்து ஒரு முகூர்த்தமும் இருக்கமுடியாது. உன் அபிப்ராயத்தை நான் செய்கிறேன் என்று அவன்மேல் சபதம் செய்கிறேன். அப்படியே நான் செய்த புண்ணியத்தின் மேலும் சபதம் செய்கிறேன்" என்று சொன்னான். இதைக்

கேட்டு, கைகேயி ஸந்தோஷப்பட்டு, “ நீர் பிரதிஜ்ஞை பண்ணு வதையும், வரங்களைக் கொடுக்கிறேன் என்று சொன்னதையும். அக்நி முதலான முப்பத்துமுக்கோடி தேவர்களும், சந்த்ர ஸூரியர்களும், ஆகாசமும், க்ரஹங்களும், இரவும் பகலும், திக்குகளும், பூமியும், மற்றவர்களும் கேட்கட்டும்” என்று சொல்லி தன் அபிப்ராயத்தை வெளியிட்டாள்—“ முன்னாலே எனக்கு இரண்டு வரங்கள் கொடுத்தீர். ராமன் அபிஷேகத்துக் காக சேகரித்த ஸம்பாரங்களைக்கொண்டு பரதனை யுவராஜாவாக அபிஷேகம் பண்ணவேண்டியது என்பது ஒரு வரம். ராமன் மரவுரியையும் மான்தோலையும் உடுத்திக்கொண்டு தலைமயிரை ஜடையாகப்பண்ணிக்கொண்டு தபஸ் செய்கிறவனாய் தண்டகா ரண்யத்துக்குப்போய், அதில் பதினான்கு வருஷம் இருக்க வேண்டும் என்பது இரண்டாவது வரம். இன்றைக்கே ராமன் காட்டுக்குப் புறப்படவேண்டும். இந்த வரங்களைக் கொடுக்கா விட்டால், இப்போதே பிராணனை விட்டுவிடுவேன்” என்று. (ஸ-11)

(29) கைகேயினுடைய கொடுமையான வார்த்தையைக் கேட்டு, “இஃதென்ன ஸ்வப்நமோ? தூக்கமில்லாமையால் அஃது அன்று. பிரமமோ? அதுவும் அன்று. அதற்குக்காரணமில் லையே; அல்லது முன் ஜன்மங்களில் நான் அநுபவித்ததை நினைக் கிறேனோ? இதுவும் அன்று ரோகத்தால் உண்டான பித்தோ?” என்று நினைத்து மனம் கலங்கி மூர்ச்சையடைந்தான். ஒரு முஹூர்த்தம் கழித்து நினைவு திரும்பிவந்தது. தரையில் உட் கார்ந்துகொண்டு பெருமூச்சுவிட்டு, புலியைக்கண்ட மானைப் போலவும், மந்திரத்தாலே கட்டப்பட்ட பாம்பைப்போலவும் வருத்தப்பட்டு சக்தியற்றவனாய், கோபத்துடன் “உன்னைச்சுட வேண்டும்” என்று சொல்லி, மறுபடியும் ப்ரஜ்ஞையையிழந்தான். வெகுநேரம்கழித்து நினைவு திரும்பிவந்தது. கைகேயியைக் கண்ணால் சுடுவதுபோல் பார்த்து, “ க்ரூரமானவளே! கெட்ட நடக்கையுள்ளவளே! இந்தக்குலத்தை நாசம் பண்ணுகிற வளே! பாபிஷ்டையே! ராமனாலேயோ, அல்லது என்னாலேயோ என்ன அபராதம் செய்யப்பட்டது? அவன் தன் தாயாரிடத் தில்போல உன்னிடத்திலும் இருக்கிறானே? என்ன காரணத்

தால் அவனுக்குக் கெடுதலைச்செய்ய முயற்சிசெய்கிறாய்? தீக்ஷண மான விஷமுள்ள பாம்பை வீட்டுக்குக் கொண்டுவருவதுபோல், என் நாசத்துக்கே உன்னை என்கிரஹத்துக்குக் கொண்டுவந்தேன். உலகம்முழுவதும் ராமனுடைய குணங்களைச்சொல்லி ஸ்தோத்தி ரம் பண்ணுகையில், எந்த அபராதத்தை நினைத்து, நான் இஷ்ட மான பிள்ளையை விடுவது? கௌஸல்யையோ ஸுமித்ரையையோ ஸம்பத்தையோ என்பிராணனையோ விட்டாலும்விட்டுவிடுவேன். தகப்பனிடத்தில் பிரியமுள்ள ராமனை விடவேமாட்டேன். என் னுடைய மூத்த பிள்ளையைப்பார்த்து எனக்கு மிகுந்த பிரீதி உண்டாகிறது; அவனைப்பாராதபோது என் அறிவு போகிறது. ஸூரியனில்லாமல் உலகம் இருந்தாலும் இருக்கலாம், ஜலமில் லாமல் பயிர் இருந்தாலும் இருக்கலாம், ராமனில்லாமல் என் பிராணன் இருக்கவேமாட்டாது. ஆகையால் இந்த எண்ணத்தை விட்டுவிடு. உன் காலில் விழுகிறேன். மனத்தெளிவை அடை." என்று சொல்லி ராமன் குணங்களை வர்ணித்து, முன்போல அவளுக்கு வேண்டியதை எங்கிருந்தும் வருவித்துக் கொடுப்ப தாகச்சொன்னான். இப்படித் தன்னிடம் நல்லவார்த்தை சொல் லுகிற ராஜாவைப்பார்த்து, கைகேயி "வரங்களை கொடுத்துப் பிறகு தபிக்கிறீரே. "நான் தார்மிகன்" என்று பூமியில் எப்படிச் சொல்லிக்கொள்ளுவீர்? 'எவள் பிரஸாதமிருந்தால் நான் ஜீவித்தி ருப்பேனோ, என்னை எவள் ரக்ஷித்தாளோ, அவளுக்குச்சொன் னதை நான் பொய்யாகப்பண்ணிவிட்டேன்' என்று சொல்லு வீரோ? எனக்கு வரத்தைக்கொடுத்து வேறுவிதமாகப் பேசுகிற நீர், உம்மைப்போலவே எல்லா ராஜாக்களும் இருப்பார்கள் என்று ஜனங்கள் சொல்லும்படி செய்கிறீர். கழுகு புறாவைச் சாப்பிட ஆரம்பித்த காலத்தில் சைப்யன் தன் மாம்ஸத்தைக்கொடுத்து அதை ரக்ஷித்தான். அளர்க்கன் தன் கண்களைக்கொடுத்து ஸ்வர்க் கம் அடைந்தான். ஸமுத்ரம் கரையை மீறுகிறதில்லை என்று சொல்லி, அதற்கு உட்பட்டிருக்கிறது. முன்னோர்கள் செய்த படி நடவும். எனக்குப்பிரதிஜ்ஞை பண்ணியதைப் பொய்யாகப் பண்ணுகிறீரும். தர்மத்தைவிட்டு, ராமனுக்கு அபிஷேகம் செய்து கௌஸல்யையுடன் சேர்ந்து எப்பொழுதும் ஸுகப்பட ஆசைப் படுகிறீர். நான் சொன்னது தர்மமோ அதர்மமோ, நல்லதோ கெட்டதோ, எதுவாயிருந்தாலும் நீர் சொன்னதை

மாற்றக்கூடாது. ராமனுக்கு அபிஷேகம் செய்தால் இப்போதே உம்முன்னால் விஷத்தைச்சாப்பிட்டு இறந்துபோவேன். ஜனங்கள் ராஜாவின் தாயார் என்று கௌஸல்யைக்கு அஞ்ஜலி பண்ணுவதையும், அதை அவள் ஒப்புக்கொள்ளுவதையும் நான் ஒருநாள் கூடப் பார்க்கமாட்டேன். அதைப்பார்ப்பதைக்காட்டிலும் மரணம் அடைவதே எனக்கு நல்லது. ராமனைத் தேசத்தை விட்டு அனுப்புவதைக்காட்டிலும் வேறொன்றாலும் நான் ஸந்தோஷம் அடையேன் என்று என் பிள்ளை பரதன்மேல் ஆணையிடுகிறேன்" என்று கொடுமையாய்ப் பேசிவிட்டு, மௌனமாயிருந்தாள். (ஸ-12)

(30) ராஜா மனம் கலங்கி, ஒரு முஹூர்த்தம் ஒன்றும் சொல்லவில்லை கைகேயினுடைய தீர்மானத்தையும், அவள் இட்ட ஆணையையும் நினைத்து ராமா என்று சொல்லி, பெருமூச்சுவிட்டு, வெட்டினமரம் விழுவதுபோல் கீழே விழுந்தான். தீனஸ்வரத்துடன் கைகேயியைப்பார்த்து, "கெட்டதை நல்லதாக எவன் உனக்குச் சொல்லி கொடுத்தான். பிசாசு பிடித்தவள்போலப் பேசுகிறாயே. உனக்கு வெட்கமில்லையா? எதினாலே உனக்குப் பயமுண்டாய் இந்த வரங்களைக் கேட்கிறாய். நீ சிறு பெண்ணாயிருக்கும்போது இவ்விதமான ஸ்வபாவமுள்ளவளாக உன்னை அறியவில்லை. இப்போது நீ உன்னை உள்ளபடி காட்டுகிறாய். உலகத்துக்கும் உன்பர்த்தாவான எனக்கும் உன் பிள்ளையான பரதனுக்கும் நீ பிரியத்தைச் செய்வதானால், இந்த எண்ணத்தை விட்டுவிடு. ராமனில்லாமல் பரதன் ராஜ்யத்தில் இருக்கமாட்டான். ராமனைக் காட்டிலும் அவன் அதிக தர்மிஷ்டன் என்று எண்ணுகிறேன். காட்டுக்குப்போ என்று சொல்லுகையில் ராமன் முகம் வாடுமே? அதை எப்படி நான் பார்ப்பேன்? ஸுஹ்ருதுக்களுடன் கூட ராமனுக்கு அபிஷேகம் செய்வதாக நிச்சயம் செய்தேனே, அதை எப்படி மாற்றுகிறது? இங்கே வந்திருக்கிற ராஜாக்கள் என்ன சொல்லுவார்கள்? 'இந்த தசரதன் அறியாதவன், அவன் வெகுகாலம் ராஜ்யத்தை ஆண்டது ஏதோ தைவச்செயல்' என்று சொல்லார்களோ? ராமன் காட்டுக்குப்போனபிறகு, குணமுள்ள பல பெரியோர்கள் வந்து ராமனைப்பற்றி கேட்டால், நான் என்ன சொல்வேன்? கைகேயினால் துன்பப்படுத்தப்பட்டு பிள்ளையைக் காட்டுக்கு

அனுப்பினேன் என்று பதில் சொல்லுகிறதா? அது ஸத்யம் தான். ஆனால், முன்பு ராமனுக்குப் பட்டாபிஷேகம் பண்ணி வைப்பேன் என்று சொன்னது பொய்யாகுமே. இவ்விதமான அப்ரியமான காரியத்தைச் செய்தபிறகு கௌஸல்யை கேட்டால் என்ன சொல்லுவேன்? அவள் எனக்கு வேலைக்காரியைப்போலவும், தோழியைப்போலவும், பாரியைப்போலவும், கூடப்பிறந்தவள்போலவும், தாயாரைப்போலவும் எனக்குப் பணிவிடை செய்துகொண்டிருக்கிறாள். அவள் என் பிரீதியை ஆசைப்படுகிறவள்; பிரியமான பிள்ளையைப் பெற்றவள்; பிரியத்தைப் பேசுகிறவள்; ஆகையால் என்னால் வெகுமானம் அடையத்தகுந்தவள். அவள் அப்படியிருந்தும் நான் உனக்காக அவளிடம் வெகுமானம் செய்யவில்லை. அவளுக்கு வெகுமானம் செய்யாததும் உனக்கு வெகுமானம் செய்ததும், உடம்புக்கு அநுகூலமில்லாத வியஞ்ஜனத்தோடுகூடிய அன்னம் அதைச் சாப்பிட்டவனைத் துன்பப்படுத்துவதுபோல், எனக்குத் துன்பத்தையுண்டுபண்ணுகின்றன; நீ சொன்னதை நான் செய்தால் ஸுமித்ரையும் பயந்து என்னை நம்புவளோ? ராமன் காட்டுக்குப்போய் நானும் மரணம் அடைவதை ஸீதை கேட்டு என்ன வருத்தப்படுவளோ? காட்டுக்குப்போகிற ராமனையும், அதைக்கண்டு அழுதுகொண்டிருக்கிற ஸீதையையும் பார்த்து நான் பிழைத்திருக்கமுடியுமோ? ராமனோ நல்லபிள்ளை; காட்டுக்குப்போ என்றால் அப்படியே என்று சொல்லுவன். அவன் இரண்டாம்பேச்சு பேசான். நான் சொன்னதை மறுத்தால் அது எனக்குப் பிரியமாயிருக்கும். அவனோ அதை மறுக்கான். அவன் இதுவரையில் ரதத்திலும் யானையிலும் குதிரையிலும் ஏறிகொண்டே ஸஞ்சாரம் பண்ணினவன். அவன் கால்நடையாய் எப்படிக் காட்டில் நடப்பன். அவனுக்கு நான் நான் என்று போட்டிபோட்டுக்கொண்டு நல்ல ஆஹாரத்தைச் சமைக்கிறார்களே. காரமும் கசப்பும் துவர்ப்புமுள்ள காட்டில் கிடைக்கும் பதார்த்தங்களை எப்படிச் சாப்பிடுவன்? உயர்ந்த வஸ்திரத்தைக் கட்டிக்கொண்டிருந்தவன் காஷாய வஸ்திரத்தை எப்படித் தரிப்பன்? அவன் காட்டுக்குப்போனால் மரணம் என்னை யமன் வீட்டுக்குக் கொண்டுபோகும். எங்களிருவர்களுக்கும் கெடுதலைச் செய்தபிறகு மீதியிருக்கிற கௌஸல்யை முதலானவர்களுக்கு என்ன கெடுதியைச் செய்ய

நினைப்பாயோ? என்னையும் கௌஸல்யையும் ஸுமித்ரையும் பிள்ளைகளையும் துக்கத்தில் முழுக்கச்செய்து, நீ விதவையாய் ஸுக மாக இரு. உன் வியாபாரம் பரதனுக்கு இஷ்டமானால், அவன் எனக்கு பிரேதகார்யம் செய்யவேண்டாம்." என்று சொல்லி, கைகேயியைப் பலவிதமாய் நிந்தித்து, "கடைசியில் எனக்கு ஹிதமல்லாததைச் செய்யாதே. மனத்தெளிவை அடை" என்று அவள் கால்களில் விழுந்தான். (12-ஸ).

(31) இப்படி தசரதன் கைகேயியை நல்ல வார்த்தை சொல்லுவதும், அவள் அதைக்கேளாமல் கடுமையாகப் பேசுவதும், தசரதன் மோஹத்தை அடைவதுமாய் பகலில் மீதியிருந்த காலமும், ராத்ரியும் சென்றன * (ஸ-13) விடியற்காலத்தில் வஸிஷ்டர் வந்து துவாரத்தினின்று கொண்டு, "ராமன் அபிஷேகத்துக்காக எல்லாம் ஸித்தமாயிருக்கிறது. ராஜாவை த்வரைப்படுத்து என்று ஸுமந்த்ரனுக்குச் சொல்ல, அவனும் நடந்தவைகளை அறியாமல் தூங்கினதாக எண்ணிக்கொண்டு, அரசனை ஸ்தோத்ரம்பண்ணி எழுப்பினான். தசரதன் ஸந்தோஷமில்லாமல் சிவந்த கண்களுடன் "ஸுமந்த்ரனே! உன் வாக்யங்களாலே என் மர்ம ஸ்தானங்களை மேன்மேலும் அறுக்கிறாய்" என்று சொன்னான். அதைக்கேட்டு ராஜாவின் இருப்பைப் பார்த்து ஸுமந்த்ரன் வெளியே போனான். கைகேயி அவனைக் கூப்பிட்டு "ராஜா ராமனுக்கு அபிஷேகம் நடக்கப் போகிற ஸந்தோஷத்தாலே ராத்

---

* ஸ்திரீகள் பர்த்தாவையே தைவமாக எண்ணிக்கொண்டு தங்களுக்காக ஒன்றையும் தேடாமல் அவனுக்கு ப்ரியமானதையே செய்ய வேண்டியது. இப்படியிருக்க, கைகேயி தன் பர்த்தாவுக்கு அப்பிரியமானதைக்கேட்டு, 'நீ சொன்னபடி செய்தால் நான் ஜீவித்திருக்கமாட்டேன்' என்று அவன் சொன்னபோதிலும், தான் கேட்டதையே செய்யவேண்டுமென்று நிர்ப்பந்தப்படுத்தினாள். இது ஸ்திரீகளின் ஸ்வபாவம் என்று உலகத்துக்குக் காட்டப்படுகிறது. எவன் தன் பாரியையின் யௌவனத்தாலும் அழகாலும் மிருதுவான பேச்சுக்களாலும் நல்லதுபோன்ற நடக்கையாலும் அவள் வசப்படுகிறானோ, அவன் தசரதனைப்போல ஸமயம் வந்தபோது கஷ்டப்படுவன் என்பதைத் தசரத விருத்தாந்தத்தால் அறியலாம். ஆகையால் பிள்ளையிடத்திலும் பாரியையிடத்திலும் வீட்டிலும் அதிகப்பற்று (அபிஷ்வங்கம்) இருக்கக்கூடாது என்று சாஸ்த்ரம் சொல்லுகிறது. (கீதை 13-அ.)

திரி முழுவதும் விழித்துக்கொண்டிருந்து, இப்போது தூக்கத்தின் வசத்திலிருக்கிறார். சீக்கிரம்போய் ராமனை அழைத்துக்கொண்டுவா" என்று சொன்னாள். ஸுமந்த்ரன் வெளியேபோனான். (ஸ-14) அங்கே வந்திருந்த புரோஹிதரும் பிராம்மணர்களும் ராஜாக்களும் தங்கள் வரவை ராஜாவுக்குத் தெரிவிக்கும்படி சொல்ல, ஸுமந்த்ரன் மறுபடியும் உள்ளே போய் அவனை ஸ்தோத்ரம் பண்ணினான். "ஸாரதியே! ராமனை அழைத்து வா என்று இவள் சொன்னாளே, இந்த என் ஆஜ்ஞையைச் செய்யாதிருப்பதற்கு என்ன காரணம்? நான் தூங்கவில்லை. ராமனைச் சீக்கிரம் அழைத்துவா" என்று உத்திரவுபண்ணினான். ஸுமந்த்ரன் ராமனுக்கு அபிஷேகம் நடக்கப் போகிறதாக ஸந்தோஷப்பட்டுக்கொண்டு அவன் க்ருஹத்துக்குப் போனான். (ஸ-15)

(32) ஸுமந்த்ரன் ராமனுடைய க்ருஹத்துக்குள்ளே போய், ராமன் அலங்காரம் செய்துகொண்டு தங்கமயமான பர்யங்கத்தில் இருந்ததையும், சாமரமுங் கையுமாய் அவன் பக்கத்தில் ஸீதை இருந்ததையும் பார்த்து, கௌஸல்யை நல்ல பிள்ளையைப் பெற்றாள் என்று தனக்குள் சொல்லிக்கொண்டு, "ராம! கைகேயியுடன் கூடியிருக்கிற ராஜா, உன்னைப்பார்க்க இச்சிக்கிறார்" என்பதைத் தெரிவித்தான். இதைக்கேட்டு ராமன் ஸீதையைப் பார்த்து "ஸீதே! ராஜாவும் கைகேயியும் என் அபிஷேக விஷமாக ஆலோசித்துக்கொண்டிருக்கிறார்கள். ராஜாவின் அபிப்ராயத்தை அறிந்து, எனக்குப் பிரியத்தைச் செய்ய எண்ணி, கைகேயி ராஜாவை த்வரைப்படுத்துகிறாள். அவர்கள் ஸுமந்த்ரனை அனுப்பியிருக்கிறார்கள். இப்போதே எனக்கு ராஜா அபிஷேகம் பண்ணப்போகிறார். இங்கிருந்து உடனே போய் அவரைப்பார்ப்பேன். அது வரையில் இங்கு உன் பரிவாரத்துடன் ஸுகமாக இரு." என்று சொன்னான். ஸீதை வாசற்படி வரையில் அவனுக்கு மங்களத்தைச் சொல்லிக்கொண்டு அவன் பின்னால் போனாள். ராமன் உயர்ந்த ரதத்தில் ஏறிக்கொண்டான். வாசற்படியில் நின்ற லக்ஷ்மணன் கூடப்போய், பின்னால் ரதத்திலிருந்துகொண்டு குடையையும் சாமரத்தையும் பிடித்துக்கொண்டு நின்றான். ஜனங்கள் ராமன் போகிற மார்க்கத்தில் கூட்டம் கூட்டமாய் இருந்து

கொண்டு "ராஜாவினுடைய அநுக்ரஹத்தாலே இந்த ராமன் ராஜ்யஶ்ரீயை அடையப் போகிறான். இவன் ராஜாவாகும் போது, நமக்கு எல்லா ஸம்ருத்தியுமுண்டாகும்." என்று சொல்லிகொண்டு ரதத்தின்பின்னாலே போனார்கள். ஸ்திரீகளும் மாடிகளின்மேலிருந்து புஷ்பங்களை வர்ஷித்து, "ஸீதை முன்னாலே பெரிய தபஸைப் பண்ணியிருக்கவேண்டும். சந்திரனுடன் ரோஹிணி சேர்ந்ததுபோல் அவள் ராமனைச் சேர்ந்திருக்கிறாள்." என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். இதை யெல்லாம் கேட்டுக்கொண்டும், அலங்காரம் செய்யப்பட்ட நகரத்தின் அழகைப் பார்த்துக்கொண்டும், ஸுஹ்ருத்துக்கள் சொன்ன ஆசீர்வாதத்தை கேட்டுக்கொண்டும் ராமன் ராஜாவின் மாளிகைக்குச்சென்றான். ராமனுடைய அழகைப் பார்த்து ஒருவனும் தன் மனதையோ கண்ணையோ அவனிடமிருந்து இழுக்க முடியவில்லை. வால்மீகி

யஶ்ச ராமம் ந பஶ்யேத்து யம் ச ராமோ ந பஶ்யதி ।
நிந்தித: ஸ வஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே ॥ (17-14)

(எவன் ராமனைப் பார்க்கவில்லையோ, எவனை ராமன் பார்க்கவில்லையோ, இந்த இருவர்களையும் உலகத்தில் எல்லாரும் நிந்திப்பர்கள். அவர்கள் மனமும் அவர்களை நிந்திக்கும்) என்று சொல்லுகிறார். * (ஸ-16-17)

(33) ராமன் உள்ளேபோய் முகம் வாடியிருந்த பிதாவைப் பார்த்து, அவன் திருவடிகளில் வணங்கி அபிவாதநம் செய்தான். கைகேயியையும் வணங்கினான். தசரதன் "ராம" என்று சொல்லி மேலே சொல்லவும், அவனைப்பார்க்கவும் முடியாமல் கண்ணும் கண்ணீருமாயிருந்தான். இப்படி ஒருநாளும் இருந்ததில்லை. அதைப்பார்த்து, ராமன் பயந்து, "ராஜா இப்போது என்னைக் கண்டு ஸந்தோஷப்படவில்லையே. ராஜா கோபமுள்ளவராயிருந்தாலும் என்னைக்கண்டவுடன் அவர் மனது தெளியுமே. அப்படிப்பட்ட அவர் இப்போது என்னைப்பார்த்து ஏன் மனவருத்தம்

* ராமனைப் பாராதவன் எவ்வளவு உயர்ந்தவனாயிருந்தாலும், அவன் நிந்திக்கத் தகுந்தவன். ராமன் கண்ணுக்குப்படாதவனாய் ஒருவனும் இருக்கமாட்டான். அப்படி எவனாவதிருந்தால் அவன் பாக்கியமில்லாதவன்—என்பது சுலோகத்தின் கருத்து.

அடைகிறார்" என்று நினைத்தான். கைகேயியைப்பார்த்து, "என்னிடத்தில் அவர் கோபமுள்ளவராயிருக்கிறாரா? நான் அறியாமல் ஏதாவது அபராதம் செய்திருக்கிறேனோ? கோபம் போய் அவருக்கு என்னிடத்தில் ப்ரஸாதமுண்டாகும்படி செய். உடம்பில் ரோகமோ; மனதில் வருத்தமோ, அவரைப்பாதிக்கிறதா? 𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌂 𑌹𑌿 𑌸𑌦𑌾 𑌸𑍁𑌖𑌮𑍍 (8-13) எப்போதும் ஸுகம் கிடைப்பது அரிதன்றோ! கர்மத்தால் ஏற்பட்ட மனிதசரீரத்தில் இருக்கிறவனுக்கு அந்த உடம்பாலோ, அல்லது மனதாலோ துன்பமுண்டாகாமலிருக்குமோ? பரதன் விஷயத்திலாவது சத்ருக்நன் விஷயத்திலாவது தாய்மார் விஷயத்திலாவது ஏதாவது அசுபத்தைக்கேட்டாரா? ராஜாவை ஸந்தோஷப்படுத்தாமலாவது, அவர் சொன்ன வார்த்தையைச் செய்யாமலாவது ஒரு முஹூர்த்தமும் நான் பிழைத்திரேன். எவன் தன் உடம்பு இன்னாரிடமிருந்து உண்டானது என்று அறிகிறானோ, அவன் அவர் சொன்னபடி யிருக்கமாட்டானோ? பிதா கண்ணுக்கு நேரில் இருக்கிற தெய்வம். நீ ஒருவேளை அபிமானத்தாலே கோபித்துக்கொண்டு கடுமையாகப்பேசினாயா? இதை உண்மையாக எனக்குச்சொல்லு" என்று கேட்டான். கைகேயி "ராஜாவுக்குக் கோபமில்லை; உடம்பிலாவது மனதிலாவது வருத்தமில்லை. இப்போது அவர் மனதில் ஓர் எண்ணமிருக்கிறது. உன்னிடத்தில் பயத்தால் பேசவில்லை. நீ அவருக்குப்பிரியமானவன். அப்பிரியமானதை உனக்குச்சொல்ல அவருக்கு நாக்கு எழவில்லை. அவர் எனக்கு எதைப்பிரதிஜ்ஞை பண்ணியிருக்கிறாரோ, அதை நீ கட்டாயம் செய்யவேண்டும். அவர் முன்பு எனக்கு இரண்டு வரங்களைக்கொடுத்திருந்தார். அதை இப்போதுகொடுக்க மனமில்லாமல் ஸாதாரண மனிதனைப் போல் வருத்தப்படுகிறார். இந்த உலகம் தர்மத்தில் பொருந்தி இருக்கிறது. இது பெரியோர்களுக்குத் தெரிந்த விஷயம். உனக்காக என்னிடத்தில் கோபித்துக்கொண்ட இவர் எப்படி ஸத்யம் தவறாமலிருப்பாரோ, அப்படிச்செய், நல்லதோ கெட்டதோ அவர் எதைச்சொன்னாலும், நீ அதைச்செய்வாயானால், நான் எல்லாவற்றையும் சொல்லுகிறேன்" என்று சொன்னாள். இதைக்கேட்டு ராமன் வருத்தப்பட்டு, "அம்மா! என்னைப்பார்த்து இப்படிச் சொல்வது தகுந்ததன்று. ராஜா சொன்னதைச் செய்வதற்காக

நெருப்பில் விழுவேன். தீக்ஷ்ணமான விஷத்தைச் சாப்பிடுவேன், ஸமுத்ரத்தில் முழுகிவிடுவேன். ஆகையால் ராஜா எதை விரும்புகிறாரோ, அதைச்சொல்லு. அதைச்செய்கிறேன். பிரதிஜ்ஞை பண்ணுகிறேன். 𑌰𑌾𑌮𑍋 𑌦𑍍𑌵𑌿𑌰𑍍𑌨𑌾𑌭𑌿𑌭𑌾𑌷𑌤𑍇 (18-30) ராமன் இரண்டுதடவை சொல்லுகிறதில்லை." என்று கேட்டான். கைகேயி, ராஜா தனக்கு இரண்டு வரங்களை கொடுப்பதாக முன்னால் சொல்லியிருந்ததாகவும், ஒரு வரத்தால் ராமன் அபிஷேகம் பண்ணிக்கொள்ளாமல் பதினான்கு வருஷம் காட்டுக்குப் போவதையும், மற்றொரு வரத்தாலே பரதனை ராஜ்யத்தில் ஸ்தாபிப்பதையும் தான் கேட்டதாகவும் சொல்லி, "ராஜாவை ஸத்தியத்திலிருந்து நழுவாமலிருக்கும்படி செய்" என்று பதில் சொன்னாள். (ஸ-18)

(34) கைகேயி சொன்னதைக் கேட்டு ராமன் கோபமும் வருத்தமுமில்லாதவனாய், அவளைப் பார்த்து, "நீ சொன்னபடியே ஆகட்டும். ராஜாவின் ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றுகிறவனாய் ஜடையைத் தரித்துக்கொண்டு இங்கிருந்து காட்டில் வஸிக்கப்போகிறேன்; இதையொன்றைமாத்திரம் அறிய விரும்புகிறேன். முன்போல் என்னிடத்தில் ராஜா ஏன் பிரீதி பண்ணவில்லை. நான் போகமாட்டேனோ என்று நினைத்து நீ தைனியத்தை அடையாதே. உன் முன்னிலையில் மரவுரியையும் ஜடையையும் தரித்துக்கொண்டு போகிறேன். நீ பிரீதியுள்ளவளாயிரு. பரதனுக்கு அபிஷேகம் பண்ணவேண்டுமென்பதை ராஜா தானே சொல்லாதது எனக்கு அப்ரியமாய் என் மனதைச் சுடுகிறது. நியமனம் இல்லாமலேயே பரதனுக்கு நானே ஸீதையையும் ராஜ்யத்தையும் பிராணனையும் தனங்களையும் ஸந்தோஷமாய்க் கொடுப்பேனே. இப்படியிருக்க, ராஜாவினால் ஏவப்பட்டபிறகு அவர் ப்ரதிஜ்ஞையை நிறைவேற்ற உன் இஷ்டத்தை ஏன் செய்யமாட்டேன்" என்று சொன்னான். கைகேயி ஸந்தோஷப்பட்டு "ராம! சீக்கிரம் இங்கிருந்து நீ வனம் போகவேண்டும். நீ வனம் போகிறவரையில் உன் பிதா ஸ்நானமும் பண்ணுவதில்லை, போஜனமும் பண்ணுவதில்லை" என்று சொன்னாள். இதைக் கேட்டு ராஜா தன்னைத் தானே வெறுத்துக்கொண்டு துக்கத்தில் முழுகி, மூர்ச்சையடைந்து, தன்

படுக்கையில் விழுந்தான். ராமன் அவனைத் தூக்கி உட்கார வைத்து, கைகேயியைப் பார்த்து, "நான் அர்த்தத்தில் பிடிப்புள்ளவன் அன்று; உலகத்திலிருப்பதையும் ஆசைப்படவில்லை. நான் ருஷியைப்போன்றவன் என்று அறி. நான் தர்மத்தையே கைக்கொண்டவன். உனக்கு என்னாலே எது பிரியம் செய்ய முடியுமோ அதைப் பிராணனை விட்டாவது நான் செய்வேன். நான் அதைச் செய்துமுடித்ததாகவே அறி. அவர் சொல்லாவிட்டாலும் உன் வார்த்தையைக்கொண்டே வனத்தில் பதினன்கு வருஷங்கள் இருப்பேன். என்னை இப்படிச் செய் என்று சொல்ல உனக்கு அதிகாரமில்லையா? நீ ராஜாவைப்போய் கேட்டு அவர் சொன்னதாகச் சொல்லுகிறாயே; நீ என்னிடத்தில் ஒரு குணத்தையும் காணவில்லையா? நான் கௌஸல்யையிடம் நியமனம் பெற்றுக்கொண்டு, ஸீதைக்கு ஸமாதானம் சொல்லி வருகிறவரையில் பொறுத்திரு. அவைகள் முடிந்தவுடன் உடனே போகிறேன்" என்று சொன்னான்*. ராஜா, ராமன் வார்த்தையைக்கேட்டு மிகுந்த துக்கம் அடைந்து கண்ணீரைத் தடுக்கமுடியாமல் வாய்விட்டு அழுதான். மூர்ச்சை அடைந்திருந்த பிதாவையும் கைகேயியையும் வணங்கி, ராமன் வெளியே போய் ரதத்தில் ஏறாமல், தாயார் கிருஹத்துக்குப் போனான். லக்ஷ்மணன் மிகுந்த கோபம்கொண்டு கண்ணும் கண்ணீருமாய் அவன் பின்னால் போனான். (ஸ-19)

---

* ராமனுக்கு அபிஷேகம் பண்ணுவதாக ராஜா சொன்னபோதும் அவனுக்கு ஸந்தோஷமில்லை. காட்டுக்குப் போகும்படி கைகேயி ஏவினபோதும் துக்கமில்லை. அவன் ஸர்வேசுவரன். அவனுக்கு ராஜ்யத்தை அடைவதால் லாபமும், கையில் வந்ததை இழப்பதால் நஷ்டமும் இல்லை. அவன் அவதாரம் பண்ணின காரியத்தை முடிக்க அயோத்தியைவிட்டுக் காட்டுக்குப்போக ஒரு வியாஜத்தைத் தேடிக்கொண்டிருந்தான். அது கைகேயியினால் கிடைத்தது. அவன் தர்மத்தை நன்றாய் ஸ்தாபிக்கிறவனாகையால் இரண்டு தர்மங்களைத் தன் அநுஷ்டானத்தால் வெளியிட்டான். பிள்ளைகள் பிரியமோ அப்ரியமோ எதைத் தகப்பன் சொன்னாலும், அதைச் சொன்னபடியே பிரீதியுடன் கேட்கவேண்டுமென்பது ஒன்று. நாம் பிரியம் வந்தால் ஸந்தோஷப்படக்கூடாது என்பதும், அப்ரியம் வந்தால் துக்கப்படக்கூடாது என்பதும் மற்றொரு தர்மம். இதற்குத் திதிக்ஷை என்று பெயர்.

(35) ராமன் அந்தப்புரத்திலிருந்து வெளிக்கிளம்புகையில் "தகப்பன் சொல்லாமலே அந்தப்புரத்துக்குவேண்டிய காரியங்களை எவன் செய்துகொண்டிருந்தானோ அந்த ராமன் தேசத்தைவிட்டுப்போகிறான். அவன் பிறந்ததுமுதல் தாயாரான கௌஸல்யையிடம் எப்படி இருந்தானோ, அப்படியே நம்மிடமும் இருந்தான்; வைதாலும் கோபிக்கிறதில்லை. கோபத்தை உண்டு பண்ணத்தகுந்தவைகளை விலக்குகிறான்; கோபித்துக்கொண்டவர்களை நல்லவார்த்தை சொல்லுகிறான். எல்லாருக்கும் ரக்ஷகனாயிருக்கிற பிள்ளையை ராஜா காட்டுக்கு அனுப்புகிறானே. அவன் புத்தியில்லாதவன், எல்லாரையும் நாசம்பண்ணுகிறவன்" என்று அங்கிருந்த ஸ்திரீகளுடைய அழுகைக்குரல் கிளம்பிற்று. இதைக் கேட்டு வருத்தப்பட்டுக்கொண்டு ராமன் தாயார் கிருஹத்தை அடைந்தான். அவ்விடத்தில் கௌஸல்யை பட்டுவஸ்த்ரம் தரித்துக்கொண்டு விஷ்ணுவுக்குப் பூஜைசெய்து, பிராமணர்களைக் கொண்டு ஹோமங்களைச் செய்துகொண்டிருந்தாள். அவள் ராமனைக் கண்டவுடன் கட்டிக்கொண்டு ஆசீர்வாதம் பண்ணினாள்— "ராஜா ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றுகிறவன். இன்றைக்கே உனக்கு யுவராஜாவாக அபிஷேகம் பண்ணப்போகிறான். வ்ருத்தர்களும் தர்மத்தையே செய்கிறவர்களும் மஹாத்மாக்களுமான ராஜருஷிகளுடைய ஆயுஸையும் கீர்த்தியையும் அவர்கள் குலத்துக்குள்ள தர்மத்தையும் நீ அடைவாய்." என்று. அவள் உட்கார ஓராஸனம் கொடுத்துச் சாப்பிடும்படி சொன்னாள். அப்பொழுது ராமன் அந்த ஆஸநத்தில் உட்காராமல் அதனைத் தொட்டுக்கொண்டே கொஞ்சம் வெட்கத்துடன் அஞ்ஜலி செய்துகொண்டு அவளைப் பார்த்துச்சொன்னான்:—"அம்மா! உனக்கும் ஸீதைக்கும் லக்ஷ்மணனுக்கும் துக்கத்தைக்கொடுக்கும்படி பெரிய பயம் வந்திருப்பதை நீ அறியவில்லைபோலிருக்கிறது. நான் தண்டகாரண்யத்துக்குப் போகப்போகிறேன். இந்த ஆஸநம் வேண்டாம். தர்ப்பத்தினால்செய்த ஆஸநத்தில் நான் இருக்க வேண்டியகாலம் வந்திருக்கிறது. மாம்ஸத்தைத் தொடாமல் ருஷிகளைப்போலே தேனையும் கிழங்கையும் பழங்களையும் சாப்பிட்டுக்கொண்டு பதினான்கு வர்ஷம் அங்கே வஸிக்கப்போகிறேன். ராஜா பரதனை யுவராஜாவாக அபிஷேகம் பண்ணப்போகிறார்." என்று. இதைக் கேட்டவுடன் கௌஸல்யை கோடாரியால் வெட்-

டப்பட்ட மரம்போல் கீழே விழுந்தாள். ராமன் அவளைத் தூக்கி உட்காரவைத்து, அவள் உடம்பில்பட்ட மண்ணைக் கையால் துடைத்தான். அவள் அவனைப் பார்த்து லக்ஷ்மணன் கேட்டுக் கொண்டிருக்கையில், அடியில் வருமாறு புலம்பினாள்:-" நீ பிறக்காதிருந்தால், பிள்ளை இல்லை என்கிற துக்கம் மாத்திரமிருக்கும். நீ பிறந்து என்னை விட்டுப்பிரிவதால் உண்டாகும் துக்கம் அதைக் காட்டிலும் மிகவும் கொடியது. என் பர்த்தாவுக்கு வைபவமிருந்தும், அவனுக்கு நான் மூத்தபத்னி என்கிற கௌரவமும், அதினால் கிடைக்கக்கூடிய ஸுகமும் எனக்கு இதுவரையிலில்லை. அவைகள் உன்னாலே கிடைக்கும் என்று எண்ணியிருந்தேனே. நான் மூத்தவளாயிருந்தும், ஹ்ருதயத்தைப் பிளக்கும்படி கொடுமையான இளைய ஸபத்னிகளுடைய வார்த்தைகளைக் கேட்கவேண்டியதாயிற்றே. இதைக் காட்டிலும் ஸ்திரீகளுக்கு அதிக துக்கத்தைக் கொடுப்பது எது? என்னுடைய சோகத்தையும் புலம்பலையும் இவ்வளவு என்று சொல்லமுடியாது. அவைகளுக்கு முடிவும் இராது. நீ கிட்ட இருக்கையிலேயே அவமானத்தை அடைந்திருந்தேன். நீயும் தேசாந்தரம்போனால் என்ன ஆகும்? என் மரணம் நிச்சயம். என் பர்த்தாவினாலே அடியோடு இளப்பமாகச் செய்யப்பட்டேன். கைகேயியினுடைய பரிவாரத்துக்கு ஸமமாகவோ அல்லது அவர்களுக்குத் தாழ்ந்தவளாகவோ செய்யப்பட்டிருக்கிறேன். இப்போது எவன் நான் சொன்னதைக் கேட்டு வேலை செய்கிறானோ, அவன் கைகேயியின் பிள்ளையை உத்தேசித்து, என்னுடன் பேசான். கைகேயி எப்போதும் கோபமுள்ளவள். கடுமையாகப் பேசுகிறவள். குழந்தாய்! அவள் முகத்தை எப்படிப் பார்ப்பேன்? உனக்கு யுவராஜாவாக அபிஷேகம் நடந்தபிறகு, என் துக்கத்துக்கு முடிவுவரும் என்று உன் உபநயந காலம்முதல் பதினேழு வர்ஷகாலம் எதிர்பார்த்திருந்தேன். நான் கிழத்தனத்தை அடைந்தும், ஸபத்னிகள் எனக்குச் செய்யும் விரோதங்களைப் பொறுக்கமுடியாது. என் துக்கத்துக்கும் முடிவில்லை. பூர்ணசந்திரன்போன்ற உன் முகத்தைப் பாராமல் நான் எப்படி இருப்பேன்? உபவாஸங்களாலும் தியானங்களாலும் பலவிதமான ச்ரமங்களாலும் உன்னை வளர்த்து வந்தேன். என் பாக்யக்குறைவால் அவைகள் எல்லாம் வியர்த்தமாகிவிட்டன. என் ஹ்ருதயம் நீ சொன்னதைக்கேட்டு வெடி

க்கவில்லையே! அது கல்லோ? என்னை யமன்கொண்டு போக வில்லையே? எனக்கு மரணமேயில்லையோ, அல்லது யமன் வீட்டில் எனக்கு இடமில்லையோ? நீ யில்லாமல் நான் ஏன் இங்கே இருக்கவேண்டும்? உன்னுடன்கூட நானும் காட்டுக்கு வருகிறேன்.” இவ்விதமாகப் புலம்பினாள். (ஸ-20).

(36) இப்படி கௌஸல்யை சொன்னதைக்கேட்டு லக்ஷ்மணன் சொன்னான்:—“அம்மா! ராமன் ஒரு ஸ்திரீயின் வார்த்தையைக்கேட்டு ராஜ்யஸ்ரீயை விட்டுவிட்டு, காட்டுக்குப்போவது எனக்குப் பிடிக்கவில்லை. ராஜா வயதானவர். வயதுக்குத்தகாத வேலை செய்துகொண்டிருக்கிறவர். காமத்துக்கு உட்பட்டவர். விஷயங்களாலே இழுக்கப்பட்ட மனதையுடையவர். கைகேயியால் ஏவப்பட்டு எதைத்தான் சொல்லமாட்டார்? காட்டுக்கு அனுப்புவதற்குத் தகுந்தபடி ராமன் என்ன அபராதம் செய்திருக்கிறான்? அவனிடத்தில் என்ன தோஷமிருக்கிறது? நான் ஒன்றையும் காணவில்லையே. அவனுக்குவேண்டாதவனும் அவனால் தண்டிக்கப்பட்டவனும்கூட கண்காணாத இடத்திலும் ராமனிடத்தில் தோஷமிருப்பதாகச் சொல்லமாட்டானே. காமத்துக்கு உட்பட்டிருக்கிற தகப்பன் வார்த்தையை ராஜநீதியைத்தெரிந்த எந்தப்பிள்ளை ஒப்புக்கொள்ளுவான்? ராமா! உன்னைக்காட்டுக்கு ராஜா அனுப்பினான் என்கிற விஷயம் ஜனங்களில் எவனும் அறிவதற்குமுன்னால் என்னைத்துணையாக வைத்துக்கொண்டு ராஜ்யத்தை உன் ஸ்வாதீநமாகப் பண்ணிக்கொள். உன் பக்கத்தில் வில்லுங்கையுமாய் நின்று நான் ரக்ஷிக்கையில் எவன் உன்னை வெல்லமுடியும்? நமக்கு இந்த நகரம் விரோதமாயிருந்தால் கூர்மையான பாணங்களால் இதை ஒரு மனிதனும் இல்லாதபடி நாசம் பண்ணுகிறேன். பரதன் கக்ஷியில் எவர்கள் சேர்ந்திருக்கிறார்களோ, எவர்கள் அவனுக்கு ஹிதஞ்செய்ய நினைக்கிறார்களோ, அவர்களையும் கொன்றுவிடுவேன்.

ம்ருதுர்ஹி பரிபூயதே (ஸ 21-12)

மிருதுவாயிருப்பவன் அவமானப்படுகிறான். கைகேயினால் தூண்டப்பட்டு நம்முடைய தகப்பனார் நமக்கு அப்ரியத்தைச்செய்தால், அவரிடத்தில் பற்றைவிட்டு அவரைச்சிறையில் வைக்கலாம், அல்லது கொல்லலாம். இதற்கு தர்மசாஸ்திரமும் இடம்கொடுக்கிறது.

𑌗𑍁𑌰𑍋𑌰𑌪𑍍𑌯𑌵𑌲𑌿𑌪𑍍𑌤𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑌮𑌜𑌾𑌨𑌤𑌃 ।
𑌉𑌤𑍍𑌪𑌥𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌶𑌾𑌸𑌨𑌮𑍍 ॥ (21-14)

எவன் கர்வமுள்ளவனும் இன்னது செய்யத்தகுந்தது இன்னது செய்யத்தகாதது என்று அறியாதவனும், நல்ல மார்க்கத்திலிருந்து நழுவினவனும் இருக்கிறானோ, அவன் குருவாய் இருப்பினும் அவனைக் கண்டிப்பதே செய்யத்தகுந்ததேலே. உனக்கு கொடுப்பதாகச் சொன்ன ராஜ்யத்தை, ராஜா எந்தப் பலத்தையோ, எந்தக்காரணத்தையோகொண்டு கைகேயிபிள்ளைக்குக்கொடுக்க இச்சிக்கிறார். உன்னோடும் என்னோடும் விரோதத்தைச்செய்து பரதனுக்கு ராஜ்யத்தைக்கொடுக்க அவருக்கு என்ன சக்தியிருக்கிறது. அம்மா! தமயனிடம் எனக்கு உண்மையில் ஆசையிருக்கிறது. நான் செய்த தானங்களாலும் யாகங்களாலும் ஸத்யவசநத்தாலும், இந்த வில்லாலும் சபதம் பண்ணுகிறேன். ராமன் ஜ்வலிக்கிற நெருப்பிலாவது, எரிகிற காட்டிலாவது ப்ரவேசித்தால், நானும் ப்ரவேசிப்பேன். உதயமான ஸூர்யன் இருட்டைப் போக்குவதைப்போல் உன் துக்கத்தைப் போக்குவேன். நீ என் வீர்யத்தைப்பார், ராமனும் அதைப் பார்க்கட்டும்.'' என்று சொன்னான். (ஸ-21)

(37) லக்ஷ்மணன் சொன்னதைக்கேட்டு, கௌஸல்யை ராமனைப் பார்த்து ''குழந்தாய்! உன் தம்பி லக்ஷ்மணன் வார்த்தையைக் கேட்டாயோ? அவன் சொன்னது உனக்கு இஷ்டமானல் மேலே செய்யவேண்டியதைச் செய். என் ஸபத்னியின் வார்த்தையைக் கேட்டு துக்கத்தாலே தபிக்கிற என்னை விட்டுவிட்டுப் போவது உனக்குத் தகுந்ததன்று. நீ தர்மத்தை அறிந்து தர்மத்தைச்செய்ய இச்சித்தால், இங்கேயிருந்து எனக்கு சுச்ருஷை செய். இது உயர்ந்த தர்மம். காச்யபன் தன் வீட்டிலேயே இருந்து தாயாருக்கு சுச்ருஷை செய்து அந்த தபஸாலே ஸ்வர்க்கத்தை அடைந்தான். எப்படி உன் தகப்பனரைக் கௌரவத்துடன் பூஜிக்கவேண்டியதோ, அப்படியே நீ என்னையும் பூஜிக்கவேண்டியது. நான் உனக்கு அனுமதி கொடுக்கமாட்டேன். நீ இங்கிருந்து காட்டுக்குப் போகக்கூடாது. உன்னைவிட்டுப் பிரிந்த எனக்கு ஸுகமும் உயிர்வாழ்க்கையும் எதற்கு? நீ இங்கிருக்கும்போது நான் புல்லைச் சாப்பிடுவதுகூட நல்லது.

துக்கப்பட்டுக்கொண்டிருக்கிற என்னை விட்டுவிட்டு நீ போனால், நான் ப்ராயோபவேசம் பண்ணுவேன். பிழைத்திருக்க என்னாலே முடியாது." என்று சொன்னாள். ராமன் அவளுக்குப் பதில் சொன்னதாவது :—" தகப்பனார் வார்த்தையை மீறுவதற்கு எனக்குச் சக்தியில்லை. உன்னைத் தலையால் வணங்கி நல்ல வார்த்தை சொல்லுகிறேன். நான் காட்டுக்குப் போக விரும்புகிறேன். கண்டு என்கிற ருஷி தர்மத்தை அறிந்தவனாயிருந்தாலும் தகப்பன் வாக்யத்தைச் செய்வதற்காகப் பசுவைக் கொன்றான். நம்முடைய குலத்திலும் தகப்பனை ஸகரன் சொன்னபடி நடக்க அவன் பிள்ளைகள் பூமியைக் கல்லி மரணத்தை அடைந்தார்கள். பரசுராமனும் தகப்பன் சொன்னபடி தாயாரான ரேணுகையைக் கோடாரியினால் கொன்றான். இவர்களாலும் தேவர்களைப்போன்ற மற்றவர்களாலும் தகப்பனார்கள் சொன்னவைகள் செய்யப்பட்டன. நானும் தகப்பன் வார்த்தையைக் கஷ்டமின்றிச் செய்வேன். அது அவருக்கு ஹிதம்." என்று சொல்லி, பிறகு லக்ஷ்மணனைப் பார்த்து "லக்ஷ்மணா! உனக்கு என்னிடத்திலிருக்கிற மிகுந்த ஸ்நேஹமும் உன் பலமும் பராக்ரமும் ஒருவனும் கிட்டமுடியாதபடியுள்ள உன் தேஜஸும் எனக்குத் தெரிந்தவைகளே. தர்மத்தினுடையவும் ஸத்யத்தினுடையவும் சாந்தியினுடையவும் ரஹஸ்யத்தை அறியாமல், தாயார் மிகவும் வருத்தப்படுகிறாள். அதை அறிந்த நீயும் ஏன் இப்படிப் பேசுகிறாய்? உலகத்தில் தர்மம் மிகவுமுயர்ந்தது. தர்மத்தில் ஸத்யம் நிலைத்திருக்கிறது. தாயார் வார்த்தையைக் காட்டிலும் தகப்பனார் வார்த்தை உயர்ந்தது. அதன்படி நடப்பதாலே தர்ம பலம் கிடைக்கும். தர்மத்தைக் கைக்கொண்டவன், தகப்பன் தாயார் பிராமணன் ஆகிய இவர்களுக்குச் சொன்னதைச் செய்கிறேன் என்று சொல்லிவிட்டு, பிறகு அதைப் பொய்யாகப் பண்ணக்கூடாது. ஆகையால், தகப்பனார் கட்டளையை மீற எனக்கு உரிமை இல்லை. அவருடைய வார்த்தையைக் கொண்டுதான் கைகேயி கட்டளையிட்டாள். க்ஷத்ரிய தர்மத்தை அநுஸரித்து உனக்கு இந்தக் கெட்ட எண்ணம் உண்டாயிருக்கிறது. அதை விட்டுவிடு. தர்மத்தை ஆச்ரயி. கொடுமையைக் கைவிடு. என் புத்தியை அநுஸரித்து நட" என்று சொன்னான். இப்படிச் சொல்லி, மறுபடியும் கௌஸல்யையைப் பார்

த்து "இங்கிருந்து காட்டுக்குப்போகிற எனக்கு அம்மா! விடை கொடு. என் பிராணன்மேல் ஆணையிடுகிறேன். எனக்கு மங்கள காரியங்களைச்செய். பிரதிஜ்ஞையை நிறைவேற்றிவிட்டு, காட்டிலிருந்து திரும்பி வருவேன். சோகத்தை அடக்கிக்கொள். வருத்தப்படாதே. என்னைப்போலவே நீயும் ஸீதையும் லக்ஷ்மணனும் ஸுமித்திரையும் ராஜாவின் கட்டளைப்படி நடக்க வேண்டியவர்கள். இது எப்போதும் அநுஷ்டிக்கப்பட்டுவரும் தர்மம். நான் காட்டுக்குப்போவதாகத் தீர்மானம் பண்ணியிருக்கிறேன். அதை நீயும் அநுமதிக்கவேண்டியது." என்று சொல்லி, அதையே மறுபடியும் உறுதிப்படுத்தி, காட்டுக்குப்போகத் தாயாரை ப்ரதக்ஷிணம் பண்ணினான். (ஸ - 21)

(38) மிகுந்த கோபம் கொண்டிருந்த லக்ஷ்மணனைப் பார்த்து ராமன், "கோபத்தையும், சோகத்தையும் அடக்கிக்கொண்டு தைரியத்தையே கைப்பிடித்து, இந்த அவமானத்தைத் தள்ளிவிட்டு மிகுந்த ஸந்தோஷமுள்ளவனாயிரு. என் அபிஷேகத்துக்காக சேகரிக்கப்பட்டதெல்லாவற்றையும் விட்டுவிடு. எனக்கு வேண்டியதைச்செய். என் அபிஷேகத்துக்காகப் பதார்த்தங்களைச் சேகரிப்பதில் உனக்கு உண்டாயிருந்த பரபரப்பை நான் காட்டுக்குப்போவதில் உபயோகப்படுத்து. எந்த கைகேயிக்கு என் அபிஷேகத்தைக் கேட்டு மனதில் தாபமுண்டாயிற்றோ, அந்தக்கைகேயிக்கு இன்னும் ஸந்தேஹமுண்டாகாதபடி செய். அவளுக்கு ஸம்சயமும் அதனால் துக்கமும் உண்டாவதை ஒரு முஹூர்த்தமும் என்னால் பார்த்துக்கொண்டிருக்க முடியாது. தாயார்களுக்காவது தகப்பனாருக்காவது அறிந்தோ அறியாமலோ பிரியமில்லாததைச் சிறிதும் நான் செய்ததாக எனக்கு நினைவில்லை. என் தகப்பனார் உண்மையைப் பேசுகிறவர்; ப்ரதிஜ்ஞை பண்ணினதை நிறைவேற்றுகிறவர்; பரலோகம் கிடைக்காமல் போகுமோ என்று பயப்படுகிறவர். அவருக்கு அந்தப்பயமில்லாமலிருக்கட்டும். அபிஷேக விஷயமான ஏற்பாடுகளை நிறுத்தாவிட்டால் "நான் சொன்னது பொய்யாய்விட்டதே" என்று அவருக்குத் தாபமுண்டாகும் அது எனக்குத் தாபத்தை உண்டுபண்ணும். நான் காட்டுக்குப்போனபிறகு, கைகேயி, தான் செய்யவேண்டியதைச் செய்துவிட்டதாய் எண்ணி ஸந்தோஷப்பட்டு, தன்பிள்ளை பரதனுக்குக்கவலையின்றி அபிஷேகம் செய்வள்,

அவள் மனதும் ஸுகம் அடையும். நான் காட்டுக்குப்போவதற்கும், கையில் வந்த ராஜ்யத்தை இழப்பதற்கும் தைவமே காரணம். அவளுக்கு என்னைப் பீடிக்கவேணும் என்கிற எண்ணம் தானாக உண்டாகுமோ? அது அவளுக்கு தைவத்தால் உண்டு பண்ணப்பட்டது. நான் தாயார்களிடத்தில் எப்படி பேதபுத்தி பண்ணவில்லையோ, அப்படியே கைகேயியும் தன் பிள்ளையிடத்திலும் என்னிடத்திலும் பேதபுத்தியைப் பண்ணவில்லையே? அவள் நல்ல ஸ்வபாவமுள்ளவள். ராஜாவின்பெண். நல்ல குணமுள்ளவள் என்று பிரஸித்தி பெற்றவள். பர்த்தாவின் முன்னிலையில் ஸாதாரண ஜனத்தைப்போல எனக்குப் பீடையுண்டுபண்ணுவதைக் கேட்பளோ? தைவத்தின் பிரபாவத்தை இன்னது என்று அறியமுடியாது. ஒருவனும் அதை மீற முடியாது. இந்த விஷயம் என்னிடத்திலும் அவளிடத்திலும் நன்றாய்த்தெரிகிறதே. என் கையில் வந்த ராஜ்யம் போய்விட்டது. அவளுக்கு ஒருபோதுமில்லாத புத்தி உண்டாயிருக்கிறது. எவனால் தைவத்தை எதிர்க்கமுடியும்? உலகத்தில் ஸுகமும் துக்கமும், பயமும் கோபமும், லாபமும் நஷ்டமும், பிறப்பும் இறப்பும், இவ்விதமான மற்றவைகளும் தைவத்தின் செயல்களே. உக்ரமான தபஸ் செய்கிற ருஷிகளும் தைவத்தால் பீடிக்கப்பட்டவர்களாய் நியமங்களை விட்டுவிட்டுக் காமத்துக்கும் கோபத்துக்கும் வசப்பட்டு ருஷித்தன்மையை இழக்கிறார்கள். முன்னதாக எண்ணப்படாமலும் காலநியமமில்லாமலும் எது உண்டாகிறதோ, அது தைவத்தின் வேலை. இந்த நல்ல எண்ணத்தாலே மனதை அடக்கிக்கொண்டு என் அபிஷேகம் நின்றுபோனதைக்குறித்து வருத்தப்படாதே." என்று ஸமாதானம் பண்ணினான். (ஸ-22)

(39) ராமன், எல்லாம் தைவச்செயல், என்று சொன்னதைக்கேட்டு, லக்ஷ்மணன் கோபித்துக்கொண்டு, "தகப்பனு சொன்னதைச்செய்யாவிட்டால் தோஷம் உண்டாகும் என்றும் உலகத்தாரும் தன்னைப்பார்த்து இந்தத் தர்மத்தை விட்டுவிடு வர்கள் என்றும் எண்ணி, காட்டுக்குப்போக அவஸரப்படுகிறாய். இது தகுந்ததன்று. உன்னைப்போன்றவன் இதைச்சொல்லக் கூடாது. சக்தியில்லாத க்ஷத்ரியஅதமன் அன்றோ தைவத்தை அநுஸரிக்கவேண்டியது? நீயோ ஸமர்த்தன்; க்ஷத்ரிய ச்ரேஷ்டன்; தைவத்தையும் தள்ளிவிடச் சக்தன். தைவத்தை ஏன்

ஸ்தோத்ரம் பண்ணுகிறாய்? அது சக்தியில்லாதது; எளியது. சக்தியுள்ளதாயிருந்து ஒரு வேலையைச்செய்தால் அன்றோ அந்த வேலையினாலே அது இருக்கிறது என்று அநுமானம் பண்ணலாம். தகப்பனின்வார்த்தையை கேட்காதிருப்பது தோஷம் என்று எண்ணுகிறாயே, அவரும் அவர் பாரியையான கைகேயியும் பாபிகள் அல்லவா? அவர்கள் சொன்னதைக்கேளாமை தோஷம் என்று எப்படி உனக்கு ஸம்சயமுண்டாகிறது? உலகத்தில் ஸமர்த்தர்கள் தர்மம் என்கிற வியாஜத்தைக்கொண்டு தங்களுடைய தோஷங்களை மறைத்துக்கொள்ளுகிறார்கள். தசரதனும் கைகேயியும் இப்படிப்பட்டவர்கள். தங்கள் ஸ்வபாவங்களை மறைத்துக்கொண்டு உனக்கு அப்ரியத்தைச் செய்கிறவர்கள். உன் அபிஷேகம் நடக்காதிருப்பதற்கு நல்ல கார்யம் செய்துவிட்டார்கள். இது ஏன் உனக்குத் தெரியவில்லை. இப்படியே இருவரும் யோசனை செய்திருக்கிறார்கள். பரதனுக்கு ராஜ்யத்தைக் கொடுக்கவேண்டும். மூத்த பிள்ளையாகிய நீ இங்கே இருக்கையில் அது முடியாது. அதற்காக உன்னைக் காட்டுக்கு அனுப்ப வேண்டும். அதற்கு ஓர் வியாஜம் வேண்டும். அந்த வியாஜம், ராஜா கைகேயிக்கு முன்னால் இரண்டு வரங்கள் கொடுத்தது என்பதும், அவைகளை இப்போது கைகேயி கேட்டாள் என்பதுமாம். இப்படியில்லாவிட்டால், இவைகளை அவள் முன்னாலேயே கேட்டிருக்கமாட்டாளோ? அவர்தாம் கொடுத்திருக்கமாட்டாரோ? உன்னைத்தவிர, வேறொருத்தனுக்கு அபிஷேகம் பண்ணுவதை உலகத்தார் நிந்திப்பார்கள். அந்த அபிஷேகத்தை நான் பொறுத்திருக்கமுடியாது. இந்த விஷயத்தில் என்னை க்ஷமிக்கவேண்டும். 'எப்படியிருந்தாலும் தகப்பனார் வார்த்தைப் படி நடக்கவேண்டாமா? அது தர்மம் அன்றோ' என்று கேட்கிறாயோ? அதை நான் தர்மமாக எண்ணவில்லை. அதை நீ தர்மமாக எண்ணி ப்ரமிக்கிறாய். ராஜா கைகேயிவசத்திலிருக்கிறார். அவர் சொல்லுவது மிகவும் அதர்மம். அதை எப்படிச் செய்ய இச்சிக்கிறாய்? அதைத்தடுப்பதற்கு உனக்குப் பௌருஷமிருக்கிறதே. எவன் தன்னுடைய பௌருஷத்தாலே தைவத்தைத் தடுக்கச் சக்தனோ, அவனுடைய காரியத்தைத் தைவம் கெடுக்கிறதில்லை. அவனும் துக்கப்படுகிறதில்லை. இப்போது தைவத்தின் பலத்தையும் மனிதனின் பலத்தையும் எல்லாரும்

பார்க்கப்போகிறூர்கள். தைவத்தால் ஏற்பட்டதாக நீ எண்ணு கிற இடையூறைப் போக்கி நான் உனக்கு அபிஷேகத்தைப் பண்ணிவைக்கிறேன். இதை லோகபாலர்களே தடுக்கமுடியாதே. தகப்பனூர் எவ்வளவு? எவர்கள் உன்னைக் காட்டுக்கு அனுப்ப ஏற்பாடு செய்தார்களோ, அவர்களை அந்தக் காட்டில் பதினன்கு வருஷம் இருக்கும்படிச் செய்கிறேன். ராஜாக்கள் காட்டுக்குப் போவது உண்டு. அநேகமாயிரம் வருஷம் ராஜ்ய பரிபாலனம் பண்ணி, பிள்ளைகளிடத்தில் அதை ஒப்பிவித்தபிறகு வநவாஸம் செய்யப்படுகிறது. 'ராஜா சலசித்தனுயிருப்பதாலே ராஜ்யம் போய்விடுமோ' என்று எண்ணி அது வேண்டாம் என்று சொல்லுகிறுயோ? உன்னுடைய ராஜ்யத்தை நான் ரக்ஷிக்கிறேன். இப்படியே ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன். இந்த என் இரண்டு புஜங்கள் அழகுக்காக அல்ல; தனுஸு ஆபரணத்துக்காக அன்று; கத்தி அழகாக இடுப்பில் கட்டிக்கொள்வதற்காக அன்று; பாணங்கள் தாணியிலிருப்பதற்காக அல்ல; இவைகள் எல்லாம் விரோதிகளை அடக்குவதற்காக ஏற்பட்டவைகள்." என்று சொன்னுன்.* ராமன், "தகப்பன் வசநப்படி நடக்கையில் உறுதியுள்ளவனுயிருக்கிறவன் என்று என்னை அறி. நல்ல வழியில் நில்லு." என்று பலதடவை லக்ஷ்மணனை ஸமாதானம் பண்ணினுன். (ஸ-23)

(40) ராமன் காட்டுக்குப்போவதில் உறுதியுள்ளவனுயிருப்பதை அறிந்து, கௌஸல்யை "நீ துக்கத்தை அறியாதவன்; எல்லாரிடமும் பிரியமாகப்பேசுகிறவன்; என்னிடத்தில் தசரதனுக்குப்பிறந்தவன். நீ இறைந்துகிடக்கிற நெல்லைப்பொறுக்கிக் கொண்டு அதனுலே எப்படி ஜீவிப்பாய்? உன் வேலைக்காரர்கள் நல்ல அன்னத்தை சாப்பிடுகையில், நீ காயையும் கிழங்கையும் எப்படிச்சாப்பிடுவாய்? குணமுள்ளவனும் பிரியனுமான பிள்ளையை ராஜா காட்டுக்கு அனுப்பினுன் என்பதைக்கேட்டு எவன் அதை நம்புவன்; நம்பினுல் எவனுக்குப்பயமுண்டாகாது. தைவம் பலமுள்ளது. அதுதான் எல்லாருக்கும் ஸுகத்தையும் துக்கத்தையும் கொடுக்கிறது. உன்னை விட்டுப்பிரிந்த என்னைச் சோகாக்னி

---

* லக்ஷ்மணன் தர்மத்தை அறிந்தவன். ஆனபோதிலும் ராமனிடமிருந்த மிகுந்த ஸ்நேஹத்தாலே அதைமறந்து இப்படிப்பேசினது.

கொளுத்திவிடும். முன்னால் போகிற தன்கன்றை மாடு பின் தொடராதோ? குழந்தாய்! நீ எங்கேபோகிறாயோ, அங்கே நானும் வருகிறேன்." என்று சொன்னாள். ராமன் அதைத் தடுத்து, "ராஜா கைகேயினால் வஞ்சிக்கப்பட்டார். நான் காட்டுக்குப் போய் நீயும் அவரை விட்டால் அவர் உயிரோடிருக்கமாட்டார். ஸ்திரீகள் பர்த்தாவை விடுவது க்ரூரமானது; அது உன்னால் செய்யத்தகுந்ததன்று. அதை மனதால்கூட நினைக்கக்கூடாது. அவர் எதுவரையில் ஜீவிப்பாரோ, அதுவரையில் அவருக்கு சுச்ருஷை செய்யவேண்டியது. இது நிலையான தர்மம்." என்று கௌஸல்யையை ஸமாதாநம் பண்ணினான். மறுபடியும் அவள் ராமனுடன் கூடவருவதாகச் சொல்ல, அவன் "பரதன் தர்மத்தில் மனம் வைத்தவன். எல்லாரிடத்திலும் பிரியமாகப் பேசுகிறவன். நீ சொன்னதைச்செய்வன். நான் காட்டுக்குப் போனபிறகு ராஜா என்னைப்பிரிந்த சோகத்தாலே எப்படிக் கஷ்டப்படமாட்டாரோ, அப்படி நீ கவனமாய்ச்செய்யவேண்டியது. ஒரு ஸ்திரீ மிகவும் நல்லவளாயும் வ்ரதத்திலும் உபவாஸத்திலும் பிரீதியுள்ளவளாயுமிருந்தும் பர்த்தாவுக்கு சுச்ரூஷை செய்யாவிட்டால், அவள் பாபத்தின் பலத்தையே அடைவள். தேவபூஜையைச் செய்யாவிட்டாலும் பர்த்தாவின் சுச்ரூஷையாலேயே ஸ்திரீ ஸ்வர்க்கத்தை அடைகிறாள். எனக்காக அக்னிகார்யங்களையும் புஷ்பங்களால் தேவதைகளின் பூஜையையும் செய்துகொண்டிரு." என்று அவளுக்கு ஆறுதலைச்செய்தான். இதைக்கேட்டு கௌஸல்யை "நீ ஸுகமாகப்போய் திரும்பிவந்து என் துக்கத்தைப்போக்கு" என்று அநுமதி கொடுத்தாள். (ஸ-24)

(41) கௌஸல்யை "உன்னைத் தடுக்கமுடியவில்லையே. நீ போய் சீக்கிரம் திரும்பிவந்து அபிஷேகத்தைப்பண்ணிக்கொள். எந்த தர்மத்தை நீ பிரீதியுடனும் நியமத்துடனும் பரிபாலநம் பண்ணுகிறாயோ, அந்த தர்மம் உன்னை ரக்ஷிக்கட்டும். தைவங்களும் மஹர்ஷிகளும், விசுவாமித்ரர் கொடுத்த அஸ்த்ரங்களும் பித்ருசுச்ரூஷையும் மாத்ருசுச்ரூஷையும் ஸத்யமும் உன்னை ரக்ஷிக்கட்டும்" என்று சொல்லி, எவைகள் அவளுடைய நினைவுக்கு வந்தனவோ, அவைகளையெல்லாம் ராமனை ரக்ஷிக்கும்படி பிரார்த்தித்து, குருக்களுக்கும் பிராமணர்களுக்கும் தானங்களைச்

செய்து, அவர்களைக்கொண்டு ஆசிர்வாதம் செய்வித்து, ரக்ஷையைப்பண்ணிப் போக விடைகொடுத்தாள். ராமன் அவளை ப்ரதக்ஷிண நமஸ்காரம்பண்ணி ஸீதையின் க்ருஹத்துக்குப்போனான். (ஸ-25). ஸீதை அபிஷேகத்துக்கு உண்டான இடையூறை அறியாதவளாய் தேவகாரியங்களைச் செய்துவிட்டு ராமன் வருவதை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். அவன் முகம் வாடி வெட்கத்தினால் கொஞ்சம் தலை குனிந்து வருவதைப்பார்த்து, ஸீதை அதற்குக் காரணத்தைக் கேட்டாள். ராமன், ஸீதாய்! என் தகப்பனார் என்னைக் காட்டுக்கு அனுப்புகிறார் என்பதையும், கைகேயி முன்னால் வரங்களைக் கேட்டிருந்ததையும், அவைகளைக்கொண்டு அவள் கேட்டுக்கொண்டபடி தான் காட்டுக்குப் போவதையும், பரதனுக்கு அபிஷேகம் பண்ணுவதையும், சொன்ன சொல்லைத் தவிராத தகப்பனாராலே தான் காட்டுக்குப் போக நியமிக்கப்பட்டதையும் சொல்லி, அவளுக்கு ஹிதத்தை உபதேசித்தான் :—'பரதனிடத்தில் என்னைப்பற்றி ச்லாகிக்காதே. ஸம்ருத்தியுள்ள புருஷர்கள் மற்றவர்களைப்பற்றிய ஸ்தோத்ரத்தை ஸஹியார்கள். அவனிடத்தில் மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாக ஒன்றையும் தேடக்கூடாது. அவனுக்கு அநுகூலமாக இருக்கவேண்டியது. அவனுக்குத் தகப்பனார் ராஜ்யத்தைக் கொடுத்திருக்கிறார். அவன் யுவராஜாவாக இருக்கப் போகிறபடியால் அவனுக்கு ப்ரஸாதமுண்டாகும்படி இருக்கவேண்டியது. இப்போதே நான் காட்டுக்குப் போகிறேன். என்னிடத்தில் ஸ்திரமான அநுராகமுள்ளவளாய் இரு. நீ வ்ரதங்களையும் உபவாஸங்களையும் செய்துகொண்டிருக்கவேண்டியது. காலையில் எழுந்திருந்து தேவபூஜையைச் செய்துவிட்டு, என் தகப்பனாருக்கு நமஸ்காரம் செய். என் தாயார் கௌஸல்யை வயதுசென்றவள். என் பிரிவாலே துக்கப்பட்டுக்கொண்டிருக்கிறாள். தர்மத்தைமுன்னிட்டு அவளிடத்தில் வெகுமானம் பண்ணு. என் மற்ற தாயார்களுக்கும் நமஸ்காரம் செய். எல்லாரும் என்னிடத்தில் பிரீதியுள்ளவர்களாயும் ஸ்நேஹமுள்ளவர்களாயும் என்னை வளர்த்தவர்களாயுமிருக்கிறார்கள். பரதசத்ருக்னர்களை உடன்பிறந்தவர்களாகவும் பிள்ளைகளாகவும் எண்ணு. அவர்கள் எனக்கு ப்ராணனைக் காட்டிலும் பிரியமானவர்கள். பரதனுக்கு ஒருபோதும் அப்ரியமானதைச் செய்யாதே. அவன் நம்முடைய தேசத்துக்கு

ராஜா. குலத்துக்கும் ப்ரபு. ராஜாக்கள், நன்றாய் ஆராதநம் பண்ணினால் ஸந்தோஷமும், அப்ரியத்தைச் செய்தால் கோபமும் அடைவர்கள். அப்ரியமாக நடந்தால் வயிற்றில் பிறந்த பிள்ளைகளையும் விட்டுவிடுவர்கள். பிரியமாக நடந்தால் பந்துக்கள் அல்லாதவர்களையும் சேர்த்துக்கொள்ளுவார்கள். நீ இங்கிருந்து நான் சொன்னதைச் செய்யவேண்டியது" என்று. (ஸ-26)

(42) இதைக்கேட்டு ஸீதை ப்ரீதியினாலே கோபங்கொண்டு "என்னவார்த்தை சொல்லுகிறாய்? இதைக்கேட்டு எவனும் பரிஹாஸம் பண்ணுவானே. தாயோ, தகப்பனோ, உடன் பிறந்தவனோ, பிள்ளையோ, மருமகளோ, எல்லாரும் அவரவர்கள் செய்த கர்மங்களின் பலன்களை அநுபவிக்கிறார்கள். பார்யை ஒருத்தியே பர்த்தா செய்தவைகளின் பலன்களை அநுபவிக்கிறாள். ஆகையாலே, உன்னைக் காட்டுக்குப் போகச்சொன்னபோதே என்னையும் போகச்சொன்னதாகவே ஏற்படுகிறது. ஒரு ஸ்திரீக்குத் தகப்பனும், பிள்ளையும், தாயும், தோழியும் இங்கேயோ, மேல் உலகங்களிலோ கதியன்று. பர்த்தா ஒருவனே கதி. நீ இப்போதே காட்டுக்குப்போவதாயிருந்தால், நானும் புல்லையும் முள்ளையும் மிதித்து வழியை நன்றாக்கிக்கொண்டு உன்முன்னாலே போவேன் *. அப்படிப்போவதினால் உலகம் என்னைக்கொண்டாடும். அதினால் உனக்குப்பொறுமையுண்டாகுமோ? "நான் சொல்லுவதை இவள் கேட்கவில்லை" என்று கோபித்துக்கொள்ளாதே. இவள் எப்படிக் காட்டுக்கு வருவள் என்கிற ஸந்தேஹத்தை விட்டுவிட்டு என்னையும் அழைத்துக்கொண்டுபோ. உன்னை விட்டுப்பிரிந்து ஸுகமாயிருக்கும்படி பாபத்தை நான் பண்ணவில்லை. பர்த்தாவுக்கு எந்த அவஸ்தை வந்தாலும், ஸ்திரீ அவனுடன்கூடவே இருந்து அவனுக்கு வேலை செய்யவேண்டியது. இது மாடிகளில் இருப்பதையும், விமாநங்களில் ஸஞ்சாரம் பண்ணுவதையும், அணிமாமுதலான அஷ்டைச்வர்யங்களை அடைவதை

---

* நாம் வந்த கார்யம் என்ன? ராவணனை ஸம்ஹாரம் பண்ணவேண்டியது அன்றோ? என்னை விட்டுவிட்டுப்போனால் அது எப்படி முடியும்? உனக்கு முன்னாலே நான் லங்கைக்குப்போகிறேன். அதை வியாஜமாக வைத்துக்கொண்டு, நீ பின்னாலே வந்து தேவர்களின் கார்யத்தை முடித்துவை என்பது ஸீதையின் உட்கருத்து.

யும் காட்டிலுமுயர்ந்தது. நான் எப்படி இருக்கவேண்டியது என்பதை நீ உபதேசம் பண்ணவேண்டாம். இதை என் தாயாரும் என் தகப்பனும் ஏற்கனவே உபதேசம் செய்திருக்கிறார்கள். காடு நுழையமுடியாததாயிருந்தாலும், ஜனமில்லாததாயிருந்தாலும், புலி ஓநாய் முதலான பலவித மிருகங்கள் நிறைந்திருந்தாலும், அதற்குள் போவேன். மூன்று உலகங்களைக்கூட மதியாமலும் உன் சுச்ரூஷையையே நினைத்துக்கொண்டும் என் தகப்பனார் வீட்டிலேபோலே நான் காட்டில் ஸுகமாயிருப்பேன். நீ மற்றவர்களை ரக்ஷிக்கச்சக்தியுள்ளவன். என்னை ரக்ஷிப்பதில் என்ன ஸந்தேஹம்? உன்னுடன்கூடப்போக ஸித்தமாயிருக்கிற என்னை உன்னாலே திருப்பமுடியாது. உன்னுடன்கூட இருந்து உனக்குத் துக்கத்தை உண்டுபண்ணமாட்டேன் காட்டில் கிடைக்கக்கூடிய காய்களையும் கிழங்குகளையும் சாப்பிடுவேன். ரக்ஷிக்கிற உன்னுடன் கூட இருந்து காட்டிலிருக்கிறவைகளைப்பார்க்க ஆசைப்படுகிறேன். உன்னுடன் இப்படிக்காட்டில் ஆயிரம் வருஷம் இருப்பேன். உன்னைவிட்டு ஸ்வர்க்கமும் எனக்குப்பிடிக்காது'' என்று சொன்னாள். (ஸ-27)

(43) ஸீதை இப்படிச்சொல்லியும், ராமன் காட்டிலுள்ள கஷ்டங்களை நினைத்து, அவளை அழைத்துக்கொண்டுபோக மனமில்லாதவனாய், அவைகளை விரிவாய்ச் சொன்னான்—"ஸிம்மங்களும், பெரிய மிருகங்களும், ஆறுகளில் செல்லும் முதலைகளும், மதம்பிடித்த யானைகளும், பலவிதப் பாம்புகளும், தேள்களும், புழுக்களும், கொசுக்களும் காட்டில் நிறைந்திருக்கின்றன. ஆறுகள் வளைந்து வளைந்து வழிகளைத் தடுக்கின்றன. கடுமையான காற்று அடிக்கும். வழிகள் கொடிகளாலும் முள்ளுகளாலும் மூடப்பட்டு நடக்க முடியாமல் இருக்கும். மரத்திலிருந்து தாமாய்விழும் பழங்களையே சாப்பிடவேண்டும். தானாய் பழுத்துக் கீழேவிழுந்த இலைகள்மேல் பூமியில் படுத்துக்கொள்ளவேண்டும். சக்திக்குத்தகுந்தபடி உபவாஸம் செய்யவேண்டும். ஒவ்வொரு நாளும் மூன்றுகாலம் ஸ்நாநம்பண்ணவேண்டும். இன்னும் பல தோஷங்கள் இருக்கின்றன.'' என்று (ஸ-28). இதைக் கேட்டும் ஸீதையின் மனம் மாறவில்லை. அவள் ராமனைப் பார்த்து, "காட்டில் எந்த தோஷங்கள் இருப்பனவாகச் சொல்லுகிறாயோ அவைகள் எல்லாம் உன்னிடம் சேர்ந்திருக்கும் எனக்கு

குணங்களாகவே தோன்றும். மிருகங்கள் எல்லாம் முன்பு பார்க்கப்படாத உன் ரூபத்தைப்பார்த்து ஓடிப்போய்விடும். உன்னுடன் கூடவே போகவேண்டும் என்று என் பெற்றோர்கள் சொல்லியிருக்கிறார்கள். உன்னைவிட்டுப்பிரிந்தால் நான் பிராணனை விடவேண்டியதுதான். உன்கிட்ட இருக்கிற என்னைத் தேவர்களுக்கு ராஜாவான இந்திரனும் கண்ணாலே பாரான். பர்த்தாவைவிட்டுப் பிரிந்த ஸ்திரீ உயிரோடிருக்கமாட்டாள் என்று நீயே உபதேசம் செய்திருக்கிறாயே! நான் காட்டில் வஸிக்கவேண்டியவள் என்று தகப்பனார் வீட்டிலிருக்கும்போது பிராம்மணர்களும் துறவியான ஒரு ஸ்திரீயும் சொல்லக் கேட்டிருக்கிறேன். அது பொய்யாகுமோ? காட்டில் அநேக தோஷங்கள் இருப்பது உண்மைதான். மனது அடங்காதவர்களுக்கு அன்றோ அவைகள் தோஷங்கள்; ஆகையால் என்னைக் காட்டிற்குக் கூட அழைத்துக் கொண்டுபோ; இல்லாவிட்டால் விஷத்தைச் சாப்பிட்டாவது; நெருப்பில் விழுந்தாவது, ஜலத்தில் முழுகியாவது உயிரை விடுவேன்.” என்று சொன்னாள். (ஸ - 29)

(44) இப்படி ஸீதை சொல்லியும், ராமன் அவளைக் காட்டுக்கு அழைத்துக்கொண்டுபோக ஸம்மதிக்கவில்லை. ஸீதை கோபித்துக்கொண்டு அவனை நிந்தித்தாள்—“என்னைவிட்டு நீ காட்டுக்குப்போவதை என் தகப்பனார் கேட்டால், அவர் என்ன எண்ணுவர்? உன் வேஷம் புருஷவேஷம், ஸ்வபாவம் ஸ்திரீ ஸ்வபாவம் என்று எண்ணமாட்டாரோ? ஸூரியனிடத்தில் போல ராமனிடத்தில் உயர்ந்த தேஜஸ் இருக்கிறது என்று ஜனங்கள் அறியாமல் சொல்லுகிறார்கள். உன்னையே கதியாக நம்பியிருக்கிற என்னை விட்டுவிட்டுப்போக எண்ணுகிறாயே. உனக்கு என்ன பயமுண்டாயிருக்கிறது. ஸத்யவான் வசத்தில் ஸாவித்திரி இருந்ததுபோல உன் வசத்திலிருப்பவளாக என்னை அறி. உன்னைத்தவிர வேறொருவனையும் மனதாலும் எண்ணினதில்லை. தன் ஸ்திரீயைக்கொண்டு பிழைக்கிறவன் போல என்னைப் பிறருக்குக் கொடுக்க இச்சிக்கிறாயோ?” என்று, இப்படிச் சொல்லி அழுதுகொண்டிருந்த ஸீதையைக் கட்டிக் கொண்டு ராமன் “உன்னைத் துக்கப்படச்செய்து ஸ்வர்க்கத்தையும் நான் வேண்டேன். எனக்கு ஒருவரிடத்திலிருந்தும் பயமில்லை. உன்னை ரக்ஷிக்க எனக்குச் சக்தியிருக்கிறது. ஆனால்,

உன் அபிப்பிராயத்தை அறியாமல் உன்னைக் காட்டுக்கு அழைத்துக்கொண்டுபோகக்கூடாது என்று எண்ணினேன். என்னுடன் காட்டுக்குப்போவதற்காகவே நீ ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கிறாய். அதை நான் எப்படி மாற்றக்கூடும்? முன்னோர்களும் தங்கள் பார்யைகளைக் கூட அழைத்துப்போனார்கள். இந்தத் தர்மத்தை நானும் அனுஸரிக்கிறேன்" என்று சொல்லி, "உன்னுடைய ஸொத்துக்களையெல்லாம் முதலில் பிராமணர்களுக்கும், பிறகு பரிவாரங்களுக்கும் சீக்கிரம் கொடுத்துவிடு" என்று கட்டளையிட்டான். ஸீதையும் ஸந்தோஷத்துடன் அதைச் செய்தாள்.* (ஸ - 30)

(45) ராமனும் ஸீதையும் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டு, அங்கு முன்னமே வந்திருந்த லக்ஷ்மணன், தமையன் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு ஸீதையையும் அவனையும் பார்த்து ப்ரார்த்தித்தான்:—"நீ காட்டுக்குப்போக நிச்சயம் பண்ணினால் நானும் வில்லுங்கையுமாய் உன்னுடன் வருவேன். நான் உன்னைவிட்டு இந்த உலகங்களின் ஐசுவரியத்தையும், ஆத்மாவின் அநுபவத்தையும், மோக்ஷாநந்தத்தையும் வேண்டேன்" என்று. ராமன் இதை ஒப்புக்கொள்ளாமல் தடுக்க, லக்ஷ்மணன் "முன்னமேயே எனக்கு அநுமதி கொடுத்திருக்கிறாய். இப்போது ஏன் என்னைத் தடுக்கிறாய்? நான் உன்னுடன்கூடப் போக ஆசைப்படுகையில், என்னைத் தடுப்பதற்கு என்ன காரணம்? ஸந்தேஹமுண்டாகிறது" என்று கேட்டான். ராமன் "லக்ஷ்மணா! நீ என்னிடத்தில் ஸ்நேஹமுள்ளவன்; தர்மத்தில் பிரீதியுள்ளவன்; நீ வீரன்; எப்போதும் நல்லவழியிலிருக்கிறவன்; நீ எனக்கு ப்ரியமானவன்; என் பிராணனுக்கு ஸமமானவன்; நான் சொன்னபடி நடக்கிறவன்; எனக்குத் தம்பியாயும் தோழனுயுமிருக்கிறவன். நீ என்னுடன்கூட வந்தால், கௌஸல்யை

---

* ராமன், ஸீதை தன்னைவிட்டுப் பிரிந்திருக்கமாட்டாள் என்பதை அறிந்தபோதிலும், அவளைக்கொண்டு பதிவ்ரதையானவள் தன் பர்த்தாவைவிட்டுப் பிரிந்திருக்க ஸம்மதிக்கமாட்டாள் என்பதையும், அவனுடன் ஸுகத்தை அநுபவித்ததுபோல் அவன் துக்கத்தையும் அவனுடன் கூட அநுபவிப்பவள் என்பதையும் உலகத்துக்கு வெளியிடவே அவள் அபிப்ராயம் தெரியாததுபோல் அவளைத்தடுத்தது.

யையும் ஸுமித்ரையையும் எவன் ரக்ஷிப்பன்? ராஜா ரக்ஷிக்க மாட்டாரோ என்று கேட்கிறாயோ? அவர் காமபாசங்களாலே கட்டுப்பட்டிருக்கிறார். கைகேயியும் ராஜ்யத்தை அடைந்து ஸபத்நிகளுக்கு நல்லதைச் செய்யாள். பரதனும் ராஜ்யத்தை அடைந்து தாயார் சொன்னபடி நடக்கிறவனாய், கௌஸல்யையை யும் ஸுமித்ரையையும் நினைக்கமாட்டான். ராஜாவின் அநுக்ர ஹத்தாலோ அல்லது நீயாகவோ கௌஸல்யையை ரக்ஷி. நான் சொன்னதைச் செய். இப்படியிருந்தால் என்னிடத்தில் உனக்கு இருக்கும் பக்தியைக் காட்டினதாக ஏற்படும். பெரியோர்களுக் குப் பூஜை செய்வதாலே உயர்ந்த தர்மத்தையும் அடைவாய்" என்று பதில் சொன்னான். லக்ஷ்மணன்—"நீ எனக்கு இட்ட வேலையைப் பரதன் நல்லமனதுடன் செய்வன். இதில் ஸந்தேஹ மில்லை. இது உன் தேஜஸாலேயே நடக்கும். என்னைப் போன்ற ஆயிரம்பேர்களையும் என் தாயாரையும் கௌஸல்யை ரக்ஷிப்பள். அவள் ஜீவனத்துக்கு ஆயிரம் கிராமங்கள் இருக் கின்றன. என்னை உனக்குச் சேஷனாகப் பண்ணு. அதற்குத் தகாததாக என்னிடத்தில் ஒன்றுமில்லை. நான் இயற்கையாகவே உனக்குச் சேஷன்.* நீ இயற்கையாகவே எனக்கு ஸ்வாமி. இத னால் என்ன ப்ரயோஜநம் என்று கேட்கிறாயோ? இருவருக்கும் ப்ரயோஜநம் உண்டு. உனக்கு ஆச்ரமத்தைக் கட்டி, காய் கிழங்குகளைக் கொண்டுவந்து கொடுத்து, மற்ற எல்லா வேலைகளை யும் செய்வேன்; எனக்கும் உன் கைங்கர்யமாகிய ப்ரயோஜநம் கிடைக்கும்; இதுதான் சேஷனான நான் வேண்டுவது. வில்லை யும் பாணங்களையும், மண்வெட்டியையும் கூடையையும் எடுத்துக் கொண்டு வழியைக் காட்டிக்கொண்டு முன்னாலே போகிறேன். தபஸ்விகளுக்கு வேண்டிய பழங்களையும் கிழங்குகளையும் எப் போதும் கொண்டுவருகிறேன். நீ ஸீதையுடன் மலைச்சார்வு களில் விளையாடு. நீ விழித்திருக்கும்போதும் தூங்கும்போதும் எல்லாவற்றையும் செய்கிறேன்" என்று மறுபடியும் வேண்டி

---

* ராமன் பகவான்; லக்ஷ்மணன் ஜீவன்; ஜீவனைப் பகவான் தன் ப்ரயோஜனத்துக்காகவே சேஷனாகப்பண்ணிக்கொண்டு கைங்கர்யத் தைப் பெறவேண்டியவன்; ஜீவனும் கைங்கரியத்தைச்செய்து கிரு தார்த்தனாகிறான். இப்படி ஜீவன் பகவானை ப்ரார்த்திக்கவேண்டும் என்று லக்ஷ்மணன் உலகத்துக்கு வெளியிட்டான்.

ஞன். இதைக் கேட்டு ராமன் ஸந்தோஷப்பட்டு லக்ஷ்மணன் கூடவருவதை ஒப்புக்கொண்டு, எல்லா ஆயுதங்களையும் கொண்டு வரச் சொன்னுன். லக்ஷ்மணனும் அதை உடனே செய்தான்.* (ஸ-31)

(46) பிறகு ராமனும் ஸீதையும் தங்களுடைய எல்லாத் தனங்களையும் குரு புத்திரரான ஸுயஜ்ஞருக்கும் மற்ற ப்ராம்மணர்களுக்கும் பரிவாரங்களுக்கும் பிரித்துக்கொடுத்துவிட்டார்கள். (ஸ-32) பிறகு அவர்களும் லக்ஷ்மணனும் தசரதன் அரண்மனைக்குப் போனுர்கள். வழியில் ஜனங்கள் அவர்களைப்பார்த்து வருத்தப்பட்டுக்கொண்டு அடியில் வருமாறுபேசிக்கொண்டிருந்தார்கள்— "எவன் போகும்போது சதுரங்கபலம் பின்னுல்போகுமோ, அவன் கால்நடையாய்ப் போகிருனே. லக்ஷ்மணன் ஒருவன்தானே அவன்பின்னுலே போகிருன். எந்த ஸீதையை ஆகாசத்தில் ஸஞ்சரிக்கிறவர்களும் பார்க்கமுடியாதோ, அவளை ராஜமார்க்கத்தில் எல்லோரும் பார்க்கிருர்களே; நல்ல ரக்த வர்ணமுள்ள சந்தனத்தைப் பூசிக்கத்தகுந்தவளுக்கு மழையும் வெய்யிலும் குளிரும் வர்ணத்தின் வேறுபாட்டை உண்டுபண்ணப்போகின்றன. பிரியமான பிள்ளையைத் தசரதன் காட்டுக்கு அனுப்புவாஞே? அவனுக்குப் பேய் பிடித்திருக்கவேண்டும். குணமில்லாத பிள்ளையையும் பிதா காட்டுக்கு அனுப்பமாட்டானே. எவனுடைய நடத்தை

---

* (1) லக்ஷ்மணன் தன்னைவிட்டுப் பிரியான் என்று ராமனுக்குத் தெரியும். ஸீதைக்கு உபதேசம் பண்ணுகையில் பரதனையும் சத்ருக்னனையும் கூடப்பிறந்தவர்களைப்போலவும், பிள்ளைகளைப்போலவும் பார் என்று சொன்னுன். அப்போது லக்ஷ்மணனையும் அவர்களுடன் சேர்க்கவில்லை. இப்போது லக்ஷ்மணனைத் தடுத்தது, ஒருவனுல் வேண்டப்படாமல் ஒன்றையும் செய்யக்கூடாது என்கிற தர்மத்தை வெளியிடுவதற்காக.

(2) பரதன் ஸ்வபாவத்தை ராமன் நன்ருய் அறிந்தவன்; ஆனபோதிலும் லக்ஷ்மணன் அபிப்ராயத்தை அறிவதற்காக, பரதன் கௌஸல்யையைக் கவனிக்கமாட்டான் என்று சொன்னது.

(3) லக்ஷ்மணன் தன்னைக் காட்டுக்கு அழைத்துக்கொண்டுபோக ராமனையும் ஸீதையையும் வேண்டினுன். இதனுல், எந்த ப்ரயோஜனத்திற்கும் பகவானையும் லக்ஷ்மியையும் வேண்டவேண்டும் என்பது விளங்குகிறது. பிரபத்தியிலும் இப்படியே.

யினால் இந்த உலகம் அவன் வசமாயிருக்கிறதோ, அவனை எந்தப் பிதா அனுப்புவான்? ராமன் எந்த வழியாய் போகிறானோ, நாமும் அந்த வழியாய் அவன் பின்னால்போவோம். சூன்யமான இந்த நகரத்தைக் கைகேயி பாலனம் பண்ணட்டும். எங்கே ராமன் போகிறானோ, அதுவே நகரம். நம்மால் விடப்பட்ட நகரம் வனமாகட்டும்" என்று ஜனங்கள் புலம்பினார்கள். இதைக் கேட்டுக்கொண்டு ராமன் மனது கலங்காமல் தகப்பன் அரண்மனைக்குச்சென்றான். (ஸ - 33) தசரதன் கௌஸல்யை முதலான எல்லாப் பாரியைகளையும் வருவித்துவைத்துக்கொண்டு ராமனைக் கூப்பிடச் சொன்னான். தசரதன் உள்ளே வந்த ராமனைப் பார்த்து, அவனிடம்போக எழுந்திருந்துபோய், நடுவில் மூர்ச்சை அடைந்து கீழே விழுந்தான். ராமனும் லக்ஷ்மணனும் அவனைத் தூக்கி ஆஸனத்தில் உட்காரவைத்தார்கள். ஒரு முகூர்த்தமான பிறகு, அவனுக்கு ப்ரஜ்ஞை திரும்பி வந்தது. அவனைப் பார்த்து ராமன், "எனக்கும் ஸீதைக்கும் லக்ஷ்மணனுக்கும் காட்டுக்குப்போக அநுமதிகொடுக்கவேண்டும் பல காரணங்களால் இவர்களைத் தடுத்தேன்; அது முடியவில்லை" என்று வேண்டினான். தசரதன், "கைகேயிக்கு வரம் கொடுத்து ஏமாந்து போனேன். என்னை அடக்கிவிட்டு நீ அயோத்யைக்கு ராஜாவாயிரு" என்று சொன்னான். ராமன் அஞ்சலி செய்துகொண்டு, "நீர் ஆயிரம் வர்ஷங்கள் ராஜாவாக இரும். நான் காட்டில் வஸிக்கிறேன். எனக்காக நீர் சொன்னதைச் செய்யாதிருக்கவேண்டாம். பதினான்கு வர்ஷம் அங்கிருந்து ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றித் திரும்பிவந்து உம்முடைய திருவடிகளைப் பிடித்துக்கொள்ளுகிறேன்" என்று பதில் சொன்னான். அப்போது கைகேயியினால் தூண்டப்பட்ட தசரதன் மறுபடியும் "ஸுகமாயும் பயமில்லாததாயுமிருக்கிற மார்க்கத்தாலேபோய்த் திரும்பிவந்து ச்ரேயஸையும் அபிவிருத்தியையும் அடை. தர்மத்திலும் ஸத்யத்திலும் மனதை வைத்திருக்கிற உன்னை அவைகளிலிருந்து திருப்ப முடியாது. ஆனால் இன்று ராத்திரி போகாதே; ஒரு நாளாவது உன்னைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன்" என்று சொன்னான். ராமன் "நான் ஒரு க்ஷணம்கூட இங்கே இருக்க முடியாது. துக்கத்தை அடக்கிக்கொள்ளும். கைகேயி என்னைக் காட்டுக்கு இப்போதே போ என்று சொன்னதை ஒப்புக்

கொண்டு, 'நான் போகிறேன்' என்று சொன்னேன். நான் அதை ஸத்யமாகப் பண்ணவேண்டும்" என்று பதில்சொன்னான். தசரதன் ராமனை ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு மூர்ச்சையை அடைந்தான். கைகேயி தவிர, மற்ற பார்யைகளும் ஸுமந்த்ரனும் உரக்க அழுது மூர்ச்சையை அடைந்தார்கள். (ஸ - 34)

(47) ஸுமந்த்ரன் அப்போது கைகேயியைப் பார்த்து கோபத்தோடுகூட "உன்னுடைய பர்த்தாவான தசரதன் ஸ்தாவரம் ஜங்கமங்களுள்பட எல்லாவற்றுக்கும் ராஜா; அவனை நீ விட்டுவிட்டாய். இதைக்காட்டிலும் மேலான அகார்யம் இல்லை; நீ பதியைக் கொல்லுகிறவள்; குலத்தையும் நாசம்பண்ணுகிறவள்; உன் செய்கைகளால் அவருக்குத் தாபத்தை உண்டுபண்ணுகிறாய். அவரை வருத்தப்படுத்தாதே. கோடிப் பிள்ளைகளைக்காட்டிலும் பர்த்தாவின் இச்சை உயர்ந்தது. இக்ஷ்வாகு குலக்கிரமப்படி ராஜாவுக்குப் பின்னாலே வயதுமுறைப்படி பிள்ளைகள் ராஜ்யத்தை அடையவேண்டியது. அதைக் கெடுக்க இச்சிக்கிறாய். உன் பிள்ளை ராஜாவாக ஆகட்டும். எங்கே ராமன் போகிறானோ, அங்கே நாங்கள் போகிறோம். உன் தேசத்தில் ஒரு பிராமணனும் இருக்கத்தகுந்தவன் அன்று. அவ்விதமான தகாத கர்மத்தைச் செய்ய விரும்புகிறாய். உன்னுடைய இந்த நடத்தையைப் பார்த்து பூமி வெடிக்கவில்லையே. இதோ ஆச்சர்யம். தபஸால் ஜ்வலிக்கிற பெரிய ருஷிகள் உன்னை 'திக்' என்று சபிக்கவில்லையே. மாமரத்தைக் கோடாலியால் வெட்டிவிட்டு, வேப்பமரத்துக்குப் பால்வார்த்து வளர்த்தாலும், அதன் பழம் மதுரமாகுமோ? தாயாரைப்போல் பெண் இருப்பாள் என்கிற பழமொழி பொய்யன்று. முன்னாளில் உன் தகப்பனாருக்கு எல்லா ப்ராணிகளுடைய வார்த்தைகளும் தெரியட்டும் என்று வரம் ஒருவர் கொடுத்திருந்தார். பிறகு எறும்புகள் பேசிக்கொண்டு போனதைக் கேட்டு அவன் சிரிக்க, உன் தாயார் அதற்குக் காரணத்தைக் கேட்டாள். அவன் அதைச் சொன்னால், தனக்கு மரணம் வரும் என்று சொல்ல, அவள் "உனக்கு மரணம் வந்தாலும் வரட்டும்; அதைச் சொல்லவேண்டும்" என்று நிர்ப்பந்தம் செய்தாள். வரம் கொடுத்தவரின் ஆலோசனைப்படி அவனை

அவன் தள்ளிவிட்டான். அப்படிப்பட்டவள் பெண்ணன்றோ நீ” என்று கடுமையாக நிந்தித்தான். இதனால் கைகேயிக்குக் கோபமும் வரவில்லை; முகமும் வாடவில்லை. (ஸ-35)

(47) தசரதன் ஸுமந்த்ரனைப் பார்த்து, “பரதன் ராஜ்யத்தை ஆளட்டும்; நிறைந்த தனதான்யங்களுடன் சதுரங்கஸேனையை ராமனுடன்கூட அனுப்பு” என்று கட்டளையிட்டான். இதைக்கேட்டுக் கைகேயி பயமடைந்து, “நீர் சொன்னபடியே செய்தால் ராஜ்யம் சூன்யமாய்விடாதா? அதைப் பரதன் எப்படி வேண்டுவன்?” என்று வெட்கமில்லாமல் கேட்டாள். தசரதன், “என்னை ஏன் பீடிக்கிறாய்? ராமன் காட்டுக்குப்போகவேண்டுமென்றுதானே கேட்டாய். அவனுடன் ஸேனைகளை அனுப்பக்கூடாது என்று சொல்லவில்லையே?” என்று சொன்னான். கைகேயி இதைக்கேட்டு மிகவும் கோபித்து, “உம்முடைய குலத்திலேயே ஸகரன் மூத்தபிள்ளையான அஸமஞ்ஜனைக் காட்டுக்கு அனுப்பவில்லையா? அப்படியே நீயும் செய்யவேண்டியது” என்று சொல்ல, தசரதன் ‘திக்’ என்று மாத்ரம் சொன்னான். எல்லாரும் வெட்கத்தை அடைந்தார்கள். அவள் அதை அறியவில்லை. அப்போது ஸித்தார்த்தன் என்கிற ப்ரதானமந்திரி, “அஸமஞ்ஜன், அயோத்தியிலிருந்த குழந்தைகளை ஸரயூநதியில் போட்டு ஸந்தோஷமாய்ப் பார்த்துக்கொண்டிருந்தான். அதற்காக அவன் ராஜ்யத்தைவிட்டுத் துரத்தப்பட்டான். ராமன் அப்படிப்பட்ட குற்றம் என்ன செய்தான்? ஒரு தோஷமும் அவனிடத்தில் இல்லையே, இருந்தால் சொல்லு. துஷ்டனல்லாமல் நல்லவழியிலிருப்பவனைத் தேசத்தைவிட்டுத் துரத்துவதான குற்றம் இந்திரனையும் கொளுத்துமே. ஆகையால், ராமனுக்கு வரும் லக்ஷ்மியைத் தடுக்காதே. உலகத்தார் பழியைச் சுமக்காதே” என்று சொன்னான். இதைக்கேட்டு, ராஜா கைகேயியைப் பார்த்து, “இந்த வார்த்தையை நீ கேட்கவில்லையே. எனக்கும் உனக்கும் ஹிதத்தை அறியவில்லையே. நல்ல மார்க்கத்தைவிட்டுக் கெட்டவழியை அநுஸரிக்கிறாய். ராஜ்யத்தையும் ஸுகத்தையும் விட்டுவிட்டு நானும் ராமனுடன் கூடப்போகிறேன். நீயும் உன் பிள்ளையும் ராஜ்யத்தை ஸுகமாக ஆளுங்கள்” என்று சொன்னான். (ஸ-36)

**ஸித்தார்த்தன் சொன்னதைக்கேட்டு ராமன் “நான் போகும்**

களையும், விஷயங்களில் இருக்கும் பற்றையும் விட்டுவிட்டேன். காட்டில் அகப்படுவதைக்கொண்டு ஜீவிக்கப்போகிறேன். எவனாவது என்னுடன் கூடவருவதால் எனக்கு என்ன ப்ரயோஜனம்? யானையைக் கொடுத்துவிட்டவனுக்கு அதைக் கட்டுகிற கயிற்றால் என்ன ப்ரயோஜனம்? ஓ! ராஜாவே! எல்லாவற்றையும் பரதனுக்குக் கொடுக்கிறேன். எனக்கு மரிவுரியையும் மண்வெட்டியையும் கூடையையும் கொண்டுவந்து கொடுக்கவேண்டும்" என்று சொன்னான். (ஸ-37)

(49) அப்போது கைகேயி, தானே ராமனுக்கு மரவுரிகளைக் கொண்டுவந்து கொடுத்து வெட்கமில்லாமல் "உடுத்துக்கொள்" என்று சொன்னாள். அவன் அவைகளைப் பெற்றுக்கொண்டு முன்பு கட்டிக்கொண்டிருந்த மெல்லியதான வஸ்திரத்தை எறிந்துவிட்டு ருஷிவஸ்திரங்களை உடுத்துக்கொண்டான். லக்ஷ்மணனும் அப்படியே செய்தான். ஸீதையும் மரவுரியை வாங்கிக்கொண்டு அதை உடுத்துக்கொள்ளத் தெரியாமல் கண்ணுங்கண்ணீருமாய் ராமனைப் பார்த்து, "காட்டிலிருக்கும் ருஷிகள் எப்படி மரவுரிகளை உடுத்துக்கொள்ளுகிறார்கள்" என்று கேட்டாள். ராமன் அவளுடைய பட்டுவஸ்திரத்தின்மேலே அந்த மரவுரியைக் கட்டினான். இதைப் பார்த்துக்கொண்டிருந்த அந்தப்புர ஸ்திரீகள் கண்ணீரைவிட்டு, "ராமா! நீ லக்ஷ்மணனுடன் காட்டுக்குப்போ. ஸீதை வனவாஸத்துக்குத்தகுந்தவள் அல்லள். அவள் இங்கேயே இருக்கட்டும்" என்று சொன்னார்கள். வஸிஷ்டரும் கைகேயியைப் பார்த்து, அவளை நிந்தித்து, "ஸீதை காட்டுக்குப் போகவேண்டாம். ராமனுக்குக் கொடுப்பதாகச் சொன்ன ஸிம்மாஸனத்தில் இவள் இருக்கட்டும். கிருஹஸ்தனுக்கு அவன் பாரியை ஆத்மா. ஆகையால், அவள் இது ராமனுடையதென்று பூமியையாளட்டும். அவள் ராமனுடன் கூடப்போனால் நாங்களும் இந்தப் பட்டணமும் கூடப்போவோம். பரதனும் சத்ருக்நனும் மரவுரியைக் கட்டிக்கொண்டு காட்டில் இருக்கும் தமையனிடம் போவார்கள். சூன்யமான நகரத்தை நீ ஆளு. ராமன் எங்கு இருப்பானோ, அது நகரம்; அவன் எங்கே இல்லையோ அது காடு. ஸீதையிடமிருந்து மரவுரியை வாங்கிக்கொண்டு, உயர்ந்த ஆபரணங்களைக் கொடு" என்று சொன்னார். இதனாலும், ஸீதையினுடைய மனம் திரும்பவில்லை,

(ஸ-37.) தசரதனும், ஸீதை மரவுரியைக் கட்டிக்கொள்ளாமல் வனம்செல்லட்டும் என்று வஸிஷ்டரைப்போலச் சொல்லி, பிழைத்திருப்பதில் ஆசையைவிட்டு, பிள்ளையைவிட்டுப் பிரிவதாகிய துக்கத்தில் முழுகி பூமியில் விழுந்தான். ராமன் அவனைப் பார்த்து "பிள்ளையின் பிரிவினால் கௌஸல்யைக்கு எப்படித் துக்கம் உண்டாகாதோ, அப்படி அவளிடத்தில் அபிமானம் பண்ணவேண்டும்" என்று சொல்லி, காட்டுக்குப்புறப்பட்டான். (ஸ-38.) ராஜா ஸுமந்த்ரனைக் கூப்பிட்டு "ரதத்தைக் கொண்டுவந்து இவர்களைக் கொண்டுபோய் விடு" என்று சொன்னான். அவனும் அப்படியே ரதத்தைக் கொண்டுவந்து ராமனிடம் தெரிவித்தான். கௌஸல்யை ஸீதையைக் கட்டிக்கொண்டு "உலகத்தில் ஸ்திரீகளின் ஸ்வபாவம் சஞ்சலம்; கஷ்டம் வந்தபோது பர்த்தாவினிடத்தில் கௌரவம் பண்ணுவதில்லை. உயர்ந்த குலமும், செய்த உபகாரங்களும், ப்ரீதியுடன் வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் கொடுத்ததும், அவன் செய்த பாணிக்ரஹணமும் அவர்கள் மனதில் படுகிறவைகள் அல்ல. பதிவ்ரதைகளுக்குப் பர்த்தாவே தெய்வம். என் பிள்ளை காட்டுக்குப் போகிறான் என்று அவனை அவமதிக்காதே. அவனுக்குத் தனமிருந்தாலும் இல்லாவிட்டாலும், அவன் உனக்குத் தெய்வம்" என்று சொன்னாள். இதைக் கேட்டு ஸீதை அஞ்ஜலிபண்ணிக்கொண்டு "அம்மா! நீ எது சொல்லுகிறாயோ, அதையெல்லாம் நான்செய்கிறேன். நான் பர்த்தாவினிடம் எப்படி இருக்கவேண்டும் என்பதை அறிந்திருக்கிறேன்; பெரியோர்களிடமிருந்து கேட்டும் இருக்கிறேன். என்னைக் கெட்ட ஸ்திரீகளுக்கு ஸமமாக எண்ணவேண்டாம். சந்த்ரனைவிட்டு ப்ரபையைப் பிரிக்கமுடியாததுபோல, தர்மத்தைவிட்டு என்னைப் பிரிக்கமுடியாது. தந்தி இல்லாத வீணை வாசிக்காது. சக்ரம் இல்லாத ரதம் ஓடாது. நூறுபிள்ளைகளிருந்தாலும் பர்த்தா இல்லாத ஸ்திரீக்கு ஸுகம் கிடையாது. தாயும் தகப்பனும் பிள்ளையும் கொஞ்சம் ஸௌக்யத்தைத்தான் கொடுப்பார்கள். அளவில்லாத ஸுகத்தைக்கொடுப்பவன் பர்த்தாதான். அப்படிப்பட்டவனை எவள்தான் பூஜிக்கமாட்டாள். இவ்விதமான பதிவ்ரதா தர்மத்தை அறிந்த நான் பர்த்தாவை அவமதிப்பேனா?" என்று சொன்னாள். ராமனும் தாயாரைப் பார்த்து, "அம்மா! துக்கப்படாதே. தகப்பனாரைப் பார்த்

துக்கொள். வனவாஸம் சீக்கிரம் முடிந்துவிடும். பதினான்கு வர்ஷங்களும் ஒரு ராத்திரி தூக்கம்போல் போய்விடும்" என்று சொல்லி, மற்றத் தாயார்களையும் பார்த்து "அறியாமையாலோ, அல்லது அதிகப் பழக்கத்தாலோ, நான் ஏதாவது கடுமையாகப் பேசியிருந்தாலும் அதை க்ஷமிக்கவேண்டும். விடை கொடுக்க வேண்டும்" என்று சொன்னான். இதைக்கேட்டு எல்லோரும் அழுதார்கள். (ஸ-39)

(50) ராமனும் லக்ஷ்மணனும் ஸீதையும் தசரதனைப் ப்ரதக்ஷிணம்பண்ணி, விடைபெற்றுக்கொண்டு, கௌஸல்யைக்கும் ஸுமித்ரைக்கும் நமஸ்காரம் பண்ணினார்கள். ஸுமித்ரை லக்ஷ்மணனைப் பார்த்து "நீ வனவாஸத்துக்காக உண்டுபண்ணப்பட்டிருக்கிறாய். நீ ராமனிடத்தில் அன்புள்ளவன். ராமன் போகையில் அவன் அழகைப்பார்த்து அதில் ஈடுபட்டு மெய்மறந்து போய் அவனை ரக்ஷிப்பதில் கவனக் குறைவுள்ளவனாக இராதே. அவனுக்கு ஆபத்து வந்தாலும் ஸம்பத்து வந்தாலும் அவன் தான் உனக்குக் கதி. தமயன் வசத்திலிருப்பது ஸத்துக்களின் தர்மம். இப்படி இருப்பது இந்தக் குலத்துக்குத் தகுந்தது. ராமனைத் தசரதனாகவும், ஸீதையை நானாகவும், காட்டை அயோத்யையாகவும் நினை. குழந்தாய்! ஸுகமாகப்போய் வா" என்று புத்தி சொன்னாள். ஸீதையும் ராமனும் லக்ஷ்மணனும் ரதத்தில் ஏறிக்கொண்டார்கள். ஸுமந்திரன் ரதத்தை வேகமாக ஓட்டினான். நகரத்து ஜனங்கள் குழந்தைகள் விருத்தர்கள் உள்படமிருந்த துக்கத்துடன் ரதத்துக்குப் பின்னாலே போனார்கள். அவர்கள் கண்ணும் கண்ணீருமாய்ப் பக்கத்திலும் பின்னாலும் நின்றுகொண்டு "ஸூத! கடிவாளத்தையிழுத்துக்கொண்டு ரதத்தை மெல்லவிடு. ராமன் முகத்தை நாங்கள் பார்க்கவேண்டும். ராமன் தாயார்மனது இரும்பால் செய்யப்பட்டதோ? அவன் காட்டுக்குப்போவதைப் பார்த்தும் அவள் மனது வெடிக்கவில்லையே. ஸீதை மஹாபாக்யம் பண்ணினவள். பர்த்தாவுடன் அவன் நிழலைப்போல் கூடப்போகிறாள். ஓ! லக்ஷ்மணா! நீ தமையனுக்குப் பணிவிடை செய்யப்போகிறாயே. நீ க்ருதார்த்தன்" என்று இப்படிச்சொல்லிப் பெருகுகிற கண்ணீரைத் தடுக்கமுடியாதவர்களாயிருந்தார்கள். தசரதனும் கௌஸல்யையும் மற்ற ராஜஸ்திரீகளும் ராமனைப்பார்க்க வெளியே வந்து "நில்லு நில்லு"

என்று ஸுமந்த்ரனைச் சொன்னார்கள். ராமனோ சீக்கிரம் போ என்று சொல்ல, ஸூதன் இன்னது செய்கிறது என்று தெரியாமல் திகைத்தான். கடைசியில் ராமன் சொன்னபடி ரதத்தை வேகமாய் ஓட்டினான். 'புறப்பட்டுப்போகிறவன் திரும்பி வரவேண்டும்' என்று எண்ணமிருந்தால் அவனைப் பின்தொடர்ந்து போகக்கூடாது என்று மந்திரிகள் சொல்ல, தசரதன் அதைக்கேட்டு அங்கே நின்றுவிட்டான். (ஸ-40.)

(51) ராமன் புறப்பட்டுப்போகையில், அந்தப்புரத்தில் ஸ்திரீகளின் பலமான அழுகைக்குரல் உண்டாயிற்று. "நாதனில்லாத இந்த ஜனங்களுக்கு நாதனும் கதியும் ஆனவன் எங்கேயோ போகிறானே? ராமன் தன்னை எவனாவது வைதாலும் கோபித்துக்கொள்வதில்லை. கோபமுண்டாக்குகிறவைகளை விலக்குகிறவன். கோபித்துக்கொண்டவர்களிடம் நல்ல வார்த்தை சொல்பவன். நாம் துக்கப்பட்டால் அவனும் துக்கப்படுவான். இப்படிப்பட்டவன் எங்கேயோ போகிறானே? தன் தாயாரான கௌஸல்யையிடத்தில் எப்படி இருந்தானோ, அப்படியே நம்மிடங்களிலுமிருந்தானே. இந்த மஹாத்மா எங்கேயோ போகிறானே. பிரியமான பிள்ளையைக் காட்டுக்கு ராஜா அனுப்புகிறானே. அவனுக்குப் புத்தியில்லையோ?" என்றார்கள். ஏற்கனவே பிள்ளையைப் பிரிந்து துக்கப்பட்டுக்கொண்டிருக்கும் ராஜா இந்த அழுகைக்குரலைக்கேட்டு, அதிக துக்கத்தை அடைந்தான். ஸூர்யன் தேஜஸு குறைந்தவனாய்விட்டான். யானைகள் வாயிலிருந்த கவளங்களை உமிழ்ந்துவிட்டன. பசுக்கள் கன்றுகளுக்கு ஊட்டக்கொடுக்கவில்லை. முதன்முதலாக பிள்ளையைப்பெற்றும் தாய்மார்கள் ஸந்தோஷப்படவில்லை. காற்றினால் அலைக்கப்பட்ட ஸமுத்ரத்தைப்போல நகரம் நடுநடுங்கிற்று. எல்லாரும் தைந்யத்தை அடைந்து, சாப்பாட்டிலும் விளையாட்டிலும் மனதை வைக்கவில்லை. எல்லாரும் பெருமூச்சுவிட்டுக்கொண்டு, ராஜாவை நிந்தித்தார்கள். குழந்தைகள் தாயின் பாலைத் தேடவில்லை. பர்த்தாக்கள் மனைவிகளைத் தேடவில்லை. எல்லாரும் எல்லாவற்றையும் விட்டு ராமனையே நினைத்துக்கொண்டிருந்தார்கள். ராமனுடைய ஸுஹ்ருத்துக்கள் துக்கத்தாலே பீடிக்கப்பட்டுப் படுக்கைகளைவிட்டு எழுந்திருக்கவில்லை. இப்படி அயோத்யை இருந்தது. (ஸ-41.)

(52) ராமனுடைய ரதம் போகும்பொழுது கிளம்பின தூளி கண்ணில்பட்டவரையில், தசரதன் அங்கேயே பார்த்துக் கொண்டிருந்தான். அதுவும் மறைந்தபோது, அவன் கீழே விழுந்தான். அவன் வலது தோளைக் கௌஸல்யையும், இடது தோளைக் கைகேயியும் பிடித்துக்கொண்டு தூக்கப்போனார்கள். அவன் கைகேயியைப்பார்த்து, "துஷ்டநடக்கையுள்ளவளே! நீ என் உடம்பைத் தொடாதே. உன்னைப் பார்க்க நான் விருப்பமில்லை. நீ எனக்கு மனைவியும் அன்று; பந்துவும் அன்று. உன்னைக்கொண்டு பிழைப்பவர்கள் எனக்கு வேலைக்காரர்கள் அன்று. நான் அவர்களுக்கு ஸ்வாமியும் அன்று. தர்மத்தைவிட்டு அர்த்தத்தையே நினைக்கிற உன்னை நான் விட்டுவிடுகிறேன். பரதன் ராஜ்யத்தை அடைந்து ஸந்தோஷப்படுவானேயானால், அவன் பண்ணுகிற தர்ப்பணம் என்னைச் சேரவேண்டாம்" என்று சொன்னான். அப்பொழுது கௌஸல்யை ராஜாவைத் தூக்கிக் கொண்டு திரும்பினாள். ராஜாவும் "ராமன் காட்டில் என்ன கஷ்டப்படுவனோ?' என்று புலம்பிக்கொண்டு பட்டணத்துக்குள் நுழைந்து துவாரபாலகர்களை, என்னைக் கௌஸல்யை க்ருஹத்துக்குக் கொண்டுபோய் விடுங்கள் என்று கட்டளையிட்டான். அவர்களும் அப்படியே செய்தார்கள். அங்கே போனபின், "ஐயோ! ராமா! என்னை விட்டுவிடுகிறாயே!" என்று கதறினான். "ராமன் திரும்பிவருகிறவரையில் எவர்கள் பிழைத்திருந்து அவனைக் கட்டிக்கொண்டு காண்பார்களோ, அவர்கள் அல்லவோ பாக்யசாலிகள்" என்று புலம்பினான். நடுராத்திரியில் கௌஸல்யையைப் பார்த்து, * "ராமன் பின்னால் போன

* ராமனுடன்கூட என்னாலே போகமுடியவில்லை. என் கண்களோ அவன் பின்னாலேபோய்த் திரும்பிவராமல் அவனிடமே இருக்கின்றன. என்னைக்காட்டிலும் அவைகள் அதிக பாக்யம் பண்ணினவைகள் என்று கருத்தாகும். 'நன்றாய்' என்பதற்கு கைகேயியுடன் ஸங்கேதம் பண்ணிக்கொண்டு ராமனைக் காட்டுக்கு அனுப்பினான் என்று எண்ணாமல், 'ஐயோ! அவன் மாயவலையில் அகப்பட்டு, மனமில்லாமல் ராமனை அனுப்பிவிட்டு வருந்தப்படுகிறானே என்று இரக்கத்துடன் தொடு" என்று கருத்தாகும். இந்திரியமிருப்பதை அதன் வேலையாலே அறியவேண்டும். கண் காணாதபடியால் சக்ஷுரிந்திரியம் போய்விட்டது. த்வகிந்திரியம் இருக்கிறதோ என்று பார்க்க வேண்டும். அதற்காகத் தடவிப்பார் என்பது தசரதன் கருத்து. 'நன்றாய்' என்பதற்கு ராமன் தாயார் தடவிக்கொடுத்தால் ராமன் தடவிக்கொடுத்ததுபோலாகும் என்பது கருத்து.

என் கண்கள் இன்னும் திரும்பிவரவில்லை. உன்னை நான் பார்க்க முடியவில்லை. கையினால் என்னை நன்ருய்த் தடவிக்கொடு" என்று சொன்னான். இதைக்கேட்டு கௌஸல்யை அவன் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு புலம்பினாள். (ஸ-42.) "கைகேயி தனது க்ரூரத்தன்மை என்னும் விஷத்தை ராமனிடத்தில் கக்கிவிட்டு, சட்டை உரித்த பாம்பைப்போல் இருக்கப்போகிருள். ராமனைக் காட்டுக்கு அனுப்பித் தன் இஷ்டத்தை நிறைவேற்றிக் கொண்ட இவள், வீட்டிலிருக்கும் துஷ்டப்பாம்பைப்போல் எனக்குப் பயத்தை உண்டாக்குவளே. ராமன் ராஜ்யத்தைப் பெருவிட்டாலும் இங்கேயே பிச்சை எடுத்துக்கொண்டிருக்கக் கூடாதா? காட்டுக்கு அனுப்புவதைக்காட்டிலும் பரதனுக்கு வேலைக்காரனைச் செய்வது நல்லதன்ருே? பர்வகாலத்தில் இஷ்டி பண்ணுகிறவர்கள் உமியை ராக்ஷஸர்களுக்குக் கொடுப்பதுபோல, கைகேயி, ராமனை ராஜ்யத்தைவிட்டுத் துரத்தி, காட்டுக்கு அனுப்பி அவனை ராக்ஷஸர்களுக்குப் பலியாகக் கொடுத்துவிட்டாளே. அவன் ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் காட்டுக்குள் பிரவேசித்திருப்பானே? அங்கே எந்த அவஸ்தையை அடைகிருனே? ஸுகப்படத் தகுந்தகாலத்தில் அதற்கு மாருக அவர்கள் காட்டுக்குப்போய்க் காய்கிழங்குகளை எப்படிச் சாப்பிட்டுக்கொண்டிருப்பர்கள்? என்னுடைய துக்கம் முடியும் காலம் வருமா? அவர்கள் திரும்பிவருவதை நான் பார்ப்பனே? அவர்களைக்கண்டு பர்வகாலத்தில் ஸமுத்ரத்தைப்போல இந்த நகரம் ஸந்தோஷப்படுமா? எல்லாரும் அவர்கள்மேலே பொரிகளை இறைப்பார்களா? ப்ராம்மணக் கன்னிகைகள் புஷ்பங்களையும் பழங்களையும் கொடுத்துக்கொண்டு நகரத்தை ப்ரதக்ஷிணம் பண்ணுவார்களா? குழந்தைகள் தாயார் ஸ்தன்யபானம் பண்ணப்போகையில் அவர்கள் அதைச் செய்யவொட்டாமல் முன் ஜன்மத்தில் நான் செய்திருக்கவேண்டும். ஆகையால்தான் பிள்ளையைவிட்டுப் பிரிந்திருக்கிறேன். கன்றைவிட்டுப் பிரிந்த பசுவைப்போல் அவனைவிட்டுப் பிரிந்து பிழைத்திருக்க விருப்பமில்லை. பிள்ளையைவிட்டுப் பிரிந்த சோகாக்னி என்னைக் கொளுத்துகிறது—என்று. (ஸ-43.)

(53) இப்படிப் புலம்பிக்கொண்டிருந்த கௌஸல்யையை ஸுமித்ரை ஸமாதானம் பண்ணினாள்—"ராமனைப்பற்றி நீ

துக்கப்படுவது தகுந்ததன்று. அவன் தர்மிஷ்டன். தகப்பனார் செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றுவதற்காக ராஜ்யத்தைவிட்டுக் காட்டுக்குப் போயிருக்கிறான். லக்ஷ்மணனைப்பற்றியும் ஸீதையைப்பற்றியும் துக்கப்படவேண்டியதில்லை. அவன் ராமனுக்குக் கைங்கரியம் பண்ணுவதாகிய உயர்ந்த காரியத்தைச் செய்து கொண்டிருக்கிறான். ஸீதையும் காட்டில் ஏற்படக்கூடிய கஷ்டத்தை அறிந்தும் ராமனுடன்கூடப் போகிறாள். உன் பிள்ளை தர்மிஷ்டன் என்கிற கீர்த்தியைப் பரவச்செய்யப்போகிறான். அவன் அடையாதது என்ன? ராமனுடைய சுத்தியையும் பெருமையையும் அறிந்து ஸூரியன் தாபத்தை உண்டுபண்ணான். காற்றும் ஸுகமாய் அவன்மேலே அடிக்கும். சந்திரனும் ராத்திரியில் படுத்துக்கொண்டிருக்கிற ராமனைத் தகப்பனாரைப்போல் தன் கிரணங்களால் கட்டிக்கொண்டு ஸந்தோஷப்படுத்துவன். ராமனுடைய வீர்யம் தெரியாதா? முன்னொரு ஸமயம் தண்டகாரண்யத்துக்குப்போய் வைஜயந்தம் என்கிற நகரத்தைத் தகைந்து, திமித்வஜன்பிள்ளையைக் கொன்று, அதினால் ஸந்தோஷம் அடைந்த ப்ரம்மாவிடமிருந்து அஸ்த்ரங்களை அவன் பெறவில்லையா? அவன் சூரன். காட்டிலிருந்தாலும் வீட்டிலிருப்பதுபோல் பயப்படான். அவன் சத்துருக்களை நாசம்பண்ணச் சக்தியுள்ளவன். அவனுடைய ஆளுகைக்குள் இந்தப் பூமி வராமலிராது. அவன் சீக்கிரம் திரும்பிவந்து அபிஷேகம் பண்ணப் பட்டு ராஜ்யத்தைக் கைக்கொள்ளுவன். ஆதலால், துக்கத்தை அடக்கிக்கொள்' என்று. (ஸ 44.)

(54) ராமன் போகும்போது அயோத்தியிலுள்ள ஜனங்கள் பின்தொடர்ந்துபோனார்கள். அவர்களைப் பார்த்து ராமன் "என்னிடத்தில் உங்களால் எவ்விதமான ப்ரீதியும் வெகுமானமும் வைக்கப்பட்டனவோ, அவைகளைப் பரதனிடத்தில் வைக்கவேண்டியது. இதனால் எனக்கு ப்ரீதி உண்டாகும். அவன் நல்ல நடத்தையுள்ளவன்; உங்களுக்குப் பிரியங்களையும் ஹிதங்களையும் எப்படிச் செய்யவேண்டியதோ, அப்படிச் செய்வன். அவன் வயதாலே சிறுவனாயிருந்தாலும், ஜ்ஞானத்தாலே பெரியவன்; மிருதுவாயிருந்தாலும் வீர்யமுள்ளவன்; உங்களுக்கு உண்டாகும் பயங்களைப் போக்குவன்; உங்களுக்குத் தகுந்த ராஜாவாக

இருப்பன்" என்று சொன்னான். ஜனங்கள் "குதிரைகளே! திரும்புங்கள். நீங்கள் போகக்கூடாது. ராமனைப் பட்டணத்திலிருந்து காட்டுக்குக் கொண்டுபோகக்கூடாது" என்று புலம்பினார்கள். இதைக்கேட்டு ராமன் ரதத்திலிருந்து இறங்கி, ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் கால்நடையாக நடந்துபோனான். ப்ராம்மணர்கள், "ராமா! நீ ப்ராம்மணர்களுக்கு அநுகூலனாயிருக்கிறவன். அக்னிகளை அரணியில் ஏற்றிக்கொண்டு ப்ராம்மணர்களான நாங்கள் உன் பின்னாலே வருகிறோம். வாஜபேயத்தாலே கிடைத்த குடைகளை உன்மேல் ஸூர்ய கிரணங்கள் படாதபடி பிடிக்கிறோம். இதுவரையில் எங்கள் புத்தி வேதமந்திரங்களிலேயே இருந்தது. இப்பொழுது அஃது உன்னுடன்கூட வனத்துக்குப் போவதில் நிற்கிறது. 'தனத்தை எப்படி விட்டு வரலாம்' என்று கேட்கிறாயோ? எங்களுக்கு வேதம்தான் தனம். அஃது எங்கள் ஹிருதயத்திலிருக்கிறது. 'உங்கள் ஸ்திரீகளை யார் ரக்ஷிப்பார்கள்' என்று கேட்கிறாயோ? அவர்கள் பாதிவ்ரத்யமே அவர்களை ரக்ஷிக்கும். அவர்கள் வீட்டிலேயே இருக்கலாம். எங்களுடைய புத்தியானது உன்னைத் திருப்புவதில் நிலையாயிருக்கிறது. நீ காட்டுக்குப் போகிற நிச்சயத்தை விட்டுவிடு. ப்ராம்மணர்கள் வாக்கியத்தைக் கேட்கவேணும் என்கிற தர்மத்தை நீயே அநுஷ்டிக்காவிட்டால், நாங்கள்மாத்திரம் எதற்காகத் தர்மத்தை அநுஷ்டிக்கவேண்டும். உன்னைத் தலையால் வணங்கிக் கேட்டுக்கொள்ளுகிறோம். நீ திரும்பு. அநேக யாகங்கள் எங்களால் ஆரம்பிக்கப்பட்டன. நீ திரும்பிவந்தால்தான் அவைகள் முடிவை அடையும். ஜங்கமங்களும் ஸ்தாவரங்களும் உன்னிடத்தில் பக்தி உள்ளவைகளாயிருக்கின்றன. அவர்களிடத்தில் உனக்கு ஸ்நேஹமிருப்பதைக் காட்டு. மரங்களும் வேர்களால் தடுக்கப்பட்டு உன்பின்னால் வரமுடியாதவைகளாயிருக்கின்றன. ஆனால், காற்று அடிப்பதால் அசைந்தும் நேராக நின்றும் கைகளைத் தூக்கிக்கொண்டு கதறுகின்றன போலும். பக்ஷிகளும் பறப்பதும் ஆஹாரம் தேடுவதுமில்லாமல் மரங்களிலேயே இருந்துகொண்டு உன்னைத் தடுக்கின்றன" என்றார்கள். இப்படி அவர்கள் சொல்லிக்கொண்டிருக்கையில் ரதம் தமஸை என்கிற நதியினிடம் வந்துசேர்ந்தது. அதுவும் போகிறவர்களைத் தடுப்பதுபோல் வழியிலிருந்தது. ஸுமந்திரன்

களைத்த குதிரைகளுக்குத் தண்ணீர்காட்டி நதிக்கரையில் அவை களை நடமாடும்படி விட்டான். (ஸ-45.)

(55) அப்போது ஸூரியன் அஸ்தமித்தான். ராமன் "இங்கே தீர்த்தபானம் பண்ணிப் படுத்திருப்போம்" என்று சொல்ல, லக்ஷ்மணனும் ஸுமந்த்ரனும் மரங்களிலிருந்து விழுந்த பழுப்பிலைகளைப் பரப்பி, ராமனுக்கும் ஸீதைக்கும் படுக்கையை ஏற்பாடு செய்தார்கள். அதில் ராமனும் ஸீதையும் தூங்கினார்கள். ஜனங்களும் மரத்தடிகளில் தூங்கினார்கள். லக்ஷ்மணனும் ஸுமந்த்ரனும் ராமனுடைய குணங்களைச் சொல்லிக்கொண்டு தூங்காமலிருந்தார்கள். கொஞ்சகாலம் சென்றபிறகு எல்லாரும் ரதத்தில் ஏறிக்கொண்டு தமஸாநதியைத் தாண்டிக் கூடவந்த ஜனங்களை வஞ்சிப்பதற்காக கொஞ்சதூரம் வடக்குமுகமாய்ப் போய்ப் பிறகு திரும்பி வனம் போய்ச்சேர்ந்தார்கள். (ஸ-46.) ஜனங்கள் விடியற்காலத்தில் எழுந்திருந்து, ராமனைக் காணமல், மிகுந்த துக்கத்துடன் தங்களை நிந்தித்துக்கொண்டார்கள்— "இந்தத் துக்கத்தைச் சுடவேண்டும். பக்தியுள்ள நம்மைவிட்டு விட்டு ராமன் போய்விட்டானே. அவன், தகப்பன் பிள்ளைகளை ரக்ஷிப்பதுபோல் நம்மை ரக்ஷிப்பவன் அன்றோ. அவன் நம்மை விட்டு ஜனங்களில்லாத காட்டுக்கு எப்படிப்போனனே? இங்கேயே நாம் மரணத்தை அடைவோம். மரணம் அடையும் நிச்சயத்துடன் வடக்கே போய்க்கொண்டிருப்போம். இவ்விடத்தில் உலர்ந்த விறகு ஏராளமாய் இருக்கிறது. அதினல் அக்னியை வளர்த்து அதில் ப்ரவேசிப்போம். ராமனில்லாமல் அயோத்திக்குத் திரும்பிப்போன நம்மைப் பார்த்து, அந்த நகரத்தில் ஸ்திரீகளுக்கும் குழந்தைகளுக்கும் வயதானவர்களுக்கும் ஆனந்தம் அழியுமே. அந்த நகரத்தை எப்படிப் பார்ப்போம்." இப்படிப் புலம்பிக்கொண்டு ரதம் போன வழி போனர்கள். அப்போது அது இன்னவழியாய்ப் போயிற்று என்று தெரியவில்லை. "நாம் என்ன செய்கிறது? தெய்வமே நமக்கு விரோதமாயிருக்கிறதே!" என்று சொல்லிக்கொண்டு நகரத்துக்குத் திரும்பிப் போய்ச்சேர்ந்தார்கள். (ஸ-47.) திரும்பி வந்தவர்களைப் பார்த்து நகரத்திலுள்ளவர்கள் மிகுந்த துக்கத்தை அடைந்தார்கள். ஜனங்கள் வேண்டியவர்களையோ அபூர்வ வஸ்துக்களையோ கண்டு ஸந்தோஷப்படவில்லை. வியாபாரிகள் ஸாமான்

களைக் கடையில் பரப்பிவைக்கவில்லை. வீடுகளில் சமையல் நடக்கவில்லை. நஷ்டமாகித் திரும்பிக் கிடைத்த பெரிய தனத்தைப் பார்த்தும் ஸந்தோஷப்படவில்லை. தாய்மார் முதன்முதலாகப் பிள்ளையைப் பெற்றும் ஸந்தோஷப்படவில்லை. ஒவ்வொரு வீட்டிலும் ஸ்திரீகள் திரும்பிவந்த புருஷர்களைப் பார்த்து "ராமனைப் பாராதவர்களுக்கு வீடுகளும் ஸ்திரீகளும் தனங்களும் பிள்ளைகளும் ஸுகங்களும் எதற்காக?" என்று கடுமையாகப் பேசினார்கள். ராமன் எந்த நதிகளிலோ, குளங்களிலோ ஸ்நானம் பண்ணுவனோ, அவைகள் புண்ணிய தீர்த்தங்கள். வனமும் அதிலுள்ளவைகளும் ராமனுக்கு எல்லாவித உபசாரங்களையும் செய்யும்" என்று புலம்பி, கைகேயியையும் நிந்தித்துக்கொண்டிருந்தார்கள். (ஸ-48.)

(56) பொழுதுவிடிவதற்குமுன்னமே ராமன் வெகுதூரம் போய், கோஸலதேசத்தைக் கடந்து, வேதச்ருதி என்கிற நதியையும் தாண்டி, தெற்குத்திக்கில் போய், கோமதிநதியையும் ஸ்யந்திகை என்கிற நதியையும் தாண்டி, "திரும்பிவந்து ஸரயூ நதிக்கரையில் வேட்டையாடுவேனோ?" என்று சொல்லிக்கொண்டேபோனான், (ஸ-49.) அயோத்யை இருக்கும் திக்கைப் பார்த்து, அஞ்ஜலி செய்துகொண்டு, "காகுத்ஸ்தர்களால் பரிபாலனம் பண்ணப்பட்ட உயர்ந்த நகரமே! உன்னையும், எந்தத் தேவதைகள் உன்னிடத்தில் இருந்து உன்னை ரக்ஷிக்கிறார்களோ அவர்களையும், விடை கேட்கிறேன். * பிதாவின் கட்டளையை நிறைவேற்றிவிட்டுக் காட்டிலிருந்து திரும்பிவந்து தகப்பனாருடனும் தாயாருடனும் சேர்ந்து உன்னைப்பார்ப்பேன்" என்று சொல்லி, அங்கிருந்த ஜனங்களை "நீங்கள் என்னிடத்தில் தகுந்தபடி ப்ரீதியையும் இரக்கத்தையும் காண்பிக்கிறீர்கள். என்னுடன்கூட இருந்தால் உங்களுக்குத் துக்கம் அதிகமாக ஆகும். ஆகையால், திரும்புங்கள்" என்று சொல்லி அவர்களை அனுப்பிக் கங்கைக்கரைக்குப் போய்ச்சேர்ந்தான். அங்கேயே இராத்திரி இருப்பதாகச் சொல்லி, ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் ரதத்

* "அந்ருணோ ஜகதீபதே:" என்பதுமூலம். பிதாவின் கடனைத்தீர்ப்பது—பிதாவுக்கு தர்ப்பணம் ச்ராத்தம் முதலானவைகளைச் செய்வதுதான். இதுவும் அவசரமாக ராமன் வாயில்நின்றும் வந்துவிட்டது,

திலிருந்து இறங்கி, ஒரு புங்கமரத்தின் அடியில் இருந்தான். அப்போது ச்ருங்கிபேரம் என்கிற இடத்திலிருந்த வேடத் தலைவனான குஹன் என்பவன் வ்ருத்தர்களுடன்கூட ராமனிடம் வந்து அவனைத் தழுவிக்கொண்டு "ராமா! அயோத்யை எப்படியோ, அப்படியே இந்த இடமும் உனக்கு அதீனம். நான் உனக்கு என்ன செய்வேன்?" என்று சொல்லி, அர்க்கயத்தையும் குணமுள்ள பலவித போஜ்யங்களையும் கொண்டுவந்து ஸமர்ப்பித்து, "இந்தப் பூமி முழுவதும் உன்னது. நாங்கள் உனக்கு வேலைக்காரர்கள். நீ எங்களுக்கு ராஜா. எங்களைப் பரிபாலனம் பண்ணு" என்று வேண்டினான். ராமன் "நீ கால்நடையாக வந்ததும், எங்களிடம் ஸ்நேஹத்தைக் காண்பித்ததும் எங்களைப் பூஜித்ததாயிற்று. ஸந்தோஷம் அடைந்தோம்." என்று சொல்லி, அவனைக் கட்டிக்கொண்டு "நீ ரோகமில்லாமல் பந்துக்களுடனிருப்பதைக் காண மிகவும் ஸந்தோஷம் அடைந்தேன். உன்னுடைய ராஜ்யமும் மித்ரர்களும் தனங்களும் க்ஷேமமாய் இருக்கின்றனவா? நீ ப்ரீதியாய் எவைகளைக் கொண்டுவந்தாயோ, அவைகளைப் பார்த்தேன். ஆனால், அவைகளை நான் பெற்றுக் கொள்ளுவது தகுந்தது அன்று. நான் தர்ப்பைப்புல்லையும் மரவுரியையும் மான்தோலையும் தரித்து, காய்களையும் கிழங்குகளையும் சாப்பிட்டுக்கொண்டு, தபஸ்வியாய் வனத்தில் வாஸம் செய்யப் போகிறேன். இதை நீ தெரிந்துகொள். குதிரைகளுக்குத் தீனியைமாத்திரம் கொடு. வேறொன்றும் எனக்கு வேண்டாம். இதுவே எனக்கு நீ பூஜைசெய்வதாகஆகும்" என்றுசொன்னான். இதைக்கேட்டு குஹன், ராமன்சொன்னபடி செய்ய வேலைக்காரர்களுக்குக் கட்டளையிட்டான். பிறகு ராமன் ஸந்த்யோபாஸநம் செய்து, லக்ஷ்மணன் கொண்டுவந்த ஜலத்தைப் பானம்செய்து, பூமியில் ஸீதையுடன் படுத்துக்கொண்டான். லக்ஷ்மணனும், ஸுமந்த்ரனும் வில்லும்கையுமான குஹனும் கவனத்துடன் அவர்களை ரக்ஷித்துக்கொண்டு விழித்துக்கொண்டிருந்தார்கள். (ஸ-50.)

(57) குஹன் லக்ஷ்மணனைப் பார்த்து, "நீ ராஜபுத்ரன், ஸுகமாயிருக்கத்தகுந்தவன், இந்தப் படுக்கையில் படுத்துக் கொண்டு தூங்கு. நான் எல்லா க்லேசங்களையும் அநுபவிக்கிறவன். நான் வில்லுங்கையுமாய் என்னைச் சேர்ந்தவர்களுடன்கூட

இருந்து ராமனையும் ஸீதையையும் ரக்ஷிக்கிறேன். உலகத்தில் ராமனைக்காட்டிலும் எனக்கு அதிக ப்ரியமானவன் ஒருவனும் இல்லை. நான் சொல்லுவது உண்மை. ஸத்யத்தின்மேல் ஆணையிடுகிறேன்" என்று சொன்னான். லக்ஷ்மணன், "நீ ரக்ஷிப்பது உண்மையே. இதில் எனக்குப் பயமில்லை. ஆனால், * ராமன் ஸீதையுடன் பூமியில்படுத்துத் தூங்குகையில் எனக்கு எப்படித் தூக்கம் வரும்? எனக்குப் பிழைத்திருப்பதிலோ, ஸுகத்திலோ ஆசையில்லை. எவனைத் தேவர்களும் அஸுரர்களும் சண்டையில் எதிர்த்துநிற்க முடியாதோ, அவன் ஸீதையுடன் புல்லில் படுத்திருக்கிறானே. இவன் காட்டுக்கு வந்தபிறகு ராஜா உயிருடன் இருக்கமாட்டார். அவரால் ரக்ஷிக்கப்பட்ட பூமி விதவையாகும். கௌஸல்யையும் ராஜாவும் என் தாயாரும் § பிழைத்திருக்கக்கூடுமானால், இன்று ஓர் இராத்திரிதான் பிழைத்திருப்பார்கள். என் தாயார் சத்ருக்னனைப் பார்ப்பதற்காக ஒருகால் ஜீவித்திருக்கலாம். கௌஸல்யைக்கு ஓரேபிள்ளை. அவள் ராமனைப் பாராமல் இறந்தேபோய்விடுவள்" என்று சொன்னான். இப்படி இருவரும் பேசிக்கொண்டிருக்கையில் இராத்திரி போய்விட்டது. (ஸ-51.) பொழுதுவிடிந்தவுடன் ராமன்கட்டளைப்படி குஹனுடைய வேலைக்காரர்களால் ஓடம் கொண்டுவரப்பட்டது. ராமனும் ஸீதையும் லக்ஷ்மணனும் ஓடம் ஏற, கங்கையைக்குறித்துச் சென்றார்கள். ஸுமந்த்ரனும்

---

* ராமனைத் தசரதன் தபஸுபண்ணிப் பெற்றான்; அவன் தரையிலே படுக்கலாமோ? ராமன் வஸிஷ்டருடைய சிஷ்யனானபடியாலே கீழே உட்காருவதில் பழகினவன்; ஆகையால் அவன் தரையிலே படுக்கலாம். மிகவும் ஸுகமாக வளர்ந்த ஸீதை இப்படித் தரையில் படுக்கத் தகுந்தவளோ? இந்தக் கஷ்டங்களைப் பார்த்து எனக்குத் தூக்கம் வருமோ? வந்த தூக்கத்தைப்போக்க நான் ப்ரயத்னம் பண்ணவில்லை. தூக்கமே வரவில்லை—என்பது லக்ஷ்மணன் கருத்து.

§ இதற்கு வேறுவிதமாயும் அர்த்தம் பண்ணலாம்—கௌஸல்யையும் அரசனும் எனது தாயாரும் இன்று ஒரு ராத்திரியாவது ஜீவித்திருப்பார்களா? ஆனால், நான் அப்படி எண்ணவில்லை" என்பது. இது ஸ்வரஸமான அர்த்தம். மேலே எழுதினது வியாக்யானத்தை அநுஸரித்தது.

கூடச்சென்றான். அப்பொழுது ராமன் ஸுமந்த்ரனைப்பார்த்து "ஸுமந்த்ரா! நீ திரும்பி ராஜாவினிடம் போ. ரதம் வேண்டாம். நாங்கள் காட்டுக்குள் கால்நடையாகப் போகிறோம்" என்று சொன்னான். ஸுமந்த்ரன்—"நீ ஒருவராலும் செய்ய முடியாத வேலையைச் செய்கிறாய். நீ மிகுந்த கீர்த்தியை அடையப்போகிறாய். நாங்களோ பாபிகள். கைகேயிவசமிருக்கப்போகிறோம்" என்று சொல்லிக்கொண்டே கூடச்சென்றான். அப்பொழுது ராமன் வெகுதூரம் வந்துவிட்டதையறிந்து அழுதான். அவனைப் பார்த்து ராமன் "என்னைப்பற்றி ராஜா எப்படித் துக்கப்படாரோ, அப்படிச்செய். கைகேபிக்குப் பிரியத்தைச் செய்ய அவர் எதைச் சொல்லுகிறாரோ, அதைச் செய்யவேண்டியது. 'அயோத்யைவிட்டுக் காட்டில் வஸிக்கிறோம் என்று நானாவது ஸீதையாவது லக்ஷ்மணனாவது துக்கப்படவில்லை. பதினான்கு வர்ஷம் முடிந்தவுடன் திரும்பிவரும் எங்களை நீர் பார்ப்பீர்' என்று நான் சொன்னதாக அவரிடம் சொல்லு. என் தாயாரிடமும் மற்றத் தாயார்களிடமும் கைகேயியிடமும் நாங்கள் ஸௌக்யமாயிருப்பதாகவும், அவர்கள் திருவடிகளில் நமஸ்காரம் பண்ணினதாகவும் சொல்லு. பரதனைச் சீக்கிரம் வருவித்து அவனை ராஜ்யத்தில்ஸ்தாபிக்கும்படி ராஜாவிடம்சொல்லு. 'ராஜாவினிடத்தில் நீ எப்படியிருப்பாயோ, அப்படியே எல்லாத் தாயார்களிடத்திலும் பேதம்பண்ணாமலிரு' என்று பரதனிடத்தில் சொல்" என்று சொன்னான். இதைக் கேட்டு ஸுமந்த்ரன் "நான் வெறும் உபசாரத்துக்காகச் சொல்லவில்லை. அன்புடன் சொல்லுகிறேன். உன்னிடத்தில் எனக்குப் பக்தி உண்டு. நான் சொல்லுவதைப் பொறுத்துக்கொள்ளவேண்டும். உன்னைவிட்டு எப்படி நான் நகரத்துக்குத் திரும்பிப்போவேன். உன்னை விட்டுவிட்டுத் திரும்பிவந்த ரதத்தைப் பார்த்து, அந்த ஊர் ஜனங்களின் மனது வெடிக்குமே. உன்னைவிட்டுப் பிரிந்த ஜனங்களின் வருத்தம் உனக்குத் தெரியுமே. ஆகையால் உன்னை விட்டுப்போக என்னால் முடியாது. வனத்தில் உன்னுடன்கூட இருக்கும்படி உத்தரவு கொடு. நான் சொன்னதைச் செய்யாமல் என்னை விட்டுவிட்டால், நான் அக்னிப்ரவேசம் செய்வேன்" என்று வேண்டினான். ராமன் உனக்கு என்னிடம் இருக்கும் பக்தியை அறிவேன். எதற்காக உன்னைத் திருப்பி அனுப்பு

கிறேன், தெரியுமா? உன்னைப்பார்த்து கைகேயிக்கு நான் காட்டுக்குப் போய்விட்டேன் என்ற நம்பிக்கை உண்டாகும். அவள் ஸந்தோஷப்பட்டு 'ராஜா பொய் சொன்னான்' என்று நினைத்து அவரிடம் அவநம்பிக்கைக் கொள்ளமாட்டாள். நான் சொன்ன ஸமாசாரங்களை அவரவர்களுக்குச் சொல்லு" என்று அவனை ஸமாதானப்படுத்தி, தலைமயிரை ஜடையாகப் பண்ணிக் கொள்ள, ஆலமரத்தின்பாலைக் கொண்டுவரும்படி குஹனிடம் சொன்னான். அதைக் குஹன் கொண்டுவந்து கொடுத்தான். அந்தப் பாலால் ராமன் தன்தலைமயிரையும், லக்ஷ்மணன் தலைமயிரையும் ஜடையாகப் பண்ணினான். ஸுமந்த்ரனுக்கும் குஹனுக்கும் விடைகொடுத்து, ஓடத்தில் ராமனும் மற்றவர்களும் ஏறினார்கள். கங்கையின் நடுவில்போகையில், ஸீதை அஞ்ஜலி பண்ணிக்கொண்டு, கங்கையைப் பார்த்து, "கங்கே! இவன் தசரதராஜன்பிள்ளை. உன்னால் ரக்ஷிக்கப்பட்டுப் பிதாவின் பிரதிஜ்ஞையை நிறைவேற்றி, பதினான்கு வர்ஷம் காட்டிலிருந்து என்னுடனும் தம்பியுடனும் திரும்பிவருவன். அப்போது ப்ராம்மணர்களுக்கு லக்ஷம் கோக்களைத் தானம் பண்ணுகிறேன்; உனக்கும் உன் கரையிலிருக்கும் தேவதைகளுக்கும் தீர்த்தங்களுக்கும் தேவாலயங்களுக்கும் பூஜை செய்கிறேன்" என்று பிரார்த்தித்தாள். பிறகு கங்கையின் தென்கரையைச் சேர்ந்து, ஓடத்தை அனுப்பிவிட்டு, கால்நடையாய் முன்னால் லக்ஷ்மணனும், நடுவில் ஸீதையும், கடைசியில் ராமனுமாகப் போனார்கள். (ஸ-52.)

(58) வத்ஸதேசத்துக்குப்போய் ஸாயங்காலத்தில் ஸந்த்யாவந்தனத்தைச் செய்து, ஒரு மரத்தடியில் உட்கார்ந்து, ராமன் "லக்ஷ்மணா! நம்முடைய தேசத்தைவிட்டபிறகு இதுதான் முதல் ராத்திரி; இதுமுதல் நாம் இருவரும் கவனமாய் ஸீதையை ரக்ஷிக்கவேண்டியது" என்று சொல்லி, "இப்போது மஹாராஜா துக்கத்துடன் படுத்துக்கொண்டிருப்பர். கைகேயியின் இஷ்டம் நிறைவேறினபடியால் அவள் ஸந்தோஷப்பட்டுக்கொண்டிருப்பள். பரதனுக்கு ராஜ்யம் நிலைப்பதற்காக, ராஜா உயிரோடிருக்கும்படி அவள் செய்வள். ராஜா வ்ருத்தர். நான் இங்கே வந்துவிட்டபடியால் அவரை ரக்ஷிக்கிறவனில்லை. காமத்துக்கு உட்பட்டுக் கைகேயிவசத்திலிருக்கிறார். என்ன செய்வர்?

இதைப் பார்க்கும்போது தர்மத்தையும் அர்த்தத்தையும்காட்டிலும் காமம் அதிக பலமுள்ளது என்று தோன்றுகிறது. விசேஷ அறிவில்லாதவனுயிருந்தாலும், எந்த மனிதன் ஸ்திரீக்கு வசப்பட்டு, என்னைப்போல் அபிப்ராயத்தை ஒத்து நடக்கிற பிரியமான பிள்ளையை விட்டுவிடுவன்? பரதன் கோஸல தேசத்தை ஒருவனுக ஆண்டுகொண்டு பார்யையுடன் ஸுகமாக இருக்கட்டும். கைகேயி பதியின் சனுகையை அடைந்த கொழுப்பினுல் புத்தி கெட்டு என் நிமித்தம் கௌஸல்யையையும் ஸுமித்ரையையும் பாதிக்காமலிருப்பாளா? எனக்காக ஸுமித்ரை துக்கத்தை அடையவேண்டாம். * நாளைக்காலையில் நீ அயோத்திக்குத் திரும்பிப் போ. நான் ஒண்டியாக ஸீதையுடன் காட்டுக்குப் போகிறேன். கௌஸல்யையைக் காப்பாற்ற நீ அவளுக்கு ரக்ஷகனுயிரு" என்று சொல்லி, தன்னைவிட்டுக் கௌஸல்யை பிரிந்துத் துக்கப்படுவதைப்பற்றிப் பலவிதமாய் வருத்தப்பட்டான். தான் ஒருவனே அயோத்யையையும் பூமியையும் பாணங்களால் வசப்படுத்திக்கொள்ளமுடியும் என்றும், ஆனுல், அதர்மத்துக்கும் பரலோகத்துக்கும் பயப்பட்டுத் தான் அப்படிச் செய்து அபிஷேகம் செய்துகொள்ளவில்லையென்றும் சொன்னுன். இதைக் கேட்டு லக்ஷ்மணன், "நீ இப்படிப் பரிதாபப்படுவது தகுந்ததன்று. ஸீதைக்கும் எனக்கும் துக்கம் உண்டாகிறது. உன்னைவிட்டு ஸீதை எப்படிச் சிறிதுகாலம்கூட இருக்கமாட்டாளோ, அப்படியே நானும் உன்னைவிட்டுச் சிறிதுகாலம்கூட இருப்பதுமுடியாது. உன்னைவிட்டுப் பிரிந்து நான் தகப்பனுரையாவது, சத்ருக்நனையாவது, ஸுமித்ரையையாவது பார்க்க ஆசைப்படவில்லை. ஸ்வர்க்கத்தையும் விரும்பமாட்டேன்" என்று பதில் சொன்னுன். (ஸ 53.)

(59) அவர்கள் மூன்றுபேரும் மறுநாள் காலையில் கங்கையும் யமுனையும் சேரும் இடத்துக்கு புறப்பட்டுப் போனுர்கள். ஸாயங்காலத்தில் அந்த இடத்தில்போய்ச்சேர்ந்து, அங்கிருந்த

---

*லக்ஷ்மணனைத் திரும்பிப் போகச்சொல்லுவதற்காக, தசரதனையும் கைகேயியையும்பற்றி இப்படி இழிவாகப்பேசினது. ஜீவன் தன்னிடத்தில் நிலையான பக்தியுள்ளவனுயிருக்கிறுனு என்று அறிவதற்கு, பகவான் ஜீவனைப் பலவிதமாய்ப் பரீக்ஷிப்பதுண்டு.

பரத்வாஜரின் ஆச்ரமத்துக்குச் சென்று, அவருக்கு நமஸ்காரம் செய்து, அவர் செய்த ஆதித்யத்தைப் பெற்றுக்கொண்டு, அன்று ராத்திரி அவர்கள் அங்கு இருந்தார்கள். ருஷி அவ்விடத்திலேயே இருக்கும்படி சொல்ல, ராமன், "இது தேசத்துக்குக் கிட்ட இருக்கிறது. என்னைப் பார்க்க ஜனங்கள் அடிக்கடி வருவார்கள். ஆகையால், இங்கே இருப்பதை நான் விரும்பவில்லை. ஏகாந்தமாயிருக்கும் ஓர் இடத்தைக் காட்டவேண்டும்" என்று பிரார்த்திக்க, அவரும் "இங்கிருந்து பத்து க்ரோசதூரத்தில் சித்ரகூடம் என்கிற மலையிருக்கிறது. அது ஸுகமான இடம். அங்கு இரு" என்று சொன்னார். (ஸ-54.) மறுநாள் காலையில் சித்ரக்கூடத்துக்குப் போக வழியைச் சொல்லி, ருஷி ராமனை வழிகொண்டுவிட்டு ஆச்ரமத்துக்குத் திரும்பிவந்தார். ராமனும் லக்ஷ்மணனும் அங்கிருந்த மரக்கட்டைகளை ஒன்றாகக் கட்டி ஓடமாகச்செய்து, அதைக்கொண்டு யமுனையைத் தாண்டி, அதன் தென்கரையோடு மேற்குமுகமாய் ஓர் ஆலமரத்தடிக்குச் சென்றார்கள். அங்கிருந்து புறப்பட்டு ஸீதைக்கு வேண்டிய புஷ்பங்களைப் பறித்துக் கொடுத்துக்கொண்டே நடந்தனர். ஸீதை யமுனையைத் தாண்டும்போதும், ஆலமரத்தை அடைந்தபோதும், முன்பு கங்கையிடம் ப்ரார்த்தித்ததுபோல் ப்ரார்த்தித்தாள். (ஸ-55.) மறுநாள் காலையில் யமுனையை விட்டுவிட்டு சித்ரகூட மலைக்குப்போய், அங்கிருந்த வால்மீகி மஹர்ஷிக்கு நமஸ்காரம் செய்து, லக்ஷ்மணனால் கட்டப்பட்ட பர்ணசாலையில் நல்லவேளையில் ப்ரவேசித்து, அதில் எல்லாரும் ஸுகமாயிருந்தார்கள்; பட்டணத்தைவிட்டு வந்த துக்கத்தையும் மறந்தார்கள். (ஸ-56.)

(60) ஸுமந்த்ரன், ராமன் சித்ரக்கூடத்துக்குப் போய்ச் சேர்ந்ததைக் குஹன்வேலைக்காரர்களாலே, அறிந்து, அயோத்யைக்குத் திரும்பினான். ஸாயங்காலத்தில் அவ்விடம்வந்து சேர்ந்து, நகரம் சோபையையிழந்திருப்பதைப் பார்த்தான். அங்கு ஜனங்கள் கூட்டம் கூட்டமாய் வந்து, "ராமன் எங்கே?" என்று கேட்க, "அவனைக் கங்கைக்கரையில் விட்டுவிட்டு அவன் உத்தரவுப்படி திரும்பிவந்தேன்" என்று சொல்ல, ஜனங்கள் மிகுந்த வருத்தத்தை அடைந்தார்கள். அவர்களுடைய பலவிதமான புலம்பல்களைக் கேட்டுக்கொண்டு, ஸுமந்த்ரன் அந்தப்புரத்துக்குச்

சென்றான். அங்கேயும் ராஜமஹிஷிகளுடைய புலம்பல்களையும் கேட்டுக்கொண்டு, ராஜாவினிடம் போனான். அவனிடம் ராமன் சொன்னபடி சொன்னான். அதைக்கேட்டு ராஜா அறிவையிழந்து பூமியில் விழுந்தான். அவனை ஸுமித்ரையும் கௌஸல்யையும் தூக்கி உட்காரவைத்தார்கள். தசரதனைப் பார்த்து, "வனத்திலிருந்து திரும்பிவந்திருக்கிற தூதனைப் பார்த்து ஏன் பேசவில்லை? இந்த அக்ரமத்தைச் செய்து வெட்கப்படுகிறீர்; எழுந்திரும்; உமக்கு க்ஷேமம் உண்டாகட்டும்; சோகத்தை அடையாதேயும்; கைகேயியினிடம் பயந்து நீர் பதில் பேசவில்லையா? அவள் இங்கே இல்லை; பயமில்லாமல் பேசலாம்" என்று சொல்லிக்கொண்டே மூர்ச்சையடைந்து, கௌஸல்யை கீழே விழுந்தாள். இதைப் பார்த்து அந்தப்புரமும் நகரமும் முழுவதும் ஒரே அழுகையாயிருந்தது. (ஸ-57.) தசரதன் நினைவு திரும்பிவந்தபிறகு, ஸுமந்த்ரனைக் கூப்பிட்டு, "ராமனும் லக்ஷ்மணனும் ஸீதையும் காட்டில் எப்படியிருக்கிறார்கள்? என்ன சொன்னார்கள்?" என்று கேட்க, ஸுமந்த்ரன், "ராஜாவிடமும் அந்தப்புரத்திலும் தலையால் வந்தனம் செய்கிறேன் என்று சொல்லு. என் தாயார் கௌஸல்யைக்கு நாங்கள் க்ஷேமமாயிருப்பதையும் வந்தனம் செய்வதையும் சொல்லு. மேலும் என் தாயாரிடம் 'எப்போதும் தர்மத்தையும் அக்னிகார்யங்களையும் செய்துகொண்டிரு. தேவர்களுக்குச் செய்வதைப்போல் என் தகப்பனாருடைய திருவடிகளில் சுச்ருஷை செய். உயர்ந்த குலத்தில் பிறந்தவள் என்றும், மூத்தபத்தினி என்றும் கர்வத்தையடையாமல் மற்ற மஹிஷிகளிடத்தில் ப்ரீதியுள்ளவளாயிரு. ராஜாவினிடத்தில்போல கைகேயிடத்திலுமிரு. பிள்ளையான பரதனிடத்தில் ராஜாவினிடத்தில்போல் இருக்கவேண்டியது. ராஜாக்கள் தனத்தால்தான் பெரியவர்கள்; வயதாலே அல்ல' என்று சொல்லு. பரதனிடத்தில் க்ஷேமத்தை விசாரித்ததாகச் சொல்லு. மேலும், 'எல்லாத் தாயார்களிடத்திலும் ஒரே மாதிரியிரு. நீ யுவராஜாவாக இருந்து ராஜாவுக்குக் கீழ்ப்படிந்து இரு. அவர் வயதானவர் என்று அவரை அடக்கிவிடாமல், அவர் ஆஜ்ஞைப்படி நட' என்று சொல்லு என்று சொன்னான். லக்ஷ்மணனோ, மிகவும் கோபத்துடன், 'எந்தக் குற்றத்துக்காக ராமன் தேசத்தைவிட்டு வெளியே அனுப்பப்பட்டான். கைகேயி

சொன்னதைக்கேட்டு அவர் அகாரியம் செய்யவேண்டியதாயிற்று. அதனால், நாங்கள் கஷ்டப்படுகிறோம். தசரதன் எனக்குத் தகப்பன் அன்று; எனக்குத் தகப்பனும் கூடப்பிறந்தவனும் பந்துவும் ஸ்வாமியும் ராமன்தான். இந்தமாதிரி கார்யத்தைச் செய்துவிட்டு, அவர் ராஜாவாக இருக்கத்தகுமா?' என்று சொன்னான். ஸீதை அழுதுகொண்டு ஒன்றும் சொல்லவில்லை'' என்று ராமன் முதலானவர்கள் சொன்னதைத் தெரிவித்தான். (ஸ-58.)

(61) ஸுமந்த்ரன் மறுபடியும் ராமனைவிட்டுப் பிரிந்த துக்கத்தாலே தேசமும் நகரமும், பட்டபாட்டைத் தெரிவித்தான். "ராமன் ஒருவேளை கூப்பிடுவானோ?" என்கிற ஆசையாலே குஹனோடு * அநேகநாள் இருந்தேன். ராமனைக் காட்டுக்கு அனுப்பினபிறகு ரதத்தின் குதிரைகள் பெருமூச்சுவிட்டுக் கொண்டு திரும்பிவர இஷ்டமில்லாமல் இருந்தன. உம் தேசம் முழுவதும் துக்கத்தை அடைந்திருந்தது. மரங்களும் புஷ்பங்களும் தளிர்களும் மொட்டுக்களும் வாட்டம் அடைந்தன. ஆறுகளிலும் குளங்களிலும் ஜலம் § கொதித்தது. பாம்புகளோ மற்றப் பிராணிகளோ ஸஞ்சாரம் பண்ணவில்லை. வனம் முழுவதும் நிச்சப்தமாயிருந்தது. நகரத்துக்கு வந்த என்னைப் பார்த்து ஒருவனும் ஸந்தோஷப்படவில்லை. ராஜமார்க்கத்தில் எல்லாரும் கண்ணும் கண்ணீருமாயிருந்தார்கள். ஸ்திரீகள் மாளிகைகளிலிருந்து ஹாஹா என்று கதறினார்கள். துக்கப்படும் விஷயத்தில் பட்டணத்து ஜனங்களுள் வேண்டியவர்கள், வேண்டாதவர்கள், உதாஸீநர்கள் என்ற ஒருவித வித்யாஸத்தையும் நான் காணவில்லை. அயோத்யையும் பிள்ளையைவிட்டுப் பிரிந்த

* ஸுமந்த்ரன் இரண்டுநாள்களே குஹனுடன் இருந்தது. ராமனை விட்டுப் பிரிந்தகாலம் நெடுங்காலமாகத் தோன்றியதால், "அநேகநாள்" என்று சொன்னான்.

§ ஸூரியகிரணத்தாலே ஜலம் மேலே சுடும்; கீழே குளிர்ந்திருக்கும். ராமனைப்பிரிந்த வியஸநத்தாலே முழுவதும் கொதித்தது. ராமனைப்பிரிந்த துக்கத்தாலே உடம்பு கொதித்து ஜலத்தில் முழுகி தாபத்தைப்போக்கலாமென்று ஜனங்கள் பார்த்தார்கள். ஜலமும் கொதித்ததினால் அதுவும் முடியவில்லை.

கௌஸல்யையைப்போல இருப்பதாகத் தோன்றுகிறது" என்று. அதைக்கேட்டு தசரதன், நான் கைகேயி வார்த்தையைக்கேட்டு, வேண்டியவர்களுடனும், வயதுசென்றவர்களுடனும், மந்திரிகளுடனும் ஆலோசியாமல் இதைச் செய்துவிட்டேன். ராமனை விட்டுச் சிறிதுநேரமும் ஜீவித்திருப்பது முடியாது. ஆகையால், நான் உத்தரவு பண்ணினதாகச் சொல்லி, அவனை அழைத்துவா, அல்லது அவன் வெகுதூரம் போயிருக்கக்கூடுமாகையால், என்னை ரதத்தில் ஏற்றிக்கொண்டு அவனிடம் கொண்டுபோய்விடு" என்று சொல்லி, "ஓ! ராமா! ஓ! லக்ஷ்மணா! ஓ! ஸீதை!" என்று கதறிக்கொண்டு கீழேவிழுந்து மூர்ச்சையடைந்தான். (ஸ-59) கௌஸல்யையும், "ஸுமந்த்ர! எங்கே ராமனும் லக்ஷ்மணனும் ஸீதையும் இருக்கிறார்களோ, அங்கே என்னைக் கொண்டுபோய் விடு. ரதத்தைத் திருப்பு. அங்கே போகாவிட்டால் நான் யமன்வீட்டுக்குப் போகவேண்டியதுதான்" என்று சொல்ல, அவளுக்கு ஸுமந்த்ரன் ஆறுதலைச்சொன்னான்—"துக்கத்தையும், மோஹத்தையும், கலக்கத்தையும் விட்டுவிடு. மனவருத்தமில்லாமல் ராமன் காட்டில் இருக்கப்போகிறான். லக்ஷ்மணன் அவனுக்கு சுச்ருஷை பண்ணிக்கொண்டிருக்கிறான். ஸீதையும் ராமனிடத்தில் மனதைவைத்தவளாய் காட்டிலும் வீட்டிலிருப்பது போல் பயமில்லாமல் இருக்கிறாள். அவளிடத்தில் கொஞ்சங்கூட தைன்யமில்லை. வனவாஸத்தின் கஷ்டங்களில் பழக்கமுள்ளவள் போலிருக்கிறாள். அவள் மனது ராமனிடத்தில் இருக்கிறது. அவள் ஜீவித்திருப்பதும் அவனுக்கு அதீனமாயிருக்கிறது. ஆகையால், அவனைவிட்டுப்பிரிந்தால், அயோத்யையுங்கூட அவளுக்குக் காடாகத் தோன்றும். ராமன்பலமிருப்பதாலே யானையையோ ஸிம்மத்தையோ புலியையோ பார்த்தும் அவள் பயப்படுவதில்லை" என்று. இதனால் ஆறுதல் உண்டாகாமல் கௌஸல்யை, "பிரியமானபிள்ளையே! ராகவா!" என்று கதறிக்கொண்டிருந்தாள். (ஸ-60.)

(62) கௌஸல்யை தசரதனைப் பார்த்து, "நல்லபிள்ளையைக் காட்டுக்கு அனுப்பிவிட்டீரே. ஸுகமாயிருக்கத்தகுந்தவனன்றோ அவன். எப்படிக் காட்டிலிருப்பன்? அவன் முகத்தை எப்போது பார்க்கப்போகிறேன்? பதினான்குவர்ஷம் சீக்கிரம் போய்விடும் என்று சொல்லுகிறீரோ. பதினைந்தாவது வர்ஷம்

அவன் திரும்பிவந்தாலும், பரதனால் ஆளப்பட்ட ராஜ்யத்தை அவன் ஒப்புக்கொள்வனோ? வேறு மிருகத்தாலே கொண்டுவரப் பட்ட ஆகாரத்தைப் புலி தின்னுமா? நீர் அவன் விஷயத்தில் செய்திருக்கிற அகார்யத்தைப் பொறுக்கமாட்டான். அவனை ஒருவரும் எதிர்க்கமுடியாது. ஆனபோதிலும், தர்மத்தை இந்த உலகத்தில் ஸ்தாபிப்பதற்காகவே, பித்ருவாக்யபரிபாலனம் என்கிற தர்மத்தை அநுஷ்டித்துக் காட்டுகிறான். மீன், தன் குஞ்சுகளைத் தின்னுவதுபோல, அவனுக்குக் கெடுதி செய்திருக் கிறீர். ஸ்திரீகளுக்கு முதலில் பர்த்தா கதி, இரண்டாவது பிள்ளை, கடைசியில் பந்துக்கள். ஸபத்னிவசத்திலிருக்கும் நீர் எனக்குக் கதியன்று. வனத்துக்குப் பிள்ளையிடம் போகலாம் என்றால், உம்மைவிட்டுப் போகமுடியவில்லை" என்று கடுமையா கப் பேசினாள். இதைக்கேட்டும் தான் செய்ததை நினைத்துக் கொண்டும் தசரதன் மூர்ச்சை அடைந்தான். (ஸ-61.) நெடு நேரம் சென்றபின் ராஜாவுக்கு நினைவு திரும்பிவந்தது. அப் போது பக்கத்தில் கௌஸல்யை இருப்பதைப் பார்த்தான். முன்னால் ஒரு ருஷி தன்னைச் சபித்தது நினைவுக்கு வந்தது. அதனால் பிள்ளையைவிட்டுப் பிரிந்த துக்கம் இரட்டித்தது. அஞ் ஜலிபண்ணிக்கொண்டு கௌஸல்யையைப் பார்த்து, "நீ விரோதி களிடமும் ப்ரீதியுள்ளவள்; இரக்கமுள்ளவள்; தர்மத்தைப் பின்பற்றிநிற்கும் ஸ்திரீக்குத் தன் பர்த்தா குணமுள்ளவனோ, குணமில்லாதவனோ, எப்படியிருந்தாலும் தெய்வம்; உனக்குத் துக்கம் இருப்பது உண்மையே; ஆனபோதிலும், இப்படிக் கடுமையாய்ப் பேசுவது உனக்குத் தகாது" என்று சொன்னான். இதைக்கேட்டு, கௌஸல்யை அஞ்ஜலிபண்ணிக்கொண்டு, "உம் முடைய மனது தெளியவேண்டும்; தலையால் வணங்கி வேண்டு கிறேன்; நீர் என்னை வேண்டுவது, என்னைக் கொல்லுவதுபோல் இருக்கிறது; இப்படி என்னைக் கொல்லுவது தகாது; பர்த்தா எந்த ஸ்திரீயிடம் நல்லவார்த்தை சொல்லுகிறானோ, அவள் ஸ்திரீ அன்று; நான் தர்மத்தை அறிவேன்; நீர் சொன்னபடி நடப்ப வர் என்றும் தெரியும்; பிள்ளையைப் பிரிந்த துக்கத்தாலே ஏதோ சொன்னேன்.

ஶோகோ நாஶயதே தைர்யம் ஶோகோ நாஶயதே ஶ்ருதம்।
ஶோகோ நாஶயதே ஸர்வம் நாஸ்தி ஶோகஸமோ ரிபு:॥

(ஸ-62–15.) சோகம் தைரியத்தையும், படிப்பையும் அழித்துவிடுகிறது; தனித்தனியாய் சொல்லுவானேன்; துக்கம் எல்லாவற்றையும் நாசம் செய்கிறது; அதற்கு ஸமமான சத்ரு கிடையாது; சத்ரு கையால் அடிபடுவதைப் பொறுத்தாலும் பொறுக்கலாம். சோகம் எவ்வளவு சிறிதானாலும் அதைப் பொறுக்கமுடியாது. ராமன் காட்டுக்குப்போய் ஐந்து ராத்திரிகள் சென்றன. அவைகள் எனக்கு ஐந்து வர்ஷங்களாயிருக்கின்றன. அவனை நினைக்கும்போது சோகம் விருத்தி அடைகிறது" என்று சொன்னாள். அப்போது ஸூரியன் அஸ்தமித்தான். துக்கத்துக்கு வசப்பட்ட ராஜாவுக்கு தூக்கம் வந்தது. (ஸ-62.)

(63) நடுராத்திரியில் தசரதன் விழித்துக்கொண்டு, தான் முன் செய்த கெட்டகார்யத்தை நினைத்து, கௌஸல்யையைப் பார்த்து, "எவன் நல்லதையோ கெட்டதையோ செய்கிறானோ, அவன் அதன் பலனையே அடைகிறான். கார்யங்களை ஆரம்பிக்கும்போது அவைகளும் அவைகளின் பலன்களும் பெரியவைகளோ, சிறியவைகளோ என்று எவன் பார்க்கிறதில்லையோ, அவனை அறியாதவன் என்றே சொல்லவேண்டும்.* பலன் இன்னது என்று அறியாமல் கர்மத்தைச் செய்கிறவன் பலனை அடையும்காலத்தில் துக்கப்படுவன். புரசமரத்தின் புஷ்பம் நன்றாய் இருப்பதைப் பார்த்து, அதன் பழமும் நன்றாயிருக்கும் என்று எண்ணி, மாமரத்தை வெட்டிவிட்டு புரசமரத்தை வளர்ப்பவன் போல் நான் இருக்கிறேன். கைகேயிக்குப் பிரியத்தைச் செய்ய, ராமன் அபிஷேகத்தை நிறுத்திவிட்டு, அந்தக் குற்றத்தின் பலனை ராமனைவிட்டுப் பிரிந்து இப்போது அநுபவிக்கிறேன். இதை நினைக்கும்போது நான் முன்பு பால்யத்தில் அறியாமல் ஒரு ருஷியின் பிள்ளையைக் கொன்று § சாபம் அடைந்தது

* மேலே வருகிற கதையைப் பார்க்க. ராஜா வேட்டையாடப் போனதாலே, அவனுக்கு உண்டான ஸந்தோஷம அல்பம். ருஷி பிள்ளையைக் கொன்று அவன் தகப்பனால் சபிக்கப்பட்டு, இப்போது பிள்ளையைவிட்டுப் பிரிந்து படும் துக்கம் பெரிது. இவைகளைத் தான் கவனிக்காமையால், தனக்கு அப்போது அறிவில்லையென்று தசரதன் நினைத்தான். இதுதான் அவன் கருத்து. இது வியாக்யானப்படி.

§ சாபம் வந்த விதத்தை அநுபந்தத்தில் பார்க்க.

என் நினைவுக்கு வருகிறது. அந்தக் கர்மத்தின் பலன் இப்போது வந்திருக்கிறது. இப்போது என் பிராணன் போகப்போகிறது. நீ என் கண்களுக்குத் தெரியவில்லையே! என்னை நன்றாய்த் தடவிக்கொடு. என் நினைவு தப்புகிறது. யமனுடைய வேலைக் காரர்கள் 'சீக்கிரம் வா' என்று கூப்பிடுகிறார்கள். பிராணன் போகிறகாலத்தில் ராமனைப் பார்க்கவில்லையே! இதைக்காட்டி லும் அதிக துக்கம் என்ன இருக்கிறது? பதினைந்தாவது வர்ஷத் தில் எவர்கள் ராமனைப் பார்ப்பார்களோ, அவர்கள் மனிதர்கள் அல்லர். அவர்கள் தேவர்கள். சப்தத்தையும் ஸ்பர்சத்தையும் ரஸத்தையும் நான் அறியமுடியவில்லை. மனது சோர்வை அடை யவே, இந்திரியங்கள் எல்லாம் சோர்வை அடைகின்றன" என்று சொல்லி, 'ஹா! ராமா!' என்று கதறிக்கொண்டு தசரதன் பிரா ணனை விட்டான். (ஸ-64.) விடியற்காலத்தில் வழக்கம்போல் ராஜாவை எழுப்ப ஸ்தோத்ரம் பண்ணுகிறவர்களும் பாடுகிறவர் களும் வந்து, ஸ்தோத்ரம்பண்ணிப் பாடினார்கள். ராஜா எழுந் திருக்கவில்லை. அங்கிருந்த ஸ்திரீகள் அவனைத் தட்டி எழுப்பி னார்கள். பிராணன் இருப்பதற்கு அடையாளம் ஒன்றையும் காணாமல் அழ ஆரம்பித்தார்கள். அழுகைக்குரலைக் கேட்டுக் கௌஸல்யையும் ஸுமித்ரையும் விழித்துக்கொண்டு 'ஹா! நாதா!' என்று கீழே விழுந்து கதறினார்கள். அந்தப்புரம் முழுவதும் ஒரே அழுகையாய் இருந்தது. (ஸ-65.) கௌஸல்யை இறந்த வனுடைய தலையை மடியில் வைத்துக்கொண்டு, அங்கே வந்த கைகேயியைப் பார்த்து—" கைகேயி! உன் ஆசை நிறைவேறிற்று. ராஜ்யத்தை ஓர் இடையூறுமில்லாமல் அநுபவி. க்ரூரமானவளே! துஷ்டநடக்கையுள்ளவளே! ராமன் என்னைவிட்டுப் போய்விட் டான். பர்த்தாவும் ஸ்வர்க்கம் அடைந்தார். நான் உயிரோடு இருக்கமுடியாது. கைகேயியைத்தவிர எந்த ஸ்திரீ தனக்குத் தெய்வமான பர்த்தாவைவிட்டு உயிரோடிருக்க விரும்புவள்? பொருளில் ஆசையுள்ளவர்கள் தோஷங்களை அறியார்கள். கூனி காரணமாக ரகுகுலம் நாசத்தை அடைந்துவிட்டது" என்று சொல்லி, அவளை நிந்தித்து, "பர்த்தாவின் இந்த சரீரத்தைக் கட்டிக்கொண்டே நானும் நெருப்பில் விழுவேன்" என்று சொன்னாள். மந்திரிகள் வந்து பிணத்தைவிட்டு அவளைப்பிரித்து, மருந்தெண்ணெக் கொப்பரையில் ராஜாவின் உடம்பைப்போட்டு,

மேமேல செய்யவேண்டிய வேலைகளைச் செய்தார்கள். பிள்ளையில்லாமல் ராஜாவுக்கு ஸம்ஸ்காரம் பண்ணக்கூடாது என்று எண்ணி, சவத்தை இரக்ஷித்துவந்தார்கள். பட்டணத்து ஜனங்கள் கைகேயியை நிந்தித்துக்கொண்டு துக்கப்பட்டுக்கொண்டிருந்தார்கள். நகரமும் தன் சோபையை இழந்தது. (ஸ-66.)

(64) மறுநாள் காலையில் மார்க்கண்டேயர் முதலான ருஷிகள் வஸிஷ்டரிடம் வந்து, ராஜா இல்லாத ராஜ்யத்தில் உண்டாகும் கெடுதல்களை வர்ணித்து, ராஜகுமாரன் ஒருவனை ராஜாவாகப் பண்ணவேண்டும் என்று வேண்டினார்கள். (ஸ-67.) இதைக்கேட்டு வஸிஷ்டர் சீக்கிரமாகப் போகக்கூடிய தூதர்களை அழைத்து, "சீக்கிரம் பரதனிடம்போய், நானும் மந்திரிகளும் க்ஷேமத்தை விசாரித்ததாகச் சொல்லி, தாமதமில்லாமல் சீக்கிரம் செய்யவேண்டிய வேலை வந்திருக்கிறது. உடனே வா என்று சொல்லுங்கள். ராமன் தேசத்தைவிட்டுப் போனதையும், ராஜா இறந்ததையும் சொல்லவேண்டாம்" என்று கட்டளையிட்டார். தூதர்களும் அயோத்யைவிட்டு மேற்குமுகமாய்ப் புறப்பட்டு, அபரதாலம், ப்ரலம்பம் என்கிற மலைகளின் நடுவில் வடக்குமுகமாய்க் கொஞ்சதூரம்போய், மாலினி என்கிற நதியைத் தாண்டி, மறுபடியும் மேற்குமுகமாய்ப் போய், ஹஸ்தினாபுரத்தில் கங்கையைத் தாண்டி, குருஜாங்கலதேசத்தின் வழியாக பாஞ்சாலதேசத்துக்குப்போய், சரதண்டை என்கிற நதியின் கரையிலிருந்த நிகூலம் என்கிற மரத்தை ப்ரதக்ஷிணம்செய்து, குலிங்கம் என்கிற பட்டணத்தை அடைந்தார்கள். அங்கிருந்து, அபிகாலம் என்கிற க்ராமத்துக்குப்போய், இக்ஷுமதி என்கிற நதியைத் தாண்டினார்கள். பாஹ்லீகதேசத்தின் நடுவழியாகப்போய், ஸுதாமா என்கிற பர்வதத்துக்குச் சென்று, கிரிவ்ரஜம் என்று வேறு பெயருள்ள கேகயதேசத்துக்கு ராத்திரியில் போய்ச்சேர்ந்தார்கள். (ஸ-68.) அன்றுராத்திரி பரதன் கெட்டஸ்வப்நத்தைக் கண்டு துக்கப்பட, அவனுக்கு வேண்டியவர்கள் அந்தத் துக்கத்தைப்போக்க பல முயற்சிகளைச் செய்துகொண்டிருந்தார்கள். அவைகளால் பரதன் ஆறுதலை அடையவில்லை. தான் கண்ட ஸ்வப்நத்தை அவர்களுக்குச் சொன்னான்—"என் தகப்பனார் உடம்பில் அழுக்குப்படிந்து தலைமயிர் தொங்கிக்கொண்டு மலை உச்சியிலிருந்து கோமயம் நிறைந்த மடுவில் விழுவதையும், அதில்

மிதந்துகொண்டு இரண்டு கைகளால் எண்ணையைச் சாப்பிடுவதையும், அடிக்கடி சிரித்துக்கொண்டு எள்ளுடன் கலந்த அன்னத்தைச் சாப்பிட்டுக்கொண்டு உடம்பு முழுவதும் எண்ணையைப் பூசிக்கொண்டு எண்ணையில் முழுகுவதையும், ஒரு ஸ்திரீயால் இழுக்கப்பட்டு கழுதைபூட்டிய ரதத்தில் ஏறிக்கொண்டு தெற்குத் திக்கில் போவதையும் நான் ஸ்வப்னத்தில் பார்த்தேன். இன்னும் பல துர்நிமித்தங்களையும் பார்த்தேன். ராஜாவுக்கோ, ராமனுக்கோ, லக்ஷ்மணனுக்கோ மரணம் வரும் என்று பயப்படுகிறேன்" என்று. (ஸ-69.) இப்படி ஸ்வப்நத்தைச் சொல்லிக்கொண்டிருக்கையில், தூதர்கள் அவனிடம் வந்து வஸிஷ்டர் சொன்னதைத் தெரிவித்தார்கள். அவனும் பாட்டனார் அம்மான் முதலானவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு சத்ருக்னனுடன் அயோத்யைக்குப் புறப்பட்டான். (ஸ-70.) பரதன் வழியில் ஏழு ராத்திரி இருந்து எட்டாவதுநாள் காலையில் அயோத்யைக்கு வந்துசேர்ந்தான். நகரம் வழக்கம்போல் இல்லாமல் சோபையற்றிருப்பதைப் பார்த்து, மிகுந்த கவலையுடனும் பயத்துடனும் ராஜக்ருஹத்துக்குள் ப்ரவேசித்தான். (ஸ-71.)

(65) ராஜகிருஹத்தில் ராஜாவைக் காணாமையால் பரதன் தாயார் கிருஹத்துக்குப்போய் அவளுக்கு நமஸ்காரம்செய்து, தகப்பனார் எங்கே என்று அவளைக் கேட்டான். அவள், "எல்லா ப்ராணிகளும் முடிவில் எந்தக் கதியை அடையுமோ, அந்தக் கதியை உன் பிதா அடைந்தார்" என்று சொன்னாள். இதைக் கேட்டுப் பரதன் கீழே விழுந்து துக்கத்தாலே புலம்பினான். அவனைப் பார்த்து கைகேயி, "எழுந்திரு எழுந்திரு, ராஜாவே! ஏன் பூமியில் கிடக்கிறாய்? உன்னைப்போன்றவர்கள் இப்படித் துக்கப்படுவதில்லை" என்று சொன்னாள். பரதன் பூமியில் புரண்டு துக்கத்தில் முழுகித் தாயாருக்குப் பதில் சொன்னான்— "நான், தகப்பனார் ராமனுக்கு அபிஷேகம் பண்ணப்போகிறார், அல்லது யஜ்ஞம் செய்யப்போகிறார் என்று நினைத்துக்கொண்டு ஸந்தோஷமாய்ப் புறப்பட்டுவந்தேன். இது வேறாக இருக்கிறதே. எப்போதும் எனக்குப் பிரியம் செய்வதில் ஆசையுள்ளவரான ராஜாவைப் பாராமல் என் மனது வெடிக்கிறது. அவர் என்ன வியாதியால் இறந்தார்? அவருக்கு ஸம்ஸ்காரம்பண்ணின ராமன் முதலானவர்கள் தன்யர்கள். நான் வந்ததை ராஜா

அறிவதில்லையே. அறிந்தால் என்னை உச்சிமுகருவரே. தூளி படிந்த என் உடம்பை அவர் கையால் அடிக்கடித் துடைப்பரே. அந்தக் கை எங்கே? எந்த ராமன் எனக்குக் கூடப்பிறந்தவனே, தகப்பனே, பந்துவோ, எவனுக்கு நான் வேலைக்காரனே, அந்த ராமனிடம் நான் வந்திருப்பதைச் சீக்கிரம் சொல்லு. தர்மம் தெரிந்தவனுக்குத் தமையன் பிதா. அவன் திருவடிகளைப் பிடித்துக்கொள்ளவேண்டும். இப்போது அவன்தான் எனக்குக் கதி. என் தகப்பனர் கடைசியில் என்ன ஸமாசாரம் சொன்னர்" என்று கேட்டான். கைகேயி, "ஹா! ராமா! ஹா! ஸீதாய்! ஹா! லக்ஷ்மணா!" என்று புலம்பிக்கொண்டும், "திரும்பிவந்த ராமனையும் ஸீதையையும் லக்ஷ்மணனையும் எவர்கள் பார்க்கிறார்களோ, அவர்கள் க்ருதார்த்தர்கள்" என்று சொல்லிக்கொண்டும் உன் தகப்பனர் பரலோகம் அடைந்தார்" என்று பதில் சொன்னாள். இந்த இரண்டாவது அப்ரியத்தைக் கேட்டுத் துக்கப்பட்டு, "அவர்கள் எங்கே போனர்கள்" என்று பரதன் கேட்க, கைகேயி, "மரவுரியை உடுத்துக்கொண்டு ராமனும் லக்ஷ்மணனும் ஸீதையுடன் தண்டகாரண்யத்துக்குப் போயிருக்கிறார்கள்" என்று பதில் சொன்னாள். இதைக்கேட்டு பரதன் ராமனுக்கு நடத்தைப்பிசகு ஏதாவது நேர்ந்ததோ? என்று நடுங்கி, "ராமன் காட்டுக்குப் போகும்படி என்ன பாபம் பண்ணினன்? ப்ராம்மணனுடைய தனத்தை அபஹரித்தானே? எவனையாவது ஹிம்ஸித்தானே? அல்லது அயலாருடைய மனைவியிடம் அபிமானம் வைத்தானே?" என்று கேட்க, கைகேயி, "ராமன் அந்தக் குற்றங்கள் ஒன்றையும் செய்யவில்லை. ராமனுக்கு அபிஷேகம் பண்ணப்போவதாகத் தெரிந்தது. இரண்டு வரன்களை எனக்கு ராஜா முன்னால் கொடுத்திருந்ததில், ஒரு வரத்தாலே ராமன் காட்டுக்குப் போவதையும், மற்றொரு வரத்தாலே உனக்கு அபிஷேகம் செய்வதையும் கேட்டேன். அவர் சொன்னபடி செய்கிறவராகையால், ராமனைக் காட்டுக்கு அனுப்பி, பிரியமான பிள்ளையைவிட்டுப் பிரிந்ததினலே துக்கப்பட்டு இறந்தார். இப்போது நீ ராஜாவாக இருப்பதை ஏற்றுக்கொள். உனக்காகவே இவையெல்லாவற்றையும் நான் செய்தேன். சோகத்தையும் தாபத்தையும் விட்டுவிட்டு, தைர்யத்தைக் கைக்கொள். வஸிஷ்டர் முதலானவர்களைக்கொண்டு, ராஜாவுக்கு ஸம்ஸ்காரம்

பண்ணிவிட்டு நீ அபிஷேகம் பண்ணிக்கொள்'' என்று சொன்ணுள். அவள் சபலமுள்ளவள். ஸ்திரீ ஸ்வபாவத்தைக் காட்டிப் பிரியமில்லாததைப் பிரியமாக எண்ணிக்கொண்டு இப்படிப் பேசிஞள். (ஸ-72.)

(66) கைகேயி வார்த்தையைக் கேட்டு, பரதன் துக்கத்தால் தவித்துக்கொண்டு, அவளை அடியில்வருமாறு நிந்தித்தான்.— நான் பாக்யஹீனன். பிதாவாலும், தகப்பனுக்கு ஸமனான தமையனாலும் விடப்பட்டவன். எனக்கு ராஜ்யத்தால் என்ன காரியம்? புண்ணில் உப்புஜலத்தைக் கொட்டுவதுபோல் பிதா இறந்த துக்கத்துக்குமேலே தமையனைக் காட்டுக்கு அனுப்பிய துக்கத்தையும் உண்டுபண்ணிவிட்டாய். எல்லாவற்றையும் நாசம் செய்கிற பிரளயகால ராத்திரியைப்போல் வந்து, ராஜாவுக்கு மரணத்தையும் ராமனுக்கு வனவாஸத்தையும் உண்டுபண்ணி, இந்தக் குலத்துக்கு நாசத்தையும் செய்திருக்கிருய். உன்னை நெருப்பு என்று அறியாமல் என்னுடைய பிதா தழுவிக்கொண்டிருந்தார். நீ பாபத்திலேயே நோக்குள்ளவள். குலத்தைக் கெடுத்தவள். குலத்துக்குப் பழியை உண்டுபண்ணுகிறவள். கௌஸல்யையும் ஸுமித்ரையும் உன் நிமித்தம் பிள்ளைகளை விட்டுப்பிரிந்து துக்கத்தாலே பீடிக்கப்பட்டுப் பிழைத்திருப்பார்களோ; பிழைத்திருப்பார்களாகில், அது ஸாஹஸமான காரியம். ராமன் தர்மத்தில் மனமுள்ளவன். தாயாரிடத்தில் இருப்பது போல் உன்னிடத்திலும் இருந்தானே. கௌஸல்யையும் தர்மத்தை அறிந்து தன் தங்கையினிடம்போல் உன்னிடத்திலிருந்தாளே. அவள் பிள்ளையைத் தாபஸவேஷத்துடன் காட்டுக்கு அனுப்பியும் வருத்தம் அடையாமலிருக்கிருயே. ராமனையும் லக்ஷ்மணனையும் பாராமல் நான் எந்த சக்தியைக்கொண்டு ராஜ்யத்தை வஹிப்பேன். என் தகப்பனுரும் ராமனுடைய பலத்தையன்ரே நம்பிக்கொண்டிருந்தார். அல்லது ராஜ்யத்தை வஹிக்க எவ்விதமாகவாவது எனக்குச் சக்தி ஏற்பட்டாலும், நான் உன் இஷ்டத்தை நிறைவேற்றமாட்டேன். உன்னைத் தாயாரைப்போல் ராமன் பாராமலிருந்தால், உன்னை உபேக்ஷிக்கவேண்டும் என்கிற எண்ணம் எனக்கு உண்டாகலாம். உனக்கு ஏன் இந்தக் கெட்ட புத்தி உண்டாயிற்று? இந்தக் குலத்தில் மூத்த பிள்ளைக்கு ராஜாவாக அபிஷேகம் செய்

யப்பட்டுவருகிறது. நீ நிலையான ராஜநீதியை அறியவில்லை. உனக்கு அப்ரியத்தைச் செய்ய இப்போதே போய் ராமனைத் திருப்பி அழைத்துவருகிறேன். நான் ஸந்தோஷத்துடன் அவனுக்கு வேலைக்காரனாக இருக்கப்போகிறேன்” என்று. (ஸ-73.) பரதன் மறுபடியும் தாயாரைப் பார்த்து, “க்ரூர மானவளே! கெட்ட நடத்தையுள்ளவளே! நீ ராஜ்யத்தைவிட்டு விலகு. தர்மம் உன்னை விட்டுவிட்டது. ராஜா இறந்ததைப் பற்றி நீ துக்கப்படவேண்டியதில்லை. அவர் பர்த்தாவாயும் நீ பார்யையாயும் இருந்த உறவு போய்விட்டது. ராஜாவுக்கு மரணத்தையும் ராமனுக்கு வனவாஸத்தையும் ஒரேகாலத்தில் நீ செய்ததற்கு அவராவது அவனாவது உனக்கு என்ன அபகாரம் பண்ணினார்கள்? நீ இந்தக் குலத்தை நாசம் பண்ணினபடியால், ப்ரூணஹத்தி * என்கிற தோஷத்தை அடைந்து நரகத்துக்குப் போவாய். பர்த்ருலோகத்தை அடையமாட்டாய். உன் செய்கையால் எனக்குப் பயத்தையும் அகீர்த்தியையும் உண்டுபண்ணியிருக்கிறாய். உன்னுடன் பேசுவது தகாது. கௌஸல்யைக்கு ராமன் ஒரே பிள்ளை. அவனுக்கு வந்த கஷ்டத்தைப் பார்த்து அவள் எப்படி ஸஹிப்பாள்? ராமனைத் திருப்பி அழைத்துக்கொண்டுவந்து அயோத்தியில் வைத்துவிட்டு நான் காட்டுக்குப் போகிறேன். நீ அக்னிப்ரவேசம் பண்ணு, அல்லது தண்டகாரண்யத்துக்குப் போ. கழுத்தில் கயிற்றைக் கட்டிக் கொண்டு பிராணனைவிடு. உனக்கு இவைகளைக் காட்டிலும் வேறு வழியில்லை” என்று சொல்லி, பூமியில் விழுந்து அழுதான். (ஸ-74.)

(67) பரதன் இப்படித் தாயாரை நிந்தித்துக்கொண்டிருக்கையில், அவன் குரலைக்கேட்டு, கௌஸல்யை “பரதன் வந்துவிட்டான்; அவனை அழைத்துவா,” என்று ஸுமித்ரையை அனுப்பினாள். அவளும் போனாள். பரதனும் சத்ருக்னனும் தாங்களாகவே கௌஸல்யை க்ருஹத்துக்கு வந்தார்கள். துக்கப்பட்டுக்கொண்டிருந்த அவளைக் கட்டிக்கொண்டு அழுதார்கள். கௌஸல்யை அவனைப் பார்த்து “ராஜ்யத்தை வேண்டுகிற

* வேதம் முழுவதையும், அதன் அங்கங்களையும் படித்து, கல்ப ஸூத்ரத்தை ப்ரவசனம் பண்ணுகிற ப்ராம்மணன் ப்ரூணன்.

உனக்கு க்ரூரமான கைகேயின் செய்கையால் ராஜ்யம் யாதொரு தடையுமில்லாமல் வந்துசேர்ந்திருக்கிறது. என்னையும் சீக்கிரம் ராமனிடம் போகும்படி கைகேயி செய்வது தகுந்தது; அல்லது ஸுமித்ரையோடுகூட *ராஜாவின் அக்னிகளை எடுத்துக்கொண்டு நானே அங்கே போகிறேன். அல்லது நீயாவது என்னை அங்கே கொண்டுவிடு" என்று பலவிதமாகக் கொடுஞ்சொற்களைச் சொன்னாள். இதைக்கேட்டு பரதன் புலம்பிப் பிரஜ்ஞையிழந்து பூமியில் விழுந்தான். நினைவு திரும்பிவந்தபிறகு, பரதன் கையைக் கூப்பிக் கொண்டு கௌஸல்யையைப் பார்த்து, "அம்மா! கைகேயி செய்ததை நான் அறியவில்லை. என்னிடத்தில் தோஷமில்லை. என்னை ஏன் நிந்திக்கிறாய். எனக்கு ராமனிடம் இருந்த மிகுந்த ப்ரீதி உனக்குத் தெரியுமே. என் அநுமதியின்மேல் அவர் காட்டுக்குப்போயிருந்தால் பாபிகளின் கதியையடைவேன்" என்று பல விதமான பாபங்களை ஒவ்வொன்றாய்ச் சொல்லிச் சபதம் பண்ணினான். இவைகளைக் கேட்டுக் கௌஸல்யை பரதனிடம் ஸந்தேஹத்தை விட்டுவிட்டு, அவனைத் தன் மடியில் உட்காரவைத்து கட்டிக்கொண்டு மிகுந்த துக்கத்துடன் அழுதாள். இப்படி அன்று ராத்திரி போயிற்று. (ஸ-75.)

(68) மறுநாள் காலையில் வஸிஷ்டர் பரதனைப்பார்த்து, "துக்கப்பட்டது போதும். ராஜாவுக்குச் செய்யவேண்டிய மேற் காரியங்களைச் செய்" என்று சொன்னார். அவனும் ராஜாவைச் சிவிகையில் கொண்டுபோய் தஹனம்செய்து, ஸரயூவில் மற்றவர்களுடன் தர்ப்பணம்செய்து கிருஹத்துக்கு வந்தான். (ஸ-76.) பத்தாவதுநாளில் பரிசுத்தியை அடைந்து, பன்னிரண்டாவது நாளில் ச்ராத்த காரியங்களைச்செய்து வேண்டியபடி பிராம்மணர்களுக்குத் தானங்களைச் செய்தான். பதின்மூன்றாவதுநாளில் அஸ்தி ஸஞ்சயநத்தையும் செய்தான். (ஸ-77.) பிறகு ராம

---

* ராஜா யாகங்களைச் செய்தவனாகையால் அவன் அக்கினிகளைக் கொண்டு அவனுக்கு ஸம்ஸ்காரம் செய்யவேண்டியது. அது மூத்த பத்னியான கௌஸல்யையிடம் இருந்தது. அதைக் கொண்டுபோவதாகச் சொல்வதாலே அந்த அக்னிகளைக்கொண்டு பரதன் ராஜாவுக்கு ஸம்ஸ்காரம் பண்ணக்கூடாது என்பது கௌஸல்யையின் கருத்து. இப்படியே ராஜாவும் சொல்லியிருந்தான்.

னிடம் போவதற்காக ஆசைப்பட்டுக்கொண்டிருந்த பரதனைப் பார்த்து சத்ருக்னன், "லக்ஷ்மணன் ராஜாவை நிக்ரஹம்பண்ணி, காட்டுக்குப்போகிற ராமனை ஏன் தடுக்கவில்லை?" என்று சொல்லிக்கொண்டிருக்கையில், எல்லா ஆபரணங்களாலும் தன்னை அலங்காரம் பண்ணிக்கொண்டு மந்தரை அங்கே வந்தாள். அவளைக் காட்டி "சத்ருக்ந! இந்தப் பாபியாலேதான் ராமன் காட்டுக்குப்போனது" என்பதை த்வாரபாலகர்கள் சத்ருக்னனிடம் தெரிவித்தார்கள். சத்ருக்னன், "இவளால்தான் என் ப்ராதாக்களுக்கும் தகப்பனுருக்கும் கடுமையான துக்கம் உண்டாயிற்று. இவள் அந்தக் கர்மத்தின் பலனை அநுபவிக்கட்டும்" என்று அந்தப்புரத்து ஜனங்களைப் பார்த்துச்சொல்லி, அவளைப் பிடித்தான். அவள் கதற, அவள் தோழிகள் பயந்து "கௌஸல்யையைச் சரணம் அடைவோம்" என்று ஓடிப்போனார்கள். சத்ருக்நன் மந்தரையை பூமியில்தள்ளி இழுத்துக்கொண்டுபோனான். அப்போது அவளுடைய ஆபரணங்கள் அறுந்து பூமியில் பலவிடங்களில் விழுந்தன. கைகேயியையும் பயமுறுத்திக் கடுமையாகப்பேச, அவள் பரதனிடம்போய்ச் சரணம் அடைந்தாள். அவன் "அப்பா! ஸ்திரிகளைக் கொல்லக்கூடாது, பொறுத்துக் கொள்ளு. கைகேயியை நான் ஏற்கனவே கொன்றிருப்பேன். தாயாரைக்கொன்றான் என்று ராமன் என்னிடத்தில் வெறுப்புக்கொள்வன் என்று நான் அதைச் செய்யவில்லை. கூனியைக் கொன்றதாகத் தெரிந்தால், நம்மிருவருடனும் அவன் பேசமாட்டான்" என்று சொல்லித் தடுத்தான்.* இதைக்கேட்டு சத்ருக்னன் அவளை விட்டுவிட்டான். (ஸ-78.)

(69) பதினான்காவது நாளில் மந்திரிகள் பரதனிடம் வந்து, "ராஜ்யத்தைப்பெற்று அபிஷேகம் செய்துகொண்டு எங்கள் எல்லாரையும் காப்பாற்று" என்று வேண்டினார்கள். பரதன் அபிஷேகத்துக்காக ஏற்பட்ட ஸம்பாரங்களைப் பிரதக்ஷிணம்

* 'கொடுமையான கர்மங்களைச் செய்கிறவன் இங்கேயே பலனை அநுபவிக்கிறான்' என்பது பழமொழி. கைகேயி ராமனைக் காட்டுக்கு அனுப்பி பர்த்தாவைக் கொன்றாள். எந்தப் பிள்ளைக்காக இந்தக் கர்மத்தைச் செய்தாளோ, அந்தப் பிள்ளையே அவளைப் பலவிதமாய் நிந்தித்து ராமனிடம் பயந்து அவளைக் கொல்லாமல் விட்டான். மந்தரையும் சத்ருக்னனால் தகுந்தபடி சிக்ஷிக்கப்பட்டாள். இந்த ஸ்திரீகளின் அநுஷ்டானங்களால் இந்தப் பழமொழி உலகத்துக்கு வெளியிடப்படுகிறது.

செய்து, அவர்கள் எல்லாரையும் பார்த்து "நம்முடைய குலத்தில் மூத்தபிள்ளை ராஜாவாகவேண்டியது. நீங்கள் வேண்டுவது தகுந்தது அன்று. ராமன் ராஜாவாகவேண்டும். பதினன்கு வர்ஷங்கள் நான் காட்டில் வஸிப்பேன். சதுரங்க ஸேனைகளை ஸந்நாஹம் செய்யவேண்டும். ராமனைக் காட்டிலிருந்து அழைத்துவரப்போகிறேன். அபிஷேகத்துக்காக ஏற்பட்ட ஸம்பாரங்களை கொண்டுபோய், அங்கேயே அவனுக்கு அபிஷேகம் செய்விக்கிறேன். தொழிலாளர்கள் காட்டுக்குப்போகும் வழியைச் செப்பனிடட்டும்" என்று சொன்னன். இதைக்கேட்டு எல்லாரும் அவனைக் கொண்டாடினர்கள். (ஸ-79.) அவர்களும் அப்படியே கங்கைவரையில் பரதனும் ஸேனையும் போகும்படி வழியைச் செப்பனிட்டார்கள். (ஸ-80.) அன்று ராத்ரி விடியும் போது வந்திகள் வந்து வாத்யங்களை வாசிக்க ஆரம்பிக்கையில், பரதன் தூக்கத்தைவிட்டு எழுந்திருந்து "நான் ராஜா அன்று" என்று அவர்களைத்தடுத்து, சத்ருக்நனைப் பார்த்து "சத்ருக்ன! கைகேயியினல் இந்த உலகத்துக்குப் பெரிய அபகாரம் செய்யப்பட்டது. என்னிடத்தில் மிருந்த துக்கத்தை வைத்துவிட்டு ராஜா ஸ்வர்க்கம் அடைந்தார். ஜலத்தில் ஓடக்காரனில்லாத ஓடம்போல ராஜ்யஸ்ரீ தடுமாறுகிறது. நமக்கு எவன் நாதனே அவன் காட்டுக்கு அனுப்பப்பட்டான்." என்று சொன்னன். இதைக்கேட்டு எல்லா ஸ்திரீகளும் உரத்த குரலில் அழுதார்கள்.

(70) இப்படி பரதன் சொல்லிக் கொண்டிருக்கையில் வஸிஷ்டர் ராஜஸபைக்குவந்து, ப்ராம்மணர்களையும் மந்திரிகளையும் மற்றவர்களையும் கூப்பிடும்படி உத்தரவு பண்ணினர். அவர்கள் எல்லாரும் வந்தார்கள். பரதனும் சத்ருக்னனும் அவ்விடம் போனர்கள். ஸபை தசரதன் இருந்ததுபோல் விளங்கிற்று. (ஸ-81) அப்போது பரதனைப்பார்த்து வஸிஷ்டர்:— "தர்மத்தை அநுஷ்டித்துவந்த தசரதன் தனங்களாலும் தான்யங்களாலும் நிறைந்த இந்த ராஜ்யத்தை உனக்குக் கொடுத்துவிட்டு ஸ்வர்க்கம் போய்விட்டான். ராமனும் பெரியோர்களின் தர்மத்தை நினைத்துக்கொண்டு, பிதாவின் ஆஜ்ஞையைத் தள்ளி விடவில்லை. தகப்பனலும் தமையனலும் கொடுக்கப்பட்ட ராஜ்யத்தைப் பெற்றுக்கொண்டு மந்திரிகள் ஸந்தோஷப்பட நீ அபிஷேகம் பண்ணிக்கொள்" என்று சொன்னர். அவர் வார்த்தை

யைக்கேட்டு பரதன் துக்கத்தாலே புலம்பி,* ஸபையில் புரோஹிதரை நிந்தித்தான்—"ராமன் குருகுலவாஸம்பண்ணித் தர்மத்தை அறிந்து அதை அனுஷ்டிக்கிறவன். அவனுடையதான ராஜ்யத்தை என்னைப்போன்றவன் அபஹரிப்பனோ? ராமனைவிட்டுப் பிரிந்தவுடன் தசரதன் பிராணனைவிட்டார். உடனே ராமனுடையதான ராஜ்யத்தை நான் எடுத்துக்கொண்டால் நான் தசரதன் வயிற்றில் பிறந்தவனாவேனோ? பிள்ளையானவன் ராமனைப்போலத் தகப்பன் இஷ்டத்தையன்றோ செய்யவேண்டியது. அவனுக்கு இஷ்டமில்லாததைச் செய்தால் என்னைப் பிள்ளையென்று எப்படிச் சொல்லலாம்? தசரதன்பிள்ளையான நான் ராஜ்யத்தை அபஹரிக்கிறவனாக ஆவேனோ? நானும் ராஜ்யமும் ராமனுடைய ஸொத்துக்கள். அவைகளுள் ஒன்று மற்றொன்றை எப்படி ஆளும்? என் ஸ்வபாவத்தை அறிந்த நீர் தர்மத்தையன்றோ சொல்லவேண்டும். ராமன் மூத்த பிள்ளை; மிகவும் உயர்ந்தவன்; திலீபனையும் நஹுஷனையும் போன்றவன். தசரதர் எப்படி ராஜ்யத்தை அடைந்தாரோ, அதுபோல அதை அவன் அடையத்தகுந்தவன். பெரியோர்கள் ஒப்புக்கொள்ளாததும் பரலோகத்துக்கு விரோதியுமான இதை நான் செய்தால், இக்ஷ்வாகு குலத்துக்குப் பழியையுண்டு பண்ணுகிறவனாக ஆவேன். என் தாயார்செய்த பாபகாரியம் எனக்குப் பிடிக்கவில்லை. இங்கிருந்துகொண்டே காட்டிலிருக்கும் ராமனுக்கு அஞ்ஜலிசெய்து நமஸ்காரம் செய்கிறேன். §ராமனைப் பின் தொடருகிறேன். அவனே மூன்று உலகங்களுக்கும் ராஜாவாயிருக்கத்தகுந்தவன்" என்று சொன்னான்.

---

* ஆசாரியன் குற்றம்செய்தால், அதைச் சிஷ்யன் அவனுக்குத் தெரிவிக்கலாம். அதைத் தனியாய் இருக்கும்போது செய்யவேண்டும். இவ்விடத்தில் வஸிஷ்டர் செய்த குற்றம் பொறுக்கமுடியாதிருந்தபடியாலே, அதை ஸபையின் நடுவிலிருந்துகொண்டு பரதன் தெரிவித்தான். பகவானான ராமனுக்கு பரதன் ஸொத்து; அவனுக்கு உட்பட்டவன்; அவனை ஸ்வதந்திரனாக வைத்துக்கொண்டு ராஜாவாயிருக்கும்படி வஸிஷ்டர் சொன்னது பகவானுடைய ஸொத்தை அபஹரிக்கும்படி சொன்னதாக ஆகும். இதைச் செய்யும்படி அவர் சொன்னது குற்றம்.

§ ராமமேவாநுகச்சாமி என்கிற பாடத்தைக்கொண்டு இது எழுதப்பட்டது. "ராமமேவாபிகச்சாமி" என்று பாடமிருக்கிறது; அதற்குப் பொருள்—ராமனையே நோக்கிச்செல்வேன்—என்பது. இந்தப் பாடம் அழகு.

அந்த வார்த்தையைக்கேட்டு ஸபையிலிருந்தவர்களும் ஸந்தோஷப்பட்டுக் கண்ணீரைவிட்டார்கள். பரதன் மறுபடியும் "ராமனைத் திரும்பிவரச் செய்யமுடியாவிட்டால், அங்கேயே லக்ஷ்மணனைப்போல் இருப்பேன். போகிற வழியைச் செப்பனிட உத்தரவு பண்ணியாயிற்று. அவ்விடம் போவதுதான் எனக்குப் பிடிக்கிறது" என்று சொல்லி, ஸுமந்த்ரனைப் பார்த்து, "புறப்பட்டுப் போவதற்கு வேண்டிய ஏற்பாட்டைச்செய்" என்று கட்டளையிட்டான். அவன் அப்படியே செய்தான். நகரத்தில் ஸேனைவீரர்களை ராமனிடம் போக அவர்களுடைய பார்யைகள் துரிதப்படுத்தினார்கள். (ஸ-82.)

(71) மறுநாள் காலையில் ராமனைப் பார்க்கவேண்டும் என்கிற ஆசையுடன் பரதன் புறப்பட்டான். அவனுடைய ஸேனைகளும் நகரத்து ஜனங்களும் ராமனுடைய கதைகளையே ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டு ஸந்தோஷத்துடன் அவன் பின்னுலே போனார்கள்; கங்கையின் கரையைச் சேர்ந்தார்கள். பரதன் கங்கையில் தகப்பனுருக்குத் தர்ப்பணம் பண்ணினான். (ஸ-83.) குஹன், பரதன் ஸேனையுடன் வந்ததைப் பார்த்து, அவனுடைய அபிப்பிராயத்தை அறியாமையால், தன்னுடன் கூட இருந்த செம்படவர்களைப் பார்த்து, "பரதன் எண்ணம் தெரியவில்லை. நம்மைச் சிறையிலடைக்கவோ கொல்லவோ வந்திருக்கிறானோ? அல்லது ராமனைத் தேசத்தைவிட்டுத் துரத்தினதுடன் நிற்காமல், அவனைக் கொல்லவும் வந்திருக்கிறானோ? ராமன் எனக்கு ஸ்வாமி. எனக்கு ஸ்நேஹிதன். அவனுக்கு அநுகூலமானதைச் செய்வதற்காகக் கங்கையின் இந்தக் கரையில் ஸித்தமாயிருங்கள். பரதன் ராமனிடத்தில் ப்ரீதியுள்ளவனாயிருந்தால், கங்கையை ஸுகமாகத் தாண்டட்டும்" என்று சொன்னான், காணிக்கைகளை எடுத்துக்கொண்டு பரதனிடம் போனான். அவன் வருவதைப் பார்த்து ஸுமந்த்ரன், "பரதா! இவன் வேடர்களின் ராஜா, வயதானவன், ராமனுக்கு ஸகா. இவன் ராமலக்ஷ்மணர்கள் இருக்குமிடத்தை அறிவன். இவன் உன்னைப் பார்க்க வருகிறான்" என்று சொன்னான். இதைக்கேட்டுப் பரதன். வரலாம் என்று சொல்ல, குஹன் "இந்த தேசத்தை உன்னுடைய தோட்டமாக எண்ணு. நீ வருவதை ஏன் சொல்லியனுப்பவில்லை? ஆனாலும் உனக்கும் உன் ஸைன்யத்துக்கும் ஆஹாரம் கொண்டுவந்திருக்கிறேன். இங்கே ராத்திரி ஸுகமாயிரு. நாளையதினம் போகலாம்" என்று சொன்னான். (ஸ-84.) பரதன் "என்னுடைய ஸ்வாமியின் தோழனே! நீ ஒருவனாக

இந்த ஸேனைக்கு உபசாரம்செய்ய நினைப்பதனாலேயே உபசாரம் செய்ததாயிற்று" என்று சொல்லி, பரத்வாஜரின் ஆச்ரமத்துக்கு எந்த வழியாய்ப் போகவேண்டியது என்று கேட்டான். குஹன் "ராஜபுத்ரனே! நானும் செம்படவர்களும் உன்னுடன் கூட வந்து வழியைக் காட்டுகிறோம். ராமனிடத்தில் கெட்ட எண்ணமில்லாமல் போகிறாயா? உனது இந்தப் பெரிய ஸேனையைப் பார்த்து ஸந்தேஹமுண்டாகிறது" என்று கேட்டான். பரதன் நீ என்விஷயத்தில் ஸந்தேஹப்படும்படியான கொடுங்காலம் எனக்கு வரவேண்டாம். ராமன் எனக்குத் தமையன், தகப்பனுருக்கு ஸமானன். காட்டில் வஸிக்கிற அவனைத் திருப்பி நகரத்துக்கு அழைத்துவரப்போகிறேன். என் விஷயத்தில் வேறு எண்ணம் உனக்கு வேண்டாம். நான் உண்மையைப் பேசுகிறேன்." என்று பதில் சொன்னான். குஹன் ஸந்தோஷப்பட்டு, "நீ பாக்யம் பண்ணினவன். உனக்கு ஸமமானவனை உலகத்தில் காணமுடியாது. பிரயத்னமில்லாமல் கையில்வந்த ராஜ்யத்தை விடவிரும்புகிறாயே. உன்கீர்த்தி உலகத்தில்பரவி நிலையாயிருக்கப்போகிறது" என்று சொன்னான். இப்படி இருவரும் பேசிக்கொண்டிருக்கையில், ஸூர்யன் அஸ்தமித்தான். ராத்ரி வந்தது. பரதன் படுக்கப்போய் ராமன் விஷயமாக சோகப்பட்டுக்கொண்டிருந்தான். குஹன் அவனை ஸமாதானம் பண்ணினான். (ஸ-85.) ராமன் அந்த இடத்துக்குவந்து ஸீதையுடன் படுத்திருக்கையில் லக்ஷ்மணன் வில்லும் கையுமாய் அவர்களை ரக்ஷித்துக்கொண்டிருந்ததையும், தான் அவனைத் தூங்கும்படி வேண்டினதையும், அவன் "ராமன் பூமியில் படுத்திருக்கையில் எனக்குத் தூக்கம் எப்படி வரும்?" என்று சொல்லிப் புலம்பினதையும், மறுநாட் காலையில் தான் கொண்டுவந்த ஆலம்பாலைக்கொண்டு ராமலக்ஷ்மணர்கள் தலைமயிரை ஜடையாகப் பண்ணிக்கொண்டுபோனதையும் குஹன் பரதனுக்கு* நடந்தபடி சொன்னான். § (ஸ-86.)

---

* குஹன் "லக்ஷ்மணனுடைய ஸத்பாவத்தைச் சொன்னான்" என்று சுலோகம். ஸத்பாவம்—என்றால், ஸத்துக்களுடைய அநுஷ்டானம். ஸத்துக்கள் பாபமற்றவர்கள். லக்ஷ்மணன் இப்படிப்பட்டவன். அவனுடைய அநுஷ்டானம்—ராமனுக்கு தீர்த்தம் கொண்டுவந்து கொடுத்ததும், இலைகளால் படுக்கையை ஸித்தம் பண்ணினதும், ராமன் படுத்த பிறகு அவர் திருவடிகளை அலம்பினதும், ராமனும் ஸீதையும் தூங்குகையில் வில்லும் கையுமாய் நின்று அவர்களை ரக்ஷித்ததும். ஸத்பாவம் என்பதற்கு நல்ல ஸ்வபாவம் என்றும் பொருள்கொள்ளலாம்.

§ 56-வது பாராவைப் பார்க்க.

(72) பரதன், ராமன் ஜடை தரித்ததைக்கேட்டு, துக்கத்தால் கீழே விழுந்தான். சத்ருக்னன் அவனைக் கட்டிக்கொண்டு உரத்த குரலோடு அழுதான். இதைக்கண்டு கௌஸல்யை பயத்துடன் "குழந்தாய்! என் பிள்ளை விஷயமான துக்கம் உன்னைப் பாதிக்கிறதா? * இந்த ராஜகுலம் பிழைத்திருப்பது உன் அதீநமாயிருக்கிறது. தசரதன் இறந்துபோய் ராமலக்ஷ்மணர்களும் காட்டுக்குப்போனபிறகு, உன்னைப்பார்த்துத்தானே நான் பிழைத்திருக்கிறேன். இப்போது நீ ஒருவன்தான் நாதன். லக்ஷ்மணன் விஷயத்திலாவது ஸீதை விஷயத்திலாவது ராமன் விஷயத்திலாவது ஏதாவது அப்ரியத்தைக் கேட்டாயா?" என்று கேட்டாள். பரதன் ஒரு முஹூர்த்தம் சென்றபிறகு, நீ ஸந்தேகப்பட்டது ஒன்றுமில்லையென்று கௌஸல்யைக்கு ஆறுதலைச்சொல்லி, குஹனைப்பார்த்து, "என் தமையன் ராத்ரி எங்கேயிருந்தான்? எங்கே ஸீதையும் லக்ஷ்மணனும் இருந்தார்கள்? அவர்கள் எதைச் சாப்பிட்டு எந்தப்படுக்கையில் படுத்துக்கொண்டிருந்தார்கள்? அதை எனக்குச் சொல்லு" என்று கேட்டான். குஹன் "நான் ராமனுக்குப் பல ஆஹாரங்களைக் கொண்டுபோய்க்கொடுத்தேன். அவன் § க்ஷத்ரியதர்மத்தை நினைத்துக்கொண்டு, அவைகளில் ஒன்றையும் பெற்றுக்கொள்ளவில்லை. லக்ஷ்மணன் கொண்டுவந்த தீர்த்தத்தைப் பானம்பண்ணி, ராமனும் ஸீதையும் உபவாஸமிருந்தார்கள். மீதியிருந்த தீர்த்தத்தை லக்ஷ்மணன் சாப்பிட்டான். லக்ஷ்மணன் புல்லைக் கொண்டுவந்து ஆஸநம் போட்டான். அதில் ராமனும் ஸீதையும் உட்கார்ந்தார்கள். லக்ஷ்மணன் அவர்கள் திருவடிகளை சுத்தஞ்செய்து படுக்கும் காலத்தில் கிட்ட இருக்கக்கூடாது என்று எண்ணி, அப்புறம்போனான். அவர்கள் படுத்துக்கொண்டிருந்த புங்கமரம் இதுதான்; இதுதான் அந்தப்புல். லக்ஷ்மணன் வில்லில் நாணேற்றிக்கொண்டு மற்ற ஆயுதங்களுடன் பக்கத்தில் நின்றுகொண்டு

---

* திரும்பிவரும் ராமனைப் பார்க்கலாம் என்று நாங்கள் பிழைத்திருக்கிறோம். நீ இருந்தால் உன் முகத்தின் வாட்டத்தைப் பார்த்து, அவன் திரும்புவன். நீ இல்லாவிட்டால் அவன் வாரான். நாங்களும் பிழைத்திருக்கமுடியாது என்பது கருத்து.

§ க்ஷத்திரியன் கொடுக்கிறவன், வாங்கிக்கொள்ளுகிறவன் அன்று என்கிற தர்மம்.

ராத்ரி முழுவதும் விழித்துக்கொண்டிருந்தான். நானும் என் பரிவாரத்துடன் வில்லும் கையுமாய் லக்ஷ்மணன் பக்கத்தில் இருந்தேன்" என்று சொன்னான். (ஸ-87.) குஹன் சொன்னதைக் கேட்டுப் பரதன் மந்திரிகளுடன் புங்கமரத்தின் அடிக்கு வந்து, ராமன் படுக்கையைப்பார்த்து, தாய்மார்கள் எல்லாரையும் பார்த்து, "இங்கே பூமியில் ராமன் ராத்ரியில் படுத்திருந்தான். புல்லு கசங்கியிருக்கிறது. உயர்ந்த குலத்தில் தசரதன் வயிற்றில் பிறந்த அவன் பூமியில் படுக்கத்தகுந்தவனா? அயோத்யையில் உயர்ந்த மாளிகையில் ஸுகமான கட்டிலில் படுத்திருந்து விடியற் காலத்தில் வந்திகளால் வாத்தியங்கள் வாசித்து எழுப்பப்பட்டவன் புல்லின்மேல் எப்படிப் படுத்திருந்தான்? இதைக்கேட்டு எவன் நம்புவன். இஃது எனக்கு உண்மையாகத் தோன்றவில்லை. என் மனது மயக்கம் அடைகிறது. இது ஸ்வப்னமோ என்கிற எண்ணம் எனக்கு உண்டாகிறது. காலத்தைக்காட்டிலும் அதிக பலமுள்ள தெய்வமில்லைபோலும். ஜனகராஜன் திருமகளும் தசரதன் மருமகளுமான ஸீதை பூமியில் படுத்துக்கொண்டாள். இந்தப் படுக்கையில் ஸீதை ஆபரணங்களுடன் படுத்திருக்க வேண்டும். அங்கங்கே தங்கப்பொடிகள் படிந்திருக்கின்றன. அவளுடைய உத்தரீயம் இங்கே பட்டிருக்கவேண்டும். இங்கு பட்டுநூல்கள் மாட்டிக்கொண்டிருக்கின்றன. என்பொருட்டு ராமனும் ஸீதையும் கஷ்டப்பட்டார்களே; ஐயோ! கஷ்டம். நான் தயையில்லாதவன். லக்ஷ்மணன் பாக்யசாலி. கஷ்டமான காலத்திலும் தமையனை விடவில்லை. ராமன் காட்டுக்குவந்து, தசரதனும் ஸ்வர்க்கத்துக்குப் போனபடியால் உலகம் சூன்யமாய்த் தோன்றுகிறது. இன்றுமுதல் நான் பூமியிலோ அல்லது புல்லின்மேலோ படுப்பேன். ஜடையையும் மரவுரியையும் தரித்துக் கொண்டு, காய் கிழங்குகளையே சாப்பிடுவேன். ராமனுக்குப்பதிலாக பாக்கியிருக்கும் காலம் நான் காட்டில் வஸிப்பேன். இந்த ப்ரதிஜ்ஞை பொய்யாகாது. என்னுடன்கூட சத்ருக்னன் இருப்பன். ராமன் ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் அயோத்யைக்குப்போய் அதைப் பரிபாலனம் பண்ணுவன். அவனுக்குப் பிராம்மணர்கள் அபிஷேகம் செய்வார்கள். இந்த என்னுடைய ஆசையை தேவதைகள் நிறைவேற்றவேண்டும். நான் பலவிதமாய் அவனை வேண்டுவேன். அவன் அதைக் கேட்காவிட்டால்,

நானும் அவனுடன் காட்டில் வஸிப்பேன். அவன் தடுக்கமாட்டான்" என்று சொல்லிப் புலம்பினான். (ஸ 88.)

(73) பரதன் அன்று ராத்ரி அங்கே வஸித்து மறுநாட் காலையில் சத்ருக்னனை எழுப்பி, "ஏன் தூங்குகிறாய்? குஹனைக் கூப்பிடு. கங்கையைத் தாண்டவேண்டும். ராத்ரி முழுவதும் ராமனை நினைத்துக்கொண்டு தூங்காமல் விழித்துக்கொண்டிருந்தேன்" என்று சொன்னான். அப்போது குஹன்வந்து அஞ்ஜலி செய்துகொண்டு "ஸுகமாய்த் தூங்கினீர்களா?" என்று கேட்டு, ஓடங்களைக் கொண்டுவந்து, பரதனையும் அவன் ஸேனைகளையும் கங்கையின் தென்கரைக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தான். (ஸ-89.) பரதன் அங்கிருந்து புறப்பட்டு ஸூர்யோதயத்துக்குமேல் மூன்றாவது முஹூர்த்தத்தில் பரத்வாஜர் ஆச்ரமம் இருந்த வனத்தைக்கண்டு, ஸேனையை ஒரு * க்ரோசதூரத்தில் நிறுத்திவிட்டு, வஸிஷ்டர் முதலானவர்களுடன் அவர் ஆச்ரமத்துக்குப் போனான். பரத்வாஜர் வஸிஷ்டருக்கும் பரதனுக்கும் ஆதித்யத்தைச் செய்து, க்ஷேமத்தை விசாரித்து, பரதனைப் பார்த்து, "ராஜ்யத்தை ஆளவேண்டிய நீ இங்கே வந்ததற்கு என்ன காரணம்? என் மனதில் ஸம்சயமுண்டாகிறது. பிதாவின் கட்டளைப்படி காட்டுக்கு வந்திருக்கிற ராமனுக்குக் கெடுதலைச் செய்ய இச்சிக்கிறாயா?" என்று கேட்டார். இதைக் கேட்டு, பரதன் கண்ணும் கண்ணீருமாய், "ஐயோ! கஷ்டம்! என்னைப் பார்த்து தேவரீரும் இப்படிக் கேட்கிறீரே. என்றால் ராமனுக்கு ஒரு கெடுதி உண்டாகும் என்கிற ஸம்சயம்கூட எனக்கு இல்லை. என் தாயார் நான் இல்லாதவேளையில் எதைச் சொன்னாளோ, அது எனக்கு இஷ்டம் அன்று. அதனால் நான் ஸந்தோஷம் அடையவில்லை. அவள் சொன்னதையும் நான் ஏற்றுக்கொள்ளவில்லை. நான் ராமனுடைய திருவடிகளுக்கு நமஸ்காரம் செய்து, அவனை அயோத்யைக்குத் திருப்பி அழைத்துக் கொண்டுபோக வந்திருக்கிறேன். ஆகையால், எனக்கு அநுக்ரஹம் செய்யவேண்டும். ராமன் இப்போது எங்கே இருக்கிறான் என்று சொல்லும்" என்று பதில் சொன்னான். இதைக்கேட்டு பரத்வாஜர், "ரகுவம்சத்தில் பிறந்த உனக்கு இது தகுந்தது. இது எனக்குத் தெரியும். ஆனபோதிலும், இதை உறுதிப்

* 2 மயில், 1½ நாழி வழி.

படுத்துவதற்காகவும், உன் கீர்த்தியை விருத்திபண்ணுவதற்காகவுமே நான் கேட்டது. ராமன் சித்ரகூடத்தில் இருக்கிறான். நாளையதினம் மந்திரிகளுடன் அங்கே போகலாம்" என்று சொன்னார். அதைப் பரதன் ஒப்புக்கொண்டான். (ஸ-90.) பரத்வாஜர் பரதனுக்கும் அவன் ஸேனைக்கும் விருந்து செய்வதாய்ச் சொல்லி, "ஏன் ஸேனையை தூரத்தில் நிறுத்திவிட்டுத் தனியாய் வந்தாய்? அதை வருவிப்பாய்" என்று கட்டளையிட, பரதன் அவர் சொன்னபடி செய்தான். பரத்வாஜர் தன்னுடைய தபஸின் பெருமையாலே விசுவகர்மாவையும் த்வஷ்டாவையும், இந்த்ரன், யமன், வருணன், குபேரன் ஆகிய திக்பாலர்களையும், கந்தர்வர்களையும், அப்ஸரஸுகளையும், மற்ற தேவர்களையும் வருவித்து, மிகவும் ஆச்சரியமான விருந்தைச் செய்யும்படி கட்டளையிட்டார். அவர்கள் வந்து உயர்ந்த மாளிகைகளைக்கட்டி அழகான வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் மாலைகளையும் சந்தனங்களையும் கொண்டுவந்து, மனதாலும் நினைக்கமுடியாத அன்னங்களாலும் பானங்களாலும் ஸேனைகளைத் திருப்திப்படுத்தினார்கள். கந்தர்வர்கள் பாடினார்கள். அப்ஸரஸுகள் நர்த்தனம் செய்தார்கள். இதைக்கண்டு, வந்தவர்கள் ஸந்தோஷம் மேலிட்டு மயங்கி "நாம் தண்டகாரண்யத்துக்குப் போகோம், அயோத்யைக்கும் திரும்பிப் போகோம். ராமனும் பரதனும் க்ஷேமமாயிருப்பார்களாக" என்றுசொல்லிக்கொண்டிருந்தார்கள். ராஜாவுக்காக ஏற்பட்டிருந்த ஸிம்மாஸனத்தைப் பார்த்து, பரதன், இது ராமனுடையது என்று அதற்கும் ராமனுக்கும் நமஸ்காரம்செய்து, சாமரத்தை எடுத்து வீசிவிட்டு, மந்திரிகள் உட்காருவதற்கு ஏற்பட்டிருந்த ஆஸனத்தில் உட்கார்ந்தான். (ஸ-91.)

(74) மறுநாட் காலையில், பரதன் பரத்வாஜரை வணங்கி, ராமரிடம் போகும் வழியைக் கேட்டான். அவர் இங்கிருந்து இரண்டரை யோஜனை தூரத்தில் சித்ரகூடம் என்கிற மலையிருக்கிறது. அதின் வடபக்கத்தில் மந்தாகினி என்கிற நதி ஓடுகிறது. அதற்குத் தெற்கே ராமன் பர்ணசாலை கட்டிக்கொண்டிருக்கிறான்" என்று பதில் சொன்னார். அப்போது கௌஸல்யை முதலான ராஜமஹிஷிகள் ருஷிக்கு நமஸ்காரம்பண்ணினார்கள். அவர் "இவர்கள் யார் யார்?" என்று கேட்க, பரதன் 'இவள் ராமனைப் பெற்ற கௌஸல்யை; அவள் இடதுபக்கத்தில் இருப்

பவள் லக்ஷ்மண சத்ருக்னர்களைப் பெற்றவள்; மற்றொருத்தி என் தாயார்; இவளால்தான் ராமனும் லக்ஷ்மணனும் காட்டுக்குப் போனதும், பிள்ளையைவிட்டுப் பிரிந்த ராஜா ஸ்வர்க்கம் போனதும்; கோபக்காரி; பெரியோர்களால் சிக்ஷிக்கப்படாதவள்; கர்வமுள்ளவள்; தன்வசத்தில் பர்த்தா இருந்ததாக எண்ணிக்கொண்டிருந்தவள்; ஐசுவரியத்தில் ஆசையுள்ளவள்; கெட்டவள்; நல்லவள்போல் வேஷம் போடுகிறவள்; உண்மையில் அப்படிப்பட்டவள் அல்லள்" என்றுபதில் சொல்லி, கண்ணுங் கண்ணீருமாய் பெருமூச்சுவிட்டாள். ருஷி பரதனைப் பார்த்து "பரத! நீ கைகேயியைத் தோஷமுள்ளவளாக எண்ணுவது தகுந்தது அன்று. ராமனைக் காட்டுக்கு அனுப்பியது க்ஷேமத்தில் முடியப்போகிறது. அவன் இங்கே வந்ததால் தேவர்களுக்கும் ஆத்மத்யானம் பண்ணிக்கொண்டிருக்கிற ருஷிகளுக்கும் ஹிதம் உண்டாகப்போகிறது" என்று சொன்னார். பரதன் அவரைப் பிரதக்ஷிணம் செய்து நமஸ்காரம்பண்ணி, ஸேனையுடன் புறப்பட்டுப் போனான். (ஸ-92.) பரதன் வெகுதூரம் போனபிறகு, ஒரு மலையைக் கண்டு, "இதில் பரத்வாஜர் சொன்ன அடையாளங்கள் இருக்கின்றன. இதன் பக்கத்தில் மந்தாகினி என்னும் நதி தோன்றுகிறது. இங்கேயே ராமன் இருக்கவேண்டும்" என்று சொல்லி, அந்த இடத்தைத் தேடிப் பார்க்கும்படி கட்டளையிட்டான். பிறகு சத்ருக்னனைப்பார்த்து, "ராமனையும் லக்ஷ்மணனையும் ஸீதையையும் பார்த்து, அவன் திருவடிகளில் நமஸ்காரம்செய்து அவனை ராஜாவாக அபிஷேகம் பண்ணும்வரையில், என் துக்கம் போகாது. அவன் முகத்தைப் பார்க்கிற லக்ஷ்மணனும், அவனுடன் கூடப்போயிருக்கிற ஸீதையும் பாக்கியம் பெற்றவர்கள். அவன் இருக்கும் சித்ரகூடமும், அதிலுள்ள வனமும், சிலாக்யமானவை" என்று சொன்னான். வேலைக்காரர்களும் தேடி ஓரிடத்தில் புகை கிளம்புவதைப் பார்த்து, "இங்கேதான் ராமன் இருக்கவேண்டும்" என்று நிச்சயித்து, பரதனுக்குத் தெரிவித்தார்கள். அவன் ஸேனையை நிறுத்திவிட்டு, வஸிஷ்டருடனும் ஸுமந்த்ரருடனும் புகையைக் குறிப்பாகக் கொண்டு கால்நடையாகப்போனான். (ஸ-93-98.)

(75) சித்ரகூடத்துக்குப் போயிருந்த ராமன் ஒருநாள் அந்த மலையின் அழகையும் மந்தாகினியின் அழகையும், பலவித

மாய் ஸீதைக்கு வர்ணித்து, "இந்த மலையை அயோத்யையாகவும் இந்த நதியை ஸரயூவாகவும் நினை. உன்னுடன்கூட இருக்கிறபடியால் எனக்கு அயோத்யையிலாவது, ராஜ்யத்திலாவது ஆசையில்லை. இங்கே வந்ததற்கு இரண்டு பலன்கள் எனக்குக் கிடைத்திருக்கின்றன. ஒன்று பித்ருவாக்ய பரிபாலநம் பண்ணினது; மற்றொன்று பரதனுக்கு ராஜ்யம் கிடைத்தது. இங்கே லக்ஷ்மணனுடன் நாம் ஸுகமாயிருப்போம்" என்று சொன்னான். (ஸ-94-95.) இப்படிச் சொல்லி, மலையின் தாழ்வரையில் ஸீதையுடன் உட்கார்ந்திருந்தபோது, ராமன் ஒரு பெரிய சப்தத்தைக்கேட்டு, மிருகங்கள் ஓடுவதைப்பார்த்து, அதற்குக் காரணத்தை விசாரிக்க லக்ஷ்மணனை ஏவினான். அவன் ஒரு மரத்தின்மேல் ஏறி வடக்குத் திக்கில் ஒரு பெரிய ஸேனை வருவதைப்பார்த்து, "ராம! ஸீதை குஹைக்குள் போகட்டும். கவசத்தைப்பூண்டு வில்லில் நாணைப்பூட்டி ஸித்தமாயிரு" என்று சொன்னான். ராமன் "நன்றாய்ப் பார். இது யாருடைய ஸேனை" என்று கேட்க, லக்ஷ்மணன் "த்வஜத்தினால் இது பரதனுடைய ஸேனை என்று அறிகிறேன். அவன் ராஜ்யத்தை அடைந்து, அபிஷேகத்தைச் செய்துகொண்டு, நம்மிருவரையும் கொல்லவருகிறான். நாம் கிட்டமுடியாத இடத்துக்குப்போய் வில்லைப் பிடித்துக்கொண்டு நிற்போம். அல்லது இங்கேயே இருப்போம். பரதன் நம்வசமாய்விடுவன். எவன் பொருட்டு நமக்கும் ஸீதைக்கும் இந்தக் கஷ்டம் நேர்ந்ததோ, அவனைப் பார்ப்பேன். அவன் என்னால் கொல்லத்தகுந்தவன். அவனைக் கொல்லுவதில் ஒரு தோஷத்தையும் நான் எண்ணவில்லை. முன்னாலே அபகாரம் பண்ணினவனைக் கொல்லுவதில் ஓர் அதர்மமுமில்லை. அவனைக் கொன்றபிறகு நீ இந்தப் பூமி முழுவதையும் ஆளு. ராஜ்யத்தில் ஆசையுள்ள கைகேயி பிள்ளை கொல்லப்பட்டதைப் பார்க்கட்டும். அவளையும் அவளைச் சேர்ந்தவர்களையும் கொல்லுகிறேன். அவன் ஸைன்யத்தையும் நாசம் பண்ணுகிறேன்" என்று சொன்னான். (ஸ-96.) இப்படிக் கோபமாய்ப்பேசின லக்ஷ்மணனை ராமன் ஸமாதானம் பண்ணினான்.— "மஹா ப்ராஜ்ஞனான பரதன் நேரேவருகையில் நமது வில்லாலோ கத்தியாலோ ஆகவேண்டியது என்ன? தகப்பனாருக்கு 'காட்டுக்குப் போகிறேன்' என்று ப்ரதிஜ்ஞை பண்ணவில்லையா? இங்கே வரும் பரதனைக்கொன்று, ராஜ்யத்தாலே எனக்கு என்ன ஆக

வேண்டியது? பரதனைக்கொன்று அவனுக்கு தகப்பனால் கொடுக்கப்பட்ட ராஜ்யத்தை ராமன் அபஹரித்துக்கொண்டான் என்கிற பழிக்கன்றோ ஆளாகவேண்டும். எந்தத் திரவியம் மித்திரர்களுக்கோ பந்துக்களுக்கோ நாசத்தை உண்டுபண்ணினதால் கிடைக்கிறதோ, அதை விஷத்துடன் கலந்த அன்னத்தைப்போல நான் ஏற்றுக்கொள்ளமாட்டேன். தர்மத்தையும் பூமியையும் என் தம்பிகளுக்காக நான் அபேக்ஷிப்பது. ஸமுத்ரத்தால் சூழப்பட்ட பூமி என்றால் அடைய முடியாததன்று. அதர்மத்தாலே இந்த்ர பட்டம் வருவதையும் நான் விரும்பவில்லை. பரதன் நல்ல ஸ்வபாவமுள்ளவன்; நடந்ததைக்கேட்டு துக்கப்பட்டு என்னைப் பார்க்க வருகிறான். தாயான கைகேயியைக் கோபித்துக்கொண்டு அவளைக் கடுமையாய்ப்பேசி, தகப்பனாருக்கு நல்ல வார்த்தை சொல்லி, ராஜ்யத்தை எனக்குக் கொடுக்க வருகிறான். அவன் மனதாலேகூட எனக்கு அப்ரியத்தை நினைக்கமாட்டான். அவனைப்பற்றி ஸந்தேஹப்படுகிறாயே? முன்னாலே எதாவது அப்ரியத்தைச் செய்திருக்கிறானா? அவனிடத்தில் கடுமையாகப் பேசக்கூடாது. பேசினால் என்னைப் பேசினதாக ஆகும். ராஜ்யத்தில் ஆசையாலே நீ இப்படிப் பேசினால், பரதனைப்பார்த்து "ராஜ்யத்தை இவனுக்கு கொடு" என்று சொல்லுகிறேன். நான் சொன்னதைக்கேட்டு, அவன் அப்படியே செய்கிறேன் என்று சொல்லுவன்" என்று. இதைக்கேட்டு லக்ஷ்மணன் வெட்கம் அடைந்தான். ராமன் "இங்கே இரண்டு குதிரைகளையும், சத்ருஞ்ஜயம் என்கிற யானையையும் பார்க்கிறேன். ஆனால் தகப்பனாருடைய வெள்ளக்குடையை நான் பார்க்கவில்லை. எனக்குப் பெரிய ஸம்சயமுண்டாகிறது. மரத்திலிருந்து கீழே இறங்கு" என்று ராமன் சொல்ல, அப்படியேசெய்து லக்ஷ்மணன் ராமன் பக்கத்தில் அஞ்ஜலி செய்துகொண்டிருந்தான்.* (ஸ-97.)

(76) பரதன் ராமனுடைய ஆச்ரமத்துக்குள்ளே போய், அவனையும், லக்ஷ்மணனையும், ஸீதையையும் பார்த்து, ராமன் திருவடிகளில் விழ இச்சித்தான். ஆனால், ராமன் கிருஷ்ண

* நல்ல ஸ்வபாவமுள்ளவனையும் அயோக்யர்களின் ஸம்பந்தத்தாலே ஸாதுக்கள் ஸந்தேஹப்படுவார்கள். கைகேயியின் பிள்ளையாயிருந்தபடியாலே, பரதனை கௌஸல்யையும் குஹனும் பாத்வாஜரும் லக்ஷ்மணனும் ஸந்தேஹப்பட்டார்கள்.

ஜினத்தில் உட்கார்ந்துகொண்டு ஜடையைத் தரித்துக்கொண்டு முனிவேஷத்துடன் இருந்ததைப் பார்த்து அவன் திருவடிகளை அடையாமல் கீழே விழுந்து, "ஆர்ய" என்றுமாத்ரம் சொன்னான். மேலே சொல்லமுடியவில்லை. அவனையும் நமஸ்காரம் பண்ணின சத்ருக்னனையும் ராமன் கட்டிக்கொண்டு கண்ணீரைவிட்டான். குஹனும் ஸுமந்த்ரனும் வந்துசேர்ந்தார்கள். (ஸ-99.) ராமன் பரதனை மடியில் வைத்துக்கொண்டு, "உன் தகப்பனார் எங்கே இருக்கிறார்? நீ வனத்துக்கு வந்திருப்பதினாலே இதைக் கேட்கிறேன். அவர் உயிருடனிருந்தால் நீ இங்கு வரமுடியாததன்றோ. கேகயதேசத்துக்குப் போயிருந்த நீ வெகுதூரம் வந்திருக்கிறாய். இங்கே வந்ததற்கு என்ன காரணம்? ராஜா உயிருடன் இருந்து உன்னை இங்கே அனுப்பினாரா? அல்லது அவர் ஸ்வர்க்கம் அடைந்தாரா? அல்லது பலமுள்ளவர்களால் ராஜ்யம் அபஹரிக்கப்பட்டு நீ வந்திருக்கிறாயா? பிதாவுக்கு சுச்ரூஷை பண்ணிக்கொண்டிருக்கிறாயா? அவர் ஸுகமாயிருந்து ராஜஸூயம் முதலான யாகங்களைச் செய்துகொண்டிருக்கிறாரா? இக்ஷ்வாகுவம்சத்துக்குப் புரோகிதனான வஸிஷ்டருக்கு ஸரியாகப் பூஜை நடக்கிறதா? கௌஸல்யையும் ஸுமித்ரையும் ஸௌக்யமாயிருக்கிறார்களா? கைகேயி ஸுகமாய் ஸந்தோஷப்பட்டுக்கொண்டிருக்கிறாளா?" என்றும், பிறகு "ராஜ்யமும் கோசமும் ஸேனையும் மற்றவைகளும் க்ஷேமமாயிருக்கின்றனவா?" என்றும் கேட்டு, பரதனுக்கு ராஜநீதியை உபதேசித்தான். (ஸ-100.) இதைக் கேட்டு பரதன் "தர்மத்தைவிட்டு நழுவின எனக்கு ராஜதர்மத்தால் என்ன ப்ரயோஜனம்? நம்முடைய குலத்தின் ஆசாரப்படி மூத்தபிள்ளையிருக்கையில் இளையவன் ராஜாவாக ஆகிறதில்லை. ஆகையால், என்னுடன் அயோத்திக்குத் திரும்பிப்போய் அபிஷேகம் பண்ணிக்கொண்டு இந்தக் குலத்துக்கு க்ஷேமத்தைச் செய். நான் கேகய தேசத்திலும் நீ காட்டிலும் இருக்கையில், ராஜா பெரியோர்கள்கதியை அடைந்தார். எழுந்திரு, அவருக்குத் தர்ப்பணம் பண்ணு. இதை நானும் சத்ருக்னனும் முன்னாலே செய்துவிட்டோம்" என்று சொன்னான். (ஸ-101.)

(77) இதைக்கேட்டு ராமன் மூர்ச்சையடைந்தான். நினைவு திரும்பிவந்தபிறகு, "ராஜா ஸ்வர்க்கத்தை அடைந்தபிறகு

அயோத்யைக்கு நான் வந்து என்னசெய்கிறது? அவரால் விடப்பட்ட ராஜ்யத்தை எவன் ஆளுகிறது? என்னைப் பிரிந்த துக்கத்தாலே இறந்து, என்னாலே ஸம்ஸ்காரம் பண்ணப்படாதவருக்கு என்னாலே என்ன ஆகவேண்டியது? பரத! சத்ருக்னனுடன் கூட நீ அவருக்கு உத்தரக்கிரியை செய்தபடியால், நீ பாக்ய சாலி; வனவாஸம் முடிந்தபிறகும் நாதனில்லாத அயோத்யைக்குப் போக எனக்கு இஷ்டமில்லை.'' என்று புலம்பி, ஸீதையையும் லக்ஷ்மணனையும் பார்த்து "ஸீதாய்! உன் மாமனார் மரணம் அடைந்தார். லக்ஷ்மண! நீ உன் தகப்பனாரை இழந்தாய், பரதன் இந்த துக்க ஸமாசாரத்தைச் சொல்லுகிறான்" என்று சொன்னான். ராமனும் லக்ஷ்மணனும் ஸீதையுடன் மந்தாகினி நதிக்குப் போய், ஸ்நானம்செய்து, பிதாவுக்குத் தர்ப்பணம் செய்து, ஆச்ரமத்துக்குத் திரும்பிவந்தார்கள். அவர்கள் ஒருவர் ஒருவரைக் கட்டிக்கொண்டு அழுதுகொண்டிருந்த குரலைக் கேட்டு, பரதன் ராமனுடன் சேர்ந்துவிட்டான் என்று அறிந்த ஸைனியங்கள் எல்லாரும் ராமனைப் பார்க்க ஆச்ரமத்துக்குள் போனார்கள். ராமனும் அவர்களில் சிலரைக் கட்டிக்கொண்டும், சிலருடைய நமஸ்காரத்தைப்பெற்றுக்கொண்டும் அவரவர்களுக்குத் தகுந்தபடி நடந்துகொண்டான். (ஸ-102.) பிறகு, வஸிஷ்டரும் கௌஸல்யை முதலான தாயார்களும் ஆச்ரமத்துக்கு வந்தார்கள். வழியில் ராஜாவுக்கு ராமன் கொடுத்த புங்கங்காயால் செய்யப்பட்ட பிண்டங்களைப் பார்த்து, கௌஸல்யை, "நான்கு ஸமுத்ரங்களால் சூழப்பட்ட பூமியை முழுவதும் ஆண்டு மஹேந்த்ரனுக்கு ஸமனாக இருந்த ராஜா இந்தப் பிண்டங்களை எப்படிப் பெற்றுக்கொண்டான்? இதைப் பார்த்த என் மனது ஏன் வெடிக்கவில்லை. இதைக்காட்டிலும் மேலான துக்கம் எது?'' என்று புலம்பினாள். பிறகு ராமன் அவர்களைக்கண்டு எழுந்திருந்து, கௌஸல்யைக்கும் மற்றத் தாயார்களுக்கும் நமஸ்காரம் பண்ணினான். அப்படியே லக்ஷ்மணனும் ஸீதையும் செய்தார்கள். ஸீதையைக் கௌஸல்யைக் கட்டிக்கொண்டு, ஜனகராஜன் பெண்ணையும் தசரதன் மருமகளாயும் ராமன் பத்னியாயுமிருக்கிற இவள் ஜனமில்லாத காட்டில் துக்கத்தை அநுபவிக்கலாமா?'' என்று புலம்பினாள். எல்லாரும் வஸிஷ்டருக்கு நமஸ்காரம் பண்ணினார்கள். அவர் உட்கார்ந்தபின் எல்லாரும் உட்கார்ந்தார்கள். (ஸ-103.)

(78) ராமன் பரதனைப்பார்த்து "மரவுரியை உடுத்துக் கொண்டும் ஜடையைத் தரித்துக்கொண்டும், ராஜ்யத்தைவிட்டு நீ இங்கே வந்ததற்குக் காரணம் என்ன?" என்று கேட்க, பரதன் "ஸ்திரீயால் ஏவப்பட்டு நம்முடைய பிதா பெரிய பாபத்தைச் செய்திருக்கிறார். அஃது அவருடைய கீர்த்தியை நாசம் பண்ணி விட்டது. என் தாயார் ராஜ்யபலனை அடையாமல் விதவையாய், இப்போது சோகத்தால் பீடிக்கப்பட்டு, பிறகு மஹா கோரமான நரகத்தில் விழப்போகிறாள். நான் உன் வேலைக்காரன். அனுக்ரஹம் செய்யவேண்டும். இப்பொழுதே இந்த்ரனைப்போல ராஜ்யத்தில் அபிஷேகம் பண்ணிக்கொள். எல்லா ப்ரஜைகளும், விதவைகளான தாயார்களும், இதோ உன்னிடம் வந்திருக்கிறார்கள். வம்ச பரம்பரைப்படி ராஜ்யம் உனக்கு வந்திருக்கிறது. அதைப் பெற்றுக்கொள். அதில் அதர்மம் இல்லை. வேண்டியவர்களின் ஆசையை நிறைவேற்று" என்று ப்ரார்த்தித்து, அவன் திருவடிகளைப் பிடித்துக்கொண்டான். ராமன் அவனைக் கட்டிக் கொண்டு "நீ நல்ல குலத்தில் பிறந்தவன்; ஸத்துவ குணமுள்ளவன்; தேஜஸ்ஸு உடையவன்; நல்ல வ்ரதங்களை அநுஷ்டித்தவன். உன்னைப்போன்றவன் ராஜ்யத்துக்காக பாபத்தைச் செய்வனோ? உன்னிடத்தில் ஒரு தோஷத்தையும் சிறிதும் காணவில்லை. நீ உன் தாயாரைச் சிறு பிள்ளைத்தனமாய் நிந்திப்பது தகுந்த தன்று. பெரியோர்கள் தங்களுடைய பிள்ளைகளிடத்திலும் சிஷ்யர்களிடத்திலும் பார்யைகளிடத்திலும் தங்களிஷ்டப்படி நடக்கலாம் என்று சாஸ்த்ரம் சொல்லுகிறது. மற்றவர்களைப் போல நாமும் தகப்பனாருக்குப் பிள்ளைகளும் சிஷ்யர்களும் பார்யைகளுமானவர்கள் தாமே. இதை நீ அறியவேண்டும். என்னை வனத்தில் மரவுரியையும் க்ருஷ்ணாஜினத்தையும் தரித்துக் கொண்டு இருக்கும்படி செய்யவோ, அல்லது ராஜ்யத்திலிருக்கும் படி செய்யவோ, ராஜாவுக்கு அதிகாரமுண்டு. பிதாவினிடத்தில் எவ்வளவு கௌரவம் செய்யவேண்டியதோ, அவ்வளவு கௌரவம் தாயாரிடத்திலும் செய்யவேண்டும். பிதாவும் மாதாவும் 'நீ வனத்துக்குப் போ' என்று சொன்னார்கள். அதன்படி நடவாமலிருப்பது என்றால் எப்படி முடியும்? உனக்கு ராஜ்யத்தைக் கொடுத்திருக்கிறார். அதை நீ ஆளவேண்டியது. நான் மரவுரியை உடுத்துக்கொண்டு தண்டகாரண்யத்தில் வஸிக்கவேண்டியது.

இப்படி எல்லாருக்கும் தெரியும்படி நமக்குள்ளே விபாகத்தைச் செய்துவைத்துவிட்டு தகப்பனார் ஸ்வர்க்கலோகம்போய்விட்டார். அவர் கட்டளைப்படி நீ ராஜ்யத்தை அனுபவிக்கவேண்டியது" என்று சொன்னான். (ஸ-104.)

(79) மறுநாள் காலையில் மந்தாகினியில் ஸ்நானம்செய்து, எல்லாரும் உட்கார்ந்திருக்கையில், பரதன் ராமனைப் பார்த்து, "என் தாயாருக்கு ஸமாதானம் சொல்லி, எனக்குக் கிடைத்த ராஜ்யத்தை உனக்குக் கொடுக்கிறேன். அதை ஓர் இடையூறில்லாமல் அநுபவி. உன்னைத்தவிர எவனாலே ராஜ்யத்தை ஆளுவது முடியும்? குதிரையின் வேலையைக் கழுதையும், கருடன் வேலையை வேறு பக்ஷியும் எப்படிச் செய்யமுடியாதோ, அப்படியே நீ ஆளவேண்டிய ராஜ்யத்தை ஆளுவது என்னாலே முடியாது. 'உனக்குச் சக்தியில்லாவிட்டால் வேறொருவன் உதவியைக் கொண்டு ஆளக்கூடாதா' என்று கேட்கிறாயோ? அதுவும் தகுந்ததன்று. ஏனென்றால், எவன் பிறரைக்கொண்டு பிழைக்கிறானோ, அவன் பிழைப்பு தாழ்ந்த பிழைப்பு; எவனைக்கொண்டு மற்றவர்கள் பிழைக்கிறார்களோ, அவன் பிழைப்புத்தான் நல்ல பிழைப்பு. ஒருவன் மரம்வைத்து வளர்க்கிறான். அதில் புஷ்பம் உண்டாகிப் பழம் தோன்றாவிட்டால் அவனுடைய ஆசை நிறைவேறுகிறதில்லை. அப்படியே தகப்பனார் ஆசை நிறைவேறவில்லை* நீ ராஜ்யத்தில் இருப்பதை எல்லாரும் பார்க்கட்டும்" என்றுமறுபடியும் பிரார்த்தித்தான். அதை எல்லாரும் 'நல்லது நல்லது' என்று கொண்டாடினார்கள். இப்படித் துக்கப்பட்டுப் பேசின பரதனுக்கு ராமன் ஆறுதலைச் செய்து, "கைகேயியினால் ஏவப்பட்ட ராஜாவோ, நீயோ, நான் காட்டுக்கு வருவதற்குக் காரணம் அன்று. ஒருவனும் தன் இஷ்டப்படி நடக்க முடியாது. அவன் ஸ்வதந்திரன் அன்று. ஸ்வதந்திரமான தெய்வம், ஒருவனை இங்கும் அங்கும் இழுக்கிறது. பிதா இறந்ததைப்

* 'தசரதன் மரம் வைத்தவன்; நீ அவனால் வளர்க்கப்பட்டவன்; உனக்கு அபிஷேகம்செய்யப் பண்ணின ப்ரயத்னம் மரத்தின் புஷ்பம்; ராஜ்யத்தை அநுபவிப்பது அதின் பழம்; இந்தப் பழம் கிடைக்காவிட்டால், தசரதனுடைய இஷ்டம் நிறைவேறுமா?' என்பது இந்த உபமானத்தால் காட்டப்படுகிறது.

பற்றித் துக்கப்பட நியாயமில்லை. சேர்த்த ஸொத்துக்கு நாச மும், உயர ஏறினவனுக்குக் கீழே விழுவதும், சேர்க்கைக்குப் பிரி வும் கட்டாயமுண்டாகும். அப்படியே பிறந்தவனுக்கு மரணம் நிச்சயம். பழுத்தபழம் மரத்திலிருந்து விழாதா? நம்முடைய பிதா ஜனங்களை நன்றாய்ப் பரிபாலனம்பண்ணி, அநேக யாகங் களைச் செய்து, ஸ்வர்க்கத்தை அடைந்திருக்கிறார். அவரைப் பற்றித் துக்கப்படக் காரணமில்லை. நான் காட்டிலிருந்து அவர் சொன்னதை எப்படிப் பரிபாலனம் செய்யவேண்டுமோ, அப் படியே நீயும் ராஜாவாக இருந்து அவர் சொன்னதைச் செய்ய வேண்டும்" என்று பதில் சொன்னான். (ஸ-105.) மறுபடி யும் பரதன், "உன்னைப்போல உலகத்தில் யார் இருக்கிறார்கள்? உனக்குத் துக்கம் வருத்தத்தை உண்டுபண்ணுகிறதில்லை. ஸுகம் உன்னைச் சந்தோஷப்படுத்துவதில்லை. நீ எல்லாம் அறிந்தவன் என்பதைப் பெரியோர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறா ர்கள். ஸம்சயமிருந்தால் அவர்களைக் கேட்கிறாய். பிதா இறந்த தைப்பற்றி நான் துக்கப்படுவதாக எண்ணிப் பேசினாய். எனக்கு அந்தத் துக்கமே இல்லை. இறந்தவனிடத்தில் எப்படி த்வேஷமில்லையோ, அப்படியே ஜீவித்திருக்கிறவனிடத்திலும் த்வேஷமில்லாமலும், இல்லாத வஸ்துவில் எப்படி ஆசையுண்டா காதோ, அப்படியே இருக்கும் வஸ்துவிலும் ஆசையுண்டாகா மலும் எவன் இருக்கிறானோ, அவனுக்கு எதினால் தாபமுண் டாகும்? 'எதற்காகத் துக்கப்படுகிறாய்' என்று கேட்கிறாயோ, சொல்லுகிறேன். நீ ராஜ்யத்தைவிட்டு விலகினதும் உன்னை விட்டுப் பிரிந்ததும் என்னைத் துன்பப்படுத்துகின்றன" என்று சொல்லி, "நீ அயோத்திக்குத் திரும்பி வராவிட்டால், 'நானும் உன்னுடன்கூட வருகிறேன்' என்று சொன்னான். மற்றவர் களும் அப்படியே ராமனைப் பிரார்த்தித்தார்கள். ஆனால், ராமன் மனது கொஞ்சமும் மாறவில்லை. (ஸ-106.) ராமன், தன் னுடன்கூட இருப்பதாகச் சொன்ன பரதனைப் பார்த்து, "தம்பி! உன் தாயாரை ராஜா விவாஹம் பண்ணிக்கொள்ளும் காலத்தில், உன் பாட்டனால் வேண்டப்பட்டு, உன் தாயாருக் குப் பிறக்கும் பிள்ளைக்கு ராஜ்யத்தைக் கொடுப்பதாக ஒப்புக் கொண்டார். சண்டையில் தனக்கு உபகாரம் செய்த உன் தாயாருக்கு அவர் இரண்டு வரங்களைக் கொடுத்திருந்தார். ஒரு

வரத்தாலே எனக்கு வனவாஸத்தையும், மற்றொன்றால் உனக்கு ராஜ்யத்தையும் கொடுத்திருக்கிறார். அவர் சொன்னதை நாம் இருவரும் நிறைவேற்றாவிட்டால், அவருக்கு நரகவாஸம் ஏற்படும். எவன் தகப்பனாரை நரகத்திலிருந்து ரக்ஷிக்கிறானோ, அவன்தான் புத்ரன் என்று சொல்லப்படுகிறான். நாமிருவரும் அவர் சொன்னதைச் செய்து அவரை ரக்ஷித்து, புத்ரன் என்கிற பெயருக்குத் தகுந்தவர்களாக ஆகவேண்டாமா? நான் இங்கேயே இருக்கிறேன். நீ அயோத்திக்குப்போய் ராஜாவாக அபிஷேகம் பண்ணிக்கொள்" என்று சொன்னான். (ஸ-107.)

(80) இப்படிப் பரதனுக்கு ஆறுதல் சொல்லிக்கொண்டிருந்த ராமனைப் பார்த்து, ஜாபாலி என்கிற ப்ராம்மணன், "ராமா! இவ்விதமான புத்தியை விட்டுவிடு. ஸாதாரண மனிதன்போல் பேசுகிறாய். எவனுக்கு எவன் பந்து? எவன் எந்த ஸாதனத்தாலே எதை அடையவேண்டியது? ஜீவன் தனியாகவே பிறக்கிறான்; தனியாகவே மரிக்கிறான். ஆகையால், எவன் தாய் என்றும் தகப்பன் என்றும் ஒருஜந்துவினிடத்தில் பற்றுதல்வைக்கிறானோ, அவன் பித்துப்பிடித்தவன். ப்ரயாணம்போகிற ஒருவன் ஒரு க்ராமத்தில் இருந்து, மறுநாள் அதை விட்டுவிட்டு, வேறு க்ராமத்துக்குப்போகிறான். இப்படியே தாயும் தகப்பனும், வீடும் த்ரவ்யமும். ஒரு ஜந்து இருப்பதற்கு ஓரிடம்மாத்ரம். நல்ல புத்தியுள்ளவன் அவைகளிடத்தில் பற்றுள்ளவனாயிருக்கமாட்டான். நீ எண்ணுகிறபடி, தசரதன் உனக்குத் தகப்பனாயிருக்கட்டும். அவனிடமிருந்து வந்த ராஜ்யத்தை விட்டுவிட்டு, தாபஸனாயிருப்பது தகுந்ததன்று. அதில் வெகு துக்கமிருக்கிறது. எல்லாம் ஸம்ருத்தமாயிருக்கிற அயோத்யைக்குப்போய் அபிஷேகம் பண்ணிக்கொள். இப்படிச் செய்வதை அந்த நகரம் எதிர்பார்க்கிறது. இந்திரன் ஸ்வர்க்கத்தில் போகங்களை அநுபவிப்பதுபோல், ராஜபோகங்களை அநுபவித்துக்கொண்டு, அயோத்யையில் ஸுகமாயிரு. தசரதனுக்கும் உனக்கும் ஸம்பந்தமில்லை. அவன் வேறு நீ வேறு. ஆகையால், நான் சொன்னதைச் செய். எவர்கள் கையிலிருக்கிற ஸுகத்தைவிட்டு, தர்மத்துக்காகவும் அர்த்தத்துக்காகவும் பாடுபடுகிறார்களோ, அவர்களைப் பற்றி நான் துக்கப்படுகிறேன். அவர்களுக்கு இங்கேயும் துக்கம்; இறந்தபிறகும் துக்கம். பித்ருக்களுக்கு அஷ்டகை என்கிற ச்ராத்தத்தைச்

செய்யவேண்டும் என்று முயற்சி செய்கிறவன் அன்னத்தை வீணாக்குகிறான். இறந்தவன் எதைச் சாப்பிடுவன்? ஒருவன் சாப்பிட்ட அன்னம் வேறொருவன் உடம்பில் சேருவதானால், பிரயாணம் போயிருக்கிறவனை உத்தேசித்து வேறொருவனுக்கு அன்னம் போடலாமே. புத்திமான்கள் தங்களுக்குப் பொருள் கிடைப்பதற்கு வழியாக "யாகம் செய், கொடு, தேவதைகளுக்கு ஆராதநம் பண்ணு, தபஸ பண்ணு, ஸொத்தை விட்டுவிடு" என்று புஸ்தகங்களை எழுதியிருக்கிறார்கள். எது ப்ரத்யக்ஷமோ அதைச்செய் ; அப்படியல்லாததை விட்டுவிடு" என்று சொன்னார். (ஸ-108.) இதைக்கேட்டு ராமன், "நீர் என் பிரியத்துக்காகச்சொன்னது செய்யத்தகுந்ததுபோல் தோன்றினாலும், செய்யத் தகுந்ததன்று. அஃது அநுகூலம்போல் தோன்றினாலும், அஃது அநுகூலம் அன்று. வேதத்துக்கு விருத்தமான ஆசாரத்தை விதிக்கிற மதத்தைக்கொண்டு வேதத்தால் ஏற்பட்ட எல்லைகளைக் கடந்து, எவன் பாபத்தைச் செய்கிறானோ, அவன் பெரியோர்களின் வெகுமானத்தை அடையான். அவனுக்குப் பரலோகமும் கிடையாது. நான் சொன்ன ப்ரதிஜ்ஞையை விட்டுவிட்டு நீர் சொன்னபடி நடந்தால், யாருக்கு எந்த தர்மத்தை நான் உபதேசிப்பேன்? எந்த உபாயத்தால் ஸ்வர்க்கம் அடைவேன்? இந்த உலகம் முழுவதும் ஏற்கனவே மனதுபோனபடி நடக்கிறது. நீ சொன்னபடி நான் செய்தால் அது பலப்படுமே. ஏன் என்றால், எப்படி ராஜாக்கள் இருக்கிறார்களோ, அப்படியே அவர்களின் ப்ரஜைகளுமிருப்பார்கள். ஸத்யமே தயை; அநாதியான ராஜ வ்ருத்தமும் ஸத்யம்; ஆகையால் ராஜ்யமும் ஸத்யம்; லோகம் ஸத்யத்தில் நிலைநிற்கிறது; ருஷிகளும் தேவர்களும் ஸத்யத்தை வெகுமானம் பண்ணுகிறார்கள்; ஆகையால், ஸத்யத்தையே பேசுகிறவன் உயர்ந்த ஸ்தானத்தை அடைகிறான்; பொய்சொல்லுகிறவனைக்கண்டு ஜனங்கள் பாம்பைக் கண்டதுபோல் நடுங்குகிறார்கள்; இந்த உலகத்தில் ஸத்யம் உயர்ந்த தர்மம்; ஸ்வர்க்கத்துக்கும் அது காரணம். ஸத்யமே ஈசுவரன்; லக்ஷ்மியும் ஸத்யத்தையே பற்றிநிற்கிறாள்; எல்லாவற்றுக்கும் ஸத்யமே மூலம்; ஸத்யத்தைக் காட்டிலும் உயர்ந்த பதவியில்லை; தானம், யாகம், ஹோமம், தபஸ, வேதம் ஆகிய எல்லாவற்றிற்கும் ஸத்யம் ஆதாரம்; ஆகையால் ஒருவன் ஸத்

யத்தையே அநுஷ்டிக்கவேண்டியது. ஆகையால் என் பிதா சொன்னதை நான் எந்தக்காரணத்தாலே செய்யாமலிருக்கலாம்? நான் பிரதிஜ்ஞை பண்ணினதைச் செய்கிறவன். அவர் சொன்னதைச் செய்வேன் என்று ப்ரதிஜ்ஞை பண்ணியிருக்கிறேன. ராஜ்யத்தில் ஆசையாலோ, உம்முடைய வார்த்தையைக் கேட்டு மதிமயக்கத்தாலோ, அல்லது அஜ்ஞானத்தாலோ, நான் ஸத்யத்தைத் தவறமாட்டேன்" என்று கோபத்துடன் பதில் சொன்னன், ஜாபாலி, "நான் நாஸ்திகன் அன்று; நாஸ்திகனைப் போல் பேசவில்லை. பரலோகம் இல்லை என்றும் சொல்லவில்லை. அந்தந்தக் காலத்துக்குத் தகுந்தபடி நாஸ்திகனுகவும் ஆஸ்திகனுகவும் இருப்பேன். இப்போது நாஸ்திகனுயிருக்கும் காலம் வந்திருக்கிறது. நீ அயோத்யைக்குத் திரும்பிப் போவதற்காகவும் பரதனுக்குத் துக்கம் போவதற்காகவும் இப்படி நான் பேசினது" என்று சொன்னர். (ஸ-109.)

(81) வஸிஷ்டர், இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த ராஜாக்களை வரிசையாகச் சொல்லி, அதில் மூத்தபிள்ளையே ராஜாவாக இருந்திருப்பதைத் தெரிவித்து, அந்த தர்மத்தை ராமன் கெடுக்கக் கூடாது என்று உபதேசம் செய்தார். (ஸ-110.) மறுபடியும் வஸிஷ்டர் உலகத்தில் ஒருவனுக்கு மூன்றுபேர்கள் குருக்கள்—ஆசார்யன், தகப்பன், தாய். ஆசார்யன் ஜ்ஞானத்தைக் கொடுக்கிறன், தகப்பன் அவனை உண்டுபண்ணுகிறன். தகப்பன் சொன்னதைக் கேட்பதுபோல் மற்ற இரண்டு குருக்கள் சொன்னதையும் கேட்கவேண்டும். உன் தகப்பனுருக்கும் உனக்கும் ஆசார்யனுன நான் உன்னைத் திரும்பி அயோத்யைக்குப்போய் அபிஷேகம் பண்ணிக்கொள்ளும்படி சொல்லுகிறேன். என் வார்த்தைப்படி நீ நடக்கவேண்டும். உன் தாயார் வயது சென்றவள். தர்மம் செய்வதே அவளுக்கு ஸ்வபாவம். அவளும் அப்படியே சொல்லுகிறள். பரதனும் உன்னை வேண்டுகிறன். எல்லோரும் சொன்னதை நீ செய்தால், பெரியோர்களின் மார்க்கத்திலிருந்து நீ விலகியவனுகமாட்டாய். உனக்கு ஆத்மாவான பரதனுக்கும் திருப்தி உண்டாகும்" என்று சொன்னர். ராமன், "பிள்ளைவிஷயத்தில் தாய் தகப்பனுர்கள் என்ன செய்திருக்கிறர்களோ, அதற்குப் பதில் செய்யமுடியாது. எல்லாத் தர்மத்தையும் செய்வதற்கு ஸாதனமான உடம்பை அவனுக்குக்

கொடுத்திருக்கிறார்கள்; பிறகு வளர்க்கிறார்கள்; பிரியமாகப் பேசுகிறார்கள். ஆகையால் அவர் சொன்னதைச் செய்யாதிருக்கமுடியாது. தசரதன் ராஜா; எனக்குத் தகப்பனார். அவருக்கு எதை நான் செய்கிறேன் என்று ப்ரதிஜ்ஞை பண்ணினேனோ, அது பொய்யாகக்கூடாது" என்று வஸிஷ்டருக்குப் பதில் சொன்னான். இதைக்கேட்டு பரதன் ஸுமந்த்ரனைப் பார்த்து, "பூமியில் சீக்கிரம் தர்ப்பைப்புல்லைப் பரப்பு. என் தமயன் கிருபைபண்ணி திரும்பிவரும்வரையில் நான் ஆஹாரமில்லாமலும் ஒருவரையும் பாராமலும் முகத்தை மூடிக்கொண்டு அவன் முன்னால் படுத்துக்கொள்ளுகிறேன்" என்று சொன்னான். ஸுமந்த்ரன், ராமனுடைய அபிப்ராயத்தையறிய, அவனைப் பார்த்துக்கொண்டு, அப்படிச் செய்யவில்லை. பரதன் தானே புல்லைக்கொண்டுவந்து பூமியில் பரப்பி, அதில் படுத்துக்கொண்டான். அவனைப் பார்த்து ராமன், "ப்ராம்மணனன்றோ ஒருபக்கமாகப் படுத்துக்கொண்டு மற்றவர்களை நிர்ப்பந்தப்படுத்தலாம். ராஜாக்கள் இதைச் செய்வதற்கு விதியில்லை. இந்தக் கடுமையான வ்ரதத்தை விட்டுவிடு; எழுந்திரு. சீக்கிரம் அயோத்யைக்குப் போ" என்று சொன்னான். பரதன் உட்கார்ந்திருந்தபடியே வந்திருந்த ஜனங்களைப் பார்த்து, "நீங்கள் ஏன் ராமனை வேண்டவில்லை" என்று கேட்க, அவர்கள், "ராமன் நன்றாய்ச் சொல்லுகிறான். அவன் சொன்னதைச் செய்கிறவன். அவன் தகப்பன் வார்த்தையில் நிலையாய் நிற்கிறான். ஆகையால் அவனைத் திரும்பிவரும்படி நாங்கள் சொல்ல இடமில்லை" என்று சொன்னார்கள். இதைக்கேட்டு ராமன், "பரதா! தர்மத்தை அறிந்த ஸுஹ்ருத்துக்களுடைய வார்த்தையைக் கேள். நான் சொல்வதையும் ஜனங்கள் சொல்வதையும் நன்றாய் ஆராய்ந்து பார். எழுந்திரு * என்னையும் ஜலத்தையும் தொடு" என்று சொன்னான். பரதன் எழுந்திருந்து சொன்னபடி செய்து "மந்திரிகளும் ஸேனையிலிருப்பவர்களும், மற்றவர்களும் கேட்க வேண்டும். நான் தகப்பனாரிடம் ராஜ்யத்தை வேண்டவில்லை. தாயாரையும் கேட்கும்படி நான் சொல்லவில்லை. நான் தமைய

---

* ஜலத்தைத் தொடுவது செய்யத்தகாத ப்ராயோபவேசத்தைச் செய்வதற்கு ப்ராயச்சித்தம். ராமனைத் தொடுவது மேல் இப்படிச் செய்யாதிருப்பதற்கு சபதம்.

னைக் காட்டுக்குப் போகும்படியும் சொல்லவில்லை. தகப்பனார் சொன்னதைச் செய்வதும் இங்கே இருப்பதும் யாராவது செய்ய வேண்டுமானால், நானே இங்கே பதினான்கு வருஷமிருப்பேன்" என்று சொன்னான். ராமன் இதைக்கேட்டு ஆச்சரியமடைந்து, "தகப்பனார் எனக்கு வனவாஸத்தையும் பரதனுக்கு ராஜ்யத்தையும் கொடுத்திருக்கிறார். அதை மாற்றுவதற்கு எனக்கும் அதிகாரமில்லை; பரதனுக்கும் அதிகாரமில்லை. பரதனை எனக்குப் பிரதிநிதியாகப்பண்ணுவது தகுந்ததன்று. கைகேயி கேட்டதும் தகப்பனார் அதைச் செய்ததும் தகுந்தவைகளே. பரதன் பொறுமையுள்ளவன் என்றும், பெரியோர்கள் சொன்னதைக் கேட்கிறவன் என்றும் எனக்குத் தெரியும். அவன் தகப்பனார் சொன்னபடி செய்தால் எல்லாம் நல்லதாய் முடியும்.* நான் வனத்திலிருந்து திரும்பிவந்து அவனுடன்சேர்ந்து பூமிக்கு ராஜாவாயிருப்பேன்.§ அப்போது தகப்பனார் சொன்னதை நான் செய்ததாக ஆகும். (பரதனைப் பார்த்து) பரதா! அதுவரையில் பிரஜைகளைப் பாலனம்பண்ணி அதனாலே தகப்பனாரை அஸத்யத்திலிருந்து விடுவிப்பாய்" என்று சொன்னார். (ஸ-111.)

---

* பரதன் தன் ஸ்வரூபத்தை அறிந்த ஜீவன். தாய் முதலான பந்துக்கள் விஷயங்களை ஸம்பாதித்துக் கொடுத்து 'இவைகளை அனுபவி' என்று சொல்ல, அவன் அதை மறுத்துத் தன்னையும் அந்த விஷயங்களையும் பகவானுடைய சொத்துக்கள் என்று அவனிடம் கொடுக்கிறான். பிறகு அவைகளை அவன் அநுபவிப்பதும், அது தன்னுடைய போகத்துக்காக அன்று. பகவானுடைய நியமனத்தாலும் அவனுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணவேண்டியது என்கிற எண்ணத்தாலுமே. இது தான் சேஷனாயிருப்பவனின் நிலை.

§ ராமன் பதினான்கு வருஷங்கள்முழுவதும் வனத்திலிருப்பதாகத் தீர்மானம் செய்தபடியால், பித்ருவாக்ய பரிபாலனம் செய்ததாக ஆகிறது. பதினான்கு வருஷம் கழிந்து திரும்பிவந்து பூமிக்கு ராஜாவாக இருப்பதை ஒப்புக்கொண்டபடியால் வஸிஷ்டரும் கௌஸல்யையும் முன் வேண்டினதையும், பரதன் சரணாகதிபண்ணி பிரார்த்தித்ததையும் செய்ததாக ஆய்விட்டது. வனத்தில் பதினான்கு வர்ஷங்கள் இருக்கவேண்டியதாகையால் பாதுகைவழியாக ராஜ்யம் ஒப்புக்கொள்ளப்பட்டது. பரதன் உடனே திரும்பி அயோத்யைக்கு வரும்படி வேண்டின அம்சம் நிறைவேறாததற்குக் காரணம், பித்ருவாக்ய பரிபாலனமும், தேவர்கள் முன்னால் பண்ணின சரணாகதியும், அதன்படி ராவணன் முதலான ராக்ஷஸர்களை ஸம்ஹாரம் செய்ய ஒப்புக்கொண்டதுமாம். அந்த வியாபாரம் முடிகிறவரையில் பரதன் சரணாகதிக்குப் பலம் தாமதித்தது.

(82) அப்போது தேவர்களும் ருஷிகளும் சேர்ந்துவந்து ராவணன் வதத்தை விரும்பியவர்களாய் "பரதா! உன் தகப்பனார் வார்த்தை நிறைவேறவேண்டுமென்று உனக்கு எண்ணமிருந்தால், ராமன் சொன்னதை ஒப்புக்கொள். ராமன் தன் பிதாவின் கடனைத் தீர்த்தவனாகவேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம். கைகேயியினுடைய கடனைத் தீர்த்தபடியால், தசரதன் ஸ்வர்க்கமடைந்தார்" என்று சொல்லிப் போய்விட்டார்கள். பரதன் மறுபடியும் தன்னாலே ராஜ்யத்தை ரக்ஷிக்கமுடியாது என்றுசொல்லி, ராமன் திருவடிகளில் விழுந்தான். ராமன் தன் பிரதிஜ்ஞையை விடமுடியாது என்று முன்போல் சொல்ல, பரதன், வஸிஷ்டருடைய ஆலோசனையைக் கேட்டு, தங்கக்கட்டுக்கட்டிய பாதுகைகளை எதிரில் வைத்து, "பாதுகைகளின்மேலே ஏறு. இவைகள் எல்லா உலகங்களுடைய யோகக்ஷேமங்களைச் செய்யும்"* என்று ராமனைப் பிரார்த்தித்தான். ராமனும் அவைகளில் ஏறி இறங்கி, பரதனுக்குக் கொடுத்தான். பரதன் பாதுகைகளுக்கு நமஸ்காரம் செய்து ராமனைப் பார்த்து, "ஜடையையும் மரவுரியையும் தரித்துக்கொண்டும் காய் கிழங்குகளைச் சாப்பிட்டுக்கொண்டும் நீ திரும்பிவருவதை எதிர்பார்த்துக்கொண்டும் நகரத்துக்கு வெளியில் பதினான்கு வருஷம் இருப்பேன். ராஜ்யபரிபாலனமாகிய சுமையைப் பாதுகைகளிடத்தில் வைக்கிறேன். பதினான்கு வர்ஷங்கள் முடிந்ததும் நீ வராமல் ஒருநாள் ஆனாலும் அக்னியில் விழுவேன்" என்று சொல்லி ராமனைப் பிரதக்ஷிண நமஸ்காரம்பண்ணிப் புறப்பட்டான். ராமன் அவனையும் சத்ருக்னனையும் ஆலிங்கனம் பண்ணி, அவர்களுக்கும் தாய்மார்களுக்கும் மற்றவர்களுக்கும் விடைகொடுத்து, தன் பர்ணசாலைக்குள் போனான். (ஸ-112)

(83) பரதன் பாதுகைகளைத் தலையில் வைத்துக்கொண்டு ஸேனையுடன் புறப்பட்டு, சித்ரகூடமலையை ப்ரதக்ஷிணம்செய்து, பரத்வாஜர் ஆச்ரமத்துக்குப்போய், நடந்தவைகளை அவருக்குச் சொல்லி, அவரை நமஸ்காரம்பண்ணி, விடைபெற்றுக்கொண்டு, யமுனையையும் கங்கையையும் தாண்டி, ச்ருங்கிபேரபுரம்போய், அதிலிருந்து அயோத்யைக்குச் சென்றான். (ஸ-113.) அவ்வி

---

* யோகம் என்பது கிடைக்காதது கிடைப்பது. க்ஷேமம் என்பது கிடைத்ததை ரக்ஷிப்பது.

டத்தில் தாய்மார்களை இருக்கும்படிசெய்து, தான் சத்ருக்னனுடன் நந்திக்கிராமத்துக்கு வந்து, பாதுகைகளுக்கு அபிஷேகம் செய்து, தான் முனிவேஷம்பூண்டு பாதுகைகளுக்கு வேலைக்காரனாய், எந்தக் காணிக்கை வந்தாலும் அதைப் பாதுகைகளிடம் தெரிவித்து, தான் அவைகளின் அநுமதியைப் பெற்றுக்கொண்டு ராஜ்யத்தைப் பரிபாலநம் பண்ணிக்கொண்டிருந்தான். (ஸ-114-115)

(84) பரதன் திரும்பிப் போனபிறகு, சித்ரகூடத்திலிருந்த ருஷிகள் வேறு ஆச்ரமத்துக்குப் போவதில் ஆசையுள்ளவர்களாய் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டிருந்ததைப் பார்த்து, ராமன், 'தன்னாலாவது, லக்ஷ்மணனாலாவது, ஸீதையாலாவது ஏதாவது அபராதம் செய்யப்பட்டதா?' என்று கேட்டான். அவர்களில் பிரதானமானவர் "நீ ஸந்தேஹப்படுவது ஒன்றுமில்லை. நீ இங்கே வந்ததுமுதல் ராவணன் தம்பியான கரன் என்கிற ராக்ஷஸன் எங்களைப் பலவிதமாய்த் துன்பப்படுத்துகிறான். ஆகையால் இதைவிட்டு வேறு ஆச்ரமத்துக்குப் போகிறோம். இஷ்டமானால் நீயும் கூட வா" என்றார். ராமன் அவர்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டு, தன் ஆச்ரமத்துக்குத் திரும்பிவந்தான். (ஸ-116.) ருஷிகள் போனபிறகு, ராமன் பரதனுடைய நினைவும் தாய்மார்களின் நினைவும் அடிக்கடி வரும் என்றும், பரதனுடைய ஸேனையால் ஆச்ரமம் அலங்கோலமாகி விட்டது என்றும், ஆகையால் அங்கேயே இருப்பது தகுந்ததன்று என்றும் எண்ணி, அதை விட்டுவிட்டு, முதலில் அத்ரியின் ஆச்ரமத்துக்குப்போனான். அந்த ருஷியை நமஸ்காரம் செய்து, அவர்செய்த ஆதித்யத்தைப் பெற்றுக்கொண்டான். பிறகு ருஷி தன் பத்னியான அநஸூயையின் பெருமையைச் சொல்லி, அவளிடம் ஸீதையை அனுப்பும்படி சொன்னார். ராமனும் அப்படியே செய்தான். ஸீதையும், அநஸூயையிடம் போய், அவளுக்கு நமஸ்காரம்செய்ய, அவளும், "பதிவ்ரதையின் தர்மத்தைக் கவனமாய் நடத்துகிறாயா? ஸீதேயே! பந்துக்களையும் அஹங்காரத்தையும், ஸம்பத்தையும் விட்டுவிட்டு வனத்தில் வஸிக்கிற ராமனை அநுஸரித்து நடக்கிறாயா? பர்த்தா நகரத்திலிருந்தாலும் வனத்திலிருந்தாலும், நல்லவனாயிருந்தாலும் கெட்டவனாயிருந்தாலும், அவனை எந்த ஸ்திரீ பிரியமான பர்த்தாவாக எண்ணுகிறாளோ, அவளுக்கு மிகுந்த க்ஷேமத்தைக்கொடுக்கும்

உலகங்கள் உண்டு" என்று சொல்லி, ஸீதையைக் கொண்டாடினாள். (ஸ-117.) இதைக்கேட்டு ஸீதை "விவாஹ காலத்தில் என் தாயாரும், காட்டுக்குப் புறப்படும்போது என் மாமியாரும் நான் பர்த்தாவிடம் எப்படியிருக்கவேண்டும் என்பதை உபதேசித்தார்கள். அவர்கள் சொன்னபடி நடந்துகொண்டிருக்கிறேன். ராமனுடைய குணங்களைப்பார்த்தும் நான் வேறுவிதமாயிருக்க முடியுமோ?" என்று பதில் சொன்னாள். அநஸூயை ஸந்தோஷப்பட்டு, வேண்டிய வரனைக் கொடுப்பதாகச் சொல்ல, ஸீதை "உன்னுடைய அநுக்ரஹத்தினால் எல்லாம் ஏற்கனவே கிடைத்திருக்கிறது" என்று பதில் சொன்னாள். அநஸூயை அவளுக்கு உயர்ந்த மாலையையும், வஸ்திரத்தையும், ஆபரணங்களையும், சந்தனத்தையும் கொடுத்து, "இந்த சந்தனத்தைப் பூசிக்கொண்டிருந்தால், இதனுடைய சோபையால் பர்த்தாவுக்கு உன்மீது அன்பு உண்டாகும்" என்று சொன்னாள். அவைகளை ஸீதை பெற்றுக்கொண்டு, அநஸூயை கேட்டபடி தான் பிறந்ததையும், தன் ஸ்வயம்வரத்தையும், தன்னை ராமன் பாணிக்ரஹணம் பண்ணினதையும் விரிவாய்ச் சொன்னாள். அதைக்கேட்டு அநஸூயை ஸந்தோஷப்பட்டாள். (ஸ-118.) அன்று ராத்திரி ராமன் அந்த ஆச்ரமத்திலிருந்து, அங்கிருந்த தபஸ்விகளாலே, ராக்ஷஸர்களிடமிருந்து ரக்ஷிக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கப்பட்டவனாய், அவர்கள் காண்பித்த வழியாகத் தண்டகாரண்யத்துக்குள் ப்ரவேசித்தான். (ஸ-119.)

---

அயோத்யாகாண்டம் முற்றிற்று.

---

# ஆரண்யகாண்டம்.

(85) ராமன் ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் தண்டகாரண்யத்தில் ப்ரவேசித்து, அங்கிருந்த தாபஸர்களின் ஆச்ரமங்களைப் பார்த்தான். தாபஸர்கள் ராமனையும் ஸீதையையும் லக்ஷ்மணனையும் ஒரு பர்ணசாலையில் இருக்கும்படி செய்து, அதிதி பூஜையைச்செய்து பின்வருமாறு சொன்னார்கள் :—

𑌤𑍇 𑌵𑌯𑌂 𑌭𑌵𑌤𑌾 𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌃 𑌭𑌵𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌵𑌾𑌸𑌿𑌨𑌃 ।
𑌨𑌗𑌰𑌸𑍍𑌥𑍋 𑌵𑌨𑌸𑍍𑌥𑍋 𑌵𑌾 𑌤𑍍𑌵𑌂 𑌨𑍋 𑌰𑌾𑌜𑌾 𑌜𑌨𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ॥
𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌦𑌣𑍍𑌡𑌾 𑌵𑌯𑌂 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌜𑌿𑌤𑌕𑍍𑌰𑍋𑌧𑌾 𑌜𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 ।
𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌵𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍍𑌵𑌯𑌾 𑌶𑌶𑍍𑌵𑌦𑍍𑌗𑌰𑍍𑌭𑌭𑍂𑌤𑌾𑌸𑍍𑌤𑌪𑍋𑌧𑌨𑌾𑌃 ॥

(ஸ-1, 19, 20.)

உன்னுடைய தேசத்தில் வஸிக்கிற நாங்கள் உன்னாலே ரக்ஷிக்கத் தகுந்தவர்கள். (இயற்கையாகவே) எல்லா ஜனங்களுக்கும் சேஷியாயிருக்கிறவனே! நீ நகரத்தில் (ஸிம்மாஸனத்தில்) இருந்தாலும், காட்டிலிருந்தாலும் எங்களுக்கு நீ ராஜா ; ரக்ஷிக்க அதிகாரமுள்ளவன். நாங்கள் இந்திரியங்களை ஜயித்து, கோபத்தை அடக்கி, சாபம் கொடுப்பது என்கிற தண்டத்தை விட்டுவிட்டோம். ஆகையால் உன்னாலே எப்போதும் நாங்கள் ரக்ஷிக்கத் தகுந்தவர்கள். தாயார் வயிற்றிலிருக்கும் சிசுவைப்போன்றவர்கள்; எங்கள் தபஸே எங்களுக்குத் தனம். கர்ப்பத்தை தன் தாயார் ரக்ஷிப்பதுபோல் நீ எங்களை ரக்ஷிக்கவேண்டியது.* (ஸ-1.)

(86) மறுநாள் ஸூரியஉதயத்தில் தாபஸர்களிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு, ராமன் காட்டுக்குள்ளே பிரவேசித்தான். அப்போது விராதன் என்கிற ஒரு ராக்ஷஸனைக் கண்டார்கள். அவன் ஸீதையைத் தூக்கிக்கொண்டு, “இவள் எனக்கு மனைவியாக இருக்கப்போகிறாள் ; உங்களைக் கொன்று உங்கள் ரக்தத்

---

* தபஸ் என்பது பிரபத்தி என்கிற உபாயம். இதைச்சொல்லியிருப்பதாலே மோக்ஷம் கொடுப்பதாகிய ரக்ஷணத்தை நீ செய்யவேண்டியது என்பது ருஷிகளின் கருத்து.

தைப் பாரம்பண்ணப்போகிறேன்" என்று சொன்னான். இதைக் கேட்டு ராமன் சோகத்தை அடைந்து,

𑌯𑌦𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑌮𑌸𑍍𑌮𑌾𑌸𑍁 𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 𑌵𑌰𑌵𑍃𑌤𑌂 𑌚 𑌯𑌤𑍍 ।
𑌕𑍈𑌕𑍇𑌯𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍁 𑌸𑍁𑌸𑌂𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌮𑌦𑍍𑌯𑍈𑌵 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣 ॥
𑌯𑌾 𑌨 𑌤𑍁𑌷𑍍𑌯𑌤𑌿 𑌰𑌾𑌜𑍍𑌯𑍇𑌨 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑍇 𑌦𑍀𑌰𑍍𑌘𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑍀 ।
𑌯𑌯𑌾𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌹𑌿𑌤𑌃 𑌪𑍍𑌰𑌸𑍍𑌥𑌾𑌪𑌿𑌤𑍋 𑌵𑌨𑌮𑍍 ॥
𑌅𑌦𑍍𑌯𑍇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌸𑌕𑌾𑌮𑌾 𑌸𑌾 𑌯𑌾 𑌮𑌾𑌤𑌾 𑌮𑌮 𑌮𑌧𑍍𑌯𑌮𑌾 ॥ (2, 17-18,)

"லக்ஷ்மணா! நம்முடைய விஷயத்தில் கைகேயிக்கு என்ன அபிப்ராயமிருந்ததோ, எந்த ப்ரியமானது வரம் என்கிற வியாஜத்தாலே அவளால் வரிக்கப்பட்டதோ, அது சீக்கிரத்தில் இப்போதே * நன்றாய்ப் பலித்தது. அவள் பின்னால் வரப்போவதை முன்னால் ஆலோசித்திருக்கிறவள். அவள் தன் பிள்ளைக்கு ராஜ்யம் கிடைப்பதினாலேயே திருப்தி அடையாமல், என்னைக் காட்டுக்குப் போகும்படியும் செய்தாள். நான் எல்லா ஜனங்களுக்கும் ஹிதத்தைச் செய்கிறவனாயிருக்க, அவள் பிள்ளையான பரதனுக்கு என்னால் கெடுதி உண்டாகுமோ? என்னுடன் காட்டுக்கு வரும் ஸீதை ராக்ஷஸர்களால் அபஹரிக்கப்பட்டு, நான் உயிரை விடவேண்டும் என்றும், அப்போது பரதன் ராஜ்யம் நிலைநிற்குமென்றுமே அவள் அபிப்ராயம். அஃது இப்போது நிறைவேறப் போகிறது.

𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌾𑌤𑍍𑌤𑍁 𑌵𑍈𑌦𑍇𑌹𑍍𑌯𑌾 𑌨 𑌦𑍁𑌃𑌖𑌤𑌰𑌮𑌸𑍍𑌤𑌿 𑌮𑍇 ।
𑌪𑌿𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌤𑍍 𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑍇 𑌸𑍍𑌵𑌰𑌾𑌜𑍍𑌯𑌹𑌰𑌣𑌾𑌤𑍍𑌤𑌥𑌾 ॥
(2, 19.)

---

* ராமன் மேலே (ஆர-ஸ-16-35) கைகேயியைத் தூஷிக்காதே என்று லக்ஷ்மணனிடம் சொல்லுகிறான். அவனே கைகேயியை இங்கே தூஷிப்பது எப்படிக்கூடும் என்றால், இஃது அபிப்ராயம். உலகத்தில் துக்கமுண்டானபோது, மற்றவர்கள் முன்பு பண்ணின அபகாரம் நினைவுக்கு வரும். இதைக் காட்டி புத்திமான் துக்கத்தை அடைந்தபோதிலும், அபராதங்களை நினைக்கக்கூடாது என்று காட்டுவதில் கருத்து. ஸீதையை விராதன் தொட்டதால் ராமனுக்கு துக்கமுண்டாயிற்று. ஜீவன் தன்னை அநுபவித்து ஆநந்தப்படவேண்டும் என்று பகவானுக்கு ஆசை. ஜீவனை விஷயங்கள் இழுத்துக்கொண்டுபோனால் பகவானுக்குத் துக்கமுண்டாகாதோ? ஒருவனுக்குத் தன் பிள்ளையைக் கெட்டவன் இழுத்துக்கொண்டுபோனால், வருத்தமுண்டாகாதோ? ஸீதை ஜீவன்; விராதன் விஷயம்.

"ஸீதையை வேறு புருஷன் தொட்டதால் உண்டான துக்கத்தைக்காட்டிலும் மேற்பட்ட துக்கமில்லை. தகப்பனுரைவிட்டுப் பிரிந்ததாலும், என் ராஜ்யம் அபஹரிக்கப்பட்டதாலும், எனக்கு இவ்வளவு துக்கமுண்டாகவில்லை" என்று பிரலாபித்தான். இப்படி பிரலாபித்த ராமனைப்பார்த்து லக்ஷ்மணன், "லோகநாதனை நீ நாதனில்லாதவனைப்போல் பிரலாபம்செய்யலாமா? பரதனிடத்தில் எனக்கிருந்த கோபத்தை விராதனிடத்தில் காண்பித்து, அவனைக் கொன்றுவிடுகிறேன்" என்று சொன்னுன். ராமன் ஏழு பாணங்களாலே விராதனை அடிக்க, அவன் ஸீதையைக் கீழே வைத்துவிட்டு, சூலத்தை எடுத்துக்கொண்டு இவர்களை எதிர்த்து வர, ராமன் அவன்சூலத்தைத் துண்டித்துவிட்டான். விராதன் ராமனையும் லக்ஷ்மணனையும் தூக்கிக்கொண்டு ஓடப் புறப்பட்டான். ஸீதை அழுதுகொண்டு பின்னுலே போனுள். ராமன் அவனது வலதுதோளையும் லக்ஷ்மணன் அவனது இடதுதோளையும் அறுத்துவிட, அவன் கீழே விழுந்தான். அப்போது முன் ஜன்மத்தின் நினைவு அவனுக்கு வந்தது. அவன் "நான் தும்புரு என்கிற கந்தர்வன்; குபேரனுடைய சாபத்தால் ராக்ஷஸ சரீரம் எனக்கு வந்தது; என்னைக் குழியில் போட்டு மூடிவிட்டு, சரபங்கருடைய ஆச்ரமத்துக்குப் போகுங்கள்" என்றுசொன்னுன். அவர்கள் சொன்னபடியே செய்ய, அவன் திவ்ய ரூபத்துடன் ஸ்வர்க்க லோகம் போய்ச்சேர்ந்தான். (ஸ-2, 3, 4.)

(87) ராமனும் மற்றவர்களும் சரபங்கருடைய ஆச்ரமத்துக்குப் போனுர்கள். அவர் அவர்களுக்கு அதிதி பூஜைசெய்து, "நான் தபஸினுல் பிரம்மலோகத்தை அடையப்போகிறேன். நீங்கள் ஸுதீக்ஷ்ணருடைய ஆச்ரமத்துக்குப்போகுங்கள்" என்று சொல்லி, அக்னியை வளர்த்து, அதில் ப்ரவேசித்து திவ்ய தேஹத்துடன் பிரம்மலோகம் போனுர். (ஸ-5.) அப்போது அங்கிருந்த தாபஸர்கள் வந்து, தங்கள் வருத்தத்தைச் சொல்லி, ராமனிடம் சரணுகதி பண்ணினுர்கள்.

𑌏𑌹𑌿 𑌪𑌶𑍍𑌯 𑌶𑌰𑍀𑌰𑌾𑌣𑌿 𑌮𑍁𑌨𑍀𑌨𑌾𑌂 𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌂 । 𑌹𑌤𑌾𑌨𑌾𑌂 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍈𑌰𑍍𑌘𑍋𑌰𑍈𑌰𑍍𑌬𑌹𑍂𑌨𑌾𑌂 𑌬𑌹𑍁𑌧𑌾𑌵𑌨𑍇 ॥
𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌾𑌂 𑌶𑌰𑌣𑌾𑌰𑍍𑌥𑌂𑌚 𑌶𑌰𑌣𑍍𑌯𑌂 𑌸𑌮𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 ।
𑌪𑌰𑌿𑌪𑌾𑌲𑌯 𑌨𑍋 𑌰𑌾𑌮 𑌵𑌧𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌨𑍍𑌨𑌿𑌶𑌾𑌚𑌰𑍈𑌃 ॥

(ஸ-6-16, 19.)

"பகவானைத் தியானம் பண்ணிக்கொண்டிருந்த பல ருஷிகள் கோரமான ராக்ஷஸர்களாலே காட்டில் பலவிதத்தில் கொல்லப் பட, அவர்களுடைய எலும்புக்கூடுகள் அநேகம் எங்கும் கிடக்கின்றன. வந்துபார். ருஷிகளுடைய உடம்புகளைப் பார். ஆகையால், ரக்ஷகனை உன்னிடமிருந்து ரக்ஷணத்தை வேண்டிக் கொண்டு வந்திருக்கிறோம், ராம! ராக்ஷஸர்களாலே கொல்லப் படுகிற எங்களை இரக்ஷிக்கவேண்டும்." என்று வேண்டினார்கள். ராமன் அவர்களை ரக்ஷிப்பதாகச் சொல்லி,

नैवमर्हथ मां वक्तुमाज्ञाप्योऽहं तपस्विनाम्।
केवलेनात्मकार्येण प्रवेष्टव्यं मया वनम्॥
विप्रकारमपाक्रष्टुं राक्षसैर्भवतामिमम्।
पितुस्तु निर्देशकरः प्रविष्टोऽहमिदं वनम्॥
भवतामर्थसिद्ध्यर्थमागतोऽहं यदृच्छया।
तस्य मेऽयं वने वासो भविष्यति महाफलः॥
तपस्विनां रणे शत्रून् हन्तुमिच्छामि राक्षसान्।
पश्यन्तु वीर्यमृषयः सभ्रातुर्मे तपोधनाः॥

(ஸ-6-22 + 25)

"நீங்கள் இப்படிச் சொல்லவேண்டாம். நீங்கள் கட்டளையிட வேண்டும். ராக்ஷஸர்களால் உங்களுக்கு ஏற்படும் பீடையை ஒழிக்க நான் காட்டுக்கு வரவேண்டியது. இஃது என்னுடைய முக்கிய காரியம். என்னுடைய ஸொந்தக் காரியத்துக்காகவே காட்டில் ப்ரவேசித்திருக்கிறேன். உங்களுடைய ரக்ஷணமாகிய காரியம் ஸித்திப்பதற்காகவே இங்கே நான் வந்திருக்கிறேன். தெய்வகதியாய் அதற்குப் பித்ருவாக்ய பரிபாலனம் என்கிற வியாஜம் கிடைத்திருக்கிறது. இப்படி வந்திருக்கிற என்னுடைய வனவாஸமானது பெரிய பலனுள்ளதாக ஆகும். தபஸ்விகளான உங்களுடைய சத்துருக்களான ராக்ஷஸர்களைச் சண்டையில் கொல்ல இச்சிக்கிறேன். தபஸ்விகளே! தம்பியுடன்கூடின என்னுடைய வீர்யத்தை நீங்கள் பாருங்கள்" என்று முடித்தான். (ஸ-5-6.)

(88) இப்படித் தபஸ்விகளுக்கு அபயத்தைக்கொடுத்து ஸுதீக்ஷ்ணர் ஆச்ரமத்துக்கு ராமலக்ஷ்மணர்கள் போனார்கள்,

அவர் இவர்களுக்கு அதிதி பூஜை செய்தபிறகு 'எங்களுக்கு எங்கே இருப்பிடம் செய்துகொள்ளலாம்' என்று ராமன் கேட்க. ருஷி தன் ஆச்ரமத்திலேயே இருக்கலாம் என்று சொன்னார், ராமன், "வருகிற காட்டுமிருகங்களை இங்கிருந்து கொன்றால், உமக்கு வருத்தமுண்டாகும். உமக்கு வருத்தமுண்டுபண்ணுவதைக் காட்டிலும் எனக்கு வேறு எது பெரிய கஷ்டமிருக்கும். ஆகையால் இங்கு நீடித்திருக்க முடியாது" என்று சொல்லி, அவரிடம் விடை பெற்றுக்கொண்டு, ஸீதையுடனும் தம்பியுடனும் ருஷிகளுடைய ஆச்ரமங்களைப் பார்க்கப்போனான். (ஸ-7-8.) போகும்போது, ஸீதை ராமனைப்பார்த்து "காமத்தினாலே மூன்று வியஸநங்கள் உண்டாகின்றன. அவைகளாவன—(1) ப்ரதிஜ்ஞை பண்ணினதைச் செய்யாதது. (2) பரஸ்த்ரீயைத் தொடுவது. (3) வைரமில்லாமல் ஒருவனை ஹிம்ஸைசெய்வது. இவைகளுள் முதல் வியஸநத்தைக் காட்டிலும் மற்ற இரண்டும் மிகக் கொடுமையானவைகள். முதல் இரண்டும் உம்மிடத்தில் இல்லை. நீர் வில்லும் கையுமாகப் போவதாலே மூன்றாவது வியஸநம் உண்டாகுமோ என்று பயப்படுகிறேன். அக்னிக்குக் கிட்ட விறகு இருந்தால் அதனுடைய தேஜஸ் வளருகிறது. அப்படியே க்ஷத்ரியனுக்கு வில்லு கிட்ட இருந்தால், மற்றவர்களைக் கொன்று தேஜஸ் வளருகிறது. முன்னாலே ஒரு ருஷி செய்துகொண்டிருந்த தபஸுக்கு இடையூறுசெய்ய, அவரிடம் இந்த்ரன் ஒரு கத்தியை அடைக்கலமாகக் கொடுத்தான். அவர் அதை எப்போதும் கையில் வைத்துக்கொண்டு திரிந்ததாலே அவர் தபஸ் வரவரக் குறைந்தது. அவர் பிராணிகளுக்கு ஹிம்ஸை செய்து கடைசியில் நரகம்போய்ச் சேர்ந்தார். உம்மிடத்தில் ஸ்நேஹத்தாலும் என்னிடத்தில் உமக்கு இருக்கும் பஹுமானத்தாலும் உமக்கு இதை ஜ்ஞாபகப்படுத்துகிறேன். உமக்கு நான் கட்டளையிடவில்லை" என்று சொன்னாள். (ஸ-9.) ராமன் பதில் சொன்னதாவது :—"க்ஷத்ரியர்கள் வில்லைக் கையில் வைத்திருப்பது ஒருவனுடைய துக்கக்குரல் உண்டாகக்கூடாது என்பதற்காக; இந்த வனத்திலிருக்கிற ருஷிகள் ஆர்த்தர்களாய் தாங்களேவந்து என்னிடம் சரணாகதி பண்ணியிருக்கிறார்கள். அவர்களை நான் ரக்ஷிக்கவேண்டியது.

அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே ஸலக்ஷ்மணாம் ||
ந து ப்ரதிஜ்ஞாம் ஸம்ஶ்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விஶேஷத꞉
தத³வஶ்யம் மயா கார்யம் ருஷீணாம் பரிபாலனம் ।
அனுக்தேனாபி வைதே³ஹி ப்ரதிஜ்ஞாய விஶேஷத꞉ ॥

(ஸ-10-19, 20.)

ஏ! ஸீதே! என் பிராணனை விட்டாலும் விடுவேன். உன்னையும் லக்ஷ்மணனையும் விட்டாலும் விடுவேன். ப்ரதிஜ்ஞையைப்பண்ணி, அதை விடேன். பிராம்மணர்களுக்கு ப்ரதிஜ்ஞைபண்ணி, அதை ஒருகாலும் விடமுடியாது. ஆகையால், ருஷிகளை ரக்ஷிப்பதாகிய வேலையை நான் கட்டாயம் செய்யவேண்டியது. இதை அவர்கள் சொல்லாமலே நான் செய்யவேண்டியது. அவர்களும் சொல்லி, நானும் ப்ரதிஜ்ஞை பண்ணினதை விடமுடியாதென்பதை சொல்லவும் வேண்டுமோ?" என்பதாம். (ஸ-10.)

(89) இப்படி ராமன் ஸீதைக்குப் பதில்சொல்லி, மற்றவர்களுடன் ருஷிகளுடைய ஆச்ரமங்களுக்குப்போய் அங்கங்கே கொஞ்சகாலம் வஸித்தான்.

க்வசித்பரித³ஶான்மாஸானேகம் ஸம்வத்ஸரம் க்வசித் ।
க்வசிச்ச சதுரோ மாஸான் பஞ்ச ஷட்சாபரான் க்வசித் ॥
அபரத்ராதி⁴கான்மாஸானத்⁴யர்த⁴மதி⁴கம் க்வசித் ।
த்ரீன்மாஸானஷ்டமாஸாம்ஶ்ச ராக⁴வோ ந்யவஸத்ஸுக²ம் ।
ததா² ஸம்வஸதஸ்தஸ்ய முனீநாமாஶ்ரமேஷு வை ।
ரமதஶ்சானுகூல்யேன யயு꞉ ஸம்வத்ஸரா த³ஶ ॥

(ஸ-11-26, 27.)

ஓர் ஆச்ரமத்தில் பதின்மூன்று மாஸங்களும், ஓர் ஆச்ரமத்தில் ஒரு வர்ஷமும், ஓர் ஆச்ரமத்தில் நாலு மாஸங்களும், ஒன்றில் ஐந்து மாஸங்களும், ஒன்றில் ஆறு மாஸங்களும், ஒன்றில் ஏழு மாஸங்களும், ஒன்றில் ஒன்றேகால்மாஸங்களும், ஒன்றில் முக்கால் மாஸமும், ஒன்றில் மூன்று மாஸங்களும், ஒன்றில் எட்டு மாஸங்களும் இப்படி ராமன் ஸுகமாக இருந்தான். பத்து வருஷம் ஆய்விட்டது. (ஸ-11.)

(90) ராமன் ஸுதீக்ஷ்ணருடைய ஆச்ரமத்துக்கு மறுபடியும் திரும்பிவந்து, அகஸ்தியர் ஆச்ரமத்துக்குப் போகும் வழியைக்கேட்டுக்கொண்டு போய், ஒரு ராத்திரி அகஸ்தியருடைய தம்பியின் ஆச்ரமத்தில் தங்கியிருந்து, அகஸ்தியரின் ஆச்ரமத்துக்குப்போய்ச் சேர்ந்தான். அவர் ராமனுக்கு ஆதித்யம்பண்ணி, ஒரு வில்லையும், அக்ஷயமான இரண்டு அம்பறாத் தூணிகளையும், கத்தியையும் கொடுத்தார். (ஸ-12.) அகஸ்தியர் ஸீதையைப் புகழ்ந்து, ராமனுக்குப் பஞ்சவடியை வஸிக்கும் இடமாகக் காண்பித்தார்.

𑌶𑌤𑌹𑍍𑌰𑌦𑌾𑌨𑌾𑌂 𑌲𑍋𑌲𑌤𑍍𑌵𑌂 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌤𑍀𑌕𑍍𑌷𑍍𑌣𑌤𑌾𑌂 𑌤𑌥𑌾 ।
𑌗𑌰𑍁𑌡𑌾𑌨𑌿𑌲𑌯𑍋𑌃 𑌶𑍈𑌘𑍍𑌰𑍍𑌯𑌮𑌨𑍁𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌯𑍋𑌷𑌿𑌤𑌃 ॥ (13-6.)

“மின்னல்கள்போல் நிலையில்லாமையையும், ஆயுதங்கள்போல் கூர்மையாயிருப்பதையும், கருடனையும் காற்றையும்போல் வேகமாயிருப்பதையும் உடையவர்கள் ஸ்திரீகள்.* இந்த உன்னுடைய மனைவியிடத்தில் இந்த தோஷங்கள் இல்லை. அவள் பெரியார்களால் ஸ்தோத்ரம் பண்ணத்தகுந்தவள். அருந்ததியைப்போல பதிவ்ரதையாயிருப்பதாலே எல்லா ஸ்திரீகளுக்கும் உபமானமாகச் சொல்லத் தகுந்தவள். ராம! இவளுடனும் லக்ஷ்மணனுடனும் நீ எங்கே வஸிப்பாயோ, அதற்கு ஓர் அலங்காரமுண்டாகும்” என்று அகஸ்தியர் சொன்னார். (ஸ-13.) ராமன் அகஸ்தியர் ஆச்ரமத்தை விட்டு பஞ்சவடிக்குப் போகையில், ஜடாயுவைக்கண்டு, அவன் விருத்தாந்தத்தையும், அவன் தன் தகப்பனுக்குத் தோழனாயிருந்ததையும் அறிந்துகொண்டு, அந்த இடத்தை அடைந்தான். (ஸ-14.) அங்கு ராமன் ஓர் பர்ணசாலையைக் கட்டிக்கொண்டு ஸுகமாயிருந்தான். பர்ணசாலையைக் கட்டும்படி லக்ஷ்மணனை ஏவினபோது அவன் சொன்னதாவது:—

𑌪𑌰𑌵𑌾𑌨𑌸𑍍𑌮𑌿 𑌕𑌾𑌕𑍁𑌤𑍍𑌸𑍍𑌥 𑌤𑍍𑌵𑌯𑌿 𑌵𑌰𑍍𑌷𑌶𑌤𑌂 𑌸𑍍𑌥𑌿𑌤𑍇 ।
𑌸𑍍𑌵𑌯𑌂 𑌤𑍁 𑌰𑍁𑌚𑌿𑌰𑍇 𑌦𑍇𑌶𑍇 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑌾𑌮𑌿𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌵𑌦 ॥ (15-7.)

* ஸ்திரீகள் மனது ஒன்றிலும் நிலையாயிராது. மின்னல்போல் சஞ்சலமானது. வெகு காலமாயிருந்த ஸ்நேஹத்தையும் ஒரு க்ஷணத்தில் அவர்கள் விட்டுவிடுவார்கள். ஒரு வேலையையும் விசாரிக்காமல் செய்வார்கள் என்பது கருத்து.

" நூறுவர்ஷம் சென்றாலும் நான் உனக்கு* உட்பட்டவன். நீயே மனதுக்குப் பிடித்த இடத்தைக் காண்பித்து, பர்ணசாலையைக் கட்டு என்று சொல்லு." என்பது. பர்ணசாலை கட்டினபிறகு ராமன் ஸந்தோஷப்பட்டு, லக்ஷ்மணனைக் கட்டிக்கொண்டு சொன்னான்—

𑌭𑌾𑌵𑌜𑍍𑌞𑍇𑌨 𑌕𑍃𑌤𑌜𑍍𑌞𑍇𑌨 𑌧𑌰𑍍𑌮𑌜𑍍𑌞𑍇𑌨 𑌚 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣 ।
𑌤𑍍𑌵𑌯𑌾 𑌪𑍁𑌤𑍍𑌰𑍇𑌣 𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌨 𑌸𑌂𑌵𑍃𑌤𑍍𑌤𑌃 𑌪𑌿𑌤𑌾 𑌮𑌮 ॥ (15-28)

" என் அபிப்ராயத்தை அறிந்து, நம்முடைய தகப்பனார் நமக்குத் தகுந்ததாய் வீடு கட்டினதை நினைத்துக்கொண்டு, நான் ஸந்தோஷப்படவேண்டும் என்கிற தர்மத்தையே கைக்கொண்டவனாய் இந்தப் பர்ணசாலையைக் கட்டியிருக்கிறாய்.§ உன்னைப் பிள்ளையாக அடைந்த தர்மாத்மாவான என் தகப்பன் இறந்துபோகவில்லை. தகப்பன் செய்துகொண்டிருந்த வேலைகளை நீ எனக்குச் செய்துகொண்டு இருக்கிறாய்" என்று (ஸ-15.)

(91) ஹேமந்தகாலத்தில் ஒருநாள் ராமன் கோதாவரியில் ஸ்நானம்செய்து, ஆச்ரமத்தில் உட்கார்ந்து ருஷிகளுடன் பேசிக்கொண்டிருக்கையில், ராவணன் தங்கையான சூர்பணகையென்னும் ராக்ஷஸி ராமன் அழகிலீடுபட்டுத் தன் வரலாற்றைச் சொல்லி, தன்னை மனைவியாக வைத்துக்கொள்ளும்படி ராமனை வேண்டி, ஸீதையையும் லக்ஷ்மணனையும் விழுங்கிவிடுவதாகச் சொன்னாள். ராமன் " நான் கலியாணம் செய்துகொண்டிருக்

---

* நீ என்னைப் பர்ணசாலையைக்கட்டு என்று சொன்னபோது என்னை ஸ்வதந்திரனாக எண்ணினாய் என்று தோன்றுகிறது. நான் ஸ்வதந்திரன் அன்று. எப்போதுமுனக்குப் பரதந்திரன். இன்ன இடத்தில் பர்ணசாலையைக் கட்டு என்று நீயே நியமநம் பண்ணவேணும்.

§ தசரதன் ' எனக்குப் பின்னாலே ராமனை எவன் காப்பாற்றுவான் ' என்கிற விசாரத்துடன் இறந்தார். நீ அவர் ஸ்தானத்திலிருந்து அவர் செய்யவேண்டிய வேலையை செய்துகொண்டிருக்கையால், அவரை புத் என்கிற நரகம்போன்ற துக்கத்திலிருந்து விடுவித்தாய். ஆகையால் நீ அவருக்குப் புத்திரன். நீ எனக்குத் தகப்பனாராயிருக்கிறாய். ஆகையால் எனக்குத் தகப்பனார் போகவில்லை. உனக்குத்தான் தகப்பனார் போய்விட்டார். இது ' 𑌮𑌮 ' என்பதின் பொருள்.

கிறேன். இவள் எனக்கு பிரியமான மனைவி. ஏற்கனவே ஒரு மனைவியிருக்க உன்னைப்போன்ற ஸ்திரீகளுக்கு ஒரு ஸ்திரீயோடு தானுமொரு மனைவியாயிருப்பது துக்கத்தைக்கொடுக்கும். லக்ஷ்மணனுக்கு இங்கே மனைவி இல்லை ; ஆகையால் அவனிடம் போ" என்று சொன்னான். அவளும் அப்படியே போக, லக்ஷ்மணன் "நான் வேலைக்காரன்; என் மனைவி வேலைக்காரியாக ஆகவேண்டும், ஆகையால் ராமனிடம் போ. அவருக்கு இளைய பத்னியாயிரு" என்று சொன்னான். அவள் ராமனிடம்போய், ஸீதை இருப்பது தனக்கு இடையூறு என்று எண்ணி அவளை விழுங்கப்போனாள். ராமன் கட்டளையின்மேல், லக்ஷ்மணன் அவள் காதுகளையும் மூக்கையும் அரிந்துவிட்டான். (ஸ-16, 17, 18.)

(92) சூர்ப்பணகை கத்திக்கொண்டு, ஜனஸ்தானத்திலிருந்த தனது உடன்பிறந்தவனான கரனிடம்போய் முறையிட்டாள். கரன், ராமனையும் லக்ஷ்மணனையும் கொல்லப் பதினான்கு ராக்ஷஸர்களை அனுப்பினான். அவர்கள் விட்ட பாணங்களை ராமன் துணித்து, பதினான்குபேர்களையும் பதினான்குபாணங்களாலேகொன்றுவிட்டான். மறுபடியும், சூர்ப்பணகை கரனிடம்போய் அவனுக்குக் கோபமுண்டாவதற்காக அவனுடைய பௌருஷத்தை நிந்தித்தாள். அவன் தூஷணன், த்ரிசிரஸ் முதலான பதினாலாயிரம் ராக்ஷஸர்களுடன் வந்து ராமனை எதிர்த்தான். ராமனோ ஸீதையை ரக்ஷிக்கும்படி லக்ஷ்மணனுக்குக் கட்டளையிட்டு, தான் தனியாய்ப்போய் சண்டைக்குத் தயாராயிருந்தான். ராக்ஷஸர்கள் ராமனைச் சுற்றிக்கொண்டு, அவன்மேல் பாணங்களை வர்ஷித்தார்கள். ஸமுத்ரம் நதிகளின் ஜலத்தை ஏற்றுக்கொள்வதுபோல் ராமன் அவைகளை ஏற்றுக்கொண்டான் ; அவர்கள்மேல் பாணங்களை வர்ஷித்து அவைகளை நாசம் செய்தான். தூஷணன் ஐயாயிரம் ராக்ஷஸர்களுடனும், மூன்று ஸேநாதிபதிகளுடனும் எதிர்த்தான். ராமன் அவர்களெல்லாரையும் கொன்று தூஷணனுடைய குதிரைகளையும் ஸாரதியையும் கொன்று அவன் ரதத்தை உடைத்தான். தூஷணன் இரும்புலக்கையை எடுத்துவர, ராமன் அவன் கைகளை அறுக்க, அவன் கீழேவிழுந்து இறந்தான். பிறகு எதிர்த்துவந்த த்ரிசிரஸுக்கும் இதே கதியாயிற்று. கடைசியில் கரன் எதிர்த்துவந்து, ராமனுடைய வில்லை முறித்து, கவசத்தை உடைத்து, தன் பாணங்களால் ராமனுடைய திரு

மேனியை அடித்து, ரத்தம் பெருகும்படி செய்தான். ராமன் அகஸ்தியர் கொடுத்த வில்லை எடுத்துக்கொண்டு, கரனுடைய குதிரைகளையும் ஸாரதியையும் கொன்று, த்வஜத்தை அறுத்து, ரதத்தை உடைக்க, கரன் கீழே குதித்துக் கதையை எடுத்துக் கொண்டு வந்தான். அவன் எறிந்த கதையை ராமன் துணிக்க, அவன் ராமன்மேலே விழவந்தான். ராமன் இரண்டு அடி பின்னாலேபோய் பாணத்தாலே கரனைக் கொன்றுவிட்டான். இப்படி சத்துருக்களைக்கொன்று ருஷிகளுக்கு ஸந்தோஷத்தை உண்டு பண்ணின தன் பர்த்தாவான ராமனைப்பார்த்து, ஸீதை * ஸந்தோஷப்பட்டு அவனைக் § கட்டிக்கொண்டாள். (ஸ-19+30.)

தம் த்³ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகா²வஹம் ।
ப³பூ⁴வ ஹ்ருஷ்டா வைதே³ஹீ ப⁴ர்தாரம் பரிஷஸ்வஜே ॥
(30-39.)

(93) சண்டையில் தப்பிப்போன அகம்பனன் என்கிற ராக்ஷஸன் நடந்ததை ராவணனிடம் சொல்ல, அவன் 'ராமனைக் கொல்லுகிறேன்' என்று கிளம்பினான். அகம்பநன் "உன்னால் ராமனைக் கொல்லமுடியாது. அவனுடைய மனைவியை நீ கொண்டு வந்துவிட்டால், அவளைப் பிரிந்திருக்கமுடியாமல் அவன் தானே இறந்துவிடுவன்" என்று சொன்னான். ராவணன் ஸீதையைக் கொண்டுவருகிற விஷயத்தில் தனக்குத் துணையாயிருக்கவேண்டும் என்று மாரீசன் ஆச்ரமத்துக்குப்போய் அவனை வேண்டினான். மாரீசன் "எவன் ராக்ஷஸக் கூட்டத்துக்கு ஆச்ரயமாயிருக்கும்

---

* ராக்ஷஸர்கள், க்ரூரர்களாயிருப்பதையும், ராமன் ஸுகுமாரனாயிருப்பதையும் நினைத்து, ஸீதை என்ன ஆகுமோ என்று மனது கலங்கியிருந்தாள். வீரச்ரீயுடன் அவன் திரும்பி வந்ததைப்பார்த்து அவள் ஸந்தோஷப்பட்டாள் என்பது 'ஹ்ருஷ்டா' என்பதின் கருத்து.

§ ராமனுடைய திருமேனியில் சத்துருக்களின் பாணங்களால் உண்டான புண்களுக்கு ஒத்தடம் போடுவதுபோல், ஸீதை அவனை கட்டிக்கொண்டாள் என்பது 'பரிஷஸ்வஜே' என்பதின் கருத்து. பதினாலாயிரம் ராக்ஷஸர்களைத் தனியாயிருந்து ஸம்ஹாரம் பண்ணின ராமன் பராக்ரமத்தைப் பார்த்த ஸீதைக்கு முன்பு சிவன் வில்லை முறித்த நினைவு வந்தது. அதைக் காட்டுவதற்காக அவளை 'வைதேஹீ' என்று சுலோகம் சொல்லுகிறது.

உன்னை வேரறுக்க ஆசைப்படுகிறான்? எவன் உன்னைத் தூண்டி விட்டானே, அவன் உண்மையில் உனக்குச் சத்துரு. கொடுமையான விஷமுள்ள பாம்பின் வாயிலிருந்து அதின் பல்லை உன்னைக் கொண்டு பிடுங்கும்படி எவன் இச்சிக்கிறவன்? ஆகையால் லங்கைக்குக் திரும்பிப் போ. உன்னுடைய ஸ்திரீகளிடத்தில் ரமித்துக்கொண்டிரு” என்று சொன்னான். ராவணனும் லங்கைக்குத் திரும்பிப் போய்விட்டான். (ஸ-31.)

(94) சூர்ப்பணகை ராவணனிடம்போய், “ராமனிடத்தில் அழகான ஒரு ஸ்திரீ இருக்கிறாள். உனக்காக அவளைக் கொண்டுவர யத்நப்படுகையில், அவன் தம்பி லக்ஷ்மணன் எனக்கு இந்த வைரூப்யத்தைச் செய்துவிட்டான். ஜனஸ்தானம் முழுவதும் நாசமாய்விட்டது. துப்பனைக்கொண்டு இதை நீ அறியாமலிருக்கிறாய். உனக்குப் புத்தியில்லை. அறியவேண்டியதை அறியாதவன் எப்படி ராஜாவாக இருக்கக்கூடும்? ஒருவனாலே பதினாலாயிரம் ராக்ஷஸர்களும் கரனும் தூஷணனும் கொல்லப்பட்டார்கள். ருஷிகளுக்கு அவன் அபயப்ரதாநம் பண்ணியிருக்கிறான். தண்டகாரண்யத்துக்கு க்ஷேமம் உண்டுபண்ணப்பட்டது” என்று சொல்லி, ராவணனை இகழ்ந்தாள். (ஸ-32, 33, 34.) ராவணன் ஸீதையினிடத்தில் ஆசையுள்ளவனாகி, மாரீசன் ஆசிரமத்துக்கு மறுபடியும்போய் ஸீதையைக் கொண்டுவருவதில் தனக்குத் துணையாயிருக்கும்படி அவனை வேண்டினான். மாரீசன் நடுநடுங்கி,

ஸுலபா⁴: புருஷா ராஜந் ஸததம் ப்ரியவாதி³ந: ।
அப்ரியஸ்ய ச பத்²யஸ்ய வக்தா ஶ்ரோதா ச து³ர்லப⁴: ॥
(35-7-2.)

ஓ! ராஜாவே! எப்பொழுதும் பிரியமானதையே சொல்லுகிறவர்கள் எங்கும் இருக்கிறார்கள். பிரியமில்லாமல் உண்மையில் ஹிதமாயிருப்பதை சொல்லுகிறவனும் அதைக் கேட்பவனும் கிடைப்பது அரிது. ராமன் கோபித்துக்கொண்டால் உலகத்தை ராக்ஷஸப்பூண்டில்லாமல் செய்துவிடுவன். ஸீதை உனக்கு நாசமுண்டாவதற்காகத் தான் பிறந்திருக்கிறாளோ? என்னவோ? என்னுடைய நாசத்திற்கும் அவளே காரணமாவாளோ? ஸாதுக்களுடைய ஹிதோபதேசத்தைக் கேட்காமல் இஷ்டப்படி நடக்கும் உன்னை ராஜாவாகப்பெற்று லங்கையும் ராக்ஷஸகுலமும்

உன்னுடன்கூட நாசத்தை அடையுமோ ?" என்று சொல்லி, ராமனுடைய குணங்களை ஸ்தோத்ரம்பண்ணி, தான் ராமனிடத்தில்* இரண்டுதடவைக் கஷ்டப்பட்டதைச் சொன்னன். (ஸ-35+39 வரை)

வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பஶ்யாமி சீரக்ருஷ்ணாஜிநாம்பரம் ।
க்ருஹீததநுஷம் ராமம் பாஶஹஸ்தமிவாந்தகம் ॥ (39-15.)

மரவுரியையும் மான் தோலையும் உடுத்துக்கொண்டும், கையில் தநுஸை வைத்துக்கொண்டுமிருக்கிற ராமனைக் கையில் கயிற்றை வைத்துக்கொண்டிருக்கிற யமனைப்போல் ஒவ்வொரு மரத்திலும் பார்க்கிறேன். பயத்தால் ஆயிரம் ராமன்கள் என் கண்ணுக்குத் தோன்றுகிறார்கள். இந்தக் காடு முழுவதும் ராமனாகவே எனக்குத் தோன்றுகிறது. நான் ஜீவித்திருக்கவேண்டுமானல் ராமனுடைய கதையை என்னிடம் சொல்லாதே" என்று சொல்லி முடித்தான். ராவணன் மனது திரும்பவில்லை. அவன் மாரீசனைப் பார்த்து, "குணதோஷங்களைப்பற்றி உன்னைக் கேட்கவில்லையே. கேட்டதையன்றோ மந்திரி சொல்லவேண்டும்" என்று சொல்லி கோபித்துக்கொண்டு, "நான் சொன்னபடி நீ செய்யாவிட்டால், உன்னைக் கொன்றுவிடுவேன்" என்று சொன்னன். மாரீசன் "மரணம் வருவது நிச்சயம். ராவணனல் அடிபட்டுச் சாவதைக் காட்டிலும் ராமனுடைய பாணத்தால் அடிபட்டுச் சாவது தனக்கு நல்லது" என்று தீர்மானம்செய்து, ஆச்சரியமான ஒரு மான்ரூபத்தை எடுத்துக்கொண்டு, ராமன் ஆச்ரமத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தான். (ஸ-40-41.)

(95) அப்போது புஷ்பம் பறிக்க வெளியேவந்த ஸீதை மானைப்பார்த்து மிகுந்த ஆச்சரியம் அடைந்து, ராமனையும் லக்ஷ்மணனையும் கூப்பிட்டு அதைக் காட்டினாள். லக்ஷ்மணன் "இவ்

---

* முதல்தடவை விசுவாமித்ரரின் யாகத்துக்குக் கெடுதி செய்யப் போகையில், ஒரே பாணத்தால் வெகுதூரத்தில் ஸமுத்ரத்தில் தன்னைத் தள்ளிவிட்டது. இரண்டாவது தடவை அவன் தண்டகாரண்ணியத்துக்கு வந்திருக்கையில் அவனுடைய தாபஸ வேஷத்தைப்பார்த்து முன் வைரத்தை நினைத்துக்கொண்டு இரண்டு ராக்ஷஸர்களுடன் அவனை எதிர்க்கையில் அவன் மூன்று பாணங்களைப்போட, இரண்டு ராக்ஷஸர்கள் இறக்கத் தான் எப்படியோ தப்பிவந்தது.

விதமான மானை ஒருபோதும் பார்த்ததில்லை. ஆகையால் இது மாரீசனாக இருக்கவேண்டும்" என்று சொன்னான். ஸீதை கேட்கவில்லை. "மானைப் பிடித்துக் கொடுக்கவேண்டும். பிடிக்க முடியாவிட்டால், அதின் தோலையாவது கொண்டுவரவேண்டும்" என்று ராமனை வேண்டினாள். அவன் ஸீதையை ரக்ஷித்துக் கொண்டிருக்கும்படி லக்ஷ்மணனுக்குக் கட்டளையிட்டு, வில்லையும் பாணத்தையும் எடுத்துக்கொண்டு, மானைப் பிடிக்கப்போனான். மாரீசன் வஞ்சனையாலே ராமனை வெகுதூரம் இழுத்துக்கொண்டு போனான். அதை ராமன் ஒரு பாணத்தாலே அடிக்க, அவன் தன் ரூபத்தை எடுத்துக்கொண்டு, ராமன் குரலைப்போல "ஹா! ஸீதையே! ஹா! லக்ஷ்மணா!" என்று கதறிக்கொண்டு உயிரைவிட்டான். அந்தக் குரலைக்கேட்ட ஸீதை லக்ஷ்மணனை ராமனை ரக்ஷிப்பதற்காக அவனிடம் போகச்சொன்னாள். லக்ஷ்மணன் தமையன் கட்டளையை நினைத்துக்கொண்டு போகாமலிருந்தான். ஸீதை கோபித்துக்கொண்டு, "லக்ஷ்மணா! நீ மித்ரன்வேஷத்தைப் போட்டுக்கொண்டு உன் தமையனுக்குச் சத்ருவைப்போலிருக்கிறாய். ஏனென்றால், இந்த அவஸ்தையில் நீ அவனிடம் போகவில்லையே. என்னை அடைவதற்காக, ராமன் நாசம் அடைவதை ஆசைப்படுகிறாய். உனக்கு அவனிடத்தில் ஸ்நேஹமில்லை." என்று சொன்னாள். லக்ஷ்மணன் ராமனுடைய ப்ரபாவத்தைச் சொல்லி, "ராமனை ஒருவராலும் கொல்லமுடியாது" என்று சொல்ல, மறுபடியும் ஸீதை, "என் நிமித்தமாக உன் ஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டோ, அல்லது பரதனாலே ஏவப்பட்டோ தனியாய் ராமனுடன்கூட வந்தாய். உன்னுடைய எண்ணமும் பரதனுடைய எண்ணமும் நிறைவேறா. நீலோத்பலம்போன்ற திருமேனியையும், தாமரைப்பூக்கள்போன்ற திருக்கண்களையும் உடைய ராமனைப் பர்த்தாவாக அடைந்து, வேறொருவனை எப்படி ஆசைப்படுவேன்? உன் கண்ணுக்குமுன்னாலே என் பிராணனைவிட்டு விடுவேன். ராமனைவிட்டுப்பிரிந்து பூமியில் ஒருக்ஷணமும் நான் ஜீவித்திருக்கமாட்டேன்" என்று கடுமையாகப் பேசினாள். லக்ஷ்மணன் அஞ்ஜலிபண்ணிக்கொண்டு ஸீதையைப் பார்த்து, "நீ சொன்னதற்குப் பதில்சொல்லத் துணியவில்லை. உன்னைத் தெய்வமாக எண்ணியிருக்கிறேன். மிகவும் தகாத வாக்யத்தை ஸ்திரீகள் சொல்லுவது ஆச்சரியமன்று. இது ஸ்திரீகளின்

ஸ்வபாவம். இப்படியே உலகத்தில் காணப்படுகிறது. ஸ்திரீகள் விநயம் முதலான தர்மங்களை விட்டவர்கள்; சஞ்சலமான மனதையுடையவர்கள்; க்ரூரமான மனதுடையவர்கள்; இரண்டுபேர் சேர்ந்திருப்பதைப் பொறுக்காமல் கலஹம்பண்ணிவிடுகிறவர்கள். உன்னுடைய இவ்விதமான வாக்யத்தைப் பொறுக்கமுடியவில்லை. காய்ச்சின பாணம்போல் என் காதில் அது விழுகிறது. ராமனிருக்குமிடம் போகிறேன். உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும்." என்று சொல்லிவிட்டு ராமனிடம் போனான். (ஸ-42+45.)

(96) இந்த ஸமயத்தில், ராவணன் ஸந்யாஸிவேஷத்துடன் வந்து, ஸீதையின் அழகை வர்ணித்து, "நீ யார்? ஏன் இங்கே வந்திருக்கிறாய்." என்று கேட்டான். ஸீதை அவனை உண்மையான பிக்ஷு என்று நினைத்து, அவனுக்கு ஆதித்யத்தைச் செய்து, இந்த ப்ராம்மணன் சபிப்பன் என்று பயந்து, தன் வரலாற்றை சொன்னாள். ராவணன் தன்னை இன்னான் என்று சொல்லி, தனக்கு மனைவியாயிருக்கும்படி அவளை வேண்டினான். ஸீதை, ராமனுடைய அழகையும் குணங்களையும் வர்ணித்து, அவனுக்கும் ராவணனுக்கும் இருக்கும் வாசியைக் காட்டி, "உன் நாசத்துக்காக என்னை மனைவியாக அபேக்ஷிக்கிறாய்." என்று சொன்னாள். "ராமனுடைய பிரியமான மனைவியை அடைய ஆசைப்படுகிற நீ, கொடுமையான விஷமுள்ள பாம்பின் வாயிலிருந்து அதன் பல்லைப் பெயர்க்கவும், மந்தரம் என்கிற மலையைக் கையால் பிடுங்கவும், காலகூட விஷத்தைப் பானம்பண்ணி க்ஷேமமாயிருக்கவும், கண்ணை ஊசியால் தடவிக்கொள்ளவும், நாக்காலே கத்தியை நக்கவும், கல்லைக் கழுத்தில் கட்டிக்கொண்டு ஸமுத்ரத்தைத் தாண்டவும், ஸூரியனையும் சந்திரனையும் கையால் பிடித்துக்கொண்டுவரவும், ஜ்வலிக்கிற நெருப்பை துணியால் கொண்டுவரவும் ஆசைப்படுகிறாய். காட்டில் ஸஞ்சரிக்கும் ஸிம்மத்துக்கும் நரிக்கும், ஸமுத்ரத்துக்கும் சின்ன வாய்க்காலுக்கும், தங்கத்துக்கும் ஈயத்துக்கும், சந்தநத்துக்கும் சேற்றுக்கும், யானைக்கும் பூனைக்கும், கருடனுக்கும் காக்கைக்கும், மயிலுக்கும் நீர்க்காக்கைக்கும், ஹம்ஸத்துக்கும் கழுகுக்கும் எவ்வளவு வாசிகள் இருக்கின்றனவோ, அவ்வளவு வாசி உனக்கும் ராமனுக்கும் இருக்கிறது. இந்திரனைப்போன்றவனும் வில்லையும் அம்பையும் கையில் வைத்துக்கொண்டிருப்பவனுமான ராமன் இருக்கை

யில், நீ என்னைக் கொண்டுபோனாலும், வஜ்ரத்தைவிழுங்கின ஈயைப்போல் ஜரிக்கமுடியுமோ?" என்று சொல்லிமுடித்தாள். (ஸ-46-47.)

(97) ராவணன் தன் பெருமையை வர்ணித்து, தன்னை அடையும்படி மறுபடியும் சொன்னான். ஸீதை, "க்ரூரனும், கெட்டபுத்தியுள்ளவனும், இந்திரியங்களை அடக்காதவனுமான நீ எந்த ராக்ஷஸர்களுக்கு ராஜாவாக இருக்கிறாயோ, அவர்கள் எல்லாரும் கட்டாயம் நாசத்தை அடையப்போகிறார்கள். இந்திரனுடைய மனைவியான இந்திராணியை அபஹாரம்பண்ணிப் பிழைத்தாலும் பிழைக்கலாம். ராமனுடைய மனைவியான என்னைக் கொண்டுபோகும் உனக்கு பிழைத்திருப்பது முடியாது." என்று சொன்னாள். ராவணன் ஸீதையின் தலைமயிரை இடதுகையாலும் அவளது தொடைகளை வலதுகையாலும் பிடித்துக்கொண்டு அவளைத் தூக்கித் தன் ரதத்தில்வைத்து, லங்கைக்குப் போகப் புறப்பட்டான். ஸீதை—மரங்கள், மலை, கோதாவரிநதி, வனதேவதைகள், மிருகங்கள், பக்ஷிகள் முதலானவைகளைப்பார்த்து, தன்னை ராவணன் கொண்டுபோவதை ராமனிடம் சொல்லுங்கள் என்று ப்ரார்த்தித்து, கதறிக்கொண்டுபோனாள். நடுவில் ஜடாயுவைப் பார்த்து ஸீதை, தன்னை ராவணன் கொண்டுபோவதை ராமனிடமும், லக்ஷ்மணனிடமும் சொல்லும்படி வேண்டினாள். (ஸ-48-49.)

(98) ஜடாயு, ராவணனுக்கு நல்ல புத்தியைச்சொல்லி, ஸீதையை விட்டுவிடும்படியும், அப்படி விடாவிட்டால் தன்னுடன் சண்டைபோடும்படியும் சொன்னான். ராவணனுக்கும் ஜடாயுவுக்கும் சண்டைநடந்தது. ஜடாயு ராவணனுடைய பாணங்களையெல்லாம் தனது சிறகுகளாலே உதறித் தள்ளிவிட்டு, கால்களாலே அவனுடைய இரண்டு வில்லுகளை முறித்து, ரதத்தை உடைத்து, குதிரைகளையும் ஸாரதியையும் கொன்றான். ராவணன் ஸீதையைத் தூக்கிக்கொண்டு ஓட ஆரம்பித்தான். அவன் பின்னாலே ஜடாயுபோய் தன்னுடைய மூக்காலும் நகங்களாலும் அவன் முதுகைப் பிளந்து தோள்களைத் துணித்தான். அவைகள் மறுபடியும் உண்டாக, ராவணன் ஸீதையைக் கீழேவைத்துவிட்டு ஒரு முகூர்த்தம் சண்டையிட்டு, ஜடாயுவினுடைய சிறகுகளை

அறுத்து அவனைக் கீழே தள்ளினான். ஸீதை ஜடாயுவைக் கட்டிக் கொண்டு அழுதாள். ராவணன் அவளைத் தூக்கிக்கொண்டு ஆகாசமார்க்கத்தில் போனான். ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும் தங்கள் வருத்தத்தைத் தெரிவித்தன. பிரம்மா தேவகாரியம் ஆய்விட்டது என்று சொன்னான். (ஸ-50+52.)

(99) போகையில் ஸீதை பிரலபித்து ராவணனை நிந்தித்துக் கொண்டு போனாள்; "நீசனே! நான் தனியாயிருப்பதை அறிந்து என்னைத் திருடிக்கொண்டு ஓடுகிறாயே. இந்த வேலை செய்வதற்கு உனக்கு இலஜ்ஜை இல்லையே. ராமனை நேரே எதிர்க்கப் பயந்து, என்னைக் கொண்டுபோக ஆசைப்பட்டு, மான் ரூபமுள்ள ராக்ஷஸனைக்கொண்டு ராமனை வெகுதூரம் இழுத்துக்கொண்டு போகச் செய்தாய். ஏன் ஓடுகிறாய். கொஞ்சகாலம் நில்லு. நீ உயிருடன் திரும்பிப்போகாய். அந்த ராஜகுமாரர்களுடைய கண்களுக்குத் தென்பட்டுவிட்டால், நீ ஸைந்யத்துடனிருந்தாலும் ஒரு க்ஷணம்கூடப் பிழைத்திராய். காட்டில் ஜ்வலிக்கிற நெருப்பை எப்படி ஒரு பக்ஷி தொடமுடியாதோ, அப்படியே அவர்களுடைய பாணத்தின் ஸ்பர்சத்தை உனக்கு பொறுக்கச் சக்தியிராது. உன்னுடைய க்ஷேமத்தை நினைத்து என்னை விட்டுவிடு." என்று பலவிதமாக சொல்லிக்கொண்டு போனாள். ராவணன் ஸீதையை லங்கைக்குக் கொண்டுபோய் தன் அந்தப்புரத்தில் வைத்து, "இவள் கேட்டதைக் கொடுங்கள். இவளிடத்தில் அப்ரியமான வார்த்தைகளைச் சொல்லக் கூடாது." என்று ராக்ஷஸிகளுக்குக் கட்டளையிட்டான். ராமன் செய்யும் வியாபாரங்களை அறிவதற்காக எட்டு ராக்ஷஸர்களை ஜநஸ்தாநத்துக்கு அனுப்பினான். மறுநாள் ராவணன் ஸீதைக்குத் தன் ஐசுவரியத்தைக் காட்டிப் பலவிதமாய் ஆசைகாட்டிப் பேசினான். ஸீதை ஒரு திருணத்தை நடுவில்வைத்து அவனை நிந்தித்தாள். "நீ ஸம்பத்தையும் பலத்தையும் உயிரையுமிழக்கப்போகிறாய். உனக்காக லங்கை வைதவ்யத்தை அடையப் போகிறது. சேஷ்டையில்லாமலிருக்கிற எனது இந்த உடம்பை நீ கட்டி வை, அல்லது சாப்பிடு. இந்த உடம்பையாவது இந்த உயிரையாவது எனக்கு ரக்ஷிக்கவேண்டியதில்லை" என்று சொன்னாள். ராவணன் ஸீதையைப்பார்த்து பன்னிரண்டு மாதகாலம் கெடுக் கொடுத்திருக்கிறேன். அதற்குள் என் வசமாகாவிட்

டால், எனக்குக் காலைவேளை ஆஹாரமாக ஆவாய்." என்று சொல்லி, ராக்ஷஸிகளுக்கு ஸீதையை அசோகவனத்துக்குக் கொண்டுபோய், பயமுறுத்தியும் நல்லவார்த்தை சொல்லியும் அவளைத் தன் வசமாக்கும்படி கட்டளையிட்டான். (ஸ-53+56.)

(100) ராமன் மாரீசன் குரலைக்கேட்டும், துர்நிமித்தங்களைப் பார்த்தும், ஸீதைக்கு என்ன கெடுதல் வருகிறதோ என்று பயந்து, வேகமாய் திரும்பிவருகையில், நடுவில் லக்ஷ்மணனைப் பார்த்து, "ஐயோ! ஸீதையை விட்டுவிட்டு வந்துவிட்டாயே. அவளை ராக்ஷஸர்கள் கொன்றுவிட்டார்களோ? கொண்டுபோய் விட்டார்களோ?" என்றுசொன்னான். ஸீதைக்குக் கெடுதிவந்தால் தான் உயிரோடிருக்கமுடியாது என்று புலம்பிக்கொண்டு, ஆச்ரமத்துக்கு வந்தான். ஆச்ரமத்தில் ஸீதையைக் காணவில்லை. "ராஜ்யத்தையிழந்து தண்டகாரண்யத்தில்வந்து தீனனாயிருக்கிற என்னுடன் ஸமானமாகத் துக்கப்படும் ஸீதை எங்கேயிருக்கிறாளோ? எவளைவிட்டு ஒருமுஹூர்த்தம் உயிரோடிருக்க என்னால் முடியாதோ, என் பிராணனுக்குத் துணையான அந்த ஸீதை எங்கேயிருக்கிறாளோ? தேவர்களுக்கு நாயகனாயிருப்பதையும் பூமிக்கு ராஜாவாயிருப்பதையும் அவளைவிட்டு நான் விரும்பமாட்டேன். என் பிராணனைக் காட்டிலும் எனக்கு அதிக பிரியமாயிருக்கிற ஸீதை உயிரோடிருக்கிறாளோ? அவளைவிட்டுப் பிரிந்து நான் பிழைத்திருக்கமாட்டேனே; காட்டில் பதினான்கு வருஷங்கள் இருக்கிறேன் என்று சொன்னது வீணாகிப் போய்விடுமோ? ஸீதைக்காக நான் இறக்க நீ அயோத்திக்குத் திரும்பிப் போகும் போது, கைகேயியின் ஆசை நிறைவேறும்" என்று இப்படிப் புலம்பி, ஸீதையை விட்டுவந்ததற்குக் காரணத்தை லக்ஷ்மணனிடம் கேட்க, அவன் நடந்ததைச் சொன்னான்.

ஸர்வதா ஸௌம்ய தே ஸீதயா யச்சோதிதஃ ।
க்ரோதஸ்ய வசமாபந்நோ நாகரோஃ சாஸநம் மம ॥ (59-24.)

"நீ ஸீதையாலே ஏவப்பட்டுக் கோபத்தின் வசத்தையடைந்து, என் கட்டளையைச் செய்யவில்லை. நீ செய்தது எல்லாவிதத்தாலும் பிசகு" என்று ராமன் லக்ஷ்மணனைப் பார்த்துச் சொன்னான். ராமன் ஸீதையைத் தேடிக்கொண்டு மரங்களையும் மிருகங்களையும் ஸீதையைப் பார்த்தீர்களா?" என்று கேட்டுக்கொண்டு

ஒரு வனத்திலிருந்து வேறொரு வனத்துக்குப் போனான். சில வஸ்துக்களைப் பார்த்து, "இவள் ஸீதையோ" என்று பிரமித்தான். சிலவேளைகளில் பித்துப்பிடித்தவன்போல் அலைந்தான். (ஸ-57, 58, 59, 60.)

(101) இப்படிப் புலம்பிக்கொண்டிருந்த ராமனைப்பார்த்து "தேடுவதில் ப்ரயத்நம் பண்ணவேண்டும்." என்று லக்ஷ்மணன் சொன்னான். இருவரும் தேடினார்கள். ஸீதையைக் காணவில்லை. அவளை விட்டுத் தான் அயோத்திக்குத் திரும்பிப் போகமுடியாதென்று சொல்லி, ராமன் லக்ஷ்மணனை அயோத்திக்குத் திரும்பிப்போகச் சொன்னான். (ஸ-61.) ராமன் மிருகங்களைக் கேட்க, அவைகள் தெற்குமுகமாய்த் திரும்பி ஆகாசத்தைப் பார்த்தன. "ஸீதை ராக்ஷஸனாலே தெற்கே கொண்டுபோகப்பட்டாள்" என்று அவைகள் காண்பித்தனவாக எண்ணி, ராம லக்ஷ்மணர்கள் தெற்கே போனார்கள். வழியில் ஸீதை அணிந்த புஷ்பங்களையும், கொஞ்சதூரத்தில் உடைந்த ரதத்தையும், கவசத்தையும், இறந்து கிடந்த சாமரம் வீசுகிறவர்களையும் பார்த்து, ராமன், 'ஸீதையிருக்கிறவிடத்தை வநத்திலிருக்கிறவர்கள் சொல்லாவிட்டால், மூன்று உலகங்களையும் நாசம்பண்ணிவிடுகிறேன்' என்று கோபத்துடன் சொல்லி, வில்லில் பாணத்தைப் பூட்டினான். லக்ஷ்மணன் ராமனுடைய கோபம் தணியும்படி நிரூபணம்பண்ணி, 'ஒருவனுடைய குற்றத்துக்காக உலகத்தை நாசம்பண்ணக்கூடாது' என்று தேற்றி, 'ஸீதையை எங்கும் தேடுவோம், தேவதைகள் கொடுக்காவிட்டால் உன் இஷ்டப்படி செய்யலாம்' என்று சொன்னான். (ஸ-62, 63, 64, 65, 66.) இதை ஏற்றுக்கொண்டு ராமன் மறுபடியும் தேடுகையில் குற்றுயிராய்க் கீழே கிடந்த ஜடாயுவைக் கண்டான். 'இவன்தான் ஸீதையைப் பக்ஷித்த ராக்ஷஸன்' என்று எண்ணி அவனை எதிர்க்கப்போகையில், ஜடாயு நடந்ததைச் சொன்னான். ராமன் ஜடாயுவைக் கட்டிக்கொண்டு அழுதான்.

राज्याद्भ्रंशो वने वासः सीता नष्टा द्विजो हतः।
ईदृशीयं ममालक्ष्मीर्निर्दहेदपि पावकम्॥

(ஸ-67-25.)

"ராஜ்யத்தை இழந்தது, வநத்தில் வஸிப்பது, ஸீதையைப் பறிகொடுத்தது, ஜடாயு இறந்தது, இவ்விதமான என் தௌர்ப்

பாக்கியம் அக்கினியையும் கொளுத்திவிடும்'' என்று புலம்பினான். ஜடாயுவுக்கு மறுபடியும் பிரஜ்ஞை திரும்பிவந்து ஸீதையை ராவணன் கொண்டுபோனதைச் சொல்லி, ''மறுபடியும் தேடு. ராவணன் ஸீதையைக் கொண்டுபோன முஹூர்த்தத்திற்கு விந்தம் என்று பெயர்; அதில் நஷ்டமானது சீக்கிரம் கைக்கு வரும். ராவணனைச் சண்டையில் கொன்று ஸீதையைக் கட்டாயம் அடைவாய்.'' என்று சொல்லி முடிவதற்குள் ஜடாயுவின் பிராணன் போய்விட்டது. ராமன் அதற்கு ஸம்ஸ்காரம்பண்ணி, கோதாவரியில் தர்ப்பணம்செய்து, ''யஜ்ஞங்களைச் செய்கிறவர்களும், பூமியைத் தானம் பண்ணுகிறவர்களும், ஸந்யாஸிகளும் எந்த் லோகத்தை அடைவார்களோ அந்த லோகங்களை என் அநுமதியின்பேரில் அடை'' என்று புண்ணிய லோகத்தை அதற்குக் கொடுத்தான். (ஸ-67-68.)

(102) இரண்டுபேர்களும் தென்மேற்குமூலையாக ஆறு க்ரோசம்போய், அயோமுகி என்கிற ராக்ஷஸியைக் கண்டார்கள். அவள் போகத்தை ஆசைப்பட்டு லக்ஷ்மணனைக் கட்டிக்கொள்ள, லக்ஷ்மணன் அவளுடைய ஸ்தநங்கள் காதுகள் மூக்கு இவைகளை அறுத்துவிட்டான், அவள் ஓடிப்போனாள். பிறகு அவர்கள் கபந்தன்வசம் அகப்பட்டார்கள். சேஷ்டையில்லாமலிருக்கிற ஒருவனைக்கொல்லுவது நியாயமன்றுஎன்று லக்ஷ்மணன்சொல்ல, ராமன் கபந்தனுடைய ஒரு கையையும் லக்ஷ்மணன் மற்றொரு கையையும் அறுத்துவிட்டார்கள். கபந்தனுக்கு முன் அவஸ்தையின்* நினைவுவந்தது. அவன் அவர்களைப்பார்த்து ''என்னை ஒரு குழியில்தள்ளி தஹநம் பண்ணுங்கள். நான் அதிலிருந்து திவ்ய தேஹத்துடன் மேலே கிளம்புகையில், நீங்கள் ஸீதையை அடைவதற்கு உபாயத்தைச் சொல்லுகிறேன்'' என்றான். அவர்கள் அப்படியே செய்ய, கபந்தன் ''ருசியமூக பர்வதத்தில் ஸுக்கிரீவன் என்கிற வானரன் இருக்கிறான். அவனுடன் ஸக்கியம் செய்துகொள். அவன் வானரவீரர்களை அனுப்பி ஸீதையைக் கண்டுபிடித்து, நீ அவளுடன் சேருவதற்குத் துணையாயிருப்பன். மேற்கே போ. பம்பை என்னும் ஸரஸைப் பார்ப்பாய். அதின் கிழக்கே

* கபந்தனுடைய வரலாற்றை அநுபந்தத்தில் பார்க்கலாம்.

ருச்யமூகம் என்கிற மலையிருக்கிறது. அதில் ஒரு குஹையில் ஸுக்ரீவன் வஸிக்கிறான். பம்பையின் மேல்கரையில் மதங்கரின் ஆச்ரமம் இருக்கிறது. அதில் மதங்கர் சிஷ்யர்களுக்குப் பரிசாரிகையான சபரீ என்ற ஒருத்தி இருக்கிறாள். அவளைப் பார்த்துவிட்டுப் போங்கள்.'' என்று கபந்தன் சொன்னான். ராமலக்ஷ்மணர்கள் மதங்காச்ரமத்தில் சபரியைக்கண்டு, அவள் செய்த ஆதித்யத்தைப் பெற்றுக்கொண்டார்கள். அவள் அக்கினி ப்ரவேசம்பண்ணி, திவ்விய தேஹத்தையடைந்து, தன் குருக்கள் இருந்தவிடத்துக்குப் போனாள். ராம லக்ஷ்மணர்கள் மதங்காச்ரமத்திலிருந்து பம்பைக்குப்போனார்கள். (ஸ-69+75)

---

ஆரண்யகாண்டம் முற்றிற்று.

---

# கிஷ்கிந்தாகாண்டம்.

(103) ராமன் பம்பையைக்கண்டு, அதை வர்ணித்து, ஸீதையை விட்டுப் பிரிந்ததினால் தனக்கு உண்டான துக்கத்தைச் சொல்லிப் புலம்பினான். லக்ஷ்மணன் அவனைத் தேற்றினான்.

𑌸𑍍𑌨𑍇𑌹𑌾𑌦𑍍𑌵𑌿𑌯𑍋𑌗𑌜𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌤𑍍𑌯𑌜 𑌸𑍍𑌨𑍇𑌹𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑍇 𑌜𑌨𑍇 ।
𑌅𑌤𑌿𑌸𑍍𑌨𑍇𑌹𑌪𑌰𑌿𑌷𑍍𑌵𑌙𑍍𑌗𑌾𑌦𑍍𑌵𑌰𑍍𑌤𑌿𑌰𑌾𑌰𑍍𑌦𑍍𑌰𑌾𑌪𑌿 𑌦𑌹𑍍𑌯𑌤𑍇 ।

(ஸ-1-118.)

"ஒருவனைவிட்டுப் பிரிவதினால் துக்கமுண்டாகிறது என்கிற லோக வ்ருத்தத்தை நினைத்துக்கொண்டு, பிரியமான ஜனத்தினிடமிருக்கும் ஸ்நேஹத்தை விட்டுவிடு. அதிக (ஸ்நேஹத்தோடு) எண்ணெயோடுகூடிய திரி ஈரமாயிருந்தாலும் எரிந்துபோகிறது. காரியங்களின் பிரயோஜநங்களை இழந்தவர்களால் எந்த ப்ரயோஜநமும் யத்னமில்லாமல் அடைய முடியாது.

𑌉𑌤𑍍𑌸𑌾𑌹𑍋 𑌬𑌲𑌵𑌾𑌨𑌾𑌰𑍍𑌯 𑌨𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌸𑌾𑌹𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 𑌬𑌲𑌮𑍍 ।
𑌸𑍋𑌤𑍍𑌸𑌾𑌹𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌲𑍋𑌕𑍇𑌷𑍁 𑌨 𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑌪𑌿 𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌮𑍍 ।
𑌉𑌤𑍍𑌸𑌾𑌹𑌵𑌨𑍍𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾 𑌨𑌾𑌵𑌸𑍀𑌦𑌨𑍍𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 ।
𑌉𑌤𑍍𑌸𑌾𑌹𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌸𑍀𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌲𑌭𑍇𑌮𑌹𑌿 ॥

(ஸ-1-122, 125.)

உத்ஸாஹம் பலமுள்ளது. உத்ஸாஹத்தைக்காட்டிலும் வேறு உயர்ந்த பலமில்லை. உத்ஸாஹமுள்ளவர்களாலே இவ்வுலகத்தில் அடைய முடியாதது இல்லை. உத்ஸாஹமுள்ளவர்கள் கர்மம் செய்கிற விஷயத்தில் மனச்சோர்வை அடைகிறதில்லை. உத்ஸாஹத்தைக்கொண்டு ஸீதையை அடைவோம்" என்று சொன்னான். (ஸ-1.)

(104) ருச்யமூகத்திலிருக்கிற ஸுக்கிரீவன் ராமனையும் லக்ஷ்மணனையும் கண்டு, வாலியினால் அனுப்பப்பட்டவர்களோ என்று பயந்து, மந்திரிகளோடு மலைய பர்வதத்துக்கு ஓடினான். ஹநுமான், பயப்படவேண்டாம் என்று அவனைத்தேற்றி, ராமலக்ஷ்மணர்களைப்பற்றி அறிந்துவர ஸந்யாஸிவேஷம்பூண்டுகொண்டு அவர்களிடம் போனான். ஹநுமான், "நீங்கள் ராஜருஷிகளைப் போலவும், உயர்ந்த தேவர்கள் போலவும் இருக்கிறீர்கள்.

தாபஸவேஷம் பூண்டிருக்கிறீர்கள். கைளில் தனுசை வைத்துக் கொண்டு இங்கிருக்கும் மிருகங்களைப் பயந்து ஓடும்படி செய்கி றீர்கள். நீங்கள் யார்? எதற்காக வந்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டு, "நான் ஸுக்கிரீவனுடைய மந்திரி. ஹநுமான் என்று பெயர். ஸுக்கிரீவன் தன் தமையனுன வாலியிடமிருக்கும் பயத் தாலே, அவன் வரக்கூடாத இந்த மலையிலிருக்கிறுன். அவன் உங்களைத் துணையாயிருக்கும்படி வேண்டுகிறுன்'' என்று சொன் ஞன். ராமன் லக்ஷ்மணனைக்கொண்டு ஸுக்கிரீவனுடைய ஸக்கி யத்தை நாங்களும் வேண்டுகிறோம் என்று தெரிவித்தான். லக்ஷ்மணன், ராமனுடைய வரலாற்றைச்சொல்லி, ஸுக்கிரீவனைச் சரணம் அடைவதாகச் சொன்ஞன். "முன்னுல் இவன் லோக நாதனுய் இருந்தான். இவனுடைய தகப்பனர் தர்மத்தில் ஆசை யுள்ளவனுயும், எல்லாரையும் ரக்ஷிக்கிறவனுயுமிருந்தார். இவன் அவருடைய மூத்த குமாரன். இந்த தர்மாத்மா எல்லா லோகங் களுக்கும் ரக்ஷகனுயிருப்பவன். இவன் மனம் தெளிந்தால் எல் லாருடைய மனமும் தெளிவடையும். இப்படிப்பட்ட ராமன் ஸுக்கிரீவனைச் சரணம் அடைகிறுன். ஸீதையை இழந்து துக் கப்பட்டுக்கொண்டிருக்கிறுன். இவன் விஷயத்தில் ஸுக்கிரீவன் ப்ரஸாதத்தைச் செய்யவேண்டும்'' என்று சொன்ஞன். ஹநு மான், ஸுக்கிரீவனும் ராமனைப்போலவே இருப்பதாகச் சொ ல்லி, அவர்களைத் தூக்கிக்கொண்டு ருச்யமூக மலைக்குப்போய், அங்கே அவர்களை இறக்கி வைத்துவிட்டு, ஸுக்கிரீவனிடம் போய் நடந்தவைகளைச் சொல்லி, அவனை ருச்யமூக பர்வதத் துக்கு அழைத்துக்கொண்டு வந்தான். ஸுக்கிரீவன், ராமனைப் பார்த்து, 'ஹநுமான் சொல்ல எல்லாம் தெரிந்துகொண்டேன்' என்று சொல்லித் தன் வலதுகையை நீட்டிஞன். அதை ராமன் பிடித்து, அவனைக் கட்டிக்கொண்டான். ஹநுமான் அக்னியை மூட்ட, அதை ஸுக்கிரீவனும் ராமனும் புஷ்பங்களால் அர்ச் சித்து, பிரதக்ஷிணம் பண்ணிஞர்கள். இப்படி இருவருக்கும் ஸக்கியமுண்டாயிற்று.* ஸுக்கிரீவன்,

க்ஷம்வயமெஸ்ராzவிஜெஹ்ருஜெஷ்ராஹெ்ருகம்ஷுவேம்ஸுவம் வ நள।

* அப்போது ஸீதைக்கும், வாலிக்கும், ராவணனுக்கும் இடது கண் துடித்தது. இது புருஷர்களுக்குக் கெடுதலையும், ஸ்திரீகளுக்கு நல்லதையும் காட்டுகிறது.

"நீ எனக்கு மனதுக்குப்பிடித்த தோழன். இனிமேல் நம்மிருவருக்கும் துக்கமும் ஸமானம், ஸுகமும் ஸமானம்" என்று சொல்லி, தனக்கு வாலியாலுண்டான பயத்தைச் சொல்லி, தனக்கு அபயமளிக்கும்படி கேட்டான். ராமன் மந்தஹாஸம் பண்ணிக்கொண்டு "உபகாரபலம் மித்ரம்" ஸ்நேஹத்துக்குப் பலன் உபகாரம்செய்வது என்று சொல்லி, "உன் மனைவியை அபஹரித்த வாலியைக் கொல்லுவேன்" என்று பிரதிஜ்ஞைபண்ணினான். (ஸ-2, 3, 4, 5.) ஸுக்கிரீவன், ஸீதை எங்கேயிருந்தாலும் தான் தேடிக்கொண்டு வருவதாகச்சொல்லி, ராமனிடம் ப்ரதிஜ்ஞை பண்ணி, அவள் ராவணனால் கொண்டுபோகும் காலத்தில் தான் பார்த்ததாயும், அப்போது அவள் நகைகளைக் கழற்றிப் போட்டதாகவும், அவற்றைத் தான் வைத்திருப்பதாகவும் சொல்லி, அவற்றைக் கொண்டுவந்து காண்பிக்க, அதைப்பார்த்து ராமன் வருத்தப்பட்டான். ஸுக்கிரீவன் ராமனை ஸமாதானம் பண்ண, ராமன், 'நான் வாலியைக் கொல்லுகிறேன்.

அந்ருதம் நோக்தபூர்வம் மே ந ச வக்ஷ்யே கதாசந । (7-22)

இதுவரையில் ஒருநாளும் நான் பொய் சொன்னதில்லை. இனிமேலும் ஒருபோதும் பொய் சொல்லப்போகிறதில்லை. நான் உனக்கு இதைப் பிரதிஜ்ஞை செய்கிறேன். ஸத்யத்தைக்கொண்டு உனக்கு ஆணையிட்டுச் சொல்லுகிறேன்' என்று சொன்னான். (ஸ-7.)

(105) ஸுக்கிரீவன் வாலியினுடைய பலத்தைத் தெரிவிப்பதற்காக, அவன் துந்துபி என்பவனைக் கொன்றதையும், அவன் சரீரத்தை வெகுதூரம் எறிந்ததையும் சொன்னான். ராமன் மலைபோலிருந்த துந்துபியின் அஸ்தியைத் திருவடி கட்டைவிரலால் பத்து யோஜனைதூரம் தூக்கி எறிந்தான். ஸுக்கிரீவன், "இது உலர்ந்துபோன எலும்புகள். வாலி எறிந்தது ரக்தத்தோடும் மாம்ஸத்தோடும் கூடியதாய் பளுவாய் இருந்தது. இதனால் வாலியைக்காட்டிலும் நீ அதிக பலமுள்ளவன் என்று ஏற்படவில்லையே." என்று சொன்னான். அவனுக்கு நம்பிக்கை

* வாலிக்கும் ஸுக்கிரீவனுக்கும் வைரமுண்டானதைப்பற்றி அநுபந்தத்தில் பார்க்க.

உண்டாவதற்காக ராமன் தழைத்திருந்த ஏழு ஆச்சாமரங்களை யும் மலையின் தாழ்வரையையும், பூமியையும் ஒரே பாணத்தால் துளைத்தான். ஒரு முஹூர்த்தத்தில் அந்தப்பாணம் அம்பராத் துணியில் வந்து சேர்ந்தது. இந்த ஆச்சரியமான வேலைகளைப் பார்த்து ராமனின் சக்தி விஷயத்தில் ஸுக்கிரீவனுக்குப் பூரண மான நம்பிக்கை உண்டாயிற்று. (ஸ-8-12.)

(106) ராமன் ஸுக்கிரீவனைப் பார்த்து "கிஷ்கிந்தைக்குப் போ, வாலியைச் சண்டைக்குக் கூப்பிடு, நாங்கள் உன் பின்னாலே வருகிறோம்" என்று சொன்னான். எல்லாரும் சேர்ந்து போனா ர்கள். ஸுக்கிரீவன் அங்கு போய் பெரிய சப்தம்பண்ணினான். அதைப் பொறுக்காமல் வாலி வெளியில்வந்து ஸுக்கிரீவனுடன் சண்டைசெய்தான். ராமன் ஒன்றும் செய்யவில்லை. ஸுக்கி ரீவன் வாலியால்அடிபட்டு ருச்யமூக பர்வதத்துக்கு ஓடிப்போய், ராமனை 'ஏன் வீணாக என்னைச் சண்டைக்கு அனுப்பினாய்" என்று கேட்டான். ராமன்—'உனக்கும் வாலிக்கும் அலங்கார மும் வேஷமும் உயரமும் நடையும் ஸ்வரமும் தேஜஸும் பார்வையும் பராக்கிரமும் பேச்சும் ஒத்து இருந்தன. இத னால் நான் ஸந்தேஹத்தை அடைந்து பாணத்தை விடவில்லை. அதைவிட்டு ஒருகால் உனக்குக் கெடுதி நேரிட்டால், நம் இருவரு க்கும் அநிஷ்டம் உண்டாகுமே. உனக்கு அடையாளம் பண் ணுகிறேன். மறுபடியும் வாலியைச் சண்டைக்குக் கூப்பிடு." என்று பதில் சொல்லி, ஸுக்கிரீவன் கழுத்தில் கஜபுஷ்பக்கொ டியை லக்ஷ்மணனைக் கொண்டுபோடுவித்தான். (ஸ-12, 13, 14.) ஸுக்கிரீவன் மறுபடியும் வாலியைச் சண்டைக்குக் கூப்பிட் டான். வாலி அதைப் பொறுக்காமல் சண்டைக்கு வெளியேவர, அவன் மனைவியான தாரை "தோற்று ஓடிப்போன ஸுக்கிரீ வன் திரும்பி வந்திருப்பதால், அவனுக்குத் துணை இருக்கவேண் டும். இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த ராமனும் லக்ஷ்மணனும் காட்டுக்கு வந்து ஸுக்கிரீவனுடன் ஸக்கியம் பண்ணியிருப்பதாக சாரர்களாலே அறிந்து அங்கதன் எனக்குச் சொல்லியிருக்கிறான். ஸுக்கிரீவனிடத்தில் கோபத்தைவிட்டு, அவனோடு ஸக்கியம் செய்துகொள்." என்று சொல்லி அவனைத் தடுத்தாள். வாலி தாரையை ஸமாதானம் பண்ணி,

அதர்ஷிதாநாம் ஶூராணாம் ஸமரேஷ்வநிவர்த்திநாம் ।
தர்ஷணாமர்ஷணம் வீர மரணாததிரிச்யதே । (16-37.)

ஒருவனாலும் அவமானம் பண்ணப்படாதவர்களும், சண்டையில் திரும்பி வராதவர்களுமான சூரர்களுக்கு அவமானம் பண்ணுவதைப் பொறுப்பது மரணத்தைக்காட்டிலும் கொடுமையானது. ராமன் விஷயமாக நீ துக்கப்படவேண்டாம்.

தர்மஜ்ஞஶ்ச க்ருதஜ்ஞஶ்ச கதம் பாபம் கரிஷ்யதி । (16-85.)

தர்மம் அறிந்தவனும், உபகாரத்தை மறக்காதவனுமான ராமன் அபராதம் பண்ணாதவனை எப்படி வதம் செய்வான்." என்று சொல்லி, சண்டைக்கு வந்தான். அவனுக்கும் ஸுக்கிரீவனுக்கும் சண்டை வெகு உக்கிரமாக நடந்தது. ஸுக்கிரீவனுக்கு எப்போது பலம் குறைந்ததோ, அப்போது ராமன் வாலியின் மேல் ஒரு பாணத்தைப்போட்டு வாலியைக் கீழே விழும்படி செய்தான். (ஸ-15, 16.)

(107) ராமனும் லக்ஷ்மணனும் அவனைப்பார்க்கக் கிட்டப் போனார்கள். வாலி ராமனைப்பார்த்து, அவனை மேல்வருமாறு நிந்தித்தான் :—" நீ ராஜபுத்ரன் ; நீ சாஸ்திரத்தில் ப்ரீதியுள்ளவன் ; நல்ல குலத்தில் பிறந்தவன் ; ஸத்துவகுணமுள்ளவன் ; தேஜஸையுடையவன் ; நல்ல வ்ரதங்களைச் செய்கிறவன் ; இப்படி உனக்குப் பிரஸித்தி இருக்கிறது ; எதிரே நில்லாமல் மறைந்திருந்து என்னைக் கொன்றதால் உனக்கு என்ன பெருமை உண்டாகும்? நீ தயையுள்ளவன் ; ப்ரஜைகளின் ஹிதத்தில் ருசியுள்ளவன் ; * உத்ஸாஹத்தை ஜயித்தவன் ; ஆசாரம் அறிந்தவன் ; இப்படி எல்லாரும் உன் கீர்த்தியைச் சொல்லுகிறார்கள். இந்திரியங்களை அடக்குவது, மனதை அடக்குவது, பொறுமை, தர்மம் செய்வது, தைரியம், உண்மை பேசுவது, பராக்ரமம், குற்றம் பண்ணினவர்களிடத்தில் தண்டத்தைச் செலுத்துவது— இவைகள் ராஜாவின் குணங்கள். இந்தக் குணங்களும் நல்ல

* ஜிதோத்ஸாஹ: என்கிற பாடத்தைக்கொண்டு இது எழுதினது. இதின் பொருள் — ஆலோசனையில்லாமல் ஒரு கார்யத்தில் இறங்கத் தூண்டும் உத்ஸாஹத்தை விவேகத்தால் அடக்கிவிடுபவன் என்பது. மஹோத்ஸாஹ: என்றும் பாடமிருக்கிறது.

குலத்தில் பிறப்பும் உன்னிடத்தில் இருக்கின்றன என்று நிச்சயித்து, தாரையால் தடுக்கப்பட்டபோதிலும், ஸுக்ரீவனோடு சண்டைக்குவந்தேன். வேறொருவனிடம் சண்டைபோட்டுக்கொண்டு அதில் பரவசமாயிருந்த என்னை நீ எதிர்க்கமாட்டாய் என்று உன்னைப் பார்க்காதபோது எனக்குப் புத்தி உண்டாயிருந்தது. இப்போது உன்னைப் பார்க்கும்போது, அது பிசகு என்று எனக்குத் தோன்றுகிறது. நீ புத்திகெட்டவன்; தர்மத்தைச் செய்பவன் என்று கொடிகட்டிப் பறக்கவிட்டுக்கொண்டு தர்மத்தைச் செய்யாதவன்; புல்லால் மறைக்கப்பட்ட கிணறுபோலிருக்கிறவன்; பாபத்தைச் செய்கிறவன்; என்று உன்னை நான் அறியவில்லை. நீ பெரியோர்களின் வேஷத்தைப்பூண்டு பாபத்தைச் செய்கிறவன்; சாம்பலால் மூடப்பட்ட நெருப்புப்போன்றவன்; தர்மம் செய்வதாக வியாஜமுடையவன் என்று நான் அறியவில்லை. நான் உன் நகரத்திலோ, உன் தேசத்திலோ ஒரு கெடுதியும் செய்யவில்லை. உன்னை அவமதிக்கவுமில்லையே; பாபம் செய்யாத என்னை எதற்காகக் கொன்றாய். நான் காட்டில் ஸஞ்சரிக்கிற வாநரம்; காய் கிழங்குகளை தின்னுகிறவன். உன்னை நான் எதிர்க்கவில்லை. வேறொருவனுடன் சண்டைசெய்துகொண்டிருந்தேன். என்னை நீ எப்படிக் கொல்லலாம்? உலகத்தில் பூமியும், தங்கமும், வெள்ளியும் விரோதம் பண்ணுவதற்குக் காரணங்கள். இவைகளில் ஒன்றும் என்னிடத்தில் இல்லை. உனக்கு எதில் பேராசையிருக்கிறது? நான் வஸிக்கிற வனத்திலா? அல்லது நான் தின்னும் பழங்களிலா? அருவருக்கத்தகுந்த கருமத்தைச்செய்து, பெரியோர்களின் நடுவில் என்ன சொல்லுவாய்? ராஜாவையும் ப்ராம்மணனையும் பசுவையும் கொல்லுகிறனும், திருடுகிறவனும், பிராணிகளை வதம் செய்வதில் ப்ரீதியுள்ளவனும், நாஸ்திகனும், தமையன் இருக்க விவாஹம் செய்துகொண்ட தம்பியும் இவர்கள் எல்லாரும் கட்டாயம் நரகத்தை அடைவார்கள். கோள் சொல்லுகிறவனும், லுப்தனும், ஸ்நேஹிதனைக் கொல்லுகிறவனும், குருவின் பத்னியைத் தொடுகிறவனும் ஆகிய இவர்கள் பாபம் செய்தவர்களுடைய லோகங்களுக்குப் போவார்கள். இதில் ஸம்சயமில்லை. வேட்டையாடுவதில் மிருகங்களைக் கொல்லுவது குற்றமில்லை என்று சொல்லுகிறாயோ? என்னுடைய எலும்பும் மயிரும்

தொடக்கூடாதவைகள்; என்னுடைய தோல் வஸ்திரத்துக்கு உதவாது; என்னுடைய மாம்ஸம் உன்னைப்போல் தர்மம் செய்கிறவர்களால் சாப்பிடத்தகுந்ததன்று. காகுத்தனே! நாதனாக எண்ணிக்கொண்டிருக்கிற நீ பூமிக்கு நாதன் ஆகமாட்டாய். நல்ல சீலமுள்ள ஸ்திரீக்குத் தூர்த்தன் பதியாக ஆகமாட்டான். நல்லவனைப்போல, தன்னைக் காண்பித்து அப்ரியத்தைச் செய்கிறவனும், அபகாரம் செய்தே பிழைக்கிறவனும், அல்பமான வேலையைச் செய்கிறவனும், பொய்யில்படிந்த மனதையுடையவனுமான உன்னை, மஹாத்மாவான தசரதன் எப்படிப் பெற்றான்? உதாஸீனர்களான எங்களிடத்தில் உன் பராக்கிரமம் காட்டப்பட்டதேயொழிய, அபகாரம் செய்த ராவணனிடத்தில் ஒரு பராக்கிரமும் காட்டப்படவில்லையே. என்னுடனே நேரில் நீ சண்டைக்கு வந்திருந்தால், என்னாலே கொல்லப்பட்டு யமனைப் பார்த்திருப்பாய். ஸீதைக்காக என்னிடம் முன்னாலே சொல்லியிருந்தால், நான் அவளை ஒரேநாளில் கொண்டுவந்திருப்பேன்." என்றான். (ஸ-17.)

(108) ராமன், "தர்மம், அர்த்தம், காமம், உலகத்தில் உள்ள ஆசாரம் இவைகளை அறியாமல் அறிவில்லாதவனாய் என்னை ஏன் நிந்திக்கிறாய்? புத்தியுடையவர்களும் வ்ருத்தர்களும் ஆசார்யர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டவர்களுமானவர்களிடத்தில் தர்மத்தைக் கேளாமல் குரங்குத்தன்மையினால் என்ன எனக்குச்சொல்ல விரும்புகிறாய்? மலைகளோடும் வனங்களோடும்கூடிய இந்தப் பூமி இக்ஷ்வாகுவம்ச ராஜாக்களுடைய ஸொத்து. மிருகங்கள், பக்ஷிகள், மனிதர்கள் இவர்களுள் நல்லவர்களுக்கு அநுக்ரஹத்தையும், கெட்டவர்களுக்கு நிக்ரஹத்தையும் செய்யவேண்டியது அவர்கள் கடமை. தர்மத்தில் மனது உடையவனும், உண்மை பேசுகிறவனும், ருஜுவாயிருக்கிறவனும், தர்மம், அர்த்தம், காமம் இவைகளின் உண்மையை அறிந்தவனும், அநுக்ரஹத்தையும் நிக்ரஹத்தையும் அவரவர்களுக்குத் தகுந்தபடி செய்கிறவனுமான பரதன், இந்தப் பூமியை ஆளுகிறான். நானும் என்னைப் போன்ற ராஜாக்களும் அவன் கட்டளையைப் பெற்றவர்கள். தர்மத்தை விருத்தி பண்ணவேண்டும் என்கிற ஆசையாலே பூமி முழுவதிலும் நாங்கள் ஸஞ்சாரம் செய்கிறோம். தர்மத்தில் ஆசையுள்ள பரதன் ராஜ்யம் ஆளும்போது, தர்மஹானியை

எவன் செய்யக்கூடும்? தர்மத்திலிருந்து நழுவினவனுக்கு நாங்கள் நிக்ரஹத்தைச் செய்கிறோம். நீயோ தர்மஹாநியைச் செய்கிறவன்; செய்யத்தகாத காரியத்தைச் செய்தவன்; காமத்தையே ப்ரதானமாக எண்ணினவன்; ராஜாவின் நடத்தையில்லாதவன். தமையனும், தகப்பனும், வித்யாதாநம்பண்ணுகிறவனும் தகப்பனுர்கள் என்று தர்மவழியிலிருக்கிறவர்கள் எண்ணுகிறார்கள். ஒருவன் தன் பிள்ளையிடத்தில் எவ்விதம் ப்ரீதி பண்ணுகிறானோ, அப்படியே தம்பியிடத்திலும் சிஷ்யனிடத்திலும் ப்ரீதிபண்ணவேணும். தர்மத்தை அநுஸரிப்பவன் இப்படி இருக்கவேண்டியது. நான் உன்னைக் கொல்லுவதற்குக் காரணத்தைக் கேள். ஸநாதநமான தர்மத்தை விட்டுவிட்டு, தம்பியின் பத்நியுடன் சேர்ந்திருந்தாய். அவள் உனக்கு நாட்டுப்பெண் முறை. ஆகையால் நீ தண்டிக்கத் தகுந்தவன். தர்மத்துக்கு விருத்தனாய் உலக மரியாதையிலிருந்து நழுவினவனுக்குத் தண்டத்தைத் தவிர வேறொரு நிக்ரஹத்தையும் நான் காணவில்லை. க்ஷத்ரியனாயும் நல்ல குலத்தில் பிறந்தவனாயுமிருக்கிற நான் உன் பாபத்தைப் பொறுக்கமுடியாது. முன்னாலே என்னைக் கேட்டிருந்தால் ஸீதையைக்கொண்டுவந்து கொடுத்திருப்பேன் என்று சொன்னாயே, அதற்குப் பதில் சொல்லுகிறேன். லக்ஷ்மணனிடம் போல ஸுக்ரீவனிடமும் ஸக்கியம் என்னாலே செய்யப்பட்டது. அதைத் தள்ளமுடியாது. அதன் ப்ரயோஜனம் அவனுக்குப் பத்னியையும் ராஜ்யத்தையும் கொடுப்பது. அவன் என் க்ஷேமத்தில் ப்ரீதியுள்ளவனாக இருக்கிறான். வானரங்கள் முன்னிலையில் ப்ரதிஜ்ஞை செய்திருக்கிறேன். அதை உபேக்ஷிப்பது என்னைப் போன்றவர்களுக்குத் தகுந்ததா? தர்மத்தோடு சேர்ந்தவைகளும், பெரியவைகளுமான இந்தக் காரணங்களால், உனக்குச் செய்த நிக்ரஹத்தை நீ ஒப்புக்கொள்ளவேண்டியது. நீ தர்மத்தை அறிந்தால், மித்ரனுக்கு வேண்டியதைச் செய்வதை ஒப்புக்கொள்ளவேண்டியதே. பாபம் செய்த மனிதர்கள் ராஜாக்களால் தண்டிக்கத்தகுந்தவர்கள். இப்படி ராஜா தன் வேலையைச் செய்தால், அவர்கள் பாபங்களை விட்டு நிர்மலர்களாய் ஸ்வர்க்கத்துக்குப் போகிறார்கள். திருடனும் ராஜாவால் தண்டிக்கப்பட்டாலும், அல்லது தயையினால் அவனால் விடப்பட்டாலும், திருட்டுக்குற்றத்திலிருந்து விடுவிக்கப்படுகிறான். ராஜாவோ பாபம்

பண்ணினவனைத் தண்டிக்காவிட்டால், பாபத்தை அடைகிறான். நான் செய்தபடியே முன்னோர்களான ராஜாக்களும் செய்திருக்கிறார்கள். எனக்கு இந்த விஷயத்தில் மனஸ்தாபம் இல்லை; கோபமும் இல்லை. மாம்ஸத்தை வேண்டுகிற ராஜாக்கள், வலைகளாலும், கயிறுகளாலும், கபட வியாபாரங்களாலும், மறைந்தும், வெளிப்பட்டும், அனேக மிருகங்களைப் பிடிக்கிறார்கள். பயந்து ஓடுகிறவைகளையும், நம்பி நிற்கிறவைகளையும், கவனமுள்ளவைகளையும், கவனமில்லாதவைகளையும், எதிரில் நிற்காதவைகளையும் பல உபாயங்களால் கொல்லுகிறார்கள். இதனால் அவர்களுக்குத் தோஷமில்லை" என்று பதில் சொன்னான். (ஸ-18)

(109) வாலி அஞ்ஜலி பண்ணிக்கொண்டு, "நீ எதைச் சொல்லுகிறாயோ, அது ஸரிதான். இதில் ஸம்சயமில்லை. தாழ்ந்த நான் உயர்ந்த உனக்குப் பதில்சொல்ல எனக்குச் சக்தி இல்லை. நான் முன்பு அஜ்ஞானத்தால் எதைச் சொன்னேனோ, அதை நீ பொறுத்தருளவேண்டும். நான் என்னையாவது தாரையையாவது பந்துக்களையாவது நினைத்து வருத்தப்படவில்லை. குணங்களால் உயர்ந்த என் பிள்ளையான அங்கதனைப்பற்றித்தான் கவலைப்படுகிறேன். பால்யம்முதல் ப்ரீதியுடன் வளர்க்கப்பட்டவனான அவன் என்னைப் பாராமல் தீனனாய் நீர் வற்றின குளம் போல் உலர்ந்துவிடுவான். அவன் பாலன்; நன்றாய் அறியாதவன்; அவன் எனக்கு ஒரேபிள்ளை. என் ப்ரீதிக்கு விஷயமானவன்; தாரையின் பிள்ளை. அவனை நீ ரக்ஷிக்கவேண்டியது. ஸுக்ரீவனிடத்திலும் அங்கதனிடத்திலும் நீ ஒரே எண்ணமுள்ளவனாயிருக்கவேண்டும். தாரையை ஸுக்ரீவன் எப்படி அவமானம் செய்யமாட்டானோ, அப்படி அவனையிருக்கும்படி செய்யவேண்டியது" என்று சொன்னான். ராமனும் அவன் வேண்டினவைகளைச் செய்வதாக ஒப்புக்கொண்டு அவனுக்கு ஆச்வாஸனம் பண்ணினான். வாலியும் மூர்ச்சையடைந்தான். (ஸ-18.)

(110) வாலியின் பாரியையான தாரை வந்து, தன் புருஷனைக் கட்டிக்கொண்டு, "சண்டையில் மிகுந்த பராக்ரமமுள்ளவனே! நான் அபராதம் பண்ணவில்லையே! தீனையாயிருக்கிற என்னுடன் நீ ஏன் பேசவில்லை? எழுந்திரு. நல்ல படுக்கையில் படுத்துக்கொள். உன்னைப்போன்றவர் பூமியில் படுத்துக்கொள்

ளக்கூடாது. என்னைவிட்டு நீ பூமியைக் கட்டிக்கொண்டிருப்பதால் அவள் என்னைவிட உனக்கு மிகவும் வேண்டியவள் என்று எண்ணுகிறேன். உன்னால் தர்மத்துடன் ஆளப்பட்ட கிஷ்கிந்தையைப்போல வேறு நகரம் ஸ்வர்க்கத்தில் உண்டுபண்ணியிருக்கிறாயா? நீ கொல்லப்பட்டிருப்பதை நினைத்து துக்கத்தில் முழுகியிருக்கிற என்னுடைய ஹிருதயம் ஆயிரம் துண்டாக வெடிக்கவில்லையே. ஸுக்ரீவன் பாரியையை நீ அபஹரித்து, அவனைத் தேசத்தைவிட்டு விரட்டினாய். அதன் பலனை அநுபவிக்கிறாய். உன் ஹிதத்தை ஆசைப்பட்ட நான் உனக்குச்சொன்ன ஹிதத்தைக் கேட்காமல் என்னை நிந்தித்தாய். முன்னால் துக்கத்துக்குத் தகாதவளாயிருந்து, இப்போது துக்கத்தில் முழுகின நான் விதவையாய், நாதனில்லாதவள்போல இனி இருக்கவேண்டும். நாம் கொண்டாடி வளர்த்த மிருதுவான அங்கதன், சிற்றப்பன் கோபித்துக்கொண்டிருக்கையில், எந்த அவஸ்தையை அடையப் போகிறான்? (அங்கதனைப் பார்த்து) 'குழந்தையே! தர்மத்தில் ஆசையுள்ள உன் பிதாவை நன்றாய்ப்பார். இனிமேல் அவனைப் பார்க்கமுடியாது.' (வாலியைப் பார்த்து) 'பிள்ளையை உச்சி மோந்து ஆச்வாஸனம் பண்ணு. இப்படியிரு என்று அவனுக்குச் சொல். நீயோ இவ்விடம்விட்டுப் போகப்போகிறாய். ஸுக்ரீவனுக்கு ப்ரதிஜ்ஞை பண்ணி பெரிய காரியம் செய்த ராமனாலே இரக்கம் விடப்பட்டது.' (ஸுக்ரீவனைப் பார்த்து) 'ஸுக்ரீவா! உன் இஷ்டம் நிறைவேறிற்று. உன் பாரியையான ருமையை அடையப்போகிறாய். பயமில்லாமல் ராஜ்யத்தை அநுபவி. உனக்கு விரோதியான தமையன் கொல்லப்பட்டான்' என்று புலம்பினாள். இப்படிச் சொல்லி தாரை *பிராயோபவேசம் பண்ணத் தீர்மானித்தாள். (ஸ-19-20.) ஹநுமான் அவளை

𑌗𑍁𑌣𑌦𑍋𑌷𑌕𑍃𑌤𑌂 𑌜𑌨𑍍𑌤𑍁𑌃 𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌹𑍇𑌤𑍁𑌕𑌮𑍍 ।
𑌅𑌵𑍍𑌯𑌗𑍍𑌰𑌸𑍍𑌤𑌦𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌮𑍍 ॥

(ஸ-21-2.)

ஒருவன் குணத்தாலோ, தோஷத்தாலோ எந்தக் கர்மத்தைச் செய்கிறானோ, அதன் முழுப் பலனை சுபத்தையோ, அசுபத்தையோ இறந்தபிறகு கட்டாயம் அடைகிறான். துக்கப்பட்டுக்

* ப்ராயோபவேசம்—பட்டினிகிடந்து இறப்பது.

கொண்டு எதைப்பற்றிப் புலம்புகிறாய்? இந்த உடம்பு நீர்க்குமிழிபோலிருக்கையில், யாரைப்பற்றி யார் துக்கப்படுவது? உன் பிள்ளையான அங்கதனை ரக்ஷிக்கவேண்டும். மேலே அவனுக்கு எது ஹிதமோ, அதை எண்ணு. பிராணிகள் பிறப்பதற்கும் இறப்பதற்கும் நியமமில்லை. இதை நீ அறிந்திருக்கிறாய். இந்த உலகத்தில் எது சுபமோ அதையே புத்திமான்கள் செய்யவேண்டும். வாலி சாஸ்திரத்தினால் உண்மையை அறிந்தவன். நல்ல வார்த்தை சொல்லுவதையும் தானம் பண்ணுவதையும் பொறுமையையும் பாராட்டினவன். தர்மத்தால் கிடைக்கக்கூடிய உலகத்தை அவன் அடைந்தான். அவனைப்பற்றி இப்படித் துக்கப்படுவது தகுந்ததன்று. இந்த வானர ச்ரேஷ்டர்களும் உன் பிள்ளையான அங்கதனும் இந்த ராஜ்யமும் உன்னால் நாதனுள்ளவைகளாயிருக்கின்றன. இந்த சோகத்தையும் ஸந்தாபத்தையும் போகும்படி செய். உன் பிள்ளையான அங்கதன் இந்தப் பூமியை ஆளட்டும். எந்த ப்ரயோஜனத்திற்காக ஸந்ததி அடையப்பட்டதோ, இப்போது அவனால் செய்யவேண்டிய வேலை எதுவோ, அந்த வேலையை ராஜாவான வாலிக்குச் செய்வி. வானரராஜாவுக்கு ஸம்ஸ்காரம் செய்யவேண்டும். அங்கதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டும். ஸிம்மாஸனத்திலிருக்கிற உன் பிள்ளையைப் பார்த்து சாந்தியை அடையப்போகிறாய்" என்று ஸமாதானம் பண்ணினான். ஹநுமானுடைய வார்த்தையைக்கேட்டு, தாரை, "அங்கதனைப்போன்ற நூறு பிள்ளைகள் ஒருதட்டிலும், கொல்லப்பட்ட வீரனைக் கட்டிக்கொள்வது ஒருதட்டிலும் இருந்தால், பின்பு சொன்னதே எனக்கு ச்லாக்யமானது. வானர ராஜாவான வாலிக்கு உத்தரக்ரியை செய்விப்பதற்காவது, அங்கதனுக்குப் பட்டாபிஷேகம் பண்ணிவைக்கவாவது எனக்கு அதிகாரமில்லை. அங்கதனுக்குச் சிற்றப்பனான ஸுக்ரீவனே மேலே செய்யவேண்டியவைகளையெல்லாம் செய்யவேண்டியவன். பிள்ளைக்குத் தகப்பன் பந்து; தாயாரன்று. இந்த லோகத்திலோ பரலோகத்திலோ, புருஷனை அடைவதைத்தவிர எனக்கு வேறு தகுந்தகதியில்லை. இதோ ராமனால் முன்னாலே கொல்லப்பட்டு வீரனான வாலி கிடக்கும் இந்தப் படுக்கைதான் எனக்குத் தகுந்தது" என்று சொன்னாள். (ஸ-20-21.)

(111) வாலிக்குப் பிரஜ்ஞை திரும்பிவந்தது. அவன் ஸுக்கிரீவனைப்பார்த்து, "ஏ! ஸுக்ரீவா! என்னிடத்தில் தோஷமிருப்பதாக எண்ணாதே. பின்னாலே பலனைக் கொடுக்கவேண்டிய புத்திமோஹத்தாலே பலாத்காரமாக நான் இழுக்கப்பட்டேன் என்று தெரிந்துகொள். ராஜ்யஸுகமும் ப்ராதாவாக இருப்பதால் இருக்கவேண்டிய நல்ல எண்ணமும் தெய்வத்தினால் நம்மிருவருக்கும் ஒரேகாலத்தில் ஏற்படுத்தப்படவில்லையென்று எண்ணுகிறேன். தெய்வம் ஏற்பாடு செய்ததை வேறாகப் பண்ண முடியாது. நீ இப்போதே வானரங்களுடைய ராஜ்யத்தை அடைந்து, அவைகளைப் பரிபாலனம்பண்ணு. நான் இப்போதே யமன் வீட்டுக்குப் போகிறேன். என் உயிரையும் ராஜ்யத்தையும் இந்த விசாலமான ஸம்பத்தையும் ஒருவனாலும் வாலி கொல்லப்படான் என்கிற கீர்த்தியையும் விடுகிறேன். இந்த அவஸ்தையில் நான் எதைச் சொல்லுகிறேனோ, அது லகுவாகச் செய்யமுடியாவிட்டாலும் கட்டாயம் செய்யவேண்டும். கண்ணும் கண்ணீருமாய் கீழே விழுந்துகிடக்கிற அங்கதனை உன் வயிற்றில் பிறந்த பிள்ளையைப்போல் பார். அவன் ஸுகமாய் இருக்கத்தகுந்தவன்; ஸுகமாய் வளர்க்கப்பட்டவன்; அவன் சிறுவனாயிருந்தாலும் சிறிய புத்தியில்லாதவன்; என் பிராணனைக்காட்டிலும் எனக்கு மிகவும் பிரியனானவன்; என்னால் விடப்பட்ட இவனை ஒருவிதத்திலும் குறைவில்லாதவனாகப் பரிபாலனம் பண்ணு. நீயே அவனுக்கு ஆடை ஆபரணங்கள் முதலான வேண்டியவைகளைக் கொடுக்கவேண்டும். சத்ருக்களிடமிருந்து எல்லாவிதத்தாலும் அவனை ரக்ஷிக்கவேண்டும். 'நான் சத்துருவின் பிள்ளையானதால் தேசத்தைவிட்டுத் துரத்தப்படுவேனோ' என்று அவன் பயப்படுவன். அவனுக்கு இந்த விஷயத்தில் அபயத்தைக் கொடு. நான் எப்படி பயம் வரும்போது அபயத்தைக் கொடுத்தேனோ, அப்படியே நீயும் கொடுக்கவேண்டும். இந்தத் தாரையின் பிள்ளை உனக்கு ஸமமான பராக்ரமமுள்ளவன்; சண்டையில் ராக்ஷஸர்களை வதம் செய்வதில் உனக்குமுன்னால் இருப்பன். ஸுஷேணன் பெண்ணான இந்தத் தாரை ஸூக்ஷ்மமான அர்த்தம் இன்னதென்று நிச்சயம் பண்ணுகிற விஷயத்திலும், பலவிதமான துர்நிமித்தங்களை அறிவதிலும் ஸமர்த்தையானவள். எதை அவள் நல்லது என்று சொல்லுகிறாளோ,

அதை ஸம்சயமில்லாமல் செய். தாரையின் அபிப்ராயம் ஒரு போதும் பழுதாயிராது. ராமனுடைய காரியத்தை ஸம்சய மில்லாமல் செய்யவேண்டும். அதைச் செய்யாவிட்டால், அதர்மம் நேரிடும். அவனைக் கௌரவம் பண்ணுவிட்டால் உன்னைக் கொன்றுவிடுவன். தங்கத்தாலே செய்யப்பட்ட இந்த உயர்ந்த மாலையைத் தரித்துக்கொள். இதில் உயர்ந்த லக்ஷ்மி இருக் கிறது. நான் இறந்தால் இந்த மாலையிலிருந்து அந்த லக்ஷ்மி போய்விடும்" என்று சொன்னுன். ஸுக்ரீவன் வாலி சொன்ன படி அவனுடைய தங்கமாலையைப் பெற்றுக்கொண்டான். வாலி அங்கதனைப்பார்த்து, "இன்ன இடத்தில் இன்ன காலத்தில் இன் னபடி இருக்கவேண்டும் என்பதை அறிந்துகொள். யஜமானனு டைய பிரியமான சொல்லைப்போல, பிரியமில்லாதசொல்லையும் பொறுத்துக்கொள்ளவேண்டும். ஸுகம் வரும்போது ஸுகத்தை யும், துக்கம் வரும்போது துக்கத்தையும் பொறுத்துக்கொண்டு ஸுக்ரீவன் வசத்திலிரு. நீ என்னுல் எப்போதும் லாளனம் பண் ணப்பட்டாய். அப்படியேயிருக்கலாம் என்று எண்ணிக்கொண்டு நீ ஸுக்ரீவனை ஸேவிக்காவிட்டால், அவன் உன்னிடம் பஹுமா னம் பண்ணமாட்டான். அவனுடைய சத்ருக்களுடனும் அவர் களுடைய மித்ரர்களுடனும் சேராதே. மனதை அடக்கிக் கொண்டும் உனக்கு ஸ்வாமியான ஸுக்ரீவனுடைய காரியங்களைச் செய்துகொண்டும் அவன் வசத்திலிரு. ஒருவனிடத்திலும் அதிக ஸ்நேஹம் பண்ணக்கூடாது. ஸ்நேஹமில்லாமலுமிருக்கக்கூடாது. இரண்டும் பெரிய குற்றங்கள். ஆகையால், அப்படியுமில்லாமல் இப்படியுமில்லாமல் நடுத்தரமாய் இரு" என்று சொல்லி, வாலி இறந்தான். (ஸ-22.)

(112) வானரவீரர்கள் அழுதுகொண்டு "வானரராஜா ஸ்வர்க்கம் போய்விட்டபடியால், கிஷ்கிந்தை சூன்யமாய்விட்டது. உத்யானங்கள் மலைகள் காடுகள் இவைகளெல்லாம் சூன்யமாகிவிட் டன. வானரங்களுக்கோ சோபை போய்விட்டது. எவனுடைய பெரிய வேகத்தாலே வனங்களும் தோட்டங்களும் ஏராளமான புஷ்பங்களுள்ளவைகளாக இருந்தனவோ, அவை அப்படி இருக் கும்படி இனிமேல் எவன் செய்வான்?" என்று புலம்பினுர்கள். தாரையும் பூமியில்விழுந்து வாலியைக் கட்டிக்கொண்டு புலம்பி னுள். "என் வார்த்தையைக்கேட்காமல் மேடுபள்ளமாயும், கற்கள்

நிறைந்ததாயுமிருக்கும் பூமியில் படுத்திருக்கிறாயே. பூமியைக் கட்டிக்கொண்டு எனக்குப் பதில்சொல்லாமல் இருப்பதினால், என்னைக்காட்டிலும் பூமி உனக்கு அதிகப்ரியம் என்று நினைக்கிறேன். பலதடவை பயந்து ஓடிப்போன ஸுக்ரீவனுக்கு வசமாகிவிட்டாய். இப்போது ஸுக்ரீவன் ஜயத்தை அடைந்தான். தெய்வத்தின் வியாபாரம் மிகவும் ஆச்சரியமாயிருக்கிறது. கரடிகளிலும் வானரங்களிலும் பிரதானர்களாகவும் பலமுள்ளவர்களாகவுமிருக்கிறவர்கள் உன்னைச் சுற்றி உட்காந்துகொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய புலம்பலையும், துக்கப்பட்டுக்கொண்டு அழுகிற அங்கதனுடைய புலம்பலையும் என்னுடைய புலம்பலையும் கேட்டும் நீ ஏன் எழுந்திருக்கவில்லை? எந்தவிடத்திலே உன்னாலே சத்துருக்கள் கீழே தள்ளப்பட்டார்களோ, அந்த இடத்திலேயே சண்டையில் நீ கொல்லப்பட்டு படுத்திருக்கிறாயே? இதுதான் வீரர்கள் படுக்குமிடமோ? சண்டையையே மிகவுமுயர்ந்ததாக எண்ணின நீ சண்டையினாலேயே இறந்தாய். மறைந்திருந்து சண்டைசெய்யாமல் நேரில்வந்து சண்டைசெய்யும் பலமுள்ளவனே! சுத்தமான குலத்தில் பிறந்தவனே! சண்டையில் பிரீதியுள்ளவனே! எனக்குப் பிரியமானவனே! என்னிடத்தில் வெகுமானம் பண்ணினவனே! நாதனில்லாமல் தனியாயிருக்கிற என்னை விட்டுப் போகிறாயே. புத்திமான் தன் பெண்ணைச் சூரனுக்குக் கொடுக்கக்கூடாது. நான் சூரனுடைய பாரியையாக ஆகி இப்போது கெடுதலை அடைந்து விதவையாக ஆகிவிட்டேன். என் கர்வம் போய்விட்டது. என்னுடைய நிலையான ஸுகத்துக்குக் குறைவு வந்திருக்கிறது. ஆழமாய் விசாலமாயிருக்கிற துக்கஸமுத்ரத்தில் முழுகிவிட்டேன். பர்த்தா கொல்லப்பட்டிருப்பதைப் பார்த்தும் என்னுடைய ஹ்ருதயமானது நூறு துண்டமாக வெடிக்கவில்லையே. அது கல்லைப்போல் கடினமாயிருக்கிறது என்று எண்ணுகிறேன். எனக்கு ஸுஹ்ருத்; பர்த்தா இயற்கையாகவே என்னிடத்தில் பிரியமுள்ளவன்; சண்டையில் பராக்ரமமுள்ளவன்; சூரன்; இப்படிப்பட்ட நீ மரணத்தை அடைந்திருக்கிறாய். இதைப் பார்த்ததும் என் மனது வெடிக்க வேண்டாமோ? பதியையிழந்த ஸ்திரீ பிள்ளையுள்ளவளாயும் நிறைந்த தனதான்யமுள்ளவளாயுமிருந்தாலும் அவளை விதவையென்றே ஜனங்கள் சொல்லுகிறார்கள். இந்த்ரகோபத்தின் வர்

ணம்போல் சிவந்த வர்ணமுள்ள உன் படுக்கையில் எப்படிப் படுத்திருந்தாயோ, அப்படியே உன் உடம்பிலிருந்துவருகிற ரக்த ப்ரவாஹத்தில் நீ படுத்துக்கொண்டிருக்கிறாய். உன்னுடைய உடம்பு புழுதியாலும் ரக்தத்தாலும் எங்கும் பூசப்பட்டிருக்கிறது. அதை நான் இஷ்டப்படி என் புஜங்களால் கட்டிக்கொள்ள முடியவில்லையே. மிகவும் கொடுமையான இந்தச் சண்டையில் ஸுக்ரீவன் அடையவேண்டியதை அடைந்துவிட்டான். அவனுக்குத் துணையாயிருந்த ராமனால் ஒரே பாணத்தாலே அவன் பயம் போக்கப்பட்டது. ராமனாலே விடப்பட்ட பாணம் உன் ஹ்ருதயத்தில் பொத்துக்கொண்டிருப்பதாலே உன்னைக் கட்டிக்கொள்வதிலிருந்து தடுக்கப்பட்டிருக்கிறேன். உன்னை பார்த்துக்கொண்டுதானிருக்கவேண்டியதாயிருக்கிறது." என்று இப்படிப் புலம்புகையில், வாலியினுடைய உடம்பிலிருந்த பாணத்தை நீலன் பிடுங்கிவிட்டான். அப்போது தாரை தன் பிள்ளையான அங்கதனைப்பார்த்து, "அங்கதனே! உன் தகப்பனுடைய கடைசியான கொடுமையான இருப்பைப் பார். அவனுடைய பாபகர்மத்தாலே உண்டான வைரத்துக்கு முடிவு வந்துவிட்டது" என்று சொன்னாள். இதைக்கேட்டு அங்கதன் தகப்பன் கால்களைப் பருத்து உருண்ட தன் கைகளால் பிடித்துக்கொண்டு "நான் அங்கதன்" என்று சொன்னான். தாரை வாலியைப்பார்த்து "நமஸ்காரம் பண்ணுகிற அங்கதனைத் 'தீர்க்காயுஸ ஆக இரு' என்று முன்பு சொன்னதுபோல, ஏன் இப்போது சொல்லவில்லை? நீ என்னை விட்டுவிட்டு, சண்டையாகிய யஜ்ஞத்தைச்செய்து ராமபாணமாகிற ஜலத்தில் அவப்ருதஸ்நாநம் செய்திருக்கிறாய். யக்ஞம் செய்தவன் கடைசியில் பத்நியை விட்டுவிட்டு அவப்ருத ஸ்நாநம் பண்ணுவது உலகில் உண்டோ? சண்டையில் உன்னிடம் ஸந்தோஷப்பட்ட இந்த்ரனால் கொடுக்கப்பட்ட தங்கமாலை ஏன் உன் கழுத்தில் காணப்படவில்லை. நான் சொன்ன ஹிதமான வார்த்தையை நீ கேட்கவில்லை; உன்னைத் தடுக்கவும் என்னால் முடியவில்லை. சண்டையில் கொல்லப்பட்டாய். உன்னால் பிள்ளையோடு கூடின நானும் கொல்லப்பட்டேன். இப்போது லக்ஷ்மியானது என்னைவிடுகிறது" என்று தாரை புலம்பி முடித்தாள். (ஸ-23)

(113) பிறகு ஸுக்ரீவன் வெறுப்பு அடைந்து கண்ணும் கண்ணீருமாய் ஸ்ரீராமனிடம் போய், "எனக்கு இஷ்டமான

தைக் கொடுக்கும் எந்தக் காரியம் உன்னால் பிரதிஜ்ஞை செய்யப் பட்டதோ, அஃது இப்போது நிறைவேறிற்று. இப்போது எனக்கு போகத்திலாவது ஜீவித்திருப்பதிலாவது ஆசையில்லை. இந்தத் தாரை மிகவும் அழும்போதும், நகரம் கதறும்போதும், அங்கதன் தன் தகப்பன் வதத்தினால் ஜீவித்திருப்பனோ என்று ஸம்சயத்துக்கு இடமிருக்கும்போதும், என் மனது ராஜ்யத்தில் ப்ரீதியை அடைகிறதில்லை. ஒருகாரணமுமில்லாமல் வாலி என்னைத் தேசத்தைவிட்டுத் துரத்தினதால் உண்டான கோப த்தாலும், அவன் சொன்ன கடுமையான பேச்சைப் பொறுக்க முடியாமையாலும், என்னை எங்கும் விரட்டினதாலும் என் தமையன் வதம் எனக்கு முன்னால் இஷ்டமாயிருந்தது. அவன் கொல்லப்பட்டபிறகு நான் மிகுந்த தாபத்தை அடைந்திருக் கிறேன். அந்த ருச்யமூகபர்வதத்தில் முன் நான் இருந்தபடி இப்போதுமிருப்பது எனக்கு நல்லதாய்த் தோன்றுகிறது. இவனைக் கொன்று ஸ்வர்க்கத்தை அடைவதும் எனக்கு லாப மாகத் தோன்றவில்லை. 'உன்னைக் கொல்ல விரும்பவில்லை; இஷ்டப்படி ஸஞ்சாரம் பண்ணு' என்று வாலி சொன்னது மஹாத்மாவான அவனுக்குத் தகுந்தது. இப்படிப்பட்ட வாலி யைக் கொன்றது துராத்மாவான எனக்குத் தகுந்தது. ஒரு வனுக்கு மஹாகுணசாலியான ப்ராதாவைக் கொல்லுவதில் எப்படி ருசியுண்டாகும்? ப்ராதாவைக் கொன்று ராஜ்யத்தை அடைவது நல்லதா? அல்லது துக்கத்தை அடைவது நல்லதா? என்று காமத்துக்கு வசமான நான் நிரூபணம் பண்ணவில்லை. தம்பியிடம் இருக்கவேண்டியதையும் உத்தம ஸ்வபாவத்தை யும் ராஜதர்மத்தையும் அவன் ரக்ஷித்தான். நானோ, கோபத் தையும் காமத்தையும் குரங்குத்தன்மையையும் காட்டினேன். த்வஷ்டாவின் பிள்ளையை இந்த்ரன் கொன்று எப்படி பாப த்தை அடைந்தானோ, அப்படியே நானும் தமையன் வதத் தாலே பாபத்தை அடைந்துவிட்டேன். இந்தப் பாபத்துக்கு எல்லையில்லை. ஸாதுக்கள் இதைப் பண்ண மனத்தாலும் நினைக்கமாட்டார்கள். இப்படிப்பட்ட செய்கையில் எவனுக்கா வது விருப்பமுண்டாகுமோ? இதை வெறுக்காதவன் இருப் பனோ? இந்த்ரனுடைய பாபத்தைப் பூமியும், மரங்களும், ஜல மும், ஸ்திரீகளும் பங்கிட்டுக்கொண்டன. குரங்கான என்

பாபத்தை எவன் வாங்கிக்கொள்ளுவன்? இப்படி அதர்மத்தோடு கூடினதாயும் குலத்தை நாசம் பண்ணுவதாயுமிருக்கிற இந்தக் கர்மத்தைச் செய்து, நான், ப்ரஜைகளுடைய ஸம்மானத்தையாவது, யுவராஜாவாயிருப்பதையாவது வேண்டவில்லை. ராஜ்யத்தை வேண்டவில்லையென்று சொல்லவும்வேண்டுமோ? அங்கதன் ஜீவித்திருந்தால் அவனை ரக்ஷிப்பதற்காகத் தாரையும் ஜீவித்திருப்பள். பிள்ளையையிழந்து உயிரோடிருக்கமாட்டாள். அங்கதன் ஜீவித்திருப்பன் என்று நிச்சயமில்லை. ஆகையால் தமையனுடனும் பிள்ளையுடனும் கூட இருப்பதற்காக நான் அக்னி ப்ரவேசம் பண்ணப்போகிறேன். உன் ஆஜ்ஞைப்படி நடக்கும் இந்த வானரவீரர்கள் ஸீதையைத் தேடுவர்கள். நான் இறந்தாலும் உனது காரியம் பூர்த்தியை அடையும். ராமா! எனக்கு அநுமதி கொடு" என்று சொன்னான். இதைக்கேட்டு ஸ்ரீராமன் ஒரு முகூர்த்தம் மனது கலங்கினான். (ஸ-24.)

(114) இறந்த புருஷனைக் கட்டிக்கொண்டிருந்த தாரையை மந்திரி முதலானவர்கள், அவனைவிட்டுப் பிரித்து தூக்கியெடுத்தார்கள். அப்போது அவள் ஸ்ரீராமனைப் பார்த்து, அவனுடைய லக்ஷணங்களைக் கண்டு, "அவன்தான் சுத்தவம்சத்தில் பிறந்தவன்" என்று அறிந்தாள். அவனிடம் போய் ஸ்தோத்ரம் பண்ணி, "எந்தப் பாணத்தாலே எனக்குப் பிரியமான பர்த்தா கொல்லப்பட்டாரோ, அந்த பாணத்தாலேயே என்னையும்கொல்ல வேண்டும். கொல்லப்பட்டு அவனிடம் போவேன். என்னை விட்டு வாலிக்கு ஒன்றிலும் ப்ரீதியிராது. என் விஷயத்தில் ஸ்திரீவதம் என்கிற தோஷம் வராது. 'இவள் அவனுடைய ஆத்மா' என்று பார்த்து என்னையும் கொல்லு. நீ என்னை வாலிக்குத் தானம் பண்ணினதாக ஏற்படும். ஒருவனுக்குக் கன்யாதானம் பண்ணுவதைக்காட்டிலும் உயர்ந்த தானம் இல்லை" என்று பிரார்த்தித்தாள். ஸ்ரீராமன் அவளை ஸமாதானம் பண்ணி, "ஏ! வீரனுடைய பாரியையே! பிழைத்திருக்கமுடியாது என்கிற எண்ணம் கொள்ளாதே. எல்லா உலகமும் ப்ரம்மாவினால் உண்டுபண்ணப்பட்டது. அவனால் ஸுகமும் துக்கமும் கொடுக்கப்படுகின்றன என்று எல்லாரும் சொல்லுகிறார்கள். மூன்று உலகங்களிலுள்ளவர்களும் அவனுக்கு உட்பட்டவர்களாயிருப்பதால் அவன் கட்டளையை மீறமுடியாது.

நீ மிகுந்த ப்ரீதியை அடைவாய். அப்படியே உன் பிள்ளையும் யுவராஜாவாக ஆகப்போகிறான். இப்படியே ப்ரம்மாவினால் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. சூரபத்னிகள் துக்கப்படுகிற தில்லை" என்று ஹிதமான வார்த்தையைச் சொன்னான். ஸுக்கிரீவனையும் தாரையையும் அங்கதனையும் பார்த்து, ஸ்ரீராமன், அவர்களுக்கு ஸமமான துக்கத்தையுடையவனாய், "இறந்தவனைப்பற்றித் துக்கமடைந்து தவிப்பதினால், அவனுக்கு ஒரு ச்ரேயஸும் கிடைக்கிறதில்லை. மேலே எது செய்யவேண்டுமோ அதைச் செய்யவேண்டும். இறந்தவனைப்பற்றி உலகத்தில் கண்ணீர் விடுவது செய்யப்படுகிறது. அஃது உங்களால் செய்யப்பட்டது. இதைக்காட்டிலும் வேறு உங்களால் செய்யமுடியாது. தெய்வத்தின் ஆஜ்ஞையைமீறி ஒருவனாலும் ஒன்றும் செய்யமுடியாது. தெய்வமே எல்லா உலகங்களையும் உண்டுபண்ணுகிறது; அதுவே கர்மங்களைச் செய்வதவற்குத் துணையாயிருக்கிறது; அதுவே எல்லாரையும் வியாபாரங்களைச் செய்விக்கிறது. ஒருவனும் ஸ்வதந்திரனாக வேலை செய்கிறதில்லை. எவனையும் ஏவுகிறதில்லை. உலகம் தெய்வத்துக்கு அதீநமாய் இருக்கிறது. அதையே உலகம் அடையவேண்டும். தெய்வம் ஸ்வதந்திரம். உலகத்தாரைப்போல ஒருவனுக்கும் உட்பட்டதன்று. அதற்கு நாசம் கிடையாது. அது தான் செய்த வியவஸ்தையைத் தானும் மீறுகிறதில்லை. அதற்குப் பக்ஷபாதமில்லை. அதன் அநுக்ரஹம் இல்லாமல் அதை வசப்படுத்திக் கொள்ள உபாயமில்லை. அதை ஜயிப்பதற்கு ஒருவருக்கும் பராக்ரமம் இல்லை. தெய்வத்துக்கு ஜ்ஞாதியுமில்லை; பந்துவுமில்லை. அஃது அபராதம் பண்ணினவனைத் தண்டிக்கிறது. சாஸ்திரத்தை அறிந்தவன் ஜீவனுடைய கர்மங்களுக்குத் தகுந்தபடி தெய்வம் பலனைக் கொடுக்கிறது என்று அறியவேண்டும். தர்மத்தையும் அர்த்தத்தையும் காமத்தையும் ஒருவன் அடையும்படி தெய்வம் செய்கிறது. என் பாணத்தால் அடிபட்டதால் வாலி தோஷமில்லாதவனாய்விட்டான். அவன் பண்ணின கர்மங்களுக்குப் பலனாக ஸ்வர்க்கத்தையும் அடைந்துவிட்டான். ஆகையால் துக்கப்படவேண்டாம். இப்போது மேல் நடக்கவேண்டியதை நடத்துங்கள்" என்று சொல்லிமுடித்தான். (ஸ-24.)

(115) பிறகு பல்லக்கைக் கொண்டுவந்து ப்ரேதத்துக்குச் செய்யவேண்டிய காரியங்களை ஸுக்கிரீவன் முதலானவர்கள் செய்தார்கள். "தகப்பனாரின் உத்தரவினால் நகரத்துக்குள்ளாவது க்ராமத்துக்குள்ளாவது நான் ப்ரவேசிக்கமாட்டேன்" என்று சொல்லி, ஸ்ரீராமன் ஹநுமானைப் பார்த்து, ஸுக்கிரீவனுக்கு ராஜாவாகப் பட்டாபிஷேகமும், அங்கதனுக்கு யுவராஜாவாகப் பட்டாபிஷேகமும் செய்யவேண்டும் என்றும், மழைகாலம் போனபிறகு, ஸீதையைத் தேட ப்ரயத்னம் செய்யவேண்டும் என்றும் கட்டளையிட்டு, மால்யவான் என்றும் ப்ரஸ்ரவணம் என்றும் சொல்லப்படுகிற மலைக்கு லக்ஷ்மணனுடன் போய், அதன் உச்சியிலிருந்த ஒரு குகையில் சரத்காலம் வருகிறவரையில் வஸித்துக்கொண்டிருந்தான். பட்டாபிஷேகம் செய்யப்பட்டது. ஸுக்கிரீவன் ராஜ்யத்தையும் தன் மனைவியையும் அடைந்து ஸுகத்தை அநுபவித்துக்கொண்டிருந்தான். (ஸ-25, 26, 27.)

(116) மழைகாலம் முடிந்தது. ஸுக்ரீவன் ஸீதையைத் தேட வானரங்களை அனுப்புவதற்கு வரவில்லையே என்று ராமன் வருத்தப்பட்டு லக்ஷ்மணனிடம் வருமாறு சொன்னான்.—"லக்ஷ்மணா! ஸீதையைத் தேடுவதில் ஸுக்ரீவன் ஒரு காலத்தைக் குறிப்பிட்டு, பிரதிஜ்ஞைபண்ணி, தன் காரியம் முடிந்தபிறகு அதை நினைக்கவில்லை. அவன் மூர்க்கன்; அவன் மனம் விஷயங்களில் படிந்திருக்கிறது. நீ கிஷ்கிந்தைக்குள்போய் ஸுக்ரீவனைப் பார்த்து,

அர்த்திநாமுபபந்நாநாம் பூர்வம் சாப்யுபகாரிணாம் ।
ஆஸாம் ஸம்ச்ருத்ய யோ ஹந்தி ஸ லோகே புருஷாதம: ॥
(ஸ-30-71.)

ஒரு காரியத்தைவேண்டித் தன்னிடம்வந்த தனக்கு உபகாரமும் செய்த மனிதர்களுக்கு எவன் அவர்களுடைய ஆசையை நிறைவேற்றிக் கொடுப்பதாகப் பிரதிஜ்ஞைபண்ணி, அந்த பிரதிஜ்ஞையை நிறைவேற்றுகிறதில்லையோ, அவன் உலகத்தில் மிகவும் தாழ்ந்தவன். நல்லதோ கெட்டதோ சொன்ன காரியத்தைச் சொன்னபடி எவன் செய்கிறானோ அவன் உத்தம புருஷன்.

कृतार्था ह्यकृतार्थानां मित्राणां न भवन्ति ये ।
तान्मृतानपि क्रव्यादाः कृतघ्नान्नोपभुञ्जते ॥
(ஸ-30-73.)

எவர்கள் தங்கள் காரியங்களை முடித்துக்கொண்டு மித்ரர்களுடைய காரியங்களைச் செய்வதற்கு பிரவிருத்தி பண்ணுகிறதில்லையோ, அந்த நன்றி கெட்டவர்கள் இறந்தபிறகு அவர்களின் மாம்ஸத்தை, மாம்ஸத்தையே ஆகாரமாக உடைய பிராணிகளும் சாப்பிடுகிறதில்லை. என்னாலே இழுத்துவிடப்படும் பாணத்தின் ஸ்வரூபத்தைச் சண்டையில் அவன் பார்க்க விரும்புகிறான் என்று தோன்றுகிறது. சண்டையில் கோபித்த என்னுடைய நாணினுடைய வஜ்ரத்தின் கோஷம்போல் கொடுமையான சப்தத்தைக் கேட்க ஆசைப்படுகிறான். உன்னுடன் கூடின என் பராக்ரமத்தை நேரில் அறிந்தும், 'அவன் வேலையைச் செய்யாவிட்டால், என்னையும் கொல்லுவனே' என்கிற சிந்தை அவனுக்கு வரவில்லையே. அவனிடம் போ. என்னுடைய கோபம் இன்னவிதமாயிருக்கும் என்று சொல்:—

न स संकुचितः पन्था येन वाली हतो गतः ।
समये तिष्ठ सुग्रीव मा वालिपथमन्वगाः ॥ (ஸ-30-87)

எந்த வழியாக வாலி கொல்லப்பட்டுப் போனானோ, அந்த வழி குறுகவில்லை. ஸுக்ரீவ! ப்ரதிஜ்ஞையில் இரு. வாலியின் பின்னாலே போகாதே. சண்டையில் வாலி ஒருவனே என்னால் கொல்லப்பட்டான். பிரதிஜ்ஞை மீறின உன்னைப் பந்துக்களுடன் கொல்லுவேன்" என்று சொல். (ஸ-30)

(117) இப்படிக் கட்டளையிடப்பட்ட லக்ஷ்மணன் மிகுந்த கோபத்துடன் கிஷ்கிந்தைக்குப் போனான். வந்த அவனைப் பார்த்து வானரங்கள் மலைகளையும் மரங்களையும் அவன்மேலே போட எடுத்துக்கொள்ள, அவன் கோபம் இரட்டித்தது. அவர்கள் பயந்துகொண்டு ஸுக்கிரீவனிடம் போய், லக்ஷ்மணன் கோபத்துடன் வந்திருப்பதைத் தெரிவித்தார்கள். தாரையைக் கட்டிக்கொண்டிருந்த அவன் காதில் அது விழவில்லை. இப்படி இருந்த லக்ஷ்மணனைப் பார்த்து, அங்கதன் மிகுந்த வியஸனத்தை

அடைந்தான். அவனைப்பார்த்து லக்ஷ்மணன், "குழந்தையே! நான் வந்திருப்பதாக ஸுக்ரீவனுக்குத் தெரிவி" என்று சொல்லி அனுப்பினான். அங்கதன் வணங்கி ஸுக்ரீவனிடம் லக்ஷ்மணன் சொன்னதைத் தெரிவித்தான். குடி மயக்கத்தாலும் தூக்கத்தாலும் அவன் அதை அறியவில்லை. அப்போது லக்ஷ்மணனைக் கண்டு வானரங்கள் சப்தித்ததைக்கேட்டு ஸுக்ரீவன் விழித்துக்கொண்டான். இரண்டு மந்திரிகள், "உனக்கு ராஜ்யத்தைக் கொடுத்தவர்களில் ஒருவன் வாசலில் வில்லும் கையுமாய் நிற்கிறான். அவன் உன்னிடம் அங்கதனை அனுப்பி இருக்கிறான். நீ சொன்னபடி ப்ரதிஜ்ஞையை நிறைவேற்ற வேண்டும்" என்று சொன்னார்கள். ஸுக்ரீவன் தன் ஆஸனத்தைவிட்டு எழுந்திருந்து, மந்திரிகளைப் பார்த்து, "நான் கெட்ட பேச்சுப் பேசவில்லை. நான் ஒரு கெட்ட நடத்தையும் செய்யவில்லை. ஸ்ரீராமன் தம்பி லக்ஷ்மணன் என்ன காரணத்தால் கோபித்துக்கொண்டிருக்கிறான்? ஒருகால் என் விரோதிகள் என்னிடம் இல்லாத தோஷங்களை என்னிடம் இருப்பதாக லக்ஷ்மணனிடத்தில் சொன்னார்களா? இப்போது எது செய்ய வேண்டியதோ, நீங்கள் அதை அறிந்து சொல்லுங்கள். எனக்கு ராமனிடமாவது லக்ஷ்மணனிடமாவது பயமில்லை. காரணமில்லாமல் மித்ரனுக்கு உண்டான கோபம் எனக்குப் பரபரப்பை உண்டுபண்ணுகிறது.

ஸர்வதா ஸுகரம் மித்ரம் து³ஷ்கரம் பரிபாலநம் |
அநித்யத்வாத்து சித்தாநாம் ப்ரீதிரல்பே(அ)பி பி⁴த்³யதே || (ஸு-32-7.)

ஒருவனை மித்ரனாகப் பண்ணிக்கொள்ளுவது ஸுலபம். அவன் மித்ரனாயிருப்பதைக் காப்பது கஷ்டம். மனோவிருத்தி நிலை இல்லாமலிருப்பதாலே ப்ரீதி அல்பகாரணத்தாலும் போய்விடுகிறது" என்று சொன்னான். ஹநுமான் "நீ ப்ரயத்னம் பண்ணவேண்டிய காலத்தை மதத்தினால் மறந்திருக்கிறாய். இதை அறிந்து லக்ஷ்மணன் இங்கே வந்திருக்கிறான். ஸ்ரீராமன் பாரியை இழந்து வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறான். அவன் லக்ஷ்மணன் மூலம் சொல்லியனுப்பியிருக்கிற கடுமையான வார்த்தைகளைப் பொறுத்துக்கொள்ளவேண்டும்.

𑌕𑍃𑌤𑌾𑌪𑌰𑌾𑌧𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌤𑍇 𑌨𑌾𑌨𑍍𑌯𑌤𑍍𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑍍𑌯𑌹𑌂 𑌕𑍍𑌷𑌮𑌮𑍍 ।
𑌅𑌨𑍍𑌤𑌰𑍇𑌣𑌾𑌞𑍍𑌜𑌲𑌿𑌂 𑌬𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌨𑌾𑌤𑍍 । (ஸ-32-17)

அபராதம் பண்ணின உனக்கு லக்ஷ்மணனது கோபத்தைத் தணிப்பதற்காக அஞ்ஜலிசெய்வதைக்காட்டிலும் தகுந்த வேறொன்றை நான் பார்க்கவில்லை " என்று பதில் சொன்னான். ( ஸ-31, 32.)

(118) பிறகு அங்கதன் லக்ஷ்மணனை நகரத்துக்குள் வரும்படி பிரார்த்திக்க, அவன் அதற்குள்ளேபோய் ஸுக்ரீவன் க்ருஹத்வாரத்தில் நின்றுகொண்டு தனுஸில் நாணேற்றி அதின் சப்தத்தைக் கேட்கும்படி செய்தான். ஸுக்ரீவன் லக்ஷ்மணன் முன்னிலையில்போகப் பயந்து, அவனிடம் தாரையை அனுப்பினான். தாரை லக்ஷ்மணனிடம் போனாள். அவளைக்கண்டு லக்ஷ்மணன் கோபத்தைவிட்டுத் தலைகுனிந்து நின்றான். தாரை "உன் கோபத்துக்குக் காரணம் என்ன? உன் கட்டளைப்படி எவன் நடக்கவில்லை? எவனும் உன் கோபத்துக்கு ஆளாகமாட்டான். உலர்ந்த மரங்கள் நிறைந்த பெருங்காட்டைக் கொளுத்திக்கொண்டிருக்கும் காட்டுத்தீயை எவனாவது கிட்டுவனோ?" என்று கேட்டாள். லக்ஷ்மணன், "சொன்ன நான்கு மாதங்கள் ஆய்விட்டன. நாங்கள் வருத்தப்பட்டுக்கொண்டிருப்பதை குடிமயக்கத்தாலே ஸுக்ரீவன் அறியவில்லை. பானம் பண்ணுகிறவனுக்கு தர்மமும் அர்த்தமும் காமமும் ஸித்திக்கா. உபகாரம் பண்ணினவனுக்குப் பதில் உபகாரம் செய்யாதவனுக்குப் பெரிய தர்மலோபம் வரும். இப்படி நடந்திருக்கையில் நாங்கள் என்ன மேலே செய்யவேண்டும்? நீ சொல்" என்று பதில் சொன்னான். தாரை "இப்போது கோபத்துக்குக் காலம் அன்று; தன்னைச் சேர்ந்தவனிடத்தில் கோபம் செய்யத்தகுந்ததன்று. உன் காரியத்தைச்செய்ய ஆசையுள்ளவன் தவறினாலும், அதைப் பொறுத்துக்கொள்ளவேண்டும். உன்னைப்போன்ற குணசாலி, பலம் குறைந்தவனிடத்தில் கோபிக்கலாமா? நீ கோபித்துக் கொண்டிருப்பதினால் உனக்குக் காமசாஸ்திரம் தெரியாதென்று நினைக்கிறேன். காமத்தில் ப்ரீதியுள்ள மனிதன் இடத்தையாவது காலத்தையாவது அர்த்தத்தையாவது தர்மத்தையாவது பார்ப்பனோ? நான் கிட்ட இருப்பதினால் காமத்துக்கு உட்பட்டு, அதினால் லஜ்ஜை இழந்தவனாக ஸுக்கிரீவனிருக்கிறான்,

அவன் உன்னுடைய ப்ராதா. அவனை நீ க்ஷமிக்கவேண்டும். தர்மத்திலும் தபஸிலும் ருசியுள்ள பெரிய ருஷிகளும் காமத்துக்கு உட்பட்டு மதிமயக்கம் அடைகிறார்கள். இப்படியிருக்க, ஸுக்ரீவன் குரங்கு ஸ்வபாவமுள்ள சபலன்; அவன் ராஜாவாகவுமிருந்தால் ஸுகத்தில் பற்றில்லாதவனாயிருப்பனோ? உங்களுடைய காரியத்தைச் செய்வதற்காக ஏற்கனவே பிரயத்நம் செய்யப்பட்டிருக்கிறது. வானர வீரர்கள் வந்திருக்கிறார்கள். உள்ளே வா. அந்தப்புரத்திலிருக்கும் ஸ்திரீகளைப் பார்க்கக்கூடாது என்கிற தர்மத்தை ரக்ஷித்துக்கொண்டு வாசற்படியில் நிற்கிறாய். ஸத்துக்கள் மித்திரர்களாக இருந்துகொண்டு மற்றவர்களின் ஸ்திரீகளைப் பார்ப்பது தோஷமன்று" என்று சொன்னாள். அவள் வேண்டினபடி லக்ஷ்மணன் உள்ளேபோய் ஸிம்மாஸநத்தில் உட்கார்ந்திருந்த ஸுக்ரீவனைப் பார்த்தான். அவன் கோபத்தினால் ஜ்வலிக்கிற லக்ஷ்மணனைப்பார்த்து, ஆஸநத்தைவிட்டுக் கிளம்பி, அஞ்சலிபண்ணிக்கொண்டு நின்றான். லக்ஷ்மணன், "எந்த ராஜா, நல்ல குலத்தில் பிறந்து ஸத்துவகுணமுள்ளவனும் தயையுள்ளவனும் இந்திரியங்களை அடக்கினவனும், தான் அடைந்த உபகாரத்தை நினைத்துக்கொண்டிருக்கிறவனும், உண்மையைப் பேசுகிறவனுமாக இருக்கிறானோ, அவனை எல்லாரும் கொண்டாடுகிறார்கள். எந்த ராஜா அதர்மத்தில் ருசியுள்ளவனாய், உபகாரஞ்செய்த மித்ரர்களுக்குப் பொய்யான பிரதிஜ்ஞையைச் செய்கிறானோ, அவனைக் காட்டிலும் க்ரூரனாக எவன் இருக்கக்கூடும்?

ஶதமஶ்வாந்ருதே ஹந்தி ஸஹஸ்ரம் து க³வாந்ருதே |
ஆத்மாநம் ஸ்வஜநம் ஹந்தி புருஷ: புருஷாந்ருதே ||
(ஸு-34-9.)

குதிரை விஷயத்தில் பொய் சொன்னவன் நூறு குதிரைகளைக் கொல்லுகிறான்; பசுமாடு விஷயத்தில் பொய் சொல்லுகிறவன் ஆயிரம் பசு மாடுகளைக் கொல்லுகிறான்; மனிதன் விஷயத்தில் பொய்சொன்னவன் தன்னையும் தன்னைச் சேர்ந்தவர்களையும் கொல்லுகிறான்.

ப்³ரஹ்மக்⁴நே ச ஸுராபே ச சோரே ப⁴க்³நவ்ரதே ததா² |
நிஷ்க்ருதிர்விஹிதா ஸத்³பி⁴: க்ருதக்⁴நே நாஸ்தி நிஷ்க்ருதி: ||
(ஸு-34-12.)

பிராம்மணனைக் கொன்றவனுக்கும், கள்ளுக்குடித்தவனுக்கும், திருடனுக்கும், வ்ரதத்திலிருந்து நழுவினவனுக்கும் பிராயச்சித்தம் பெரியோர்களால் விதிக்கப்பட்டிருக்கிறது. நன்றிகெட்டவனுக்குப் பிராயச்சித்தம் கிடையாது. நீயோ தாழ்ந்தவன்; நன்றிகெட்டவன்; பொய் சொல்லுகிறவன்; செய்த உபகாரத்தை நினைத்துக்கொண்டிருந்தால், ஸீதையைத் தேடுவதில் பிரயத்னம் செய்யவேண்டியவன்" என்று சொல்லி, ராமன் சொன்ன வார்த்தையை ஸுக்கிரீவனுக்குச் சொன்னான். இதைக்கேட்டு, தாரை "லக்ஷ்மணா! நீ இப்படி பேசக்கூடாது. இவன் கொடுமையான வார்த்தைக்குத் தகுந்தவன் அன்று. இதை மித்திரனை உன் வாயிலிருந்து அவன் கேட்கக்கூடுமோ? இவன் நன்றி கெட்டவன் அன்று; வஞ்சகன் அன்று; கொடுமை உள்ளவனும் அன்று; பொய் சொல்லுகிறவனும் அன்று; கோணல்புத்தி உள்ளவனும் அன்று; முன்னால் துக்கப்பட்டுப் படுத்திருந்தவன் மிகுந்த உயர்ந்த ஸுகத்தை அடைந்ததால் ப்ரயத்நம்செய்யவேண்டிய காலத்தை அறியவில்லை. விசுவாமித்ர மஹரிஷி க்ருதாசியினிடத்தில் மோஹம் அடைந்தது உலகத்தில் பிரஸித்தமன்றோ? இவனை க்ஷமிக்கவேண்டும்" என்று சொல்லி ஸுக்கிரீவனை ரக்ஷிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தாள். இதைக்கேட்டு, லக்ஷ்மணன் அவள் சொன்னதை ஏற்றுக்கொண்டு கோபம் தணிந்தவனானான். (ஸ - 33-34)

(119) ஸுக்கிரீவனும், கிழிந்த வஸ்திரத்தை எறிந்துவிடுவதுபோலத் தனக்கு உண்டான பயத்தை விட்டு, "நான் இழந்திருந்த வானர ராஜ்யத்தையும் ஸம்பத்தையும் கீர்த்தியையும் ராமனுடைய அநுக்ரஹத்தாலே திரும்பவும் அடைந்தேன். எவன் அவனுக்குப் பதிலுபகாரம் செய்ய முடியும்? ஸ்ரீராமன் தன்னுடைய தேஜஸினால் ராவணனைக் கொன்று ஸீதையை அடையப்போகிறான், நானோ கூட இருப்பவன்மட்டுமே. எவன் ஒரு பாணத்தாலே ஏழு ஆச்சா மரங்களையும் மலையையும் பூமியையும் துளைத்தானோ, அவனுக்குத் துணை எதற்காக? அவன் பின்னாலே நான் அநுயாத்ரை பண்ணுகிறேன்" என்று லக்ஷ்மணனைப் பார்த்துச் சொல்லி,

யதி கிம்ஶுக்ஷிம்ஸ்ர்ாந்தம் விஶ்வாஸாத் ப்ரணயேந வா ।
ப்ரேஷ்யஸ்ய க்ஷமிதவ்யம் மே ந கஶ்சிந்நாபராத்யதி ॥ (ஸ-36-11)

"விசுவாஸத்தாலும் ஸ்நேஹத்தாலும் உன் வேலைக்காரனான நான் ஏதாவது பிழை செய்திருந்தால், அதை நீ க்ஷமிக்கவேண்டும். உலகத்தில் அபராதம் பண்ணாதவன் இருக்கிறானோ?" என்று பிரார்த்தித்தான். லக்ஷ்மணனும் ப்ரீதியுடன் "மிகவும் வணக்கமுள்ள நீ என் தமையனுக்கு எல்லா விதத்தாலும் நாதனாயிருக்கிறாய் என்று சொல்லவேண்டுமோ? உன்னுடைய ப்ரபாவம், மனதின் சுத்தி, ருஜுத்தன்மை ஆகிய இவைகளால் நீ வானர ராஜ்யத்தையும் உயர்ந்த ஸம்பத்தையும் அநுபவிக்கத் தகுந்தவன். நீ துணையாயிருப்பதாலே ராமன் சண்டையில் சத்துருக்களைக் கொல்லப்போகிறான். நீ தர்மம் அறிந்தவன்; செய்த உபகாரத்தை நினைத்துக்கொண்டிருக்கிறவன்; சண்டையில் பின்புறம் காட்டாதவன். இப்படிப்பட்ட நீ சொன்னது உனக்குத் தகுந்ததே. உலகத்தில் ஸமர்த்தனாயிருப்பவன் தன் தோஷங்களை மறைப்பது வழக்கம். நீயோ இங்கே அப்படிச் செய்யவில்லை. உன்னையும் என் தமையனையும் தவிர வேறு எவரால் இப்படிச் சொல்லமுடியும்? பலத்தாலும் பராக்ரமத்தாலும் தனக்கு ஸமமான மித்ரனை ராமனுக்குத் தெய்வம் கொடுத்திருக்கிறது. இப்போது என்னுடன் சீக்கிரம் வெளிக்கிளம்பு. தன் பார்யையை ராவணன் அபஹரித்ததாலே துக்கப்பட்டுக்கொண்டிருக்கிற தோழனான ஸ்ரீராமனை ஸமாதானம் பண்ணு. சோகத்தால் வருத்தப்பட்டுக்கொண்டிருந்த ஸ்ரீராமனுடைய வாக்யத்தைக் கேட்டு நான் கடுமையாய்ப் பேசினேன். அதை நீ பொறுத்துக் கொள்ளவேண்டும்" என்று ஸுக்கிரீவனை ஸ்தோத்ரம்பண்ணி மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். (ஸ-36.)

(120) இதைக்கேட்டு ஸுக்கிரீவன், வானரங்களை வருவிக்கும்படி ஹனுமானுக்கு கட்டளையிட்டு, லக்ஷ்மணனுடன் பல்லக்கில் ஏறிக்கொண்டு ஸ்ரீராமனிடம் போய்ச்சேர்ந்தான். ராமன் அஞ்ஜலிபண்ணிக்கொண்டிருந்த ஸுக்கிரீவனைக் கட்டிக்கொண்டு உபசாரச்சொல்லி, அவனைப் பார்த்து, "எவன் தர்மத்தையும் அர்த்தத்தையும் காமத்தையும் பிரித்து அந்தந்த காலத்தில் அநுபவிக்கிறானோ, அவன்தான் ராஜா. தர்மத்தையும் அர்த்தத்தையும் விட்டுவிட்டு எவன் காமத்தையே அநுபவிக்கிறானோ, அவன் மரத்தின் உச்சியில் தூங்குகிறவனைப்போல் நாசத்தை அடைவான். எவன் விரோதிகளை வதம் செய்வதில் கவன

முள்ளவனே, மித்ரர்களை ஸம்பாதிப்பதில் ருசியுள்ளவனே தர்மார்த்த காமங்களைக் காலத்துக்குத் தகுந்தபடி அநுப விக்கிறவனே, அவன் தார்மிஷ்டன். பிரயத்னம் பண்ணவேண் டிய காலம் இப்போது வந்திருக்கிறது. ஆகையால் மந்திரி களுடன்கூட என்ன செய்யவேண்டும் என்று ஆலோசனைப் பண்ணு" என்று சொன்னான். வானரங்கள் வந்துகொண்டிருந் தன. ஸுக்கிரீவன், அவர்களில் விநதன் என்பவனைக் கிழக்குத் திக்கிலும், ஹநுமான் ஜாம்பவான் அங்கதன் இவர்களைத் தெற் குத்திக்கிலும், ஸுஷேணனை மேற்குத்திக்கிலும், சதவலியை வடக்குத்திக்கிலும் வானர ஸைந்யங்களுடன் அனுப்பி ஸீதை யைத் தேடும்படியும், ஒருமாதத்துக்குள் திரும்பிவந்து ஸமா சாரத்தைத் தெரிவிக்காவிட்டால், உயிரை இழந்துவிடுவார்கள் என்றும் கட்டளையிட்டான். வானரங்களும் அவன் கட்டளைப் படி புறப்பட்டன. ஹநுமானைப் பார்த்து ஸுக்கிரீவன் "பூமியி லாவது, ஆகாசத்திலாவது, ஸ்வர்க்கலோகத்திலாவது, ஜலத்திலா வது நீ போவதற்குத் தடையில்லை. எல்லா உலகங்களும், அவைக ளிலிருக்கிறவைகளும் உனக்குத் தெரியும். தடையில்லாமல் போ வது, வேகம், தேஜஸ், லாகவம் இவைகள் வாயுபுத்ரனை உனக் கும் உன் தகப்பனைப்போல் இருக்கின்றன. தேஜஸினால் உனக்கு ஸமமானவன் பூமியில் இல்லை. ஆகையால் எப்படி ஸீதையை அடையலாமோ, அப்படி ப்ரயத்னம்செய்" என்று சொன்னான். இதைக்கேட்டு ஸ்ரீராமன், காரியம் ஹநுமானாலே முடியும் என் கிற ஸுக்கிரீவன் அபிப்ராயத்தை அறிந்து, ஸந்தோஷப்பட்டு, அவனிடம் தன் மோதிரத்தைக் கொடுத்து, "இதனால் ஸீதை பயப்படாமல் உன்னை என்னிடமிருந்து வந்தவனாக அறிந்து கொள்வள். உன்னுடைய முயற்சியையும் பலத்தையும் பராக்ர மத்தையும் ஸுக்கிரீவனுக்கு உன்னிடத்திலுள்ள நம்பிக்கையை யும் பார்க்கும்பொழுது, காரியம்முடிந்ததாக நான் நினைக்கிறேன்" என்று சொன்னான். அதை வாங்கிக்கொண்டு ஹநுமான் அஞ் ஜலிபண்ணி ஸ்ரீராமனுடைய திருவடிகளில் நமஸ்காரம்பண்ணி விட்டுப் புறப்பட்டான். (ஸ-37 முதல் 45 முடிய.)

(121) கிழக்கே, மேற்கே, வடக்கே போன வானரங்கள் ஸீதையைக் காணாமல் திரும்பிவந்துவிட்டன. தெற்கே போன வானரங்களும் விந்தியமலை, நிர்ஜனமும் நிர்ஜலமுமான தேசம்

முதலான இடங்களைப் பார்த்து, ஒரு ராக்ஷஸனைக் கொன்று, ஒரு மரத்தடியில் வந்து களைப்புடன் உட்கார்ந்தன. அப்போது அங்கதன் அவர்களைப் பார்த்து, "சோம்பலையும் துக்கத்தையும் தூக்கத்தையும் விட்டுவிட்டு, ஸீதையைத் தேடுங்கள். வெறுப் பில்லாமையும் உத்ஸாஹமும் தைர்யமும் காரியங்களின் ஸித்தி யை உண்டுபண்ணுகின்றன. ஆகையால்தான் நான் உங்களோடு சொல்லுகிறேன்" என்று சொல்லி, அவைகளை உத்ஸாஹப்படுத் தினன். அவைகள் மறுபடியும் புறப்பட்டுத் தேடின. ஆனால் ஸீதையைக் காணவில்லை. எல்லாம் விந்த்யபர்வதத்தின் அடி வாரத்தில் உட்கார்ந்தன. அவைகளைப் பார்த்து அங்கதன், "நாம் ஊரைவிட்டுப் புறப்பட்டு ஒருமாத காலமாய்விட்டது; வந்த காரியம் முடியவில்லை; நாம் இறந்துபோகவேண்டும்; இதில் ஸந்தேஹமில்லை; வானர ராஜாவினுடைய கட்டளையை நிறை வேற்றுமல் எவன் ஸுகமாயிருப்பன்? ஆகையால் பிராயோப வேசமே தகுந்தது; ஸுக்கிரீவன் இயற்கையாய் க்ரூரமான வன்; அவன் நமக்கு ஸ்வாமியாயுமிருக்கிருன்; நம் அபராதத் தைப் பொறுக்கமாட்டான்; என்னை யுவராஜாவாக ஸுக்கிரீவன் பண்ணவில்லை; அதை ஸ்ரீராமன் செய்தான்; அவன் முன்னு லேயே என்னிடம் வைரமுள்ளவன். அவன் கட்டளையை மீறின தைக்கண்டு என்னை நிச்சயமாய்க் கொல்லுவன்" என்று சொன் னுன். இதைத் தாரனைத்தவிர எல்லா வானரங்களும் ஒப்புக் கொண்டன. தாரனே, "துக்கப்படவேண்டியதில்லை. நான் சொல்லுவது உங்களுக்கு ஸரியென்று தோன்றினல், இந்த * ருக்ஷகுஹையில் எல்லாரும் வஸிப்போம். இது மாயையினுல் செய்யப்பட்டது. இதில் ஒருவரும் வரமுடியாது. இதில்

---

* ருக்ஷகுஹை—இதில் மிகுந்த இருட்டு இருந்ததனுல் உள்ளே போகக் கஷ்டமாயிருந்தது. வானரங்கள் ஒன்றின் கையை ஒன்று பிடித்துக்கொண்டு உள்ளே போனபோது, மயன் என்கிற அஸுரனுல் செய்யப்பட்ட ஓர் ஆச்சரியமான மாளிகையையும், அதில் ஓர் தாபஸி யையும் பார்த்தன. அவள் களைத்துவந்த வானரங்களுக்கு ஆஹாரத் தையும் தீர்த்தத்தையும் கொடுத்து, அவைகளின் களைப்பைப்போக்கி, "ஒரு க்ஷணம் கண்களை மூடிக்கொண்டிருங்கள். நான் வெளியில் கொண்டுபோய்விடுகிறேன். இதிலிருந்து ஒருவனும் தானுக வெளியில் போகமுடியாது" என்று சொல்லி, சொன்னபடி செய்தாள்.

மரங்களும் ஜலமும் ஆஹாரங்களும் குடிப்பதற்கு மத்யங்களும் பூராவாய் இருக்கின்றன. இங்கே நாம் இருந்தால் இந்த்ரனிடமிருந்தாவது, வானர ராஜாவிடமிருந்தாவது, ராமனிடமிருந்தாவது நமக்குப் பயமில்லை" என்று சொன்னான். வானரங்கள் "நமக்கு எப்படி ஹிம்ஸை உண்டாகாதோ, அப்படியே செய்ய வேண்டும்" என்றன. தாரன் சொன்னதை ஹநுமான் ஒப்புக்கொள்ளாமல் நான்கு உபாயங்களில் பேதம் என்கிற உபாயத்தைக்கொண்டு அங்கதனைப் பார்த்து, "நீ உன் தகப்பனைக்காட்டிலும் அதிக ஸாமர்த்தியமுள்ளவன். உன் தகப்பனைப்போல் வானர ராஜ்யத்தை நீ ஆளத்தகுந்தவன். ஆனால் வானரங்கள் மனது சபலமானது. தங்களுடைய பிள்ளைகளையும் பெண்டிர்களையும் விட்டுவிட்டு இங்கே இருந்துகொண்டு உன் ஆஜ்ஞைப்படி நடக்கமாட்டா. நான், ஜாம்பவான், நீலன், ஸுஹோத்ரன், ஆகிய எங்களை உன்னால் ஸுக்கிரீவனிடமிருந்து எந்த உபாயத்தாலும் இழுக்கமுடியாது. பலவான் துர்ப்பலனுடன் சண்டையிட்டுத் தன்னிடம் இருக்கலாம். துர்ப்பலன் பலவானோடு சண்டைபோட்டு அப்படியிருக்க முடியாது. நம்மை ரக்ஷிக்கும் என்று எண்ணுகிற இந்தக் குஹையைப் பிளக்க லக்ஷ்மணனுடைய பாணங்களுக்கு வேலை கொஞ்சம்தான். உன் ஸுஹ்ருத்துக்களாலும் உனக்கு ஹிதம் செய்ய விரும்புகிற பந்துக்களாலும் விடப்பட்டு, அசைந்துகொண்டிருக்கும் ஒரு த்ருணத்தைக்கண்டும் நடுங்கும்படியாகும். லக்ஷ்மணன் பாணங்கள், தன் காரியத்தைச் செய்யாத உன்னை கொல்லமாட்டா என்பதில்லை. எங்களுடன் ஸுக்கிரீவனிடம் போனால் காலக்ரமத்தில் உனக்கு ராஜ்யத்தைக் கொடுத்துப் பட்டாபிஷேகத்தைச் செய்வன். உன் சிற்றப்பன் தர்மத்தில் ஆசையுள்ளவன்; உன் இஷ்டத்தைப் பூர்த்தி செய்வதில் கவலைகொண்டவன்; சொன்ன வார்த்தை தவறாதவன்; நல்ல நடத்தையுள்ளவன்; உன்னை ஒருபோதும் கொல்ல இச்சிக்க மாட்டான். ஆகையாலே, அங்கதா! ஊருக்குத் திரும்பிப் போவோம்" என்று சொன்னான். (ஸ-47 முதல் 54 முடிய.)

(122) இதை அங்கதன் கேட்கவில்லை. அவன் "ஸ்திரமான புத்தியும் மனச்சுத்தியும் இரக்கமும் ருஜுத்தன்மையும் பராக்ரமமும் தைர்யமும் ஸுக்கிரீவனிடம் இல்லை. தமையன் பாரியை தாய்க்கு ஸமானம். அவளை அவனுடைய பர்த்தா உயி

ரோடிருக்கையில் ஸ்வீகரித்துக்கொண்டான். அவனுக்கு எப்படி மனச்சுத்தியிருக்கும்? அவன் தமையன் ஒரு குஹையில் புகுந்து சண்டையில் கவனமாயிருக்கையில் அவன் குஹையின் த்வாரத்தை மூடிவிட்டு வந்துவிட்டானே! அவன் தர்மம் அறிந்தவனோ? ஸ்ரீராமனிடம் உபகாரம் பெற்றுக்கொண்டு அவனை மறந்துவிட்டானே! அவன் எவன் செய்த உபகாரத்தை நினைத்துக்கொண்டிருப்பன்? லக்ஷ்மணனைக் கண்டு பயந்துதானே ஸீதையைத் தேட நம்மை அனுப்பினான். அவனிடம் எப்படி தர்மம் இருக்கும்? அவன் என்னை எப்படியாவது கொன்றுவிடுவான். ஆகையால் இங்கேயே ப்ராயோபவேசம் பண்ணுவது எனக்குத் தகுந்தது. அதற்கு அநுமதி கொடுங்கள். நீங்கள் ஊருக்குப் போங்கள்" என்று சொல்லி ப்ராயோபவேசம் பண்ண, பூமியில் தர்ப்பத்தில் படுத்துக்கொண்டான். வானரங்களும் அவன் சொன்னதைக்கேட்டு, கண்ணும் கண்ணீருமாகி ஸுக்ரீவனை நிந்தித்து வாலியைக்கொண்டாடி, எல்லாம் அங்கதனைச் சுற்றியிருந்து ப்ராயோபவேசம் பண்ணின. (ஸ-55.)

(123) அப்போது மலைக்குஹையிலிருந்து வெளிப்பட்ட ஜடாயுவின் தமையனான ஸம்பாதி என்பவன், வானரங்களைப் பார்த்து, "எனக்கு உங்களை ஆகாரமாகத் தெய்வம் ஏற்பாடு செய்திருக்கிறது" என்று சொல்ல, அங்கதன் ஹநுமானைப் பார்த்து, "ஜடாயு ஸீதைக்காக உயிரை இழந்தான். நாமும் ராமனுக்காக உயிரை இழக்கப்போகிறோம்" என்று மிகுந்த வருத்தத்துடன் சொன்னான். இதைக்கேட்டு ஸம்பாதி அவர்களிடம் வந்து, தம்பியின் ஸமாசாரத்தைக்கேட்டு துக்கப்பட்டு, "நானும் என் தம்பியைப்போல ஸ்ரீராமனுக்கு உதவி செய்ய வேண்டியவன். ராவணன் ஸீதையைக் கொண்டுபோகும்போது என் பிள்ளை அவனைத் தடுக்கப்போனான். அவனை ராவணன் நல்ல வார்த்தை சொல்லித் திருப்பிவிட்டான். ராவணன் லங்கைக்கு ஸீதையைக் கொண்டுபோய் ராக்ஷஸிகளின் நடுவில் வைத்திருக்கிறான். இதை நான் திவ்யஞானத்தினால் அறிகிறேன். நீங்கள் ஸமுத்ரத்தைத் தாண்டி அங்கே சீக்கிரம் போங்கள். ஸமுத்ரம் நூறுயோஜனை விஸ்தீர்ணமுள்ளது" என்று சொன்னான். அப்போது இழந்துபோயிருந்த அவன் சிறகு உண்டாக அவன் பறந்துபோய்விட்டான். (ஸ-56+59, 63.) இதைக்

கேட்டு அங்கதன் முதலான வானரங்கள் தெற்கு ஸமுத்ரக் கரைக்குப் போயின. "ஸமுத்ரத்தை எப்படித் தாண்டுகிறது"? என்று ஆலோசனை செய்தன. அவைகளில் ஒன்று நான் பத்து யோஜனைதூரம் தாண்டுவேன் என்றும், மற்றொன்று நான் இருபது யோஜனைதூரம் தாண்டுவேன் என்றும், மற்றவைகள் ஒன்றின்பின் ஒன்றாக பத்துயோஜனையைச் சேர்த்துக்கொண்டும் தங்கள் சக்தியைத் தெரிவித்தன. அங்கதன் "தான் நூறு யோஜனை தாண்டக்கூடும்; திரும்பிவருவதில் ஸந்தேஹம்தான்" என்று சொல்லி, ஒன்றும் ஸமுத்ரத்தைத் தாண்டி திரும்பி வரக்கூடும் என்று ஏற்படாமையால், ப்ராயோபவேசம் செய்வதே தகுந்தது என்று சொன்னான். ஜாம்பவான் ஹநுமானைப் பார்த்து, "வானரவீர! நீ ஸூகமாய் உட்கார்ந்திருக்கிறாயே! ஒன்றும் சொல்லவில்லையே! நீ தேஜஸினாலும் பலத்தாலும் ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் ஸுக்ரீவனுக்கும் ஸமன். கருடனுக்கு என்ன பலமுண்டோ, அந்த பலம் உனக்குமிருக்கிறது. பலம், புத்தி, தேஜஸ் இவைகள் எல்லாரிடத்தில் காட்டிலும் உன்னிடத்தில் அதிகம். அதை நீ ஏன் அறியவில்லை?" என்று அவனுடைய பிறப்பையும் வளர்ப்பையும் பராக்ரமத்தையும் சொல்லி, அவனை உத்ஸாஹப்படுத்தி, "பெரிய ரூபத்தை எடுத்துக்கொள்; எழுந்திரு; ஸமுத்ரத்தைத் தாண்டு; நாங்கள் எல்லோரும் உன் வீரியத்தைப் பார்க்க ஆசைப்படுகிறோம்" என்று வேண்டினான். (ஸ-63-65-66, 67)

---

கிஷ்கிந்தா காண்டம் முற்றிற்று.

---

# ஸுந்தரகாண்டம்.

(124) இதைக்கேட்டு ஹநுமான் பெரிய ரூபத்தை எடுத்துக்கொண்டு, எல்லா வானரங்களையும் ஸந்தோஷப்படுத்தி, மஹேந்த்ரமலையிலிருந்து ஸமுத்ரத்தை ஒரே தாண்டலாய்த் தாண்டி, லங்கைக்குக்குப் போய்ச்சேர்ந்தான். நடுவில் மூன்று இடையூறுகள் உண்டாயின. முதலில், இந்திரனைக் கண்டு பயப்பட்டு ஸமுத்ரத்தில் முழுகியிருந்த மைநாகம் என்கிற மலை, ஸமுத்ரராஜனால் ஏவப்பட்டு, ஹநுமானைத் தன்னிடத்தில் இறங்கி, சிரமபரிஹாரம் பண்ணிக்கொண்டு போகலாம் என்று சொல்லிற்று. ஹநுமான், 'ராமகாரியத்துக்காகப் போகிறேன். இப்போது நிற்பது தகுந்ததன்று' என்று சொல்லி, மலையைத் தொட்டுவிட்டுப்போனான். (இரண்டாவது இடையூறு,) ஹநுமானுடைய பலத்தைப் பரீக்ஷிக்க, தேவர்களால் ஏவப்பட்டு ஸுரஸை என்கிற நாகமாதா, ராக்ஷஸியின் ரூபத்துடன் வாயைத் திறந்துகொண்டு வழியில் நின்றாள். ஹநுமான் அவள் வாயில் புகுந்து வெளியில் வந்தான். (மூன்றாவது) ஸிம்ஹிகை என்கிற ராக்ஷஸி ஹநுமானுடைய நிழலைப் பிடித்துக்கொண்டு அவனைப் போக முடியாமல் செய்தாள். அவன் அவள் வாயில் புகுந்து, அவள் மர்மங்களைப் பிளந்துகொண்டு வெளியில் வந்தான். இவ்வாறு மூன்று இடையூறுகள் நேர்ந்து தீர்ந்தன. (ஸு-1.)

(125) ஹநுமான் லங்கைக்குப் போய், நகரத்தில் பகலில் உள்ளே போகக்கூடாது என்று நினைத்து, ஸூரியன் அஸ்தமிக்கிறவரையில் காத்துக்கொண்டிருந்தான். சந்த்ரன் உதயமானவுடன் ஹநுமான் பூனைபோன்ற சிறு ரூபத்தை எடுத்துக்கொண்டு உள்ளேபோக யத்தனிக்கையில் லங்கைக்கு அபிமானியான தேவதை அவனைத் தடுத்தாள். ஹநுமான் முஷ்டியாலே அவளை அடித்துக் கீழே தள்ளினான். அப்போது, "எப்போது நீ ஒரு குரங்கின் வசத்துக்கு உட்படுவாயோ, அப்போது லங்கைக்குப் பயமுண்டாகும்" என்று ப்ரம்மா சொன்னது அவள் நினைவுக்கு வந்தது. அவள் ஹநுமானைப் பார்த்து, 'உன் இஷ்டப்படி உள்ளே போய் ஸீதையைத் தேடு' என்று அனுமதி கொடுத்தாள். ஹநுமான் 'சத்ருவின் நகரத்தில் வாசல்வழி

யாகப் போகக்கூடாது' என்று மதிள்மேல் ஏறி இடதுகாலை முன்னாலே வைத்துக்கொண்டு இறங்கி, ஸீதையைத் தேட ஆரம்பித்தான். முதலில் ராவணனுடைய அந்தப்புரத்தில் புகுந்து, ஸீதையைத் தேடினான். அதில் அநேகம் ஸ்திரீகளைப் பார்த்தான். ஆனால் ஸீதையைக் காணவில்லை. பிறகு ராவணன் தம்பி விபீஷணன் வீட்டிலும் ராவணன் பிள்ளை இந்த்ரஜித்தின் வீட்டிலும் மந்திரிகளின் வீடுகளிலும் மற்ற ப்ரதான ராக்ஷஸர்கள் வீடுகளிலும் தேடினான். அங்கும் ஸீதையைக் காணவில்லை. ராவணன் அரண்மனையிலும் ஸீதையைத்தேடிக் காணாமல் வருத்தம் அடைந்தான். பிறகு புஷ்பகவிமானத்தில் ராவணனுடைய கிருஹத்தில், பல ஸ்திரீகளையும், ராவணனையும், அவன் பக்கங்களில் படுத்திருந்த ஸ்திரீகளையும் பார்த்தான். ராவணன் பாரியையான மந்தோதரியைப் பார்த்து, அவளை ஸீதை என்று நினைத்து ஸந்தோஷப்பட்டான். பிறகு யோசித்துப்பார்த்து, "ராமனைவிட்டுப் பிரிந்த ஸீதை தூங்குகிறவள் அல்லள். சாப்பிடவும், தனக்கு அலங்காரம் செய்துகொள்ளவும், மத்யபானம்பண்ணவும், அந்யபுருஷன்கிட்டப் போகவும்மாட்டாள். தேவதைகளுக்குள்ளும் ராமனுக்கு ஸமமாக ஒருவரும் இல்லை. ஆகையால் இவள் ஸீதையன்று. வேறு ஸ்திரீ" என்று நிச்சயம் செய்து, பானபூமி லதாகிருஹம் சித்ரக்ருஹம் முதலானவைகளிலும் தேடியும், ஸீதையைக் காணாதபடியாலே பின் வருமாறு சிந்திக்கலானான்—"நான் எங்கும் தேடினேன்; எங்கும் ஸீதையைக் காணவில்லை; ஸம்பாதி அவள் இங்கு இருப்பதாகச் சொன்னானே; அவள் பரவசையாய் துஷ்டச்செய்கையுள்ள ராவணனை அடைந்துவிட்டாளா? அல்லது அவளைத் தூக்கிக்கொண்டு கிளம்பிப்போகையில் ராவணனிடமிருந்து கீழே விழுந்துவிட்டாளா? அப்போது ஸமுத்ரத்தில் விழுந்துவிட்டாளா? அவள் உயிரை விட்டுவிட்டாளா? அல்லது அவளை ராவணனோ அவன் பத்தினிகளோ சாப்பிட்டுவிட்டார்களோ? இந்த விஷயத்தை ஸ்ரீராமனிடத்தில்போய் சொல்லுவது யுக்தமா? அல்லது, சொல்லாதிருப்பது தகுந்ததா? சொன்னாலும் சொல்லாவிட்டாலும் தோஷமுண்டாகும். நான் என்ன பண்ணுகிறது? நான் ஸீதையைப் பாராமல் கிஷ்கிந்தைக்குப்போனால் என்ன ப்ரயோஜனம்? நான் ஸமுத்ரத்தைத் தாண்டினதும்

லங்கைக்குள் வந்து ராக்ஷஸர்களைப் பார்த்ததும் வியர்த்தம். ஸுக்கிரீவனும் வானரங்களும் என்னைப் பார்த்து என்ன சொல்லுவார்களோ? ராமனும் லக்ஷ்மணனும் என்ன சொல்லுவார்கள்? நான் ஸீதையைக் காணவில்லையென்று ராமனிடம் சொன்னால், அவன் உயிரை விட்டுவிடுவன். இதைக்கண்டு லக்ஷ்மணனும், இவர்கள் மரணத்தைக்கேட்டு பரதனும் சத்ருக்கனனும், கௌஸல்யை முதலான தாய்மார்களும் ஸுக்கிரீவனும் ருமையும் தாரையும் அங்கதனும் எல்லா வானரங்களும் இறந்துபோவார்கள். ஆதலால் நான் அங்கு போகிறதில்லை. நான் இங்கேயே இருந்தால் ஸீதையைக் காணுவோம் என்கிற ஆசையினால் அவர்கள் உயிரோடிருப்பார்கள். நான் வானப்ரஸ்தனாயிருந்து மரத்தடியில் இருந்துகொண்டு கையிலோ வாயிலோ வந்து விழுவதைச் சாப்பிட்டுக்கொண்டு இங்கேயே இருப்பேன்; அல்லது அக்னிப்ரவேசம் பண்ணுவேன்; அல்லது ப்ராயோபவேசம் பண்ணிக்கொண்டு ஆஹாரமில்லாமலிருக்கிற என்னைக் காக்கைகள் பக்ஷிக்கட்டும்; அல்லது ஜலத்தில் முழுகிப்போய்விடுவேன். ஆனால் நான் நாசத்தை அடைவதில் அநேக தோஷங்கள் இருக்கின்றன. ஜீவித்திருந்தால் க்ஷேமங்களைப் பார்க்கலாம். ஆதலால் பிராணனைத் தரிப்பேன். ராவணனைக் கொன்றுவிடுவேன். அல்லது அவனைத் தூக்கிக்கொண்டு ஸ்ரீராமனிடம் கொண்டுபோவேன். ஸீதையை எதுவரையில் நான் காணவில்லையோ, அதுவரையில் லங்கையை அடிக்கடி தேடுவேன்" என்றான். (ஸ-2 + 12.)

(126) இப்படி ஹநுமான் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கையில் அசோகவனம் அவன்கண்ணில் பட்டது. அங்கே போய் அநேக மரங்களைப் பார்த்து, ஓர் அசோகமரத்தில் ஏறி, "ஸீதை ஸந்த்யோபாஸனம்பண்ண இதிலுள்ள நதிக்கரைக்கு வரலாம்" என்று எண்ணிக்கொண்டிருந்தான். அங்கிருந்து நாலுபக்கமும் பார்க்கையில் சைத்யப்ராஸாதத்தையும், ஒரு மரத்தடியிலிருந்த ஸீதையையும் கண்டான். "இவள் ஸீதையாகவே இருக்கவேண்டும்" என்று தனக்குள்ளே நிரூபணம் பண்ணினான். அவள் அழுக்கான ஒரு வஸ்திரத்தை உடுத்துக்கொண்டு, ராக்ஷஸிகளால் சூழப்பட்டு உபவாஸத்தினால் இளைத்து, தீனையாய் அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தாள். வேண்டியவர்களைப் பாராமலும் ராக்ஷஸிகளைப் பார்த்துக்கொண்டும் கண்

ணும் கண்ணீருமாய், தன் இனத்தால் விடப்பட்டு நாய்களால் சூழப்பட்ட பெண்மானைப்போல் இருந்தாள். அவ்விதம் அவள் இருப்பதைப் பார்த்து ஹநுமான் 'இவள்தான் ஸீதை' என்று நிச்சயம் செய்தான். ஸ்திரீயை ரக்ஷிக்கவில்லையே என்று தயையாலும், தன்னை அண்டினவளை ரக்ஷிக்கவில்லையே என்று இரக்கத்தாலும், பத்நியைக் காணவில்லையே என்கிற சோகத்தாலும், ப்ரியையைப் பார்க்கவில்லையே என்று காமத்தாலும் எவளைப்பற்றி ராமன் துக்கப்படுகிறானோ, அவள் இவள்தான். ராமனுடைய திருமேனியும் அங்கங்களும் எப்படி நன்றாயிருக்கின்றனவோ, அப்படியே இவளுடைய திருமேனியும் அங்கங்களும் நன்றாயிருக்கின்றன. ஆகையால் இவள் அவனுக்குத் தகுந்தவள். இவள் மனது அவனிடத்திலும், அவன் மனது இவளிடத்திலும் நிலையாய் இருக்கின்றன. இந்தக் காரணத்தாலே இருவரும் பிழைத்திருக்கிறார்கள். ஒருவரைவிட்டு ஒருவர் பிரிந்தால் ஒருமுகூர்த்தமும் பிழைத்திருக்க முடியாது. ராமன் இவளை விட்டுப்பிரிந்தும் உடம்பைத் தரித்துக்கொண்டு துக்கத்தாலே இறக்காமல் இருக்கிறானே. அவன் கர்மம் துஷ்கரம். இது அஸாத்யமான கார்யம். இவளைவிட்டு அவன் ஒரு முகூர்த்தகாலமும் பிழைத்திருக்கிறானே" என்று ஆச்சரியப்பட்டு, ராமனை மனதால் நினைத்து, அவனைக் கொண்டாடினான். (ஸ-14, 15.)

(127) ஸீதையின் இருப்பைப் பார்த்து, ஹநுமான் கண்ணும் கண்ணீருமாய் அடியில்வருமாறு வருத்தப்பட்டான்—" உலகத்தை ரக்ஷிக்கிறவர்கள் ராமனும் லக்ஷ்மணனும். அவர்களுக்குப் ப்ரியையான ஸீதை இப்படி துக்கத்தால் வருந்துகிறாளே. காலத்தை மீறமுடியாது என்கிற உலக வசனம் இங்கே பலித்திருக்கிறது. 'ஆச்ரிதனை ஒருபோதும் விடுகிறதில்லை. இது என்னுடைய வ்ரதம்' என்று ராமன் சொன்னதை நினைத்துக் கொண்டு தானாக ஒரு ப்ரயத்நம் பண்ணாமல் மழைகாலத்திலுட கங்கை தெளிந்திருப்பதுபோல், இவள் தைரியத்துடன் இருக்கிறாள். ராமனுக்கு ஸமமான சீலத்தையும் வயதையும் நடத்தையையுமுடையவளும், ஸமமான குலத்தையும் லக்ஷணங்களையுமுடையவளுமாகி, இவள் இருக்கிறாள். ஆகையால் ராமன் இவளுக்குத் தகுந்தவன். இவளும் அவனுக்குத் தகுந்தவள். இவளுக்காகக் கபந்தனும், ராவணனுக்கு ஸமமான பலமுள்ள

வாலியும், விராதனும் கொல்லப்பட்டார்கள். ஜனஸ்தானத்தி லிருந்த பதினாலாயிரம் ராக்ஷஸர்களும் கரனும் தூஷணனும் த்ரிசிரஸும் உயிரை இழந்தார்கள். இவளுக்காக துர்லபமான வாலியின் வானர ராஜ்யத்தை ஸுக்ரீவன் அடைந்தான். இவளுக்காக நான் லங்கையைத் தாண்டி இந்த நகரத்தைக் கண்டேன். இவளுக்காக ஸமுத்ரத்தாலே சூழப்பட்ட இந்தப் பூமியைத் தலைகீழாக மாற்றினாலும் அது தகுந்ததுதான் என்று எண்ணுகிறேன். இந்த * மூன்று உலகங்களை ஒரு தட்டி லும், ஸீதையை ஒரு தட்டிலும் வைத்தால், அவைகளெல்லாம் இவளுடைய ஓர் அம்சத்துக்கு ஸமமாகமாட்டா. இப்படிப் பட்டவள் ராக்ஷஸிகள் வசத்தில் அகப்பட்டிருக்கிறாளே? ராம னுடன் சேருவதை ஆசைப்பட்டு, சரீரத்தை வைத்துக்கொண் டிருக்கிறாள். இவள் தன்னைத் துன்பப்படுத்துகிற ராக்ஷஸிகளை எப்படிப் பார்க்கவில்லையோ, அப்படியே புஷ்பங்களும் பழங்களும் நிறைந்த மரங்களையும் பார்க்கிறதில்லை.§ அவளுடைய மனது ஒன் றிலேயே படிந்திருக்கிறது. ராமனையே பார்த்துக்கொண்டிருக்கி றாள். ஸ்திரீகளுக்கு பூஷணங்களைக்காட்டிலும் பர்த்தா உயர்ந்த பூஷணம். பூஷணங்களுக்குத் தகுந்த இவள், அவனை விட்டுத் தனியாயிருப்பதால் விளங்கவில்லை. ஸுகத்துக்குத் தகுந்தவ ளாயிருந்தும் இவள் துக்கப்படுவதைப்பார்த்து, குரங்கான †

---

* மூன்று உலகங்களையும் அவைகளோடு ஒன்றாக 'விச்வம்' என்று சொல்லப்பட்ட பகவானையும் ஒரு தட்டில் வைத்தாலும் என்று முப்பத் தாறாயிரம்.

§ வெளியில் இருக்கும் ஒன்றையும் பாராமல் மனதாலே ஒன் றையே நினைத்துக்கொண்டிருப்பது யோகியின் ஸமாதி என்கிற தசை. இப்படி முமுக்ஷுவானவன் எல்லாவற்றையும் மறந்து பகவான் ஒருவ னையே நினைந்துக்கொண்டிருக்கவேண்டியது என்பது ஸீதையின் அநு ஷ்டானத்தாலே விளங்குகிறது.

† இவளுடைய அழகான கூந்தல், அழகான கூந்தலையுடைய ராம னாலும் ஆசைப்படத்தகுந்தது. தாமரைக்கண்ணன் என்று சொல்லப் பட்ட அவனும் பார்த்துக்கொண்டேயிருக்கும்படியான கண்ணழகை உடையவள் இவள். அவன்மடியிலேயே இருக்கத்தகுந்தவள் இவள். இப்படிப்பட்டவள் தரையில் உட்கார்ந்து ராக்ஷஸிகளாலே துன்பப்படுத் தப்படுவதைப் பார்த்தால் எவன் மனதுதான் உருகாது. குரங்கான நான் ஸந்தோஷத்தையும் துக்கத்தையும் அறியேன். அப்படிப்பட்ட எனக் கும் மனதில் வருத்தமுண்டாகிறதே.

என் மனதும்கூட துன்பத்தை அடைகிறது. இப்படியானால், மிகுந்த தயாளுவான ராமன் மனது எப்படி தபிக்காது'' என்று. இப்படி வருத்தப்பட்டு ஹநுமான் அந்த அசோக மரத்தில் உட்கார்ந்தான்.* (ஸ - 16.)

(128) அன்று ராத்திரி கொஞ்சம் பாக்கியிருக்கையில் காமத்தால் ஏவப்பட்டு, ராவணன் ஸ்திரீகளோடு அசோகவனத்துக்கு வந்தான். ஸீதை அவனைப்பார்த்து, பெருங்காற்றில் வாழைபோல் நடுங்கினாள்; வயிற்றைத் துடைகளாலும் ஸ்தனங்களைக் கைகளாலும் மறைத்துக்கொண்டு அழுதுகொண்டிருந்தாள். அவளைப் பார்த்து ராவணன் பலவிதமாய் ப்ரலோபனம் பண்ணினான்:—"ஸீதையே! என்னைப் பார்த்தவுடன் உன் வயிற்றையும் ஸ்தனங்களையும் மறைத்துக்கொள்கிறாய். நான் உன்னைப் பார்க்கக்கூடாதென்று எண்ணுகிறாய்போலும். உன்னை நான் விரும்புகிறேன். என்னிடம் வெகுமானம் பண்ணு. என்னைக்கண்டு பயப்படாதே. பரஸ்திரீகளுடன் சேர்வதும், பலாத்காரமாய் அவர்களைக் கொண்டுவருவதும் ராக்ஷஸனுக்கு ஸ்வதர்மம். உனக்கு என்னிடம் ஆசையில்லையென்று உன்னை நான் தொடவில்லை. என்சரீரத்தில் உனக்கு ஆசை உண்டாகட்டும். ஒரே சடையான தலைமயிரும், தரையில் படுக்கையும், அழுக்கு வஸ்திரமும், காரணமில்லாமல் பட்டினியிருப்பதும் உனக்குத் தகுந்தவைகள் அல்ல. என்னை அடைந்து ஆச்சரியமான மாலைகளையும் சந்தனத்தையும் அகில் புகையையும் பலவித வஸ்திரங்களையும் உயர்ந்த ஆபரணங்களையும் உயர்ந்த அன்னபானங்களையும் படுக்கைகளையும் ஆஸநங்களையும் கீதத்தையும் வாத்யத்தை

---

* அவதாரிகையில் சொன்னபடி ஹநுமான் ஆசாரியன், ஸீதை ஜீவன்; ஜீவன் ஸ்வபாவத்தாலே தோஷமில்லாதவன்; பகவானுக்கு அநுரூபமானவன்; அவனுக்காக பகவான் வெகு பாடுபடுகிறான்; அவனுக்கு உடம்புகளையும் இந்திரியங்களையும்கொடுத்து, சாஸ்திரத்தைத் தானும் பிறரைக்கொண்டும் அவனுக்குத் தெரிவிக்கிறான்; அவன் தன்னை ஆச்ரயித்தால் அவனுடைய விரோதிகளை நாசம் செய்கிறான். இப்படியிருக்க, அவன் பகவானை மறந்து மனதுக்கும் இந்திரியங்களுக்கும் உட்பட்டு, அவைகள் இழுத்தவழிபோக இஷ்டமில்லாமலும், அவைகளை ஜெயிக்கமுடியாமலும் கஷ்டப்படுகிறான். ஆசாரியன் அவன் இருக்கவேண்டியதையும், அவன் இப்போதிருப்பதையும் பார்த்து, அவனைப் பற்றி வருத்தப்படுகிறான். இஃது இந்தப் பிரகரணத்தின் கருத்து.

யும் ஸ்திரீகளின் நர்த்தனத்தையும் அநுபவி. இப்போது உனக்கு அழகான யௌவனம் இருக்கிறது. இது போனால் திரும்பி வராது. பிரம்மா உன்னை ஸ்ருஷ்டித்து உனக்கு மேற்பட்டவளை ஸ்ருஷ்டிக்கமுடியாது என்று நினைத்து ஸ்ருஷ்டி வேலையை நிறுத்திவிட்டான். உன்னைப் பார்த்தால், பிரம்மாவும் மோஹத்தை அடைவனே. என் எல்லா ஸ்திரீகளுக்கும் மேற்பட்டவளாய் எனக்கு முக்கிய மஹிஷியாயிரு. நான் எந்த உயர்ந்த ரத்னங்கள் ஸம்பாதித்திருக்கிறேனோ, அவைகளும் இந்த ராஜ்யமும் உன்னுடையவை. உனக்காக உன் தகப்பனான ஜனகனுக்கு இந்த பூமி முழுவதையும் ஜயித்துக் கொடுப்பேன். ராமனிடம் இருக்கும் ஆசையை விட்டுவிடு. மரவுரி உடுத்துக் கொண்டிருக்கிற ராமன் உனக்கு என்னசெய்வன்? அவன் அபஜயத்தை அடைந்து, ஸம்பத்தை இழந்து வனத்தில் திரிகிறான்; விரதம் பண்ணுகிறான்; பூமியில் படுக்கிறான்; அவன் பிழைத்திருக்கிறானோ இல்லையோ என்று ஸந்தேஹப்படுகிறேன். அவன் உன்னைப் பார்க்கவும் முடியாது. என் கையிலிருந்து அவன் உன்னை அடையமுடியுமோ? உன்னைப்பார்த்தபிறகு என்னுடைய ஸ்திரீகளிடத்தில் எனக்கு ப்ரீதியில்லை. ராமன் தபஸாலும் பலத்தாலும் பராக்ரமத்தாலும் தனத்தாலும் தேஜஸாலும் கீர்த்தியாலும் எனக்கு ஸமன் அன்று'' என்று சொன்னான்.* (ஸ-18.)

(129) இதைக்கேட்டு துக்கப்பட்டு, கண்ணும் கண்ணீருமாய் நடுங்கி, தன் பர்த்தாவையே நினைத்துக்கொண்டு, பதிவ்ரதையான ஸீதை தீனஸ்வரத்துடன் நடுவில் ஒரு புல்லைப் போட்டுப் பதில் சொன்னாள்—"என்னிடமிருந்து உன் மனதை திருப்பு; உன்னைச்சேர்ந்தவர்களிடம் மனதை வை; நீ என்னை

---

* அவதாரிகையில் ராவணன் மனது என்பதும், அவன் பத்துத் தலைகள் இந்திரியங்கள் என்பதும் சொல்லப்பட்டன. மனது ஜீவனை விஷயங்களைக்காட்டி அவைகளை அனுபவிக்க இழுக்கிறது. யௌவனம் இந்த அநுபவத்துக்குத் தகுந்தகாலம். அது போனால் திரும்பிவராது. அந்த விஷயஸுகம் மிகவுமுயர்ந்தது. எல்லா இந்திரியங்களும் திருப்தி அடையும். பகவானை ஆசைப்படுவதால் என்ன ஸுகம் கிடைக்கும்? தபஸு செய்யவேண்டும். ஆஹாரமில்லாமலும் தரையில் படுத்துக் கொண்டும் கஷ்டப்படவேண்டும். இவ்வளவு கஷ்டப்பட்டும் விஷய ஸுகத்தைக் காட்டிலும் பகவானுடைய அநுபவம் உயர்ந்ததோ என்று மனது ப்ரலோபம் பண்ணுகிறது.

இப்படி வேண்டுவது தகுந்ததன்று. உலகம் நிந்திக்கும் காரியத்தை நான் செய்யமுடியாது ; நான் பதிவ்ரதை ; நான் மிகுந்த புண்ணியத்தைச்செய்து நல்ல குலத்தில் பிறந்தவள் ; நல்ல குலத்தில் புகுந்தவள்" என்று இப்படிச் சொல்லி, திரும்பி அவனுக்குப் பின்புறத்தைக்காட்டிக்கொண்டு மறுபடி பேசினாள்—"நான் வேறொருவனுக்குப் பாரியையாயிருப்பதால், உனக்குப் பாரியையாக இருக்கத்தகுந்தவள் அல்லள். பெரியோர்களுடைய தர்மத்தைக் கவனி ; அவர்கள் நடப்பதுபோல் நட ; எப்படி நீ உன் பாரியையை ரக்ஷிக்கிறாயோ, அப்படியே மற்றவர்களும் தங்கள் பாரியைகளை ரக்ஷிக்கவேண்டும். ஆகையால் உன் ஸ்திரீகளிடத்திலேயே நீ ஸுகத்தைத் தேடு. எவன் தன் பத்னிகளிடத்திலேயே திருப்தியடையாமல், இந்திரியங்களை அடக்காமல் சபலனாய் பரஸ்திரீகளிடம் வருகிறானோ, அவனுடைய ஆயுஸ் ஐசுவரியம் முதலானவைகளுக்குக் குறைவு அந்தப் பரஸ்திரீகள் உண்டு பண்ணுவார்கள். இவ்விடத்தில் பெரியோர்கள் இல்லையா ? இருந்தாலும், நீ அவர்களிடம்போய் அவர்களை அநுஸரிக்கவில்லையா ? ஆகையால் உன் புத்தி கெட்டவழியில்போகிறது. பெரியோர்கள் சொன்ன ஹிதமான வார்த்தையை நீ கேட்கவில்லை. நீ எல்லா ராக்ஷஸர்களுடைய நாசத்திற்குங் காரணமாயிருக்கப்போகிறாய். அவர்களிடத்தில் உனக்கு ஸ்நேஹம் இருப்பதாகக் காட்டுகிறாய். உண்மையில் ஸ்நேஹமில்லை. மனதை அடக்காமல் அதர்மத்தில் இருக்கிற ராஜாவையடைந்து, ஸம்ருத்தமான தேசமும் நகரமும் நாசத்தை அடையும். உன் ஒருவனுடைய அபராதத்தால் ரத்நங்கள் நிறைந்த இலங்கை சிக்கிரத்தில் நாசம் அடையப்போகிறது. மேலே துன்பம் வரும் என்று பாராமல் பாபம் செய்கிறவன் தன் கர்மத்தாலேயே கொல்லப்படுகிறான். அவன் நாசத்தைக்கண்டு ஜனங்கள் ஸந்தோஷப்படுகிறார்கள். இப்படிப் பாபம்செய்கிற உன் நாசத்தைக் கண்டு உன்னால் வஞ்சிக்கப்பட்டவர்கள் "க்ரூரனை இவன் நல்லவேளையாக நாசம் அடைந்தான்" என்று ஸந்தோஷப்படுவார்கள். ஐசுவரியத்தையாவது தனத்தையாவது காட்டி என்னை வஞ்சிக்கமுடியாது. எப்படி ஸூரியனைவிட்டு அவன் பிரபை பிரிந்திருக்காதோ, அப்படி நான் ராகவனைவிட்டுப் பிரிந்திருக்க முடியாதவள். லோகநாதனை ராமனுடைய பூஜிக்கப்பட்ட வலது புஜத்தைத் தலையணை

யாக வைத்துக்கொண்டிருந்து, வேறொருவனுடைய புஜத்தை எப்படித் தலையணையாக வைத்துக்கொள்ளக்கூடும்? நான் அந்தப் பூமிபாலனுக்கே பத்னியாயிருக்கத் தகுந்தவள். ராவணா! என்னை ராமனுடன் சேர்த்துவை.* உன்னுடைய ஸ்தாநத்தை ரக்ஷிப்பதில் ஆசையும், கோரமான மரணத்தில் பயமும், வெறுப்பும் இருந்தால், ராமனை நீ மித்ரனாகப் பண்ணிக்கொள்வது தகுந்தது; அவன் தர்மம் தெரிந்தவன். சரணாகதி பண்ணினவர்களிடம் பிரீதியுள்ளவன். இந்த உலகத்தில் பிரஸித்தமானது. நீ பிழைக்கவேண்டும் என்று விரும்பினால் அவனிடம் உனக்கு ஸ்நேஹமுண்டாகட்டும். அவன் அநுக்ரஹம் எப்படிக் கிடைக்குமோ, அப்படிச் செய். மனதிலிருக்கிற காலுஷ்யத்தைப்போக்கி என்னை அவனிடம் கொண்டுபோய்க் கொடு. என்னைக் கொடுக்கவே, உனக்கு க்ஷேமமுண்டாகும். வேறுவிதமாய் நடந்தால் ராமனால் உனக்கு வதமுண்டாகும். இந்த்ரனால் விடப்பட்ட வஜ்ரமும் யமனும் உன்னைவிட்டாலும் விடும். லோகநாதனான ராமன் உன்னை விடமாட்டான். ராமனுடைய பெரிதான நாண் ஏற்றின வில்லின் சப்தத்தைக் கேட்கப்போகிறாய். ராமன் லக்ஷ்மணன் பெயர்களுள்ள பாணங்கள் ஜ்வலிக்கிற வாயுள்ள பாம்புகள் போல் சீக்கிரம் இங்கேவந்து விழப்போகின்றன. அவைகள் ராக்ஷஸர்களைக்கொன்று இந்த நகரத்தைப் பாழாக்கப்போகின்றன. உன்னிடமிருந்து என்னை என் பர்த்தா சீக்கிரம்கொண்டு போகப்போகிறான். ஜனஸ்தானத்திலிருந்த ராக்ஷஸர்கள் கொல்லப்பட்டபோது, நீ அவனை எதிர்க்க சக்தியில்லாதவனாய், அவனில்லாத வேளையில் என்னைக்கொண்டுவந்ததாகிய அகாரியத்தைச் செய்தாய். புலியைக்கண்ட நாய்போல் ராமலக்ஷ்மணர்களுடைய வாஸனையை மோந்து அவர்கள்முன் நிற்கமாட்டாய். அவர்களுடன் நீ சண்டைபோடுகையில் உனக்கு ஜயம் வரும் என்பது அஸம்பாவிதம். என் நாதனான ராமன் லக்ஷ்மண

---

* ஸீதை உலகமாதாவாகையாலே, அபராதம்செய்த ராவணனுக்கும் ஹிதத்தை உபதேசிக்கிறாள். "நான் சொன்னதை நீ கேளாவிட்டால், உனக்கு இருக்க இடமிராது. 'நான் ஆகாசத்தில் ஸஞ்சரிக்கிறவன் அல்லனா' என்று எண்ணாதே. ராமனுடைய பாணம் ஆகாசத்திலும்போகும். கோரமான வதத்தை உண்டு பண்ணும். 'அபராதம் பண்ணின என்னை அவன் மித்ரனாக எண்ணுவனோ' என்று பயப்படாதே. அவன் புருஷோத்தமன்." என்பது உபதேசப்ரகாரம்.

னுடன் வந்து, ஜலத்தை ஸூரியன் கொண்டுபோவதுபோல் உன் பிராணனைக் கொண்டுபோகப்போகிறான். நீ கைலாஸத்துக்குப்போனாலும், வருணலோகத்துக்குப்போனாலும், நீ அவனிடமிருந்து ஒருகாலும் விடுபடமாட்டாய். இதில் ஸந்தேஹமில்லை" என்று சொன்னாள். (ஸ - 21.)

(130) ஸீதையின் கொடுமையான இந்த வார்த்தையைக் கேட்டு ராவணன் பதில் சொன்னான்—"ஸ்திரீகளைத் தன் வசப்படுத்திக்கொள்ள எவ்வளவு நல்ல வார்த்தை சொன்னாலும், அவர்கள் அவனுக்கு உட்படுகிறதில்லை. எவ்வளவு ப்ரியமான வார்த்தை சொல்லுகிறானோ, அவ்வளவு அவர்களிடமிருந்து அவமானம் கிடைக்கிறது. உன்னிடத்தில் எனக்கு உண்டாயிருக்கிற காமமானது என் கோபத்தை அடக்குகிறது. மனிதர்களின் காமம் விபரீதமாயிருக்கிறது. எதனிடத்தில் அது வைக்கப்படுகிறதோ, அதனிடத்தில் இரக்கமும் ஸ்நேஹமும் உண்டாகின்றன. கபடமாய்த் தாபஸவேஷம் பூண்ட ராமனிடத்தில் நீ ஆசைவைத்துக் கொண்டிருக்கிறாய்; நீ கொல்லத் தகுந்தவள்; கீழ்ச்சொன்ன காரணங்களால் நான் உன்னைக் கொல்லவில்லை. எந்த எந்தக் கொடுமையான பேச்சுப் பேசினாயோ, அவைகள் ஒவ்வொன்றுக்குமே உன்னை வதம் செய்யவேண்டும். 'நான் பன்னிரண்டு மாதங்கள் பொறுத்துக்கொண்டிருப்பேன்' என்று சொன்னேன். அவைகளில் இரண்டு மாதங்கள் பாக்கியிருக்கின்றன. அவைகள் கழிந்தவுடன் என் படுக்கையில் நீ ஏறவேண்டும். அதற்குமேல் என்னைப் பர்த்தாவாக இச்சிக்காவிட்டால், உன்னை எனக்குக் காலைவேளை ஆஹாரமாகச் செய்ய ஆரம்பிப்பார்கள்" என்று சொன்னான். இப்படி ராவணனால் அதட்டப்பட்ட ஸீதையைச் சில தேவகன்யகைகளும் கந்தர்வகன்யகைகளும் துக்கப்பட்டு உதடுகளை அசக்குவதாலும், கண்களாலும், தலையை ஆட்டுவதாலும் ஸமாதானம் பண்ணினார்கள். இப்படி ஸமாதானப்படுத்தப்பட்ட ஸீதை 'நான் பதிவ்ரதையாயிருக்கிறேன்' என்கிற பெருமையாலே ராவணனைப் பார்த்து, அவனுக்கு ஹிதமானதைச் சொன்னாள்—"உண்மையில் உன் க்ஷேமத்தில் ஆசையுள்ளவன் ஒருவனுமில்லை. இந்த நிந்திக்கத்தகுந்த காரியத்திலிருந்து உன்னை விலக்குகிறவனில்லையே. தர்மாத்மாவான ராமனுடைய பத்னியான என்னை மூன்றுஉலகங்களிலும் உன்னைத்தவிர,

எவன் ஆசைப்படுவன்? காட்டில் கொழுத்த யானையும் முயலும் யுத்தத்துக்குச் சேர்ந்தால், யானைக்கு ஜயமும் முயலுக்கு அபஜயமும் உண்டாகும் என்று சொல்லவேண்டுமோ? யானைபோன்றவன் ராமன்; நீ முயலைப்போன்றவன். இங்கிருந்துகொண்டு அவன் கண்களுக்கு விஷயமாகாமலிருந்து அவனை நிந்திக்கிறாய். உனக்கு லஜ்ஜையில்லையா? என்னைப் பார்க்கிற உன்னுடைய க்ரூரமாயும் விரூபமாயும் இருக்கிற கண்கள் ஏன் கீழே பூமியில் விழவில்லை? தர்மாத்மாவான ராமனுடைய பத்னியும் தசரதனுடைய மருமகளுமான என்னைப் பார்த்துப் பேசின உன் நாக்கு ஏன் வெடிக்கவில்லை? சாம்பலாகத் தகுந்தவனே! உன்னைச் சாம்பலாகப் பண்ணவேண்டும். நான் அதைச் செய்யாமைக்குக் காரணம் ராமன் இதைச் செய் என்று சொல்லியனுப்பாததும், என் தபஸைப் பரிபாலனம் பண்ணுவதும். என்னை ராமனிடமிருந்து அபஹரிக்க முடியாது. தெய்வம் உன்னை வதம் செய்வதற்காக இதைச் செய்துவைத்திருக்கிறது. இதில் ஸம்சயமில்லை. நீ சூரன்; குபேரன் ப்ராதா; பலமுள்ளவன். இப்படியிருந்தும், ராமனை அப்புறம் போகும்படிசெய்து, அவனுடைய பாரியையை ஏன் திருடிக்கொண்டு வந்தாய்?'' என்று சொன்னாள். இதைக் கேட்டு ராவணன், தன்னுடைய க்ரூரமான கண்களைச் சுழற்றி விழித்து ஸீதையைப் பார்த்து, "நீதியில்லாமல் ஸம்பத்தால் விடப்பட்ட ராமனையே இன்னும் நினைத்துக்கொண்டிருக்கிறாயே. இப்போது உன்னைக் கொன்றுவிடுகிறேன்"* என்று சொன்னான். பிறகு அவளைச் சுற்றியிருந்த ராக்ஷஸிகளைப் பார்த்து 'எப்படி இவள் சீக்கிரம் என்வசமாவாளோ, அப்படிச் செய்ய வேண்டும்' என்று ராவணன் கட்டளையிட்டுத் திரும்பினான். (ஸ-22.)

(131) ராக்ஷஸிகள் ஸீதையைப் பார்த்து ராவணனை ஸ்தோத்ரம்பண்ணி, அவள் அவனுக்குப் பாரியையாகாவிட்டால்,

---

* ஸீதையினுடைய கடுமையான பேச்சைக்கேட்டு ராவணன் முஷ்டியினால் ஸீதையை அடிக்கக் கையை ஓங்கினான். இதை அவன் பாரியை மண்டோதரி தடுத்தாள். இந்த விஷயம் ஹநுமான் வானரங்களுக்கு நடந்ததைத் தெரிவிக்கும்போது சொல்லப்பட்டது. (ஸ-58-74)

அவளைத் தாங்கள் சாப்பிடுவதாகச் சொல்லி அதட்டினார்கள். அதற்கு ஸீதை கண்ணும் கண்ணீருமாய், "நீங்கள் சேர்ந்து சொல்லுவது பாபம் என்பதும், உலகத்தார்களால் நிந்திக்கப் படும் என்பதும் ஏன் உங்களுக்குத் தோன்றவில்லை? மனித ஸ்திரீ ராக்ஷஸனுக்குப் பாரியையாக இருக்கத்தகுந்தவள் அல்லள். இஷ்டப்படி என்னைத் தின்னுங்கள். நான் நீங்கள் சொன்னதைச் செய்யமாட்டேன். ராமன் ராஜ்யத்தை இழந்தவனாகவும் தீனனாகவும் இருந்தாலும் அவன்தான் எனக்குப் பார்த்தாவும் குருவும். ஸூரியனை ஸுவர்ச்சலையும், இந்திரனை இந்திராணியும், வஸிஷ்டனை அருந்ததியும், சந்திரனை ரோஹிணியும், அகஸ்தியனை லோபாமுத்ரையும், ச்யவநனை ஸுகன்யையும், ஸத்யவானை ஸாவித்ரியும், கபிலனை ஸ்ரீமதியும், ஸௌதாஸனை மதயந்தியும், ஸகரனைக் கேசிநியும், நளனைத் தமயந்தியும் எப்படி அநுவர்த்தித்தார்களோ, அப்படியே நானும் பதிவ்ரதையாய் ராமனை அநுவர்த்தநம் பண்ணுகிறேன்" என்று பதில் சொல்லி, ஹநுமான் உட்காந்திருந்த சிம்சுபாமரத்தின் அடியில் வந்து உட்காந்தாள். அங்கும் வந்து ராக்ஷஸிகள் முன்போல் அதட்டினார்கள். ஸீதை அழுதுகொண்டு பின்வருமாறு புலம்பினாள்—"ஓ! ராமா! ஓ! லக்ஷ்மணா! கௌஸல்யையே! ஸுமித்ரையே! 'புருஷனுக்கோ ஸ்திரீக்கோ, மிருத்யு வரவேண்டிய காலத்துக்கு முன்னாலே வராது' என்று பெரியோர்கள் சொல்லுவது ஸத்யமாயிருக்கிறது. க்ரூரர்களான ராக்ஷஸிகளால் அதட்டப்பட்டும், ராமனைவிட்டுப் பிரிந்தும் சிறிதுகாலமாவது உயிரோடிருக்கிறேனே. நான் புண்ணியம் பண்ணவில்லை; நாதனில்லாமல் விநாசத்தையடையப்போகிறேன். தாமரைக்கண்ணனும் ஸிம்மத்தின் நடையுள்ளவனும் பிரியத்தையே சொல்லுகிறவனும் செய்தநன்மையை மறவாதவனுமான என்நாதனை ராமனைப் பாக்கியம் பண்ணினவர்கள் பார்க்கிறார்கள். கோரமான விஷம் சாப்பிட்டவனுக்கு எப்படி உயிரோடிருப்பது முடியாதோ, அப்படியே ராமனைவிட்டுப் பிரிந்த என்க்கு உயிரோடு இருப்பது முடியாது. இந்தக் கொடுமையான துக்கத்தை இப்போது அடைந்திருக்கிறேனே. எவ்விதமான பாபத்தை முன்ஜன்மத்தில் செய்தேனோ. ராக்ஷஸிகளால் ரக்ஷிக்கப்படுகிற என்னால் ராமனை அடையமுடியாது. ஆகையால் பிராணனை விட்டுவிடுகிறேன்.

என்னிஷ்டப்படி உயிரை விடமுடியவில்லையே. மனிதப் பிறப்பைச் சுடவேண்டும்; புருஷனுக்கு உட்பட்டிருப்பதையும் சுடவேண்டும்.'' (ஸ-23, 24, 25.)

(132) பித்தேறினவள்போலத் தரையில் புரண்டுகொண்டு மறுபடியும் ஸீதை புலம்பினாள்—"ராமன் வேறொன்றைச்செய்து கொண்டிருக்கையில் இந்த ராக்ஷஸன் வேண்டிய ரூபத்தை எடுத்துக்கொண்டு, பலாத்காரமாய் நான் அழ அழ, என்னைக் கொண்டு வந்துவிட்டானே. ராமனில்லாமல் ராக்ஷஸிகளின் நடுவிலிருக்கிற எனக்கு உயிரோடிருப்பதனால் என்ன பிரயோஜனம்? தனத்தாலேயாவது நகைகளாலேயாவது என்ன பிரயோஜனம்? இந்த துக்கத்தாலே என் மனது துண்டு துண்டாய் வெடிக்கவில்லையே. அது கருங்கல்லின் ஸாரமோ? அல்லது கிழத்தனமும் மரணமும் அதற்கு இல்லையென்று விதிக்கப்பட்டிருக்கிறதோ? என் ஜன்மம் பாபஜன்மம். இந்தப் பூமி முழுவதற்கும் பர்த்தாவும் பிரியத்தையே சொல்லும் ஸ்வபாவனுமான ராமனைவிட்டு எனக்கு ஜீவித்திருப்பதிலாவது ஸுகத்திலாவது சிரத்தை என்ன? என் ப்ரியனைவிட்டு இந்த துக்கத்தை என்னால் பொறுக்கமுடியவில்லை. ராக்ஷஸிகள் என்னைப் பிளக்கட்டும்; என்னைத் தின்னட்டும்; என் உடம்பை விட்டுவிடுகிறேன். ராவணனை இடதுகாலால் கூட நான் தொடமாட்டேன். நிந்திக்கப்பட்ட அவனை ஆசைப்படமாட்டேன் என்று சொல்லவேண்டுமோ? க்ரூரஸ்வபாவமுள்ள இவனை நான் நிந்தித்து உதறித் தள்ளுவதை அவன் அறியவில்லையே. தன் குலத்தையும் தன் ஸ்வபாவத்தையும் அறியவில்லையே. (ராக்ஷஸிகளைப் பார்த்து) நீங்கள் என்னைத் துண்டம்துண்டமாகச் செய்யுங்கள்; கோடாலியால் பிளவுங்கள்; கிழித்தெறியுங்கள்; நெருப்பில் கொளுத்துங்கள்; ஒருகாலும் ராவணன்கிட்டப் போகமாட்டேன். நீங்கள் எவ்வளவு பேசி என்ன? ராமன் இன்னும் வரவில்லையே. அவன் தோஷத்தைவிட்டுக் குணத்தையே க்ரஹிக்கிறவன்; கொஞ்சம் செய்த உபகாரத்தையும் ஒருபோதும் மறக்காதவன்; இரக்கமுள்ளவன்; பிறரின் நன்மையையே தன் பிரயோஜனமாக எண்ணுகிறவன் என்று அவனுக்குப் பிரஸித்தி இருக்கிறதே. என் பாக்கியக் குறைவாலே அவன் இரக்கம் போய்விட்டதோ என்று ஸந்தேஹப்படுகிறேன். ஜனஸ்தானத்திலிருந்த எல்லா ராக்ஷஸர்களையும் தனியாயிருந்து

கொன்றானே. அவன் ஏன் என்னிடம் வரவில்லை? என்னைச் சிறையில் வைத்திருக்கிற இந்த ராவணனுக்கு என்ன வீரியம் இருக்கிறது? இவனைக் கொல்ல என் பர்த்தா ஸமர்த்தனல்லனா? ஒருக்ஷணத்தில் தண்டகாரண்யத்தில் விராதனைக் கொன்றானே. அவன் ஏன் என்னை ரக்ஷிக்கவில்லை? ஸமுத்ரமத்தியில் இருக்கிற இந்த லங்கையை மற்றவர்கள் தகையமுடியாதுதான். ராமனுடைய பாணத்தின் கதியைக்கூடத் தடுக்குமோ? ராக்ஷஸனால் கொண்டுவரப்பட்ட என்னை என்ன காரணத்தாலே அவன் இன்னும் அடையவில்லை? அவன் நான் இங்கிருப்பதை ஒருவேளை அறியவில்லையோ? அறிந்தும் அவன் பொறுத்துக்கொண்டிருக்கிறானோ? 'ராவணன் ஸீதையைக் கொண்டுபோனான்' என்று ராமனிடம் சொல்லத் தகுந்த ஜடாயுவும் கொல்லப்பட்டானே. அவன் வயது சென்றவனாயிருந்தாலும் என்னை ரக்ஷிப்பதற்காக ராவணனுடன் சண்டை போட்டானே. பெரிய வேலை செய்தானே. நான் இங்கிருப்பதை ராமன் அறிந்தால் அப்போதே பாணங்களாலே உலகத்தில் ராக்ஷஸப்பூண்டில்லாமல் செய்வனே. அவன் லங்காபுரத்தை நாசஞ்செய்யவும் ஸமுத்ரத்தை வற்றும்படி செய்யவும் நீசனான ராவணனுடைய பெயரையும் கீர்த்தியையும் இருந்தவிடம் தெரியாமல் செய்யவும் ஸமர்த்தன். அப்போது நாதனை இழந்த இந்த நகரத்தில் இருக்கும் ராக்ஷஸிகள், நான் எப்படி அழுகிறேனோ அப்படியே அழுவார்கள். இதில் ஸந்தேஹமில்லை. ராமன் லக்ஷ்மணனுடன் ராக்ஷஸர்களுடைய லங்கையைத் தேடிவந்து இப்படியே செய்வன். அவர்களால் பார்க்கப்பட்ட சத்ரு ஒருமுஹூர்த்தமும் உயிரோடு இரான். இந்த இலங்கை சீக்கிரத்தில் ச்மசானம்போல் ஆகும். கழுகுகள் கூட்டங் கூட்டமாயிருக்கும். அதிலுண்டாகும் புகை வழிகளை மறைக்கும். நான் சீக்கிரத்தில் என் இஷ்டத்தை அடையப்போகிறேன். ராக்ஷஸிகளே! உங்களுடைய இந்தக் கெட்ட ஆசாரம் உங்களுக்குக் கெடுதி வரப்போவதைத் தெரிவிக்கிறது. லங்கை சீக்கிரத்தில் சோபையை இழக்கப்போகிறது. துர்நிமித்தங்கள் காணப்படுகின்றன. இப்போது ஒருவனாலும் தகையமுடியாத இந்த லங்கை இந்தப் பாபி கொல்லப்பட்டபோது விதவைபோல் சோபையை இழக்கும். இந்த ஊரில் ராக்ஷஸ கன்யகைகளின் அழுகைக்குரலைச் சீக்கிரம் கேட்

கப்போகிறேன். ராமனுடைய பாணங்களால் எரிக்கப்பட்ட இந்த நகரம், ராக்ஷஸர்கள் கொல்லப்பட்டு, சோபை போய் இருட்டாலே மூடப்படப்போகிறது. இந்த அதமனால் எந்தக் கெடு வைக்கப்பட்டதோ அது குறுகியிருக்கிறது. ராமனை விட்டுப் பிரிந்திருக்கிற நான் இப்போது என்ன செய்வேன்? யாராவது எனக்கு விஷம் கொடுத்தால் யமன் வீட்டைப் பார்ப்பேன். என்னைவிட்டுப் பிரிந்த துக்கத்தாலே ராமன் உயிரை விட்டுத் தேவலோகம் போயிருப்பன். அங்கே தேவர்களும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் பெரியருஷிகளும் அவனைப் பார்ப்பார்கள்; அவர்கள் பாக்யம் பண்ணினவர்கள். உயர்ந்த ஸ்வபாவமுள்ள ராமனுக்குத் தர்மத்திலேயே ஆசை. அவனுக்குக் காமம் என்பது இல்லை. அவனுக்குப் பாரியையான என்னாலே என்ன பிரயோஜனம்? உலகத்தில் ஒருவனைப் பார்த்துக்கொண்டிருக்கும்போது ப்ரீதியும் அவனிடத்தில் நன்றாயிருக்கவேண்டுமென்கிற எண்ணமும் இருக்கின்றன. பார்க்காவிட்டால் போய்விடுகின்றன. நன்றிகெட்டவர்கள் உண்டான ப்ரீதியை மறப்பர்கள். ராமன் அப்படியன்றே. என்னிடத்தில் நல்ல குணங்கள் இல்லையோ? அல்லது என் பாக்யம் குறைந்துவிட்டதோ? அதனால்தானோ ராமனைவிட்டுப் பிரிந்து துக்கப்படுகிறேன்? அவனைவிட்டுப் பிரிந்திருக்கிற எனக்கு மரணம் வருவதே சிலாக்யமானது. ஒருவேளை ராமனும் லக்ஷ்மணனும் ஆயுதங்களை எறிந்துவிட்டு, காயையும் கிழங்கையும் தின்றுகொண்டு காட்டில் திரிகிறார்களா? அல்லது துராத்மாவான ராவணனாலே கபடமாய்க் கொல்லப்பட்டார்களோ? இப்படிக் காலம் விபரீதமாய் இருக்கையில் நான் எவ்விதத்திலும் மரணம் அடையவே இச்சிக்கிறேன். என் துக்கம் இப்படி இருக்க, எனக்கு மிருத்யு வரவில்லையே. எவர்களுக்குப் பிரியமும் அப்ரியமும் இல்லையோ, அவர்கள் மஹாத்மாக்கள்; தந்யர்கள்; பாபமற்றவர்கள். பிரியமானவைகளிலிருந்து ஸுகமுண்டாகிறது. பிரியமில்லாதவைகளிலிருந்து அதிக பயமுண்டாகிறது. எவர்கள் இவைகளாலே விடப்பட்டிருக்கிறார்களோ, அவர்களுக்கு நமஸ்காரம்.'' என்று இப்படிப் புலம்பினாள். (ஸ-26.)

(133) இதைக் கேட்ட ராக்ஷஸிகளில் சிலர் ஸீதையின் தீர்மானத்தை ராவணனுக்குத் தெரிவிக்கப் போனார்கள். அங்

இருந்தவர்கள் மறுபடியும் ஸீதையை அதட்டினார்கள். அப்போது படுத்துக்கொண்டிருந்த வயதான த்ரிஜடை என்கிற ராக்ஷஸி மற்றவர்களைப் பார்த்து, தான் கண்ட ஸ்வப்நத்தைச் சொன்னாள்—“ராக்ஷஸிகளே! உங்களையே தின்னுங்கள். ஸீதையைப் பக்ஷிக்கவேண்டாம். ராக்ஷஸர்களின் நாசத்தையும் இவள் பர்த்தாவின் மங்களத்தையும் காட்டும் கெட்ட ஸ்வப்நத்தைக் கண்டேன். யானையின் தந்தத்தால் செய்யப்பட்டு ஆயிரம் ஹம்ஸங்களால் தூக்கப்பட்டு ஆகாசத்தில் போகிற பல்லக்கில் ராமன் ஏறி, வெள்ளையாடை உடுத்துக்கொண்டு, லக்ஷ்மணனுடன் இங்கே வந்திருக்கிறான். ஸீதையும் வெள்ளை வஸ்திரத்தை உடுத்துக்கொண்டு, ஸமுத்ரத்தினால் சூழப்பட்ட ஒரு வெள்ளிமலையில் ஸூரியனுடன் அவன்ப்ரபை சேர்ந்திருப்பதுபோல் ராமனுடன் சேர்ந்திருந்தாள். ராமன் மலைபோல் உயர்ந்த நாலு தந்தங்களையுடைய யானையின்மேல் ஏறிக்கொண்டு லக்ஷ்மணனுடன்கூட ஸஞ்சாரம் செய்தான். அவ்விருவர்களும் ஸீதையிடம் வந்தார்கள். அந்த மலைமேல் இருந்ததும் ராமன் ஏறியிருந்ததுமான யானையின் கழுத்தில் ஸீதை ஏறியிருந்தாள். பிறகு, பர்த்தாவினுடைய மடியிலிருந்து மேலேபோய் ஸூரியனையும் சந்திரனையும் கையாலே தொட்டாள். இப்படி அவர்களுடனும் ஸீதையுடனும் சேர்ந்திருந்த யானை லங்கைக்குமேலே நின்றது. எட்டு வெள்ளைக் காளைகள் பூட்டின ரதத்துடன் ராமன் ஸீதையுடன் இங்கே வந்தான். ஸூரியனைப்போன்ற புஷ்பக விமானத்தில் ராமன், லக்ஷ்மணனுடனும் ஸீதையுடனும் ஏறி வடக்குத் திக்கைநோக்கிச் சென்றான். (இது ராமனையும் ஸீதையையும்பற்றி ஸ்வப்நம்.) (இனி ராவணனைப்பற்றிய ஸ்வப்நம்) ராவணன் எண்ணெய்தேய்த்துக்கொண்டு ரக்தவர்ணமுள்ளவஸ்திரத்தைக் கட்டிக்கொண்டு மத்யத்தைக் குடித்து மயக்கமடைந்தவனாய், அரளிப்பூமாலையை அணிந்து பூமியில் விழுந்தான். ரக்தவர்ணமுள்ள சந்தனத்தைப் பூசிக்கொண்டு அதே வர்ணமுள்ள மாலையைத் தரித்துக்கொண்டு, எண்ணெயைக் குடித்துக்கொண்டு சிரித்துக் கூத்தாடி இந்திரியங்களும் மனதும்கலங்கி கழுதைபூட்டின ரதத்துடன் தெற்குத் திக்குக்குப்போனான். மறுபடியும் கழுதையிலிருந்து பூமியில் தலைகீழாக அவன் விழுவதையும் பார்த்தேன். உடனே, எழுந்திருந்து வஸ்திரமில்லாமல் பயத்தால் பிடிக்கப்

பட்டு மதத்தால் கலங்கினவனைப் பித்தேறினவன்போல் கெட்ட வார்த்தைகளைப் பிதற்றி, கெட்ட வாஸனையுள்ள கோரமான பொறுக்கமுடியாத நரகத்துக்கு ஸமமான மலச்சேற்றில் பிரவேசித்து, அதில் முழுகிவிட்டான். சிவந்த ஆடையுடுத்தின காளி, ராவணன் கழுத்தைக்கட்டித் தெற்கே இழுத்துக்கொண்டுபோனாள். இப்படியே அவன் தம்பி கும்பகர்ணனும், அவன் எல்லாப் பிள்ளைகளும் எண்ணெய் தேய்த்துக்கொண்டிருப்பதைப் பார்த்தேன். பன்றியின்மேல் ராவணனும், முதலையின்மேல் இந்த்ரஜித்தும், ஒட்டகையின்மேல் கும்பகர்ணனும் யமன் திக்குக்குப் போனார்கள். விபீஷணனோ வெண்குடையின்கீழ் வெள்ளை மாலையையும் வெள்ளை வஸ்திரத்தையும் உடுத்துக்கொண்டு வெள்ளைச் சந்தனத்தைப் பூசிக்கொண்டு, சங்கின் கோஷத்தையும் துந்துபியின் கோஷத்தையும் கேட்டுக்கொண்டு ந்ருத்தத்தையும் கானத்தையும் பார்த்துக்கொண்டு, மலைபோன்ற நாலு தந்தமுள்ள யானையின்மேல் நாலு மந்திரிகளுடன் இருக்கக் கண்டேன். ராக்ஷஸர்களின் கூட்டம் ரக்தமான வஸ்திரத்தை உடுத்துக்கொண்டும் ரக்தமான மாலையைத் தரித்துக்கொண்டும் மத்யத்தைக் குடித்துக்கொண்டும் இருக்கக் கண்டேன். இப்போது அழகான குதிரைகளையும் யானைகளையும் ரதங்களையுமுடைய அழகான இந்த லங்கை, கோபுரங்களும் வெளிவாசல்களுமுடைந்து ஸமுத்ரத்தில் விழுந்தது. ராக்ஷஸிகள் எண்ணெயைக் குடித்து, கூத்தாடிச் சிரித்துக்கொண்டு பஸ்மமான லங்கையில் புகுந்தார்கள். கும்பகர்ணன் முதலான ராக்ஷஸச்ரேஷ்டர்கள் ரக்தவஸ்திரத்தை உடுத்துக்கொண்டு கோமயம் நிறைந்த மடுவில் முழுகினார்கள். நான் கண்ட ஸ்வப்நத்தில் இருந்து கெடுதி வருமென்று தெரிகிறபடியால் இதைவிட்டுப் போங்கள். போகாவிட்டால் நாசம் அடைவீர்கள். ராமன் ஸீதையை அடைந்து, மிகுந்த கோபத்தால், ராக்ஷஸத் தலைவர்களுடன் உங்களைக் கொல்லுவன். ஸீதையை நீங்கள் படுத்தினபாட்டை அவன் பொறுக்கமாட்டான்" என்று சொன்னாள். (ஸ-27.)

(134) பிறகு த்ரிஜடை ராக்ஷஸிகளைக் கூட்டிக்கொண்டு ஸீதையினிடம் சரணாகதி பண்ணினாள்—"க்ரூரமான வாக்யங்களைச் சொன்னது போதும், நல்ல வாக்யத்தைச் சொல்லுங்கள். ஸீதையை நாம் வேண்டுவோம், இதுதான் எனக்குப் பிடிக்

திருக்கிறது. துக்கப்படுகிற எந்த ஸீதையின் விஷயத்தில் இந்த ஸ்வப்நத்தைக் கண்டேனே அவள் ஸகல துக்கங்களாலும் விடப்பட்டு மிகவும் உயர்ந்த பிரியத்தைத அடையப்போகிறாள். அவளை நீங்கள் அதட்டியிருந்தாலும், அவளை வேண்டுங்கள். அவள் நம்மை ரக்ஷிப்பளோ என்று ஸம்சயப்படவேண்டாம். ராக்ஷஸர்களுக்கு ராமனிடமிருந்து கோரமான பயம் வந்திருக்கிறது. அவள் உங்களுடைய சரணாகதியினால் ப்ரஸாதத்தை அடைந்து, உங்களைப் பெரிய பயத்திலிருந்து காப்பாற்றுவள். இந்த ஸாமர்த்தியம் அவளுக்கு உண்டு. அவள் உடம்பைப் பாருங்கள். ஏதாவது தோஷம் அதிலிருக்கிறதா? இதனாலும் அவள் க்ஷேமத்தை அடைவள் என்று அறியவேண்டாமோ? அவளுடைய இடதுகண்ணும் இடதுதோளும் இடதுதுடையும் துடிக்கின்றன. இதன்பலனாய் ராமனுடைய ஜயத்தையும் ராவணனுடைய அபஜயத்தையும் கேட்கப்போகிறாள். மரத்தின் கிளையிலிருக்கிற பக்ஷியும் ஸந்தோஷப்பட்டு, அடிக்கடி மதுரமாய்க்கூவி, நல்ல பந்துக்களின் வரவைச் சொல்லி, அடிக்கடி, க்ஷேமத்தைத் தெரிவிப்பதுபோல் இருக்கிறது" என்று சரணாகதி பண்ணினாள்.* (ஸ-27.) ஸீதையும் ஹ்வயம்பராணம்ஷிவ:

(1) * இந்த சுலோகத்திற்கு வேறுவிதமாயும் அர்த்தம் பண்ணலாம், பக்ஷி—நல்ல இறகுகளையுடைய கருடன். அவன் சிறகுகளை விரித்துக்கொண்டு மரத்தைப் பிரதக்ஷிணம் பண்ணிக்கொண்டு, மரத்தின் பழங்களைச் சாப்பிட்டு ஸந்தோஷப்பட்டு, "துக்கப்படாதே! உன் பர்த்தா சீக்கிரம் வருவான்; இது துக்கப்படும் காலம் அன்று." என்று நல்ல வார்த்தையை அடிக்கடி சொல்லிக்கொண்டு, உன் பிரியனை பர்த்தா வருவது நிச்சயமானபோது என் அலங்காரங்களைச் செய்துகொள்ளவில்லை என்று ஸீதையை ஏவுகிறது.

(2) இந்த ச்லோகம் ஆசாரியனுக்கு இருக்கவேண்டிய லக்ஷணங்களைக் காட்டுகிறது. பக்ஷி என்பதற்கு பக்ஷங்களையுடையது என்பது பொருள். ஒரு பக்ஷிக்கு நினைத்த இடம் போக சிறகு உதவுகிறது. ஆசாரியனும் விஷயங்களைத் தெரிந்துகொண்டு சிஷ்யனுக்கு அவைகளை உபதேசிக்கிறான். இப்படி உபதேசம் பண்ணுவதற்கு ஸாதநமான ஞானமும் அநுஷ்டானமும் அவனுக்கு வேண்டியவைகளாகையால், அவனைப் பக்ஷி என்கிற சொல் காட்டுகிறது. சாகை என்பது வேதத்தின் சாகை. ஆசாரியன் படித்த வேதத்தை மறக்காமல் அதை எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கவேண்டும். இந்த லக்ஷணத்தை 'சாகாநிலய:' என்கிற சொல் காட்டுகிறது. 'ப்ரஹ்ருஷ்ட:' என்பதினால், அவன் எப்போதும் ஸந்தோஷமுள்ளவனாக இருக்கவேண்டும்

"உங்களுக்கு நான் ரக்ஷிகையாக இருப்பேன்" என்று சரணாகதியை ஒப்புக்கொண்டு அவர்களை ரக்ஷிப்பதாக அவர்களுக்குத் தைரியத்தைச் சொன்னாள்.*

(135) மறுபடியும் ராவணன் சொன்னதையும் ராக்ஷஸிகளின் அதட்டுதலையும் நினைத்து, காட்டின் நடுவில் ஜனமில்லாத இடத்தில் விடப்பட்ட சிறு கன்யகையைப்போல் ஸீதை வருமாறு புலம்பினாள்—"துஷ்ட ராக்ஷஸனான ராவணன் என்னைக் கொல்லப்போகிறான். அவ்விதமான மரணத்தை அடையாமல் நானே என் பிராணனை விடுவதில் தோஷமில்லை. அவனுக்கு உட்பட்டிருப்பதும் முடியாது. அவனிடத்தில் என் மனதைச் செலுத்தமுடியாது. அது ராமனுடைய ஸொத்து. அதை வேறொருவனுக்கு நான் எப்படிக் கொடுக்கலாம்? கடைசி ஜாதியானுக்கு மந்திரங்களை ப்ராம்மணன் உபதேசிக்கலாமோ?

என்பதும், 'உத்தமஸாந்த்வவாதீ' என்பதால், உத்தமனான புருஷோத்தமன்விஷயமான நல்லவார்த்தைகளைச் சிஷ்யனுக்குச் சொல்லி, ஆசாரியன் சிஷ்யனுக்கு ஆறுதலைச் சொல்லுவதும், புந: புந: என்பதாலே சிஷ்யன் சொன்னதைக் கேட்கவில்லையென்று அலுப்பு வராமல் ஆசாரியன் அதை அடிக்கடி சொல்லவேண்டும் என்பதும் காட்டப்படுகின்றன. இந்த விஷயத்தில் பகவானைக்காட்டிலும் ஆசாரியனுக்கு ஏற்றமுண்டு. பகவான் கிருஷ்ணனாக அவதாரம் செய்து அர்ஜுனனுக்குக் கீதையை உபதேசித்தான். பிறகு அர்ஜுனன் அதை மறந்ததாய்ச்சொல்லி அதை மறுபடியும் சொல்லும்படி வேண்டினான். பகவான் அவனைக் கோபித்துக்கொண்டு நிந்தித்தான். ஆசாரியன் அப்படியன்று. எப்படியாவது சிஷ்யனுக்கு க்ஷேமமுண்டாகவேண்டுமென்று மிகுந்த பொறுமையுடன் உபதேசிக்கிறான். [illegible] என்பதற்கு நல்லதாய் ஸம்ப்ரதாயம் நடுவில் விட்டுப்போகாமல் தனக்குப் பூர்வாசாரியர்களிடமிருந்து வந்தது என்பது பொருள். இதனால் ஆசாரியன் பூர்வாசாரியர்களிடமிருந்து வந்ததையே சிஷ்யனுக்குச் சொல்லவேண்டியது; தன் புத்தியாலே ஒன்றைக் கல்பித்துச் சொல்லக்கூடாது என்பது விளங்குகிறது. [illegible] என்பதால் சொன்ன அர்த்தத்தின்படி சிஷ்யன் நடப்பதற்காக அடிக்கடி அவனை ஏவவேண்டும் என்கிற அர்த்தமும் கிடைக்கிறது. இப்படி ஆசாரியன் லக்ஷணங்கள் சொல்லப்படுகின்றன.

* இந்த விஷயம் இந்த ஸர்க்கத்தில் சொல்லப்படவில்லை. ஆனாலும் நடந்ததை வானரங்களுக்கு ஹநுமான் சொல்லுகையில் இதையும் சொல்லியிருக்கிறான். (ஸு-58-89) சுலோகத்தைப் பார்க்க.

ஏ ராமா! ஏ லக்ஷ்மணு! ஏ ஸுமித்ரே! ஏ ராம மாதாவே! என் தாயே! அல்ப புண்யம் பண்ணின நான் ஸமுத்ரத்தில் முழுகும் கப்பலைப்போல் இப்போது இறக்கப்போகிறேன். கால மானது மான்ரூபத்தை எடுத்துக்கொண்டு என்னை வஞ்சித்தது. அதைப்பார்த்து அறிவில்லாத நான் ராமனையும் அவன் தம்பி லக்ஷ்மணனையும் அதன்பின்னாலே அனுப்பினேனே. ஹா! ராமா! ஸங்கல்பித்ததைச் செய்து முடிக்கிறவனே! நீண்ட புஜங்களை உடையவனே! பூர்ணசந்திரனைப்போன்ற முகமுடையவனே! எல்லா ஜீவன்களுக்கும் ஹிதத்தைச் செய்யும் ஸ்வபாவமுள்ள வனே! ராக்ஷஸர்கள் என்னைக் கொல்லுவதை நீ அறியவில்லையே. உன்னைத்தவிர வேறு தேவதை எனக்கு இல்லை. ராவணனின் கொடுமையான சொல்லையும் ராக்ஷஸிகளின் அதட்டுதல்களையும் உன்னுடைய மதுரமான வார்த்தையைக் கேட்பேன் என்கிற ஆசையாலே பொறுத்துக்கொண்டிருந்தேன்; பூமியில் படுத் திருந்தேன்; நான் என்னை ரக்ஷிக்கச் சக்தியுள்ளவளாயிருந்தாலும் அதை நீயே செய்யவேண்டும் என்று இருந்தேன்; பதிவ்ரதை யாகவுமிருக்கிறேன். இவைகள் எல்லாம் நன்றிகெட்டவனுக்குச் செய்த உபகாரம்போல் நிஷ்பலமாய்விட்டனவே. நீ உன்னு டைய பிதாவின் கட்டளையினால் காட்டுக்குவந்து தாபஸ வ்ரதத் தை அநுஷ்டித்து, அதிலிருந்து திரும்பிப்போய், விசாலமான கண்களையுடைய ஸ்திரீகளுடன் சேர்ந்து ஸுகப்படப்போகிறாய். நான் என் உயிரை விஷத்தாலாவது, கூர்மையான ஆயுதத்தா லாவது விடவேண்டும். ராக்ஷஸர்கள் வீட்டில் விஷத்தைக் கொடுக்கிறவன் இல்லை. ஆயுதத்தால் கொல்லுகிறவனுமில்லை.'' என்று இப்படிப் புலம்பி, ராமனையே நினைத்துக்கொண்டு, உடம் பில் நடுக்கத்தையும் முகத்தில் வாட்டத்தையுமுடையவளாய்ப் புஷ்பங்கள்நிறைந்த ஒரு மரத்தடிக்குப்போனாள். தலைப்பின்னலை மரக்கிளையில் மாட்டித் தூக்குப் போட்டுக்கொண்டு யமனிடம் போவேன் என்று சொல்லி, மரத்தின் கிளையைப் பிடித்துக் கொண்டு நின்றாள். (ஸ-28.) அப்போது நல்லநிமித்தங்கள் காணப் பட்டன. அவைகளாவன :—அவளுடைய இடதுகண்ணும், இடது புஜமும், இடதுதொடையும் துடித்தன. வஸ்திரம் கொஞ்சம் நழுவிற்று. இவைபோன்ற சகுனங்களைக்கண்டு துக்கத்தைவிட்டு ஸந்தோஷம்அடைந்து விளங்கினாள். (ஸ-29.)

(136) ஹநுமான், அங்கு நடந்தவைகளையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்து, இனி எது செய்வது என்று தனக்குள்ளே விசாரம் பண்ணினான்—"எந்த ஸீதையை வானரங்கள் எல்லாத் திக்குக்களிலும் தேடுகின்றனவோ, அவள் என்னால் பார்க்கப் பட்டாள். சத்ருவின் பலத்தையும், மஹிமையையும், ராக்ஷஸர்களின் பலத்தையும் நான் மறைந்திருந்து தெரிந்துகொண்டேன். பதியைப் பார்க்கவேண்டுமென்று ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிற ஸீதைக்கு ஆறுதலைச் செய்யவேண்டியது. அதை நான் செய்வேன். இதைச் செய்யாமல்போனால் நான் வந்தது தோஷமுள்ளதாக ஆகும். நான் இதைச் செய்யாமல்போனால் தன்னை ரக்ஷிக்கிற ஒருவன் இருக்கிறான் என்று அறியாமல் இவள் பிராணனை விட்டுவிடுவள். இவளைப் பார்க்கவேண்டுமென்று ஆசைப் பட்டுக்கொண்டிருக்கிற ராமனுக்கும் நான் ஆறுதலைச் செய்ய வேண்டும். இந்த ராக்ஷஸர்களின் முன்னால் நான் இவளுடன் பேசுவதும் தகுந்ததன்று. இந்த ஸங்கடத்திலிருக்கிறேனே. நான் என்ன செய்வேன். இவளுடன் பேசாமல் போனால், "ஸீதை என்ன சொன்னாள்" என்று ராமன் கேட்டால், நான் என்ன பதில் சொல்லுவேன்? இவள் சொல்லும் வார்த்தையைக் கொண்டுபோகாமல் சீக்கிரம் போனால், ராமன் கோபித்துக் கொண்டு, தன் கண்களால் என்னைக் கொளுத்திவிடுவானே! இவளுக்கு ஆறுதலைச் சொல்லாமல் நான் திரும்பிப்போய் இவளும் பிராணனை விட்டுவிட்டால், என் ஸ்வாமியான ஸுக்ரீவன் ராமனுக்காக ப்ரயத்னம்பண்ணி இங்கே சேனைகளுடன் வந்தாலும் அது வியர்த்தமாகும். ராக்ஷஸிகள் இல்லாத ஸமயம் நேர்ந்தால், கொஞ்சம் கொஞ்சமாக இவளுக்கு ஆறுதலைச் செய்வேன். வானரனான நான் சின்ன ரூபத்துடன் மனிதன் வார்த்தையால் பேசலாமா? அல்லது என் ரூபத்துடன் ஸம்ஸ்கிருத பாஷையில் பேசலாமா? பின்னே சொன்னதைச் செய்தால் "வானரம் இப்படிப் பேசமுடியுமா? ஆகையால் இவன் ராவணனோ?" என்று ஸீதை பயப்படுவள். ஆகையால் மனித வார்த்தையாகவே பேசவேண்டும். வேறுவிதமாய் இவளுக்கு ஆறுதலைச் செய்யமுடியாது. ஆகையால் ராமன்விஷயமான வார்த்தைகளைச் சொல்லுவேன்" என்று தீர்மானம் செய்தான். (ஸ-30.)

(137) இப்படித் தீர்மானம் செய்து, கேட்கும்போதே இனிமையான வாக்யத்தாலே ராமன் சரித்ரத்தைச் சொல்லி, ஸீதையைவிட்டுப் பிரிந்து அவளைத் தேடிக்கொண்டு கிஷ்கிந்தைக்கு வந்ததையும், ஸுக்கிரீவனுடன் ஸக்கியம்பண்ணி அவன் விரோதியான வாலியைக் கொன்று, ஸுக்கிரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்ததையும், ஸுக்கிரீவன் கட்டளையின்படி வானரங்கள் எல்லாத் திக்குக்களிலும் அவளைத் தேடுவதையும், தான் ஸம்பாதியின் வார்த்தையைக்கேட்டு நூறுயோஜனை விஸ்தீர்ணமான ஸமுத்ரத்தைத் தாண்டி வந்ததையும் சொல்லி, "இவளுக்கு என்ன ரூபமும், என்ன வர்ணமும், என்ன காந்தியும் இருக்கின்றன" என்று ராமனிடம் நான் கேட்டேனே, அவைகளெல்லாம் இவளிடத்தில் இருக்கின்றன. இவளிடம் நான் வந்துசேர்ந்தேன் என்று சொல்லிமுடித்தான். (ஸ-31.) இதைக் கேட்டு ஸீதை ஆச்சரியப்பட்டு தலையைத் தூக்கிக்கொண்டு நாலு பக்கங்களிலும் பார்த்து, சிம்சுபாமரத்தின்மேலே இருக்கும் ஓர் குரங்கைக் கண்டாள். கண்டு, இதற்குப் பயங்கரமான ரூபமிருக்கிறதே. இதைக் கண்ணால் பார்க்கமுடியவில்லையே. இது மாயையோ என்று புத்திமோஹத்தை அடைந்தாள். மோஹம் அடைந்து அழுது புலம்பினாள். மறுபடியும் நினைத்துப்பார்த்து, "இது ஸ்வப்னமோ, ஸ்வப்னத்தில் குரங்கைப் பார்ப்பதை சாஸ்திரம் நல்லதாகச் சொல்லவில்லையே. ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் என் தகப்பனான ஜனகனுக்கும் க்ஷேமமுண்டாகட்டும். இது ஸ்வப்நம் அன்று. துக்கத்தினால் தூக்கமில்லாதிருக்கிற எனக்கு எப்படி ஸ்வப்நம் வரும்? ராமன் ராமன் என்று எப்போதும் நினைத்துக்கொண்டு அவனையே எப்போதும் மனதாலே பார்த்துக்கொண்டிருப்பதாலே, அவன்விஷயமான வார்த்தையை ஒருவன் சொல்லுவதாக நான் எண்ணுகிறேனே? இந்து என் ஆசையினால் கல்பிக்கப்பட்டதோ? கல்பிக்கப்பட்டதானால், அதற்கு ரூபமிராதே. இந்த வானரமோ நல்ல ரூபத்துடன் தோன்றுகிறதே! எப்படியானாலும் இதன் வார்த்தை எனக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகிறது. இது சொன்னபடியே ஆகவேண்டும். பிரஹஸ்பதிக்கும் இந்த்ரனுக்கும் பிரம்மாவுக்கும் அக்னிக்கும் நமஸ்காரம் செய்கிறேன்" என்று ப்ரார்த்தித்தாள். (ஸ-32.)

(138) ஹநுமான் மரத்திலிருந்து கீழே இறங்கி ஸீதையின் கிட்டப்போய், நமஸ்காரம் செய்து, தலையில் கைகளைக் கூப்பிக்கொண்டு இனிய வார்த்தைகளால், "மரத்தின் கிளையைப் பிடித்துக்கொண்டு இருக்கிற நீ யார்? உன் கண்களிலிருந்து துக்கத்தால் ஏன் கண்ணீர் பெருகுகிறது? தேவர்கள் அஸுரர்கள் நாகர்கள் கந்தர்வர்கள் யக்ஷர்கள் கிந்நரர்கள் ஆகிய இவர்களுக்குள் நீ யார்? வஸுக்களிலும் ருத்திரர்களிலும் மருத்துக்களிலும் நீ யார்? நீ அவர்களுக்குள் சேர்ந்த தேவதையாகத் தோன்றுகிறது. சந்திரனைவிட்டுக் கீழே விழுந்திருக்கிற ரோஹிணியா? கோபத்தாலோ அல்லது அறியாமையாலோ பர்த்தாவான வஸிஷ்டனுக்குக் கோபத்தை உண்டுபண்ணி, அவனைவிட்டுப் பிரிந்த அருந்ததியோ? ஆனால் அழுவதாலும் பெருமூச்சு விடுவதாலும் பூமியில் நிற்பதாலும் நீ தேவதையன்று. உன்னிடத்தில் என்ன லக்ஷணங்கள் இருக்கின்றனவோ, அவைகளைப் பார்க்கும்போது நீ ராஜமஹிஷியாக இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. ஜனஸ்தானத்திலிருந்து ராவணனால் கொண்டுவரப்பட்ட ஸீதையாக நீ இருந்தால், எனக்கு அதைச் சொல். உன் தைந்யமும், மனிதர்களுக்கு இருக்கமுடியாத ரூபமும், தபஸோடுகூடிய வேஷமும் உன்னை ராமமஹிஷி என்று காட்டுகின்றன. இது நிச்சயம்" என்று கேட்டான். ராமனைப்பற்றின வார்த்தையைக் கேட்டு ஸந்தோஷப்பட்டு, மரத்தடியிலிருந்து ஹநுமானைப் பார்த்து, ஸீதை பதில் சொன்னாள்—"நான் ஜனகன் பெண்; தசரதன் மருமகள்; ராமனுடைய பத்நி; ஸீதையென்று எனக்குப் பெயர்; ராமனுடைய மாளிகையில் எல்லா ஸம்பத்துமுள்ளவளாய் பன்னிரண்டுவருஷகாலம் மனிதர்களுக்கு உள்ள போகத்தை அநுபவித்துக்கொண்டிருந்தேன்; பதின்மூன்றாவது வர்ஷத்தில் ராமனுக்குப் பட்டாபிஷேகம் பண்ண ஆரம்பித்தபோது, தசரதன் மஹிஷியான கைகேயி, 'ராமனுக்குப் பட்டாபிஷேகமானால் நான் போஜனம் பண்ணுகிறதில்லை. உயிரை விடுவேன்' என்று சொல்லி, அவரை நிர்ப்பந்தம் பண்ணினாள். அவளுக்குத் தான் வரம் கொடுத்திருந்ததை நினைத்து ராமனைக் காட்டுக்கு அனுப்ப இஷ்டமில்லாமல் ராஜா மூர்ச்சையை அடைந்தார். அவருக்கு வருத்தமுண்டாகாமலிருப்பதற்காக ராமன் தாபஸவேஷங்கொண்டு காட்டுக்குப் புறப்பட்டான்.

என்னை அவன் தன் தாயாரிடம் இருக்கும்படி சொன்னதைக் கேளாமல் அவனுக்குமுன்னாலே நான் புறப்பட்டேன். அவனை விட்டுப் பிரிந்து ஸ்வர்க்கத்திலிருப்பதும் எனக்குப் பிடிக்கவில்லை. ஸுமித்ரையின் பிள்ளையான அவன் தம்பி லக்ஷ்மணனும் தாபஸ வேஷத்தைத் தரித்து அவன்பின்னாலே வந்தான். முன்னால் பார்க்கப்படாத தண்டகாரண்யத்தில் புகுந்து அதில் வஸித்துக் கொண்டிருந்தோம். அப்போது கெட்டபுத்தியுள்ள ராவணனாலே நான் இங்கே கொண்டுவரப்பட்டேன். எனக்கு அவன் இரண்டுமாதம் கெடு கொடுத்திருக்கிறான். அதற்குமேல் பிராணனை விடுவேன்" என்று தன்னை இன்னாள் என்று தெரிவித்தாள். (ஸ-33.)

(139) ஹநுமான் ஸீதையின் வார்த்தையைக் கேட்டு அவள்ஆறுதலுக்காக "நான் ராமனுடைய தூதன்; அவன் கட்டளையின்படி இங்கே வந்திருக்கிறேன்; அவன் க்ஷேமமாய் இருக்கிறான்; நீ க்ஷேமமாய் இருக்கிறாயா என்று விசாரிக்கிறான். உன் பர்த்தாவுக்குப் பிரியனான வேலைக்காரனான லக்ஷ்மணன் உன்னைத் தலையால் வணங்குகிறான்" என்று சொன்னான். இருவர்களுடைய க்ஷேமத்தையும் கேட்டு ஸீதை ஸந்தோஷமடைந்து, ஹநுமானைப் பார்த்து,

ஏதி ஜீவந்தமாநந்தோ நரம் வர்ஷசதாதபி ॥ (ஸ-34-1)

"ஒருவன் உயிரோடிருந்தால், நூறு வர்ஷம் கழிந்தாலும் கடைசியில் அவனுக்கு ஆநந்தமுண்டாகும்" என்று உலகத்தார் சொல்லும் வாக்யம் உண்மை என்றே எனக்குத் தோன்றுகிறது என்று சொன்னாள். அவளுக்கும் ஹநுமானுக்கும் நம்பிக்கையோடுகூடின ஸம்வாதம் நடந்தது. ஹநுமான், அவள் கிட்டப் போக, ஸீதை "இவன் ராவணனோ" என்று ஸந்தேஹப்பட்டு "நான் என்வரலாற்றை இவன் முன்னாலே சொன்னது தகுந்ததன்று. அந்த ராவணன்தான் இந்த ரூபங்கொண்டு இங்கு வந்திருக்கிறான்" என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டு, அசோக மரத்தின் கிளையை விட்டு விட்டு, அதனடியில் பூமியில் உட்கார்ந்தாள். அவள் பயப்பட்டிருப்பதைக்கண்டு ஹநுமான் நமஸ்காரம் பண்ணினான். ஆனாலும், ஸீதை அவனைப்பார்க்கவில்லை. கொஞ்ச நேரம் கழித்து அவன் கையைக்கூப்பிக்கொண்டு நிற்பதைப்பார்த்து அடியில்வருமாறுசொன்னாள்—"ராவணா! நீ இயற்கையாய்

மாயாவி; இப்போது மாயையால் குரங்கு ரூபம் எடுத்து வ திருக்கிறயா? அப்படியிருந்தால் நீ எனக்கு மறுபடியும் ஸந்த பத்தை உண்டுபண்ணுகிறுய். இந்து அழகு அன்று. எந்த உன் ரூபத்தை மறைத்துக்கொண்டு பிக்ஷுரூபத்தை எடுத்து கொண்டு ஜநஸ்தாநத்துக்குவந்து என்னைலே பார்க்கப்பட்டாயே அவன்தான் நீ. இல்லை. இல்லை. நான் ஸந்தேஹப்பட்டபடி ராவணன் அன்று. ஏன் என்றால் உன்னைப் பார்த்ததினுல் என குப் பிரீதி உண்டாயிருக்கிறது. நீ ராமனுடைய தூதனுய் இங்கே வந்திருக்கிறுயானுல், உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். உன்னைக் கேட்கிறேன். ராமனின் கதை எனக்குப் பிரியமாயிருக்கிறது. ராமனுடைய குணங்களைச் சொல்லு. நதியின் வேகம் அதன்கரையை இடித்துத் தள்ளுவதுபோல் நீ என்மனதை அபஹரிக்கிறுய். ஒருவேளை வானரனை ராமன் தூதனுக அனுப்பினுன் என்பது ஸ்வப்நமோ? அப்படியானுலும் அது நல்ல ஸ்வப்நம். ஸ்வப்நத்திலாவது ராமனையும் லக்ஷ்மணனையும் பார்த்தால் துக்கம் போய்விடும். ஸ்வப்நமும் எனக்கு விரோதியாயிருக்கிறதே. ராமன் எப்படி வருகிறதில்லையோ அப்படியே நல்ல ஸ்வப்நமும் வருகிறதில்லையே. இல்லை. இது ஸ்வப்நம் அன்று. ஸ்வப்நத்தில் குரங்கைப்பார்த்தால் க்ஷேமம் உண்டாகாது. எனக்கோ க்ஷேமம் கிடைத்திருக்கிறது. ஒருவேளை நான் வானரத்தைப் பார்த்ததும் ராமன்கதையைக் கேட்டதும் பொய்யோ? சித்தப்ரமமோ? வாத பித்தங்களின் விகாரமோ? அல்லது பித்தத்தின் காரியமோ? இதுவும் ஸரியன்று. ஏன் என்றால் என்னையும் இந்த வாநரத்தையும் உள்ளபடி பார்க்கிறேன்" என்று இப்படிப் பலவிதமாய் விசாரம் செய்து, "ராக்ஷஸர்கள் வேண்டிய ரூபங்களை எடுத்துக்கொள்ளச் சக்தர்களாகையால் வந்தவன் ராவணன்தான்" என்று முடிவு செய்தாள். வேறொன்றும் பேசவில்லை. (ஸ - 34)

(140) ஹநுமான், ஸீதை மனதில் நினைத்துக்கொண்டிருப்பதை அறிந்து, செவிக்கினிய செஞ்சொற்களால் அவளுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணினுன்—"ராமன் ஸூரியனைப்போல் தேஜஸுடன் உள்ளவன்; சந்திரனைப்போல எல்லாருக்கும் பிரியமானவன்; குபேரனைப்போல எல்லா உலகங்களுக்கும் ராஜா; மிகுந்த கீர்த்தியையுடைய விஷ்ணுவைப்போல் பராக்கிரமம்

ளவன் ; பிருஹஸ்பதியைப்போல் உண்மை பேசுகிறவன் ; இனி
மையான வாக்கையுடையவன் ; மன்மதனே ரூபத்தை எடுத்துக்
கொண்டு வந்தானோ என்று எண்ணும்படி நல்ல ரூபமும் காந்தி
யும் அழகுமுள்ளவன்; அவனுக்குக் கோபமில்லை; கோபிக்கவேண்
டிய விஷயம்வந்தால், அப்போது கோபமுள்ளவனைப்போல் நடி
த்து, கோபத்தை வருவித்துக்கொண்டு தண்டிக்கிறவன் ; அவ
னுக்கு மேல்பட்டவனில்லை; அவன் *மஹாரதன் ; அவனுடைய
பராக்ரமத்தில் லோகம் கவலையற்று வஸிக்கிறது. மான்ரூபம்
கொண்டு ஆச்ரமத்திலிருந்து ராமனை எவன் இழுத்துக்கொண்டு
போகும்படி ஏற்பாடு செய்தானோ, ஒருவருமில்லாத ஆச்ரமத்தி
லிருந்து உன்னை எவன் கொண்டுவந்தானோ, அவன் அந்தக்
கர்மத்தின் பலனை அநுபவிப்பதைப் பார்க்கப்போகிறாய்.
எவன் சண்டையில் கோபத்துடன் விடப்பட்ட பாணங்களால்
சீக்கிரம் ராவணனைக் கொல்லப்போகிறானோ, அவனால் தூதனாக
நான் உன்னிடம் அனுப்பப்பட்டிருக்கிறேன். உன்னைப் பிரிந்து
துக்கப்பட்டுக்கொண்டிருக்கிற அவன் உன் க்ஷேமத்தை விசாரிக்
கிறான். ஸுமித்ரைபிள்ளை லக்ஷ்மணனும் உனக்கு நமஸ்காரம்
செய்து உன் க்ஷேமத்தை விசாரிக்கிறான். ராமனுடைய தோழ
னும் வானரச்ரேஷ்டர்களுக்கு ராஜாவுமான ஸுக்கிரீவன் உன்
க்ஷேமத்தை விசாரிக்கிறான். ராமனும் லக்ஷ்மணனும் ஸுக்கிரீ
வனும் உன்னை நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். ராக்ஷஸிகளின்
வசத்திலிருந்தும் நீ உயிரோடிருப்பது தெய்வத்தின் அநுக்ர
ஹத்தாலேதான். சீக்கிரத்தில் வானரஸேனைக்கு நடுவில் ராம
னையும் லக்ஷ்மணனையும் ஸுக்ரீவனையும் பார்க்கப்போகிறாய். நான்
ஸுக்கிரீவன் மந்திரி ; என் பெயர் ஹநுமான் ; பெரிய ஸமுத்
ரத்தைத் தாண்டி இந்த லங்கைக்குள் வந்திருக்கிறேன். கெட்ட
புத்தியுள்ள ராவணன்தலையில் காலைவைத்து, உன்னைப் பார்க்க
இங்கே வந்திருக்கிறேன். நீ என்னை எப்படி ஸந்தேஹப்படு
கிறாயோ, நான் அப்படியல்லன். ஸந்தேஹத்தைவிடு. என்
வார்த்தையை நம்பு" என்று சொன்னான். (ஸ-34.)

* எந்த வீரன் தன்னையும் தன் ரதத்தையும் குதிரைகளையும் ஸாரதி
யையும் சண்டையில் ரக்ஷித்துக்கொள்ளுகிறானோ, அவன் மஹாரதன்.

(141) ஹநுமானிடமிருந்து ராமனுடைய கதையைக் கேட்டு ஸீதை இனிய சொற்களால், "உனக்கு ராமனுடன் சேர்க்கை எப்படி உண்டாயிற்று? லக்ஷ்மணனை எப்படி அறிந்தாய்? வானரங்களுக்கும் மனிதர்களுக்கும் சேர்க்கை எப்படி நேர்ந்தது?" என்று கேட்டு, "ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் என்ன லக்ஷணங்கள் இருக்கின்றனவோ, அவைகளைச் சொல்லு; அதனால் உன்னிடம் எனக்கு நம்பிக்கை உண்டாகித் துக்கம் போய் விடும்" என்று வினவினாள். ஹநுமான், ராமனுடைய குணங்களையும் ஜ்ஞானத்தையும் திருமேனியின் லக்ஷணங்களையும் லக்ஷ்மணன் அவனுக்கு அநுரூபமாயிருப்பதையும் வர்ணித்து, "அவர்கள் இருவரும் உன்னைப் பார்க்கவேண்டுமென்கிற ஆசையாலே உன்னைத் தேடிக்கொண்டு எங்களிடம் வந்தார்கள். தமையனால் ராஜ்யத்தைவிட்டு துரத்தப்பட்டு அவனிடம் பயமுள்ளவனாய் ருச்யமூகமலையில் இருந்த ஸுக்ரீவனைக் கண்டார்கள். நாங்கள் அவனுக்கு வேலை செய்துகொண்டிருக்கிறோம். அவர்களைக் கண்டு ஸுக்ரீவன் பயந்து மலையின் உச்சிக்கு ஓடிப்போய் என்னை அவர்களிடம் அனுப்பினான். நான் அஞ்ஜலி செய்துகொண்டு அவர்களிடம் போனேன். அவர்கள் என்னிடமிருந்து விஷயங்களை நன்றாய் அறிந்து பிரீதி அடைந்தார்கள். அவர்களை என்முதுகில் ஏற்றிக்கொண்டு ஸுக்ரீவனிடம் அழைத்துக்கொண்டு போனேன். அவர்களும் ஸுக்ரீவனும் ஸல்லாபம் பண்ணி மிகுந்த ப்ரீதியை அடைந்தார்கள். ஸுக்ரீவன் தன் இருப்பை ராமனுக்குத் தெரிவித்தான். உன்னைவிட்டுப் பிரிந்து ராமன் துக்கப்படுவதை லக்ஷ்மணனும் ஸுக்ரீவனுக்குச் சொன்னான். உன்னை ராவணன் தூக்கிக்கொண்டுபோகும்போது, உன் ஆபரணங்களை வஸ்திரத்தில் முடிந்து நீ கீழே போட்டதை வானரங்கள் ராமனுக்குக் காட்டின. அவைகளைப் பார்த்து ராமன் மிகுந்த சோகத்தை அடைந்தான். நான் அவனைப் பலவிதமாய்த் தேற்றினேன். அவன் எங்கேபோனாலும் உன்னைப் பாராமையால் ஸந்தோஷத்தை அடைகிறதில்லை. ராவணனை மித்ரர்களுடனும் பந்துக்களுடனும் கொன்று ராமன் உன்னைச் சீக்கிரம் அடையப்போகிறான். ராமன் வாலியைக் கொல்லுவதாகவும், ஸுக்ரீவன் உன்னைத் தேட முயற்சி செய்வதாகவும் ப்ரதிஜ்ஞை பண்ணிக்கொண்டார்கள். ராமன் கிஷ்கிந்தைக்குப்

போய் வாலியைக் கொன்று ஸுக்கிரீவனுக்கு வானரராஜாவாகப் பட்டாபிஷேகம் பண்ணுவித்தான். தேவி! ராமனுக்கும் ஸுக்கிரீவனுக்கும் இப்படி ஸக்கியம் உண்டாயிற்று. ஸுக்ரீவன் கட்டளையினால் வானரங்கள் உன்னைப் பூமியெங்கும் தேடுகின்றன. வாலியின் பிள்ளை அங்கதனுடன் நானும் மற்ற வானரங்களும் தெற்குத் திக்குக்கு வந்தோம். உன்னைக் காணவில்லை. ஸுக்கிரீவன் வைத்த ஒருமாதக் கெடு முடிந்துவிட்டது. அவனிடம்போகப் பயப்பட்டு ப்ராயோபவேசம் பண்ண ஆரம்பித்தோம். அங்கதன், ஜடாயு ராமனுக்காக உயிரைவிட்டதையும், தானும் மற்றவர்களும் அவனுக்காக உயிரை விடப்போவதையும் சொல்லிப் புலம்புகையில், அப்போது குகையிலிருந்து வெளிப்பட்ட ஜடாயுவின் தமையனை ஸம்பாதி அதைக்கேட்டு, எங்களைத் தேற்றி, நீ இங்கிருப்பதைச் சொன்னான். அதைக்கேட்டு எல்லாரும் ஸமுத்ரக்கரைக்கு வந்தோம். எப்படி ஸமுத்ரத்தைத் தாண்டுகிறது என்று விசாரப்படுகையில், அவர்கள்பயத்தைத் தீர்த்து ஸமுத்ரத்தைத் தாண்டி இங்கே வந்தேன்" என்று சொல்லிமுடித்தான். இதைக்கேட்டு ஸீதை மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்தாள். (ஸ-35.)

(142) ஹநுமான் மறுபடியும், "உனக்கு நம்பிக்கை வருவதற்காக, ராமன் தன்னுடைய பெயரை அடையாளமாகவுள்ள மோதிரத்தைக் கொடுத்திருக்கிறான். அதைக் கொண்டுவந்திருக்கிறேன். இதைப் பார்" என்று வணக்கமாய்ச் சொன்னான். ஸீதை அதை வாங்கிப் பார்த்துக்கொண்டு, தன் பர்த்தாவே வந்ததுபோல் ஸந்தோஷம் அடைந்தாள். ஹநுமானைப் பார்த்து வெகுமானம்பண்ணி பின்வருமாறு சொன்னாள்:—"உன் பலத்தையும் புத்தியையும் பராக்ரமத்தையும் என்ன சொல்லுவேன்? நீ தனியாய் இந்த இராக்ஷஸர்களிடத்துக்கு ஸாஹஸமாய் வந்திருக்கிறாய். நீ நூறுயோஜனை விஸ்தீர்ணமுள்ள ஸமுத்ரத்தைக் குளப்படிபோல் தாண்டினாய். ராவணனிடமிருந்து உனக்குப் பயமுமில்லை. பரபரப்புமில்லை. ஆகையால் நீ ஸாதாரணமான வானரம் அன்று. நீ என்னுடன் பேசத்தகுந்தவன். ஏன் என்றால், ராமன் உன்னை என்னிடம் அனுப்பியிருக்கிறான். அவன் ஒருவனைப் பரீக்ஷைசெய்யாமல் அனுப்பான். என் விஷயத்தில் இதைக் கேட்கவேண்டுமோ? தெய்வத்தின் அநுக்ரஹத்

தாலே ராமன் லக்ஷ்மணனுடன் ஜீவித்திருக்கிறான். கோபத்தால் ஸமுத்ரம்சூழ்ந்த இந்தப் பூமியை ஏன் அவன் கொளுத்தவில்லை? அவனுக்கு ஸாமர்த்தியமில்லையா? தேவர்களையும் நிக்ரஹம் பண்ணச் சக்தி அவனுக்கிருந்தும் என்துக்கத்துக்கு முடிவில்லையே? அவன் என்னைவிட்டுப் பிரிந்து தபிக்கிறானா? உடம்பு இளைத்திருக்கிறானா? செய்யவேண்டிய மேல்காரியத்தைச் செய்துகொண்டிருக்கிறானா? என்னிடத்தில் இருக்கும் ஸ்நேஹம் போகாமல் இருக்கிறதா? என்னை இந்தத் துக்கத்திலிருந்து விடுவிப்பானா? ஸுகத்துக்குத் தகுந்தவனும் துக்கத்துக்குத் தகாதவனுமான ராமன் மிகுந்த துக்கத்தை அடைந்து, மனம் வாடாமல் இருக்கிறானா? கௌஸல்யையும் ஸுமித்ரையும் பரதனும் க்ஷேமமாயிருக்கிறார்கள் என்னும் ஸமாசாரம் கேட்கப்படுகிறதா? எனக்காக பரதன் ஸேனையை அனுப்புவனா? வானர ராஜாவான ஸுக்கிரீவனும் வானரங்களுடன் இங்கு வருவனா? லக்ஷ்மணன் பாணங்களால் ராக்ஷஸர்களைக் கொல்லுவனா? க்ரூரமான ஒரு அஸ்திரத்தினால் ராவணன் சுற்றத்தாருடன் கொல்லப்படுவதை நான் பார்ப்பேனா? ராமனுக்கு என்னிடத்தில் இருக்கும் ஸ்நேஹத்துக்கு ஸமமான ஸ்நேஹம் தன் தாயாரிடத்திலாவது தகப்பனாரிடத்திலாவது வேறொருவனிடத்திலாவது இல்லை. அவனுடைய ப்ரவ்ருத்தியை அறிகிறவரையில் நான் உயிரோடிருப்பேன்'' என்று சொல்லி, ராமன் விஷயமான வார்த்தையை ஹநுமானிடமிருந்து கேட்பதற்காகப் பேசாமல் இருந்தாள். ஹநுமான் தலையில் கையைக்கூப்பிக்கொண்டு பதில் சொன்னான்—"நீ இங்கு இருப்பது ராமன் அறியவில்லை. ஆதலால் தான் சீக்கிரமாய் வந்து உன்னை அழைத்துப் போகவில்லை. கலக்கமுடியாத ஸமுத்ரத்தை பாணங்களால் அசையாமலிருக்கும்படி செய்து லங்கையை, ராக்ஷஸப்பூண்டில்லாமல் செய்யப் போகிறான். இதைச் செய்வதில் தேவர்கள் இடையூறு செய்தாலும் அவர்களையும் கொல்லுவன். உன்னைப் பிரிந்த துக்கத்தில் முழுகி ஸிம்மத்தினால் பிடிக்கப்பட்ட யானையைப்போல ஸந்தோஷத்தை அடையவில்லை. நான் ஸஞ்சாரம் பண்ணும் விந்த்யம் முதலான மலைகளாலும், நான் சாப்பிடும் காய்கிழங்குகளாலும் சபதம் செய்கிறேன். சீக்கிரம் ராமனைப் பார்ப்பாய். அவன் மாம்ஸத்தையும் சாப்பிடுகிறதில்லை; மத்யத்தையும் பானம்

பண்ணுகிறதில்லை ; சரீரம் இருப்பதற்காகமாத்திரம் காட்டில் கிடைக்கும் பழங்களையும் கிழங்குகளையும்தான் சாப்பிடுகிறான் ; அதுவும் ஸாயங்காலத்தில்தான். உன்னிடத்தில் மனதைவைத்து உடம்புமேல் ஊரும் கொசுவையாவது, ஈயையாவது, புழுவையாவது, பாம்பையாவது தள்ளுகிறதில்லை. அவன் காமத்துக்கு உட்பட்டு உன்னைத்தவிர வேறொன்றையும் பார்ப்பதில்லை. அவன் தூங்குகிறதில்லை. ஒருவேளை தூக்கம் வந்தாலும் ஸீதை யென்று இனியதான வார்த்தையைச் சொல்லிக்கொண்டு விழித்துக்கொள்ளுகிறான். புஷ்பத்தையாவது பழத்தையாவது அல்லது வேறு அழகான வஸ்துவையாவது பார்த்து, பெருமூச்சுவிட்டு 'ஹா ! பிரியே !' என்று உன்னைப்பற்றியே புலம்புகிறான். உன்னை அடைவதற்கான ப்ரயத்னத்தையே செய்துகொண்டிருக்கிறான்" என்று சொன்னான். (ஸ-36.)

(143) ஹநுமான் சொன்னதைக்கேட்டு ஸீதை "ராமனைச் சீக்கிரம் இங்கே வரும்படிசெய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தாள். "ராமன் மனது என்னிடமே இருக்கிறது என்கிற உன் வார்த்தை அமிர்தம்போலிருக்கிறது. அவன் துக்கத்தில் முழுகியிருக்கிறான் என்பது அதில் கலந்திருக்கிற விஷம்போலுமிருக்கிறது.

𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑍇 𑌵𑌾 𑌸𑍁𑌵𑌿𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌣𑍇 𑌵𑍍𑌯𑌸𑌨𑍇 𑌵𑌾 𑌸𑍁𑌦𑌾𑌰𑍁𑌣𑍇 ।
𑌰𑌜𑍍𑌜𑍍𑌵𑍇𑌵 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌬𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌕𑍃𑌤𑌾𑌨𑍍𑌤𑌃 𑌪𑌰𑌿𑌕𑌰𑍍𑌷𑌤𑌿 ॥
𑌵𑌿𑌧𑌿𑌰𑍍𑌨𑍂𑌨𑌮𑌸𑌂𑌹𑌾𑌰𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌪𑍍𑌲𑌵𑌗𑍋𑌤𑍍𑌤𑌮 ॥
(ஸ-37-3.)

ஒருவனை விஸ்தீர்ணமான ஐசுவரியத்தை அநுபவிக்கவாவது கொடுமையான துக்கத்தாலே கஷ்டப்படவாவது தெய்வம் கயிற்றால் கட்டி இழுப்பதுபோல் இழுத்துவருகிறது. அதை யார் மாற்ற முடியும் ? இதற்கு உதாரணம் ராமனும் லக்ஷ்மணனும் நானுமே. ஸமுத்ரத்தில் காற்றால் அலைக்கப்பட்டுக் களைத்த கப்பல் கரை சேருவதுபோல், ராமன் துக்கஸமுத்ரக்கரையை எப்போது அடைவான் ? ராக்ஷஸர்களின் வதத்தைச்செய்து, ராவணனைக் கொன்று, லங்கையை வேரோடுபிடுங்கிவிட்டு, என்னை எப்போது

பார்ப்பன்? இந்த வருஷம் முடியும்வரையில்தான் நான் ஜீவித்திருப்பேன். அது நிரம்புவதற்கு முன்னுலேயே ராமனை இங்கே வரும்படி அவஸரப்படுத்து. முடிவு இன்னும் இரண்டு மாதங்களில் வரும். என்னைத் திருப்பி அனுப்பும்படியாக ராவணனுக்கு அவன் தம்பி விபீஷணன் நல்ல புத்திசொன்னுன். அவன் அதைக் கேட்கவில்லை. ராவணனைக் காலபாசம் கட்டியிருக்கிறது. அவனை ம்ருத்யு தேடிக்கொண்டிருக்கிறுன். இந்த விஷயத்தைத் தாயாரால் அனுப்பப்பட்ட விபீஷணன் மூத்தபெண்ணுலே அறிந்துகொண்டேன்" என்று கண்ணும்கண்ணீருமாய்ச்சொல்லி, ராமனுடைய பிரபாவத்தையும், அவனுடைய குணங்களையும், அவன் ஜனஸ்தானத்தில் ராக்ஷஸர்களை வதஞ் செய்ததையும் நினைத்து, அவன் தன்னைச் சீக்கிரம் அடைவான் என்று தனக்கு இருந்த நம்பிக்கையைத் தெரிவித்தாள். (ஸ - 37)

(144) இதைக்கேட்டு ஹநுமான் "என் வார்த்தையைக் கேட்டவுடனே ராமன் பெரிய வானரஸைன்யத்தோடு இங்கே வருவான். அல்லது நானே, துக்கத்திலிருந்து உன்னை விடுவிக்கிறேன். என் முதுகில் ஏறிக்கொள். உன்னைத் தூக்கிக்கொண்டு ஸமுத்ரத்தைத்தாண்டுவேன். லங்கையைக்கூட ராவணனுடன் நான் தூக்கிக்கொண்டுபோக ஸமர்த்தன். ப்ரஸ்ரவண மலையிலிருக்கும் ராமனிடம் உன்னைக்கொண்டு சேர்ப்பேன். உன்னைக் கொண்டுபோகும் என்னை ராக்ஷஸர்கள் பின்தொடர்ந்து வர முடியாது" என்று சொன்னுன். ஸீதை ஸந்தோஷத்துடனும் ஆச்சரியத்துடனும் ஹநுமான் வார்த்தையைக்கேட்டு, "ஹநுமானே! வெகுதூரம் என்னைத்தூக்கிக்கொண்டுபோக எப்படி நினைக்கிறுய்? இதனுல் உன் குரங்குத்தன்மை விளங்குகிறது. உன் உடம்பு சின்னதாயிருக்கிறதே. எப்படி என்னைத் தூக்கிக்கொண்டுபோவாய்?" என்று சொல்ல, ஹநுமான் இதுவரையில் இப்படி நான் அவமானப்பட்டதில்லை என்று மனதில் நினைத்து, "ஸீதையே! என்னுடைய பலத்தையாவது ப்ரபாவத்தையாவது நீ அறியவில்லை. என் ரூபத்தைப்பார்" என்று சொல்லி, தன் பெரிய ரூபத்தைக்காட்டினுன். அந்த ரூபத்தைப்பார்த்து, ஸீதை, "உன் பலத்தையும் பராக்ரமத்தையும் நான் அறிகிறேன். ஸாதாரண வானரம் ஸமுத்ரத்தைத்தாண்டி இக்கரைக்கு எப்படி வரும்? இங்கிருந்து போவதற்கும் என்னை அழைத்துப்போவ

தற்கும் உனக்குச் சக்தியிருக்கிறது" என்று ஹநுமானை ஸ்தோத்ரம்பண்ணி, அவன் சொன்னது சரியன்று என்று நிரூபணம் பண்ணினாள்.—"வாயுவேகத்துடன் நீ போகும்போது உன் வேகம் எனக்கு மோஹத்தை உண்டாக்கும். உன் வேகத்தாலும் பயத்தாலும் உன் முதுகிலிருந்து நழுவி நான் ஸமுத்ரத்தில் விழலாம். என்னைக் கொண்டுபோகையில் 'இவன் ஒரு ஸ்திரீயுடன் போகிறான்' என்று ஸந்தேகமுண்டாகும். ராவணனால் ஏவப்பட்டு பலமுள்ள ராக்ஷஸர்கள் உன்னைப் பின்தொடர்ந்து வருவார்கள். அவர்கள் பல ஆயுதங்களைக்கொண்டு வருவார்கள். உனக்கோ ஓர் ஆயுதமுமில்லை. என்னை ரக்ஷிப்பதற்கும் அவர்களுடன் சண்டைபோடுவதற்கும் உனக்குச் சக்தியிருக்குமோ? நீ அவர்களுடன் சண்டைபோடுகையில் பயத்தால் நான் கீழே விழலாம். அவர்கள் ஒருவேளை ஜயித்தால் என் கதி என்னவாகும்? மேலும், நான் என் பர்த்தாவிடம் பக்தியுள்ளவள். அவனைத்தவிர நான் வேறு புருஷன் உடம்பைத் தொடுகிறதில்லை. ராவணன் என்னைத் தொட்டுக்கொண்டுவந்தானே என்று கேட்கிறாயோ? அவன் பலாத்காரமாய் என்னைக் கொண்டுவந்தான். நான் என்ன செய்வேன். ராமன் பந்துக்களுடன் ராவணனைக் கொன்று என்னை இங்கிருந்து அழைத்துக்கொண்டுபோனால், அஃது அவனுக்குத் தகுந்ததாகும். நீ சொன்னபடி செய்தால் அவனுக்கு யசஸ் குறையுமே" என்று சொன்னாள். இதைக் கேட்டு ஹநுமான் ஸந்தோஷப்பட்டு, "நீ சொன்னது மிகவும் தகுந்தது. நீ பயப்படுவதும் ஸ்திரிகளின் ஸ்வபாவத்துக்குப் பொருந்தினது. பதிவ்ரதைகளின் நடக்கைக்கும் தகுந்ததாயிருக்கிறது. நீ சொன்ன காரணங்களில் கடைசி இரண்டு ஒப்புக்கொள்ளத் தகுந்தவைகள். வேறு புருஷனைத் தொடமாட்டேன் என்று சொன்னது ராமபத்னியான உனக்குத் தகுந்தது. வேறு எந்த ஸ்திரீ இப்படிச் சொல்லுவள்" என்று ஸீதையை ஸ்தோத்ரம் பண்ணினான்.—"ஏ! தாயே! இங்கே உன் இருப்பையும் நீ செய்த காரியத்தையும் நீ சொன்ன வார்த்தைகளையும் ராமனுக்குத் தெரிவிக்கிறேன். ராமனுக்கு ப்ரியத்தைச் செய்யவேண்டுமென்கிற ஆசையாலும் அன்பு நிறைந்த மனதாலும் நான் இப்படிச் சொன்னேன். நான் இங்குவந்து உன்னைக் கண்டதற்கு ராமனுக்கு அடையாளத்தைக் கொடு"

என்று கேட்டான். ஸீதை காகாஸுரன் * விருத்தாந்தத்தை சொல்லி, தனக்காக அல்பனான காக்கையின்மேல் ப்ரம்மாஸ்திரத்தை ஏவினவனும் எதையும் செய்ய ஸமர்த்தனுமான ராமன் என்னை ஏன் உபேக்ஷிக்கிறான் என்று புலம்பினாள். இதைக் கேட்டு ஹநுமான், "உன்னைப் பிரிந்த துக்கத்தாலே ராமன் ஒன்றையும் பார்க்கிறதில்லை. அவன் துக்கத்தைப் பார்த்து லக்ஷ்மணன் தபிக்கிறான். நான் கஷ்டப்பட்டு உன்னைப் பார்க்

---

*சித்ரகூடத்தில் இருக்கும்போது மந்தாகினியில் விளையாடிக் களைத்து, ராமன் மடியில் நான் உட்கார்ந்தேன். அப்போது ஒரு காக்கை மாம்ஸத்தில் ஆசையுள்ளதாய் தன் மூக்கால் என் ஸ்தனத்தைக் கொத்திற்று. நான் ஒரு ஓட்டாஞ்சல்லியைத் தூக்கிக் காண்பித்து அந்தக் காக்கையைத் தடுத்தேன். தடுத்தும், அது போகாமல் அங்கேயே சுற்றிக்கொண்டிருந்தது. நான் பரபரப்புடன் எழுந்திருந்து, நழுவின மேல்வஸ்திரத்தை ஒட்டியாணத்துடன் பிடித்துக்கொண்டு அந்தக் காக்கையிடம் மிகுந்த கோபத்துடன் நிற்கையில் ராமன் என்னைப் பார்த்து பரிஹாஸம் பண்ணினான். நான் லஜ்ஜையுடனும் கோபத்துடனும் ராமனிடம் போனேன். என்னை அவன் மடியில் வைத்துக்கொண்டு கண்ணீரைத் துடைத்து ஸமாதானம் பண்ணினான். நான் அவன் மடியில் படுத்துத் தூங்கினேன். பிறகு, என்மடியில் அவன் தூங்கினான். அப்போது காக்கை மறுபடியும் வந்து முன்போல என்னைத் தொந்தரவு செய்தது. என் ஸ்தனத்திலிருந்து ராமன்மேல் சொட்டின ரத்தத்தாலே அவன் தூக்கத்தைவிட்டு எழுந்திருந்து மிகுந்த கோபத்தை அடைந்து, ஒரு தர்ப்பத்தை எடுத்து பிரம்மாஸ்திரமாக அதன்மேல் போட்டான். அது காலாக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு, ஓடிக்கொண்டிருந்த காக்கையைப் பின்தொடர்ந்தது. அஃது இந்த உலகம் முழுவதையும் சுற்றிற்று. அதைத் தகப்பனான இந்திரனும் தாயும் தேவர்களும் மஹரிஷிகளும் ரக்ஷிக்காமல் விட்டுவிட்டார்கள். அது மூன்று உலகங்களையும் சுற்றிவந்து ராமனிடத்திலேயே சரணாகதி பண்ணிற்று. அவன் சரண்யனாகையால் அது கொல்லத்தகுந்ததாயிருந்தாலும் கிருபையினால் அதை ரக்ஷித்தான். அது துஷ்டப்ரகிருதியென்று பார்த்து ப்ரம்மாஸ்திரம் வீணாகப்போகக்கூடாது என்று நினைத்து அதன் வலது கண்ணை நாசம் செய்தான். (ஸ-38.)

பகவானிடத்தில் அபராதம் பண்ணினவனை ரக்ஷிப்பது ஒருவராலும் முடியாது என்று இதனால் காட்டப்படுகிறது. சுலோகத்தில் பித்ரா "ச" என்கிறவிடத்திலுள்ள சகாரத்தால் தாயாரும் அவனை விட்டுவிட்டாள் என்று காட்டப்படுகிறது. தாயாருக்குப் பிள்ளையிடம் வாத்ஸல்யம் அதிகம். ருஷிகளுக்கு இரக்கம் அதிகம். அவர்களும் காக்கையை விட்டுவிட்டார்கள். எவன் தண்டிக்கிறவனோ அவனையே நல்ல வார்த்தைச் சொல்லவேண்டியது என்கிற நியாயப்படி பிரம்மாஸ்திரத்தை ஏவின ராமனிடத்திலேயே அது சரணாகதி பண்ணிற்று.

தேன். இது துக்கப்படும் காலம் அன்று. ஒருமுஹூர்த்தத்தில் துக்கத்தின் கரையைக் காணப்போகிறாய். உன்னைப் பார்க்க வேண்டுமென்பதில் உத்ஸாஹமுள்ள அவ்விருவரும் லங்கையைச் சாம்பலாகப் பண்ணப்போகிறார்கள். ராமன் சண்டையில் ராவணனைப் பந்துக்களுடன் கொன்று உன்னைத் தன் நகரத்துக்கு அழைத்துக்கொண்டு போகப்போகிறான்" என்று அவளைத் தேற்றி, "ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் ஸுக்கிரீவனுக்கும் வானரங்களுக்கும் என்னசொல்லவேண்டியதோ, அதைச்சொல்" என்று கேட்டான். ஸீதை, * "எல்லா உலகங்களையும் ரக்ஷிப்பதற்காக எவனைக் கௌஸல்யைப் பெற்றாளோ, அவனை எனக்காகத் தலையால் வணங்கு; க்ஷேமமாயிருக்கிறாயா என்று கேள். நான் சொன்னதாக லக்ஷ்மணனை ஸுகமாக இருக்கிறாயா என்று கேள். அவன் உலகத்தில் அடையமுடியாத ஐசுவரியத்தைவிட்டுவிட்டுத் தாயையும் தகப்பனையும் வணங்கி உத்திரவு பெற்றுக்கொண்டு ராமன்பின்னால் காட்டுக்கு வந்தான். அவன் ராமனிடத்தில் தகப்பனாரிடத்தில்போலவும், என்னிடத்தில் தாயாரிடத்தில்போலவும் இருக்கிறான். என் மாமனாருக்குத் தகுந்த பிள்ளை; எனக்கும் ராமனுக்கும் ப்ரியமானவன்; எவ்வளவு கஷ்டமான காரியத்தைச் செய்யச்சொன்னாலும் செய்வான். இவனைப்பார்த்து ராமன் தன் தகப்பனாரையும் நினைக்கிறதில்லை. என் துக்கம் போவதற்கு எதைச் செய்யவேண்டியதோ, அதை நீ செய்வாய் என்று நம்புகிறேன். ராமனை உத்ஸாஹப்படுத்தி, என் விஷயமான ப்ரயத்னத்தைச் செய். இதை அவனுக்குத் திருப்பித் திருப்பிச் சொல்லு. ஒருமாதம்தான் பிராணனைத் தரித்துக்கொண்டிருப்பேன். அதன்மேல் நான் உயிரோடிருக்க மாட்டேன். இதை உண்மையாகச் சொல்லுகிறேன். ராவணனால் சிறையில் வைக்கப்பட்டிருக்கிற என்னை அவனிடமிருந்து ரக்ஷிக்கவேண்டியது" என்று சொல்லி, தன் வஸ்திரத்தில்

---

*"உலகத்தில் தாயார்கள், தங்களை இங்கிருக்கும் காலத்தில் ரக்ஷிக்கவும், பின்பு நரகத்திலிருந்து விலக்கவும்வேண்டிப் பிள்ளைகளைப் பெறுகிறார்கள். கௌஸல்யையோ, எல்லாஉலகங்களையும் ரக்ஷிக்கும் பிள்ளையை வேண்டிப் பெற்றாள். அந்த உலகங்களில் நான் அடங்கியிருக்கவில்லையா? நான்மாத்திரம் விலக்கா? என்று கேள்" என்பது 'லோகபர்த்தாரம்' என்பதின் கருத்து.

முடிந்திருந்த சூடாமணியை "இதை ராமனிடம் கொடு" என்று சொல்லி, ஹநுமானிடம் கொடுத்தாள். ஹநுமான் அதை வாங்கிக்கொண்டு (அதில் மயிர் கோப்பதற்கு ஏற்பட்ட இடத்தில் விரலைவைத்தான். அதற்கு விரல் ஸரியாய் இருக்க வில்லை. பிறகு) ஸீதையைப் ப்ரதக்ஷிணம் பண்ணி அபிவாதநம் செய்து திரும்பிப்போக யத்தனித்தான். (ஸ-37-38)

(145) மறுபடியும் ஸீதை, "ராமன் இந்தச் சூடாமணியைப் பார்த்து என் தாயாரையும் என்னையும் தசரதரையும் நினைப்பான். அவனை உத்ஸாஹப்படுத்தி மேல்காரியத்தைச் செய்து என் துக்கத்தைப்போக்கு என்று சொன்னாள். "அப்படியே செய்கிறேன்" என்று சொல்லி, ஸீதையைவணங்கி, ஹநுமான் புறப்பட, ஸீதை அவனுக்கு முன் சொன்ன ஸமாசாரத்தையே திரும்பவும் சொன்னாள். ஹநுமானும் முன்போல அவனைத் தேற்றினான். ஸீதை "உசிதமானால் ஒரு நாள் இங்கேயே இருந்து, விடாயைத் தீர்த்துக்கொண்டு போகலாம்' என்று சொல்லி, முன்போல ஹநுமானுடைய பிரபாவத்தையும் ராமனுடைய பராக்ரமத்தையும் வர்ணித்து, "ராமன் லங்கையைப் பாணங்களால் கலக்கி என்னைக் கொண்டுபோனால் அதுதான் அவனுக்குத் தகுந்தது" என்று சொல்லிமுடித்தாள். ஹநுமான் முன்போல் அவளுக்கு ஆறுதலைச் சொல்ல, அதைக்கேட்டு ஸீதை, "இந்த அடையாளத்தையும் ராமனிடம் சொல்லு. சித்ரகூடத்திலிருக்கிறபோது என் கன்னத்தில் இட்ட திலகம் அழிந்துபோக, அவன் அதை மறுபடியும் இட்டான்" என்று சொல்லி, முன்போல் மறுபடியும் பிரார்த்தித்தாள். ஹநுமானும் முன்போல அவளுக்கு ஆறுதலைச்சொல்லி அவள் அநுமதியைப் பெற்றுக்கொண்டு புறப்பட்டான். (ஸ-39.)

(146) ஹநுமான் அந்தவிடம் விட்டுப்போய் அடியில் வருமாறு யோசித்தான்—"நான் ஸீதையைப் பார்த்து வந்த காரியத்தை முடித்துக்கொண்டேன். இன்னும் கொஞ்சம்தான் பாக்கியிருக்கிறது. இந்த ராக்ஷஸர்களிடத்தில் உபாயம் நான்கில்*

---

* எதிரிகளை ஜயிப்பதற்கு நாலு உபாயங்களுண்டு—(1) ஸாமம்—நல்லவார்த்தை சொல்லுவது; (2) தானம்—பணத்தைக் கொடுப்பது; (3) பேதம்—சத்ருவுக்குத் துணையாயிருப்பவர்களை அவனிடமிருந்து பிரிப்பது; (4) தண்டம்—தண்டிப்பது.

முதல் மூன்று உபாயங்களைத் தள்ளிவிட்டு நாலாவது உபாயத்தைச் செய்யவேண்டும். இவர்களிடத்தில் ஸாமம் என்கிற உபாயம் குணமாகத்தோன்றாது; பணம் மிகுந்தவனிடத்தில் தானம் தகுந்ததன்று; பலத்தால் கொழுப்படைந்திருக்கிறவர்களிடத்தில் பேதம் முடியாது. ஆகையால் என் பராக்ரமத்தை இங்கே காண்பிப்பதுதான் எனக்குப் பிடித்திருக்கிறது.* சண்டையில் ராக்ஷஸர்களுக்குள்ளே முக்கியமானவர்கள் கொல்லப்பட்டால் தான் மற்றவர்களுக்குப் படிமானம் உண்டாகும்.

𑌕𑌾𑌰𑍍𑌯𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑍇 𑌯𑍋 𑌬𑌹𑍂𑌨𑍍𑌯𑌪𑌿 𑌸𑌾𑌧𑌯𑍇𑌤𑍍 ।
𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌵𑌿𑌰𑍋𑌧𑍇𑌨 𑌸 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌤𑌿 ॥
(ஸ-41-5.)

ஒரு காரியத்தைச் செய்யவேண்டியது என்று கட்டளையிடப்பட்டவன், அதற்கு விருத்தமல்லாத அநேக காரியங்களைச் செய்யவேண்டியது.* அவன்தான் காரியத்தை நன்றாய்ச் செய்கிறவன்.

𑌨 𑌹𑍍𑌯𑍇𑌕𑌃 𑌸𑌾𑌧𑌕𑍋 𑌹𑍇𑌤𑍁𑌃 𑌸𑍍𑌵𑌲𑍍𑌪𑌸𑍍𑌯𑌾𑌪𑍀𑌹 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 ।
𑌯𑍋 𑌹𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌬𑌹𑍁𑌧𑌾 𑌵𑍇𑌦 𑌸 𑌸𑌮𑌰𑍍𑌥𑍋𑌽𑌰𑍍𑌥𑌸𑌾𑌧𑌨𑍇 ॥
(ஸ-41-6.)

சின்னக் காரியத்தை ஸாதிப்பதற்கும் ஒன்றே காரணமாயிராது. அதை அநேக காரணங்களைக்கொண்டு எவன் செய்கிறானோ, அவன்தான் காரியத்தைச்செய்ய ஸமர்த்தன். இங்கு சத்துருவினுடைய பலத்தை அறிந்து நான் திரும்பிப்போனால் தான் ஸ்வாமியின் கட்டளையை நிறைவேற்றினதாக ஆகும். எப்படி ராக்ஷஸர்களுடன் எனக்குச் சண்டை லகுவாக கிடைக்கும்? அதில் என் பலத்தைக் காட்டினால் ராவணன் தன் பலத்தையும் சத்துருவின் பலத்தையும் இன்னது என்று அறிவன். சண்டை நேரும்போது ராவணன் மந்திரிகளுடனும் பலத்துடனும் வருவன். அவனுக்கு ஸீதாவிஷயமாகவுள்ள கருத்தையும் அவன்

---

* சொன்னதுக்குமேலே செய்கிறவன் உத்தமன்; சொன்னதை மட்டும் செய்கிறவன் மத்யமன்; சொன்னதை முழுவதும் செய்யாதவன் அதமன். ஹநுமான் முதல்வகுப்பில் சேர்ந்த தூதன்.

பலத்தையும் அறிந்து இங்கிருந்துபோவேன். இந்த வனம் அவனுக்குக் கண்போலிருக்கிறது. இதை அழித்துவிடுகிறேன். அப்போது அவன் சண்டைக்குப் பெரிய ஸைனியத்தை அனுப்புவன். பெரிய சண்டை உண்டாகும். நான் அறியவேண்டியவைகளைத் தெரிந்துகொள்வேன்" என்று இப்படி நிச்சயம்செய்து, மரங்களின்கிளைகளை ஒடித்தும், மரங்களைப் பிடுங்கியும், அசோகவனத்தைச் சின்னாபின்னம்செய்தான். (ஸ-41.) அதைக்கண்டு அங்கிருந்த ராக்ஷஸிகள் பயந்து, "இந்த வனத்தை அழிக்கிற குரங்கு உன்னுடன் பேசிக்கொண்டிருந்ததே, அது யார்" என்று ஸீதையைக் கேட்டார்கள். ஸீதை, "ராக்ஷஸர்கள் செய்யும் வேலைகளை அறிய எனக்கு என்ன சக்தியிருக்கிறது? அவர்களில் எவன் எதைச் செய்கிறான் என்று நீங்கள்தான் அறிவீர்கள்? பாம்பின் கால் பாம்புக்குத்தான் தெரியும். நானும் இந்தக் குரங்கைக் கண்டு பயப்படுகிறேன். அது இன்னதென்று எனக்குத் தெரியாது. வேண்டின ரூபத்தையெடுத்துக்கொண்டு வந்திருக்கிற ராக்ஷஸனாக எண்ணுகிறேன்" என்று பதில் சொன்னாள். ராக்ஷஸிகள் வனம் அழிந்ததையும், தாங்கள் கேட்டதற்கு ஸீதை சொன்ன பதிலையும் ராவணனுக்குத் தெரிவித்தார்கள். அவன் மிகுந்தகோபம்கொண்டு ஹநுமானை நிக்ரஹம்பண்ண கிங்கரர்கள் என்கிற ராக்ஷஸர்களை அனுப்பினான். ஹநுமான் வாசற்படியில் தாப்பாளாக இருந்த ஒரு பெரிய இருப்புத்தடியை எடுத்துக்கொண்டு அவர்கள் எல்லோரையும் கொன்றுவிட்டான். (ஸ-42.) ஹநுமான் மறுபடியும் சண்டையை எதிர்பார்த்துக்கொண்டு வாசற்படியில் உட்கார்ந்திருந்தான். பிறகு வனத்தைப்பார்த்து, "சைத்யப்ராஸாதம் ஒன்று அழிபடாமலிருக்கிறதே, இதையும் அழித்துவிடுகிறேன்" என்று நினைத்து, அதையும் அழித்து, அதிலிருந்த ராக்ஷஸர்களைக் கொன்றான். பிறகு ராவணன் ப்ரஹஸ்தன்பிள்ளை ஜம்புமாலியையும், மந்திரிபிள்ளை ஏழுபேர்களையும், ஐந்து ஸேநாதிபதிகளையும், வரிசையாய் அனுப்பி, கடைசியில் தன் பிள்ளையான அக்ஷனையும் அனுப்பினான். அவர்களையும் ஹநுமான் கிரமமின்றிக் கொன்றுவிட்டான். அப்போது ராவணன் தன் மற்றொரு பிள்ளையான இந்த்ரஜித்தைச் சண்டைக்கு அனுப்ப, அவனும் வெகுகாலம் ஹநுமானைக் கொல்லப்பார்த்து, முடியாமல் கடைசியில் பிரம்மாஸ்திரத்தினால் அவனைக் கட்டி

ஞன். ஹநுமான் ப்ரம்மாவினிடத்தில் கௌரவத்தால் கட்டுப்
படுவதை ஏற்றுக்கொண்டான். ராக்ஷஸர்கள் ப்ரம்மாஸ்திரம்
போதாது என்று எண்ணி, அவனைக் கயிறுகளால் கட்டினார்கள்.
ப்ரம்மாஸ்திரம் வேறொன்றின் சேர்க்கையைப் பொறுக்காமை
யால் கட்டுதளர்ந்தது. ஆனாலும் ஹநுமான் ராவணனைப்
பார்க்கவேண்டும் என்கிற ஆசையால் கட்டுப்பட்டிருந்தான்.
இந்த்ரஜித்து அவனை இழுத்துக்கொண்டுபோனான். (ஸ-43 முதல்
48 முடிய.) ஹநுமான் ராவணனையும் அவன் வைபவத்தையும்
பார்த்து ஆச்சரியப்பட்டு, "இவன் பெரியபெரிய அதர்மத்தைச்
செய்யாமலிருந்தால், இந்திரனையும் நியமநம் பண்ணத்தகுந்
தவன்" என்று நினைத்தான். ராவணன், மந்திரியான ப்ரஹஸ்த
னைக்கொண்டு "நீ ஏன் வனத்தை அழித்தாய்? அனுப்பப்பட்ட
ராக்ஷஸர்களை ஏன் கொன்றாய்?" என்று கேட்கச்செய்தான்.
ஹநுமான் ராவணனைப் பார்த்து, "நான் வானரம். உன்னைப்
பார்ப்பதற்காக வனத்தை அழித்தேன். என்னை ரக்ஷித்துக்
கொள்ளுவதற்காக எதிர்த்துவந்தவர்களைக் கொன்றேன்" என்று
பதில் சொல்லி, தான் ஸுக்ரீவனுடைய தூதன் என்றும்,
ராமனுக்காக லங்கைக்கு அனுப்பப்பட்டவன் என்றும், ஸுக்ரீ
வனுடைய ஸந்தேசத்தைக்கொண்டு வந்திருக்கிறவன் என்றும்
சொல்லி, (ஸ-49-50) அதை அடியில்வருமாறு தெரிவித்தான்—
"தசரதன் புத்ரனான ராமன், தகப்பனார் கட்டளையை அநு
ஸரித்துத் தண்டகாரண்யத்துக்கு வந்திருக்கையில், அவன்
பாரியைக் காணாமல்போனாள். அவளைத் தேடிக்கொண்டு ருச்ய
மூகத்திலிருக்கும் ஸுக்ரீவனிடம் ராமன் வந்தான். இருவருக்
கும் ஸக்கியமுண்டாயிற்று. ராமன் வாலியைக்கொன்று வானர
ராஜ்யத்தை ஸுக்ரீவனுக்குக் கொடுத்தான். ஸுக்ரீவனும்
ஸீதையைத் தேட வானரங்களை அனுப்புவதாகப் பிரதிஜ்ஞை
பண்ணி, அவர்களை ஆயிரக்கணக்காக எல்லாத் திக்குக்களிலும்
அனுப்பினான். அவர்களில் நான் ஒருவன்; நான் வாயுவின்
பிள்ளை; என் பெயர் ஹநுமான். நான் ஸமுத்திரத்தைத்
தாண்டி, இந்த நகரத்தில் அவளை எங்கும்தேடி உன்கிருஹத்தில்
பார்த்தேன். நீ மிகுந்த அறிவுள்ளவன். அயலான் மனைவியை
இங்கே தடுத்துவைத்திருப்பது சரியன்று. உன்னைப்போன்ற
புத்திமான்கள் தர்மத்துக்கு விருத்தமும் அநேக துன்பங்

களுக்கு இடமும் அடியோடு நாசம் பண்ணுவதுமான காரியங்களில் தலையிட்டுக்கொள்ளமாட்டார்கள். ராமனுடைய கோபத்தை அநுஸரித்து லக்ஷ்மணன் விடும் பாணங்களுடைய முன்னிலையில் தேவர்களோ, அஸுரர்களோ, யார் நிற்கமுடியும்? ராமனுக்குப் பிரியமில்லாததைச் செய்து மூன்று உலகங்களில் எவன் ஸுகமாயிருப்பன்? தர்மத்திற்கும் அர்த்தத்திற்கும் ஒத்திருக்கும் என் வார்த்தையை வெகுமானத்துடன் ஏற்றுக் கொள். ஸீதையை ராமனிடத்தில் திருப்பிக்கொடுத்துவிடு. நான் ஸீதையைக் கண்டேன். மற்றவர்களால் செய்யமுடியாத தைச் செய்துவிட்டேன். மேலே என்ன செய்யவேண்டியதோ, அதற்கு ராமனுடைய கட்டளையை எதிர்பார்க்கிறேன். ஐந்து தலை நாகத்தை மடியில் கட்டிக்கொள்வதுபோல் ஸீதையை இங்கே நீ கொண்டுவந்திருக்கிறாய். இதை நீ அறியவில்லை. விஷத்தோடுகலந்த அன்னத்தைச் சாப்பிட்டு எப்படி உயிரோடு இருக்கமுடியாதோ, அப்படியே தேவர்களாலும் அஸுரர்களா லும் இவளை வைத்துக்கொண்டு பிழைக்கமுடியாது. நீ மிகவும் கஷ்டப்பட்டு தபஸுசெய்து இந்த வஜ்ரம்போன்ற தேஹத்தை யும், தீர்க்கமான ஆயுளையும், உயர்ந்த ஐசுவரியத்தையும் அடை ந்திருக்கிறாய். இவைகளை நாசம்செய்யாதே. நீ ஒருவனாலும் கொல்லமுடியாதவன் என்று வரம்பெற்றிருக்கிறேன் என்று நம்பி யிராதே. ஸுக்கிரீவன், தேவனும் அன்று, அஸுரனும் அன்று, ராக்ஷஸனும் அன்று, கந்தர்வனுமன்று, யக்ஷனுமன்று, பந்நகனும் அன்று. அவனால் உனக்கு மரணம் வரலாமே. அவனிடமிருந்து உன்னை எப்படி ரக்ஷித்துக்கொள்ளப்போகிறாய்? "நான் பாபம் செய்திருந்தாலும் புண்ணியமும் செய்திருக்கிறேன், அது பாப த்தை அடித்துவிடும்" என்று எண்ணுகிறாயோ? அஃதில்லை. புண்ணியத்தின் பலன் எப்படி வருமோ, அப்படியே பாபத்தின் பலனும் கட்டாயம் வரும். புண்ணியத்தின் பலனை நீ அநுப வித்துவிட்டாய். பாபத்தின் பலன் சீக்கிரம் வரும். ஜன ஸ்தானத்தின் நாசத்தையும், வாலியின் வதத்தையும், ராமனுக் கும் ஸுக்கிரீவனுக்கும் உண்டான ஸக்கியத்தையும் நினைத்து, உன்னுடைய ஹிதத்தை அறிந்துகொள். சதுரங்கஸேனையுடன் கூடின இந்த லங்கையை நான் ஒருவனே நாசம்செய்ய ஸமர்த் தன். ஆனால் இது ராமனுக்கு இஷ்டம் அன்று. "ஒருவனே

ஸீதை கொண்டுபோகப்பட்டாளோ, அவனைக் குலத்தோடு நாசம்பண்ணுவேன்" என்று ராமன் வானரங்கள் முன்னிலையில் பிரதிஜ்ஞை பண்ணியிருக்கிறான். இந்திரனும் ராமனுக்கு அபராதம்செய்து ஸுகமாயிருக்கமுடியாது. உன்னைப்போன்றவன் அபராதம்செய்து ஸுகமாயிருக்கமுடியாதென்பது சொல்லவும் வேண்டுமோ? எவளை ஸீதையென்றும், உன்வசத்திலிருக்கிறாள் என்றும் நீ எண்ணுகிறாயோ, அவளை லங்கை முழுவதும் நாசம் செய்யும் காளராத்திரியென்று அறி. ஸீதையை யமனுடைய பாசம் என்று அறி. அதைக் கழுத்தில்போட்டுக்கொள்ளாதே; நான் சொல்லும் வார்த்தையைக் கேள். நான் ராமதாஸனாயிருப்பதாலே இதைக் கட்டாயம் கேட்கவேண்டும் என்று தோன்றவில்லையா?

ப்ரஹ்மா ஸ்வயம்பூஶ்சதுராநநோ வா<br>
ருத்ரஸ்த்ரிநேத்ரஸ்த்ரிபுராந்தகோ வா |<br>
இந்த்ரோ மஹேந்த்ர: ஸுரநாயகோ வா<br>
த்ராதும் ந ஶக்தா யுதி ராமவத்யம் || (ஸ-51 45.)

தானாய்த்தோன்றினவனும் நான்குமுகமுள்ளவனுமான பிரம்மாவும், மூன்று கண்களுள்ளவனும் த்ரிபுரத்தை எரித்தவனுமான ருத்ரனும், தேவதைகளுக்குத் தலைவனான மஹேந்த்ரனும், சண்டையில், ராமனால்கொல்லத்தகுந்தவனை ரக்ஷிக்கமுடியாது— என்றான். (ஸ-51.)

(147) ஹநுமான் சொன்னது ராவணனுக்கு அப்ரியமாய் இருந்தது. அவனைக் கொல்லும்படி கட்டளையிட்டான். அப்போது விபீஷணன் தமையனிடம் கிட்டப்போய்—"ராக்ஷஸ ராஜாவே! பொறுத்துக்கொள்; கோபத்தைவிடு; மனத்தெளிவை அடை; நான் சொல்லும் வார்த்தையைக் கேள்; இதைச் செய்யலாம், இதைச் செய்யக்கூடாது என்று அறியக்கூடிய பெரியோர்களான ராஜாக்கள் தூதர்களைக் கொல்லுகிறதில்லை. ஆதலால் இந்தக் குரங்கைக் கொல்லுவது ராஜதர்மத்துக்கு விருத்தம். உலகத்தார் நடவடிக்கைக்கு விருத்தம். வீரனான உனக்குத் தகுந்ததன்று. நீ தர்மத்தை அறிந்தவன்; கிருதஜ்ஞன்; ராஜதர்மத்தில் நிபுணன்; இது தகுந்தது, இது

தகாதது என்று அறிந்தவன்; இந்த விஷயத்தில் உனக்கு ஸமமானவன் கிடையாது; உனக்குத்தான் உயர்ந்த அர்த்தங்கள் தெரியும்; உன்னைப்போன்றவர்கள் கோபத்தின்வசத்தில் அகப்பட்டால், சாஸ்திரத்தைப் படித்து ஞானம் ஸம்பாதித்ததற்கு என்ன ப்ரயோஜனம்? சிரமம்தான் மீதி. ஆகையால் எது யுக்தமோ, எது அயுக்தமோ, அதை விசாரித்துத் தூதனுக்குத் தகுந்த தண்டனையை விதிக்கவேண்டும்" என்று ஸமாதான வார்த்தை சொன்னான். அதைக்கேட்டு ராவணன்—"பாபிகளைக் கொல்லுவதில் தோஷமில்லை. ஆகையால் பாபம்செய்த இந்தக் குரங்கைக் கொல்லுவேன்" என்று கோபத்துடன் சொன்னான். இதைக்கேட்டு விபீஷணன் மறுபடியும்—"உண்மையில் இவன் பலமுள்ள சத்ரு. நமக்கு மிகுந்த அப்ரியத்தைச் செய்திருக்கிறான். ஆனால், தூதனைபடியால் இவனைக் கொல்லுவது தகுந்ததன்று; வேறுவிதமாய் இவனைத் தண்டிக்கலாம்; அங்கங்களை விகாரப்படுத்தலாம்; சாட்டையால் அடிக்கலாம்; மொட்டை அடிக்கலாம். மேலும், இந்தக் குரங்கைக் கொல்லுவதில் ஒரு ப்ரயோஜனத்தையும் காணேன். எவன் இவனை அனுப்பினானோ, அவனிடத்தில் உன் தண்டனையைச் செய். இவன் நல்லவனோ கெட்டவனோ, மற்றவர்களால் அனுப்பப்பட்டவன்; அவர்கள் சொன்னபடி சொல்லுகிறான்; இவன் ஸ்வதந்திரன் அன்று; இவனை எப்படிக் கொல்லலாம்? இவனைக் கொன்றால் வேறு எவன் இந்த ஸமுத்ரத்தைத் தாண்டி வருவன்? ராமனும் லக்ஷ்மணனும் சண்டைக்கு இங்கே வரமாட்டார்கள். அவர்களுடன் சண்டை ஏற்படாது. ராக்ஷஸர்களோ அவர்களுடன் சண்டை போட ஸித்தமாயிருக்கிறார்கள். அதைத் தடுக்காதே" என்று சொன்னான். இது ராவணனுக்குப் பிடித்தது. அவன் "குரங்குகளுக்கு வால் இஷ்டமான அலங்காரமாயிருக்கிறது. இந்தக் குரங்கின்வாலில் துணியைச்சுற்றி எண்ணெயில்தோய்த்துக் கொளுத்திவிடுங்கள்; அதனுடன் அது திரும்பி போகட்டும்" என்று ராக்ஷஸர்களுக்குக் கட்டளையிட்டான். (ஸ-52.)

(148) ராக்ஷஸர்கள் ராவணன் சொன்னபடியே செய்து, ஹநுமானை வாத்யகோஷத்துடன் எல்லாத் தெருக்களிலும் இழுத்துக்கொண்டுபோனார்கள். குழந்தைகளும் கிழவர்களும் ஸ்திரீகளும் வந்து வேடிக்கைப் பார்த்தார்கள். நடந்த விஷ

யத்தை ஸீதைகேட்டு அக்னியைப் பிரார்த்தித்தாள்—"நான் பதிக்கு சுச்ருஷைசெய்தவளும், தபஸ்செய்பவளும், பதிவ்ரதையும்ஆக இருந்தால் ஹநுமானுக்குக் குளிர்ந்திரு; என்னிடத்தில் ராமனுக்கு இரக்கமிருந்து, எனக்கு பாக்யசேஷமிருந்தால் ஹநுமானுக்குக் குளிர்ந்திரு; நான் நல்ல நடக்கையுள்ளவள் என்றும், தன்னுடன் சேருவதில் ஆசையுள்ளவள் என்றும் ராமன் அறிந்தால் ஹநுமானுக்குக் குளிர்ந்திரு; ஸுக்கிரீவன் பிரதிஜ்ஞை பண்ணினதை நிறைவேற்றுகிறவனும் என்னை இந்தத் துக்க ஸமுத்ரத்திலிருந்து தாண்டுவிக்கிறவனுமிருந்தால் ஹநுமானுக்குக் குளிர்ந்திரு." இப்படி வேண்டப்பட்ட அக்னி ஹநுமானுக்குக் குளிர்ந்தேயிருந்தது. இது ஸீதையின் ப்ரார்த்தனையினால் வந்தது என்று அறியாமல் ஹநுமான் "இந்த நெருப்பு என்னை ஏன் சுடவில்லை? இதற்குக் காரணம் ராமனுடைய பிரபாவமா? அல்லது ஸீதைக்கு என்னிடமிருக்கும் இரக்கமா? அல்லது என் தகப்பனுன வாயுவினிடத்தில் அக்னிக்கு இருக்கும் ஸ்நேஹமா?" என்றும், "இந்த ராக்ஷஸர்கள் எல்லாரையும் சண்டையில் கொல்ல நான் ஸமர்த்தன். ஆனால், ராமனுடைய ப்ரீதிக்காக இதைப் பொறுத்துக்கொள்ளுகிறேன். ராத்ரியில் லங்கையை நன்றாய்ப் பார்க்கவில்லை. இப்பொழுது பகலாய் இருப்பதால் இதை முழுவதையும் நன்றாய்ப் பார்ப்பேன்" என்றும் நினைத்து ராக்ஷஸர்களுக்கு வசப்பட்டிருந்தான். (ஸ-53.)

(149) கடைசியில் பெரிய உருவத்தையெடுத்துக்கொண்டு கட்டிலிருந்து விடுபட்டு தன்னை இழுத்துப்போன ராக்ஷஸர்களைக் கொன்று தன் வாலிலிருந்த நெருப்பினால் விபீஷணன்வீடு தவிர மற்றவர்கள்வீடுகளில் ஒவ்வொன்றாய் நெருப்பைவைத்து ஊரைக் கொளுத்திச் சாம்பலாகச்செய்து, வாலை ஸமுத்ரத்தில் தோய்த்தான். அப்போது ஸீதைக்கு ஏதாவது கெடுதி உண்டாயிற்றோ என்று பயந்து தன்னை நிந்தித்துக்கொண்டான்—"நான் என்னகாரியம் செய்தேன்? எவர்கள் உண்டாகும் கோபத்தைப் புத்தியால் தடுக்கிறார்களோ அவர்கள் மஹாத்மாக்கள்.

𑌕𑍍𑌰𑍁𑌦𑍍𑌧𑌃 𑌪𑌾𑌪𑌂 𑌨 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 𑌕𑌃 𑌕𑍍𑌰𑍁𑌦𑍍𑌧𑍋 𑌹𑌨𑍍𑌯𑌾𑌦𑍍𑌗𑍁𑌰𑍂𑌨𑌪𑌿 ।
𑌕𑍍𑌰𑍁𑌦𑍍𑌧𑌃 𑌪𑌰𑍁𑌷𑌯𑌾 𑌵𑌾𑌚𑌾 𑌨𑌰𑌃 𑌸𑌾𑌧𑍂𑌨𑌧𑌿𑌕𑍍𑌷𑌿𑌪𑍇𑌤𑍍 ॥

(ஸ-55-5.)

எவன்தான் கோபமுள்ளபோது பாபத்தைச் செய்யமாட்டான். குருவையும் கொன்றுவிடுவன். பெரியோர்களையும் கடுமையாகப் பேசி நிந்தை செய்வன்.

𑌵𑌾𑌚𑍍𑌯𑌾𑌵𑌾𑌚𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌕𑍁𑌪𑌿𑌤𑍋 𑌨 𑌵𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌕𑌰𑍍𑌹𑌿𑌚𑌿𑌤𑍍 ।
𑌨𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑌮𑌸𑍍𑌤𑌿 𑌕𑍍𑌰𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌯 𑌨𑌾𑌵𑌾𑌚𑍍𑌯𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 ॥

(ஸ-55-6.)

இதைச் சொல்லலாம், இதைச் சொல்லக்கூடாது என்பதை கோபமுள்ளவன் அறியான். அவனுக்குச் செய்யத்தகாததும் சொல்லத்தகாததும் ஒன்றுமில்லை. நான் ஸீதையை நினைக்காமல் ஊரைக் கொளுத்தினேனே. அவளுக்கு என்ன கெடுதியுண்டாயிருக்கிறதோ ? கெடுதி உண்டானால் நான் பிராணனைவிட வேண்டும்'' என்று இப்படி எண்ணிக்கொண்டிருக்கையில், நல்ல சகுனம் காணப்பட்டது. "அப்போது நெருப்பு என்னைச் சுடவில்லையே, அது ராமபத்னிக்குஏதாவது கெடுதியைச்செய்யுமோ? ராமனுடைய பிரபாவமும் அவளுடைய தேஜஸுமே அவளை ரக்ஷிக்காதோ?'' என்று மனம்தேறினான். அப்போது ஆகாசத்தில் ஸஞ்சாரம்செய்துகொண்டிருந்த சாரணர்கள்-"என்ன இந்த ஹநுமான் செய்தவேலை ! லங்கைமுழுவதையும் கொளுத்தினான்; சிறுவர்களும் கிழவர்களும் ஸ்திரீகளும் அங்குமிங்கும் ஓடுகிறார்களே ? ஸீதைக்கு மாத்திரம் நெருப்பு ஒருகெடுதியையும் செய்யவில்லையே. ஹனுமானைத்தவிர இந்த வேலையை யாரால் செய்ய முடியும் ?'' என்று சொன்னார்கள். இதைக்கேட்டு ஹநுமான் மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்து அசோகவனத்திலிருக்கும் ஸீதையைப் பார்த்துவிட்டுத் திரும்பிப்போகப்புறப்பட்டான். (ஸ-54-55-56.)

(150) ஹநுமான் அரிஷ்டம் என்கிற மலையில் ஏறி அங்கிருந்து ஒரேபாய்ச்சலாய் மஹேந்த்ரமலைக்குப் போய்ச்சேர்ந்தான். அதன் கிட்டப்போகும்போது, ஒருபெரிய சப்தம் பண்ணினான். அதைக்கேட்டு வானரவீரர்கள் "ஹநுமான் காரியத்தை முடித்துக்கொண்டு வந்திருக்கிறான்'' என்று ஸந்தோ

ஷப்பட்டார்கள். ஹநுமான் தான் ஸீதையைப்பார்த்ததையும் அசோகவனத்தை அழித்து, எதிர்த்துவந்த ராக்ஷஸர்களைக் கொன்று லங்கையைக்கொளுத்தின செயல்களையும் அவர்களுக்குச் சொல்லி, "நாம் எல்லாரும் லங்கைக்குப்போய் ராவணனைக் கொன்று ஸீதையைக்கொண்டுவந்து ராமனிடம் ஸமர்ப்பிப்போம்" என்று சொன்னான். இதை அங்கதன் ஒப்புக்கொண்டான். ஜாம்பவான் "இது சரியன்று. நமக்குத் தேடுவதற்குமாத்ரம் கட்டளையிடப்பட்டது. ஸீதையைக்கொண்டுவரக் கட்டளை இல்லை. ராமன் வானரவீரர்களுக்குமுன்னில் ஸீதையைத் தான் கொண்டுவருவதாகப்ரதிஜ்ஞைபண்ணியிருக்கிறானே. அதுபொய்யாக ஆகலாமோ? ஆகையால் ராமனும் லக்ஷ்மணனும் ஸுக்ரீவனுமிருக்குமிடத்துக்குப்போவோம்" என்று சொல்ல, இதைக் கேட்டு எல்லாரும் கிஷ்கிந்தைக்குப் புறப்பட்டு, நடுவழியில் ஸுக்ரீவனால் மிகுந்த ப்ரீதியுடன் ரக்ஷிக்கப்பட்டுவந்த மதுவனத்தில் புகுந்து அதிலிருந்த தேனைக்குடித்து, தடுத்தவர்களை அடித்துத் துரத்தி, கடைசியில் ஸுக்ரீவனிடம் போய்ச்சேர்ந்தார்கள். ஹநுமான் ராமனிடத்தில் "கண்டேன் ஸீதையை" என்று சொல்லி, அவள் கொடுத்த சூடாமணியை ஸமர்ப்பித்தான். அதை ராமன் வாங்கி மார்பில்வைத்துக்கொண்டு அழுதான். அவன் கண்ணும் கண்ணீருமாய் ஸுக்ரீவனைப் பார்த்து—"ஏ ஸுக்ரீவனே! பசுமாடு தன்கன்றைக்கண்டு எப்படி பால்சுரக்கிறதோ அந்தமாதிரி இந்த மணியைப்பார்த்து என்ஹ்ருதயம் உருகுகிறது. இஃது என் கலியாணகாலத்தில் என் மாமனாரான ஜனகனால் கொடுக்கப்பட்டு அவள்தலையில் விளங்கிக்கொண்டிருந்தது. இது யாகத்தில் ஸந்தோஷப்பட்டு இந்திரனாலே ஜனகனுக்குக் கொடுக்கப்பட்டது. இதைப்பார்த்ததும், என் தகப்பனாரையும் ஜனகனையும் பார்த்ததுபோல் ஸந்தோஷமுண்டாகிறது. ஸீதையை இப்பொழுது அடைந்துவிட்டதாகவே எண்ணுகிறேன்" என்று சொல்லி, ஹநுமானை, நடந்ததை மறுபடியும் விரிவாய்ச் சொல்லும்படி கேட்டான். ஹநுமானும் நடந்தவைகளையும், ஸீதை சொல்லி அனுப்பினதையும் விரிவாய்ச் சொன்னான். (ஸ-57 முதல் 68 முடிய.)

---

ஸுந்தரகாண்டம் முற்றிற்று.

---

# யுத்தகாண்டம்.

(151) ஹநுமான் சொன்னதை ராமன்கேட்டு, மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்து, ஹநுமானைத் தவிர எவன் ஸமுத்ரத்தைத் தாண்டி ராவணனால் ரக்ஷிக்கப்பட்ட லங்கைக்குள் ப்ரவேசித்து, ஸீதையைக்கண்டு தன் பலத்தைக்காட்டி திரும்பி வருவன் என்று ஹநுமானை ஸ்தோத்ரம்பண்ணி,

𑌏𑌷 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌵𑌭𑍂𑌤𑌸𑍍𑌤𑍁 𑌪𑌰𑌿𑌷𑍍𑌵𑌙𑍍𑌗𑍋 𑌹𑌨𑍂𑌮𑌤𑌃 ।
𑌮𑌯𑌾 𑌕𑌾𑌲𑌮𑌿𑌮𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌦𑌤𑍍𑌤𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥ (ஸ-1-14.)

“ஹநுமானைக் கட்டிக்கொள்வது என்னுடைய * எல்லா ஸொத்துக்கும் ஸமம். அவன்செய்த உபகாரத்துக்குப் பதில் உபகாரம் செய்யும்காலம் வந்திருக்கிறது. அந்த மஹாத்மாவுக்கு இதைக் கொடுக்கிறேன்” என்று சொல்லி, அவனைக் கட்டிக்கொண்டான். (ஸ-1.)

(152) ராமன் ஸமுத்ரத்தை எப்படித் தாண்டுகிறது என்று நினைத்து துக்கப்படுகையில் ஸுக்ரீவன் வீரனை ராமன் துக்கப்படுவது தகுந்தது அன்று என்றும், வீரர்களான வானரங்கள் அவன் காரியத்தை முடித்துவைக்கும் என்றும் நல்ல நிமித்தங்கள் காணப்படுகின்றன என்றும் சொல்லி, அவனைத் தேற்றினன். (ஸ-1-2) இதைக்கேட்டு ராமன் மனந்தேறி, ஹநுமானைப்பார்த்து, “ராவணனுடைய பலம் என்ன? லங்கை எப்படி ரக்ஷிக்கப்படுகிறது?” என்று கேட்க, ஹநுமான் விரிவாய்ப் பதில்சொல்லி, “நகரத்தின் அகழ்களின்மீது போட்டிருந்த மரப்பலகைப்பாலங்களை அழித்து அந்தப் பலகைகளை

---

* பகவானுடைய ஸ்வரூபம், குணங்கள், விபூதிகள், பிராட்டிமார்கள் ஆகிய இவைகளைக்காட்டிலும் அவனுடைய திருமேனி, அதிக யோக்யமாயிருக்கிறது. அஃது எப்போதும் பார்த்துக்கொண்டேயிருக்கத்தகுந்ததாயிருக்கிறது. அவன் எல்லாரையும் ரக்ஷிக்கிறவன்; அதற்கு அவன் திருமேனி ப்ரதானமான உபகரணம். அவன் திருமேனி அவன் ஸ்வரூபத்தைக்காட்டிலும் அதிக ப்ரியமானது என்று ஆளவந்தாரும் “[illegible]” என்று அருளிச்செய்திருக்கிறார்.

அகழ்களில் தள்ளி அவைகளைத் தூர்த்து, மதில்களை இடித்து, நகரத்தைக் கொளுத்தினேன். ராவணனுடைய ஸேனையின் ஒருபாகத்தை ஸம்ஹாரம் பண்ணினேன். எப்படியும் நாம் ஸமுத்ரத்தைத் தாண்டிவிடுவோம். வானரங்களால் லங்கை அழிக்கப்படும் என்று நம்பு. உத்தரவு பண்ணினால் அங்கதன் முதலான நாங்கள் லங்கையை அப்படியே கொண்டுவரு வோம். நல்லமுஹூர்த்தத்தில் புறப்படுவோம்'' என்று சொன்னான். (ஸ-3.) இதைக்கேட்டு ராமன் இது அபிஜித் என்கிற நல்ல முஹூர்த்தம். இதில் புறப்படுவோம். நீலன் முன்னாலேயும், ருஷபன் வலதுபக்கத்திலும், கந்தமாதனன் இடதுபக்கத்திலும், வானரங்களுடன் போகட்டும். நடுவில் நான் ஹநுமான் மேலும், லக்ஷ்மணன் அங்கதன்மேலும் ஏறிக்கொண்டுபோவோம். ஜாம்பவானும், ஸுஷேணனும், வேகதர்சியும் ஸேனையின் நடு பாகத்தை ரக்ஷிக்கட்டும் என்று கட்டளையிட்டான். அப்படியே எல்லாரும் புறப்பட்டு ஸமுத்ரக்கரைக்குப்போனார்கள். போகையில் லக்ஷ்மணன் தான் கண்ட நல்ல நிமித்தங்களை ராமனுக்குக் காட்டினான். வானரஸேனை மஹேந்த்ரமலைக்குப்போய்ச்சேர்ந்தது. ராமன் ஸேனையை ஸமுத்ரக்கரையில் நிறுத்திவிட்டு, அந்த மலையில்ஏறி ஸமுத்ரத்தைப் பார்த்து, அதை எப்படித் தாண்டுகிறது என்று மந்த்ராலோசனை செய்தான். (ஸ-4.)

(153) இது நிற்க: ஹநுமான் திரும்பிப்போனபிறகு, ராவணன் ராக்ஷஸர்களைப் பார்த்து ஹநுமான் செய்தவைகளைச் சொல்லி, "ராமன் வானரஸேனையுடன் ஸமுத்ரத்தை எப்படியாவது தாண்டி இங்கே வருவன். அவனை எதிர்ப்பதற்கு எதைச் செய்யவேண்டியதோ, அதை ஆலோசித்துச் சொல்லுங்கள். எவன் மற்றவர்களுடன் ஆலோசித்து ஒரு வேலையைச் செய்ய யத்னம் பண்ணுகிறானோ, அவன் உத்தமன். எவன் ஒருவனையும் கேளாமல் தான் ஒருவனாகவே ஆலோசித்து யத்னம் செய்கிறானோ, அவன் மத்யமன். எவன் குணங்களையும் தோஷங்களையும் விசாரியாமல் தர்மத்தைவிட்டு விலகி 'இதை நான் செய்வேன்' என்று சொல்லுகிறானோ, அவன் அதமன். ஆகையால் எந்த வேலையையும் தகுந்தவர்களுடன் ஆலோசித்தே செய்யவேண்டும்" என்று சொன்னான். (ஸ-6.) இதைக்கேட்டு ராக்ஷஸர்கள் "குபேரனையும் இந்திரனையும் மற்ற லோகபாலர்

களையும் ஜயித்த நீ ராமனைப்பற்றி ஏன் விசாரப்படுகிறாய்? உன் பிள்ளை இந்த்ரஜித் ஒருவனே ராமனையும் அவன் ஸேனையையும் நாசம்பண்ணச் சக்தியுள்ளவன்" என்றார்கள். (ஸ-7.) பிறகு ஸேனாதிபதியான ப்ரஹஸ்தன் - "தேவர்கள் முதலானவர்கள் உன்னை எதிர்க்கச் சக்தியுள்ளவர்கள் அல்லர். வானரங்களாலே அது முடியாது என்று சொல்லவும் வேண்டுமோ? எனக்கு உத்தரவு கொடு. நான் ஒருவனே பூமியில் வானரப்பூண்டில்லாமல் செய்கிறேன்" என்று சொன்னான். அப்படியே துர்முகனும் வஜ்ரதம்ஷ்ட்ரனும், நிகும்பனும், வஜ்ரஹநுவும் சொன்னார்கள். (ஸ-8.) இவர்களும் மற்ற ராக்ஷஸர்களும் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு கிளம்பி, "ராமன் முதலானவர்களை இப்போதே கொல்லுகிறோம்" என்று சொல்ல, விபீஷணன் அஞ்சலிசெய்துகொண்டு, "முதல் மூன்று உபாயங்களால் ஒன்றைச் செய்யமுடியாத நிலைமையில்தான் நாலாவது உபாயம் செய்வதற்குக் காலம்வருகிறது என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். முதல் மூன்று உபாயங்களைச் செய்யாமல் தண்டம் என்கிற நாலாவது உபாயத்தைச் செய்யக்கூடாது. உன்னுடைய தண்டத்துக்கும் ராமன் தகுந்தவன் அன்று. ஏன் என்றால், நன்கு ஆராய்ந்துபார்த்து முறைப்படி உபயோகிக்கப்படும் பராக்ரமம், (தண்டோபாயம்) ஜாக்ரதை இல்லாதவர்கள், வேறு சத்ருக்களால் எதிர்க்கப்பட்டவர்கள், தெய்வ பலம் குறைந்தவர்கள் இவர்களிடம்தான் பயன்படும். ராமன் இவர்களில் சேர்ந்தவன் அல்லன். அவனுடன் சண்டைசெய்ய எப்படி இச்சிக்கிறாய்? ராமன் பாக்யக்குறைவுள்ளவன் அல்லன் என்று சொல்ல வேண்டுமோ? ஹநுமான் தனியாய் ஸமுத்ரத்தைத் தாண்டி லங்கையை நாசம்பண்ணினானே. இந்த அருமையான பெரும் காரியத்தைச்செய்ய எவனும் மனத்தால்கூட எண்ணமாட்டான். இதுவே போதாதா? எதிரிகளின் பலத்தை விசாரிக்காமல் அலக்ஷ்யம் செய்யக்கூடாது. ராக்ஷஸராஜாவே! நீ ஜனஸ்தானத்திலிருந்து ஸீதையைக் கொண்டுவந்து ராமனுக்கு அபராதம் செய்திருக்கிறாய். ராமனோ உனக்கு ஓர் அபராதமும் செய்யவில்லை. கரனைக் கொன்றதால் ராமன் அபராதம் செய்தவனாகான். கரன் ராமனை எதிர்த்தால், அவன் தன்னை ரக்ஷித்துக்கொள்ளவேண்டாமோ?

க்ஷயம் ப்ராணிநாம் ப்ராணா ரக்ஷிதவ்யா யதாபலம் ॥

(ஸ-9-14.)

பிராணிகள், தங்களுடைய பிராணனைத் தங்கள் சக்திக்குத் தகுந்தபடி ரக்ஷிக்கவேண்டியது. பிறரின் மனைவியைக் கொண்டு வருவது யசஸைக்கெடுக்கும்; ஆயுளைமுடிக்கும்; அர்த்தங்களை நாசம்செய்யும்; மறுபடியும் பாபம்செய்யத் தூண்டும். ஆகையால் ஸீதைநிமித்தம் பெரும் பயம் நமக்கு வந்திருக்கிறது. கலஹத்துக்காகவே அவள் கொண்டுவரப்பட்டாள். அவளை விட்டு விட்டால், கலகம் நேரிடாது. ராமன் தர்மத்தைச் செய்கிறவன்; வீர்யமுள்ளவன்; அவனோடு சண்டைசெய்ய நாம் ஸமர்த்தர்கள் அல்லர். ஆகையால் ஸீதையை அவனிடம் கொடுத்துவிட வேண்டும். இதை உடனே செய்யவேண்டும். தாமதித்தால் ராமன், பாணங்களாலே இந்த நகரத்தைப் பிளந்துவிடுவன். நான் உனக்குப் பந்துவானதாலே இந்த ஹிதத்தைச் சொல்லுகிறேன். நான் சொன்னதைச்செய். ஸீதையைக் கொடுத்துவிடு" என்று சொன்னான். இதைக்கேட்டு ராவணன் ராக்ஷஸர்களை அனுப்பிவிட்டுத் தன்வீடுபோய்ச் சேர்ந்தான். (ஸ-9.)

(154) மறுநாள் காலையில் விபீஷணன், தமையன் க்ருஹத்துக்குப்போய், வேறு ஜனங்கள் இல்லாமல் மந்திரிகளுடன் ராவணன் இருக்கையில் "என்றைக்கு ஸீதை இங்கே வந்தாளோ, அன்றுமுதல் நமது நகரத்தில் பல துர்நிமித்தங்கள் காணப்படுகின்றன. நீ செய்த கார்யத்துக்கு ப்ராயச்சித்தம் ராமனிடத்தில் ஸீதையைக் கொடுத்துவிடுவதுதான். நான், ஜீவனம் முதலியவற்றில் ஆசையாலோ, உண்மையை அறியாமலோ இப்படிச் சொன்னதாக நீ எண்ணினாலும், நீ இதைப் பொறுத்துக்கொள்ளவேண்டும்" என்று ஹிதத்தை உபதேசம்பண்ணினான். ராவணன், "நான் ஓரிடத்திலிருந்தும் பயத்தை எதிர்பார்க்கவில்லை. ராமன் ஒருபோதும் ஸீதையை அடையப்போகிறதில்லை. தேவர்கள் முதலானவர்களுடன் சேர்ந்துவந்தாலும் அவன் என்முன்னால் எப்படி நிற்கமுடியும்?" என்று சொல்லி, விபீஷணனை அனுப்பிவிட்டான். (ஸ-10.)

(155) மறுநாள்காலையில் ராவணன், இன்னதைச் செய்ய வேண்டும் என்று நிச்சயம்பண்ணி, ஸபைக்குப்போய் சிங்கா

ஸனத்தில் உட்கார்ந்தான். விபீஷணன்முதலானவர்கள் வந்து, அவனுக்கு நமஸ்காரம்பண்ணி, தங்கள் தங்கள் ஆஸனங்களில் உட்கார்ந்தார்கள். (ஸ-11.) ராவணன் அவர்களைப் புகழ்ந்து பேசி, ஸீதையின் அழகை வர்ணித்து, "அவள் எனக்கு வசப்படவில்லை; அவளை நான் அடையவேண்டும்; தசரதன்பிள்ளைகளிருவர்களைக் கொல்லவேண்டும்; அவர்கள் வானரஸேனையுடன் ஸமுத்ரத்தின் வடகரையிலிருக்கிறார்கள். இந்த இரண்டு விஷயங்களிலும் செய்யவேண்டியதை ஆலோசித்துச் சொல்லுங்கள்" என்று கட்டளையிட்டான். அவன் தம்பியான கும்பகர்ணன்— "நீ எங்களுடன்கலந்து ஆலோசிக்காமல் ஸீதையைக் கொண்டு வந்துவிட்டாய். ஆலோசித்திருந்தால் அது நல்லவழியில் முடிந்திருக்கும். எந்த அரசன் நியாயத்தை அறிந்து விசாரம்செய்து ஒருவியாபாரத்தைச் செய்கிறானோ, அந்த அரசன் பிறகு வருத்தப்படுவதில்லை. எவன் முன் செய்யவேண்டியதைப் பின்னும், பின் செய்யவேண்டியதை முன்னுமாகச் செய்கிறானோ, அவனுக்கு நீதி அநீதி ஒன்றும் தெரியாது. சத்ருக்கள் ஒருவனுடைய பலத்தை அறிந்துகொண்டு அவனை எதிர்ப்பதற்கு எப்போது இடம் அகப்படும் என்று காத்துக்கொண்டிருக்கிறார்கள். ஒருவன் ஒன்றையும் விசாரியாமல் ஒருகாரியத்தில் சபலனாய் இறங்குவதே அவர்கள் தேடிக்கொண்டிருக்குமிடம். உன் சத்ருக்களைக்கொன்று நீ செய்த வியாபாரத்தை சரிப்படுத்துகிறேன். நான் ராமனை யமன்வீட்டிற்கு அனுப்பினபிறகு உனக்கு ஸீதை வசப்படுவள். உயர்ந்த மத்யத்தைப் பானம்பண்ணு; இஷ்டப்படி ஸுகமாயிரு" என்று சொன்னான். (ஸ-12.)

(156) மஹாபார்ச்வன் என்கிற மந்திரி ஒருமுஹூர்த்தம் விசாரித்து, "எவன் காட்டுக்குவந்து கையில்கிடைத்த தேனைப் பானம்பண்ணுகிறதில்லையோ, அவன் மூடன். ஈசுவரனான உனக்கு எவன் ஈசுவரன்? சத்ருக்கள்தலையில் காலைவைத்து, ஸீதையுடன் ஸுகத்தையடை. அவள் உனக்கு வசப்படாவிட்டால் என்ன? பலாத்காரமாய் அவளை அநுபவி. பிறகு பயமுண்டானால், அதைப் போக்கலாம். நாங்களும் கும்பகர்ணனும் இந்த்ரஜித்தும் சேர்ந்தால் வஜ்ரமும்கையுமாயிருக்கிற இந்திரனையும் தடுக்கமுடியும். விபீஷணன் சொன்னதை நான் ஒப்புக்கொள்ளவில்லை. சக்தியில்லாதவர்கள்வேலை முதல்மூன்று

உபாயங்களை ப்ரயோகிப்பது. அவைகளைவிட்டுத் தண்டத்தால் உன் வேலையை முடித்துக்கொள்'' என்று சொன்னான். அதைக் கேட்டு ராவணன், அவன் சொன்னதைக்கொண்டாடி, தான் ஒருஸ்திரீயையும் பலாத்காரம் பண்ணக்கூடாது. பண்ணினால் தன்தலை வெடித்துப்போகும் என்று முன்பு பிரம்மா தனக்குக் கொடுத்த சாபத்தை அவனுக்குத் தெரிவித்தான். தன்னுடன் சண்டைசெய்ய ராமனுக்குச் சக்தியிராது என்று சொல்லி, தன்னைப்பற்றி புகழ்ந்துகொண்டான். (ஸ-13.)

(157) இவர்கள் சொன்னதைக்கேட்டு விபீஷணன், "எதற்காக ஸீதையை இங்கே கொண்டுவந்தாய்? அவள் பெரிய ஸர்ப்பம்; அவளுடைய ஐந்துவிரல்கள் ஐந்துதலைகள்; அவளுடைய மார்பு அதன் உடல்; அவளுடைய சிரிப்பு அதன்பல்லு; அவள் கவலைப்படுவது அதன் விஷம். மலைச்சிகரம்போன்ற வானரங்கள், பற்களும் நகங்களும் ஆகிய ஆயுதங்களையுடையவைகளாய் லங்கைக்கு வருவதற்குள் ஸீதையை ராமனிடம் கொடுத்துவிடு. எதற்குள் வஜ்ரத்துக்கு ஸமமானவைகளான ராம பாணங்கள் வாயுவேகத்துடன் வந்து ராக்ஷஸச்ரேஷ்டர்களின் தலைகளைக் கொய்துகொண்டு போகவில்லையோ? அதற்குள் ஸீதையை ராமனிடம் கொண்டுபோய்க்கொடுத்துவிடவேண்டும். ஏ ப்ரஹஸ்தா! ராமனுடைய கூர்மையான பாணங்கள் உன்னுடைய பிராணனை அபஹரிக்க உன் உடம்பில் இன்னும் பிரவேசிக்கவில்லை. ஆகையால்தான் நீ இப்படிப் பிதற்றுகிறாய். கும்பகர்ணனும், இந்த்ரஜித்தும், ராஜாவான ராவணனும், மஹாபார்ச்வனும், மஹோதரனும், நிகும்பனும், கும்பனும், அதிகாயனும் ராமனுக்குமுன்னால் சண்டையில்நிற்கச் சக்தியுள்ளவர்கள் அல்லர். நீ ஸூரியனாலோ மருத்துக்களாலோ ரக்ஷிக்கப்பட்டாலும், இந்திரனுடைய மடியிலும் யமன் மடியிலும் உட்கார்ந்திருந்தாலும், ஆகாசத்திலோ பாதாளத்திலோ புகுந்தாலும், ராமனிடமிருந்து விடுபட்டு உயிருடன் வெளிக்கிளம்பமுடியாது" என்று சொன்னான். இதைக்கேட்டு ப்ரஹஸ்தன் "தேவர்களாலோ, அஸுரர்களாலோ, யக்ஷர்களாலோ, கந்தர்வர்களாலோ, நாகங்களாலோ, பக்ஷிகளாலோ எங்களுக்குப் பயமில்லை. மனிதனை ராமனிடமிருந்தா பயம்?" என்று பதில் சொன்னான், விபீஷணன் ராவணனுடைய ஹிதத்தைவிரும்பியவனாய்—"அதர்

மத்தில் புத்தியைச் செலுத்துகிறவன் எப்படி ஸ்வர்க்கத்தை அடையமுடியாதோ, அப்படியே நீங்கள் செய்வதாகச் சொல்லுவதும் ராமனிடம் சேராது. ராமன் காரியம் செய்வதில் ஸமர்த்தன். ஓடமில்லாதவன் ஸமுத்ரத்தை எப்படித் தாண்டமுடியாதோ, அப்படியே நீயாவது நானாவது மற்றவர்களாவது ராமனைக் கொல்லுவது முடியாது. உண்மையில் மித்ரன் அல்லாமல் மித்ரன்போல் நடிக்கிற நீங்கள் ராக்ஷஸர்களின் நாசத்துக்காக ராஜாவை அநுஸரிக்கிறீர்கள். அவன் நன்றாய் ஆராய்ந்துபாராமல் வேலைசெய்கிறான். ஆயிரம் தலைகளையுடையதும் பலமுள்ளதும் பயங்கரமுமான பெரும் பாம்பு ராஜாவைச் சுற்றிக்கொண்டு இருக்கிறது. அதனிடமிருந்து ராஜாவை விடுவியுங்கள். ராஜாவுக்கும் ராக்ஷஸர்களுக்கும் இந்த நகரத்துக்கும், ஸ்நேஹிதர்களுக்கும் இது ஹிதம் என்று நான் எண்ணியே இப்படிச் சொன்னேன்" என்று சொன்னான். (ஸ-14.)

(158) விபீஷணன் சொன்னதைக்கேட்டு ராவணன்பிள்ளை இந்த்ரஜித்து "அப்பா! என்ன உம்முடைய தம்பி வார்த்தை? அது பயந்தவன் பேச்சு. அது பிரயோஜனமில்லாதது. இந்தக் குலத்தில் பிறக்காதவன்கூட இப்படிப் பேசமாட்டான். இந்தக் குலத்தில் பிறந்தவர்களில் உம்முடைய தம்பி விபீஷணன்தான், பலம், வீர்யம், பராக்ரமம், சௌர்யம், தைர்யம், தேஜஸ் ஆகிய இவைகளால் விடப்பட்டவன். (விபீஷணனைப் பார்த்து,) "ஒரு ஸாதாரண ராக்ஷஸனே அந்த ராஜபுத்ரர்களைக் கொல்லச் சக்தன். பயந்தவனே! ஏன் பயமுறுத்துகிறாய்? நான் மூன்று உலகங்களுக்கும் நாதனாயிருக்கிற இந்திரனைப் பூமியில் தள்ளினேன். தேவக்கூட்டங்கள் பயந்து நாலுதிக்கிலும் ஓடினார்கள். இந்த இரண்டு ஸாதாரண மனிதர்களைக்கொல்ல என்றால் முடியாதா?" என்று சொன்னான். இதைக்கேட்டு, விபீஷணன், "அப்பனே! நீ சிறுபிள்ளை; உன் புத்தி இன்னும் முதிர்ச்சியை அடையவில்லை. ஒன்றை ஆராய்ந்து பார்த்துத் தீர்மானிக்க உன்னாலாகாது. ஆகையால், உனக்கு நாசத்தை உண்டுபண்ணிக் கொள்ளவே அர்த்தமில்லாத பல பேச்சுக்களைப் பேசுகிறாய். ராமனிடமிருந்து உன் தகப்பனாருக்குக் கேடு வருமென்று நான் சொன்னதைக் கேட்டபிறகும் நீ உன் தகப்பனார்செய்த காரியத்துக்கு ஸம்மதி கொடுக்கிறாயே, உன்னை அவனுக்குப் பிள்ளை

என்று சொல்லுகிறார்கள். அவனுக்கு வேண்டியவன்போல் தோன்றுகிறாய். உண்மையில் நீ அவனுக்குச் சத்ரு. நீ கெட்ட புத்தியுள்ளவன். உன்னைத் தண்டிக்கவேண்டும். மந்த்ராலோசனை செய்கிறவர்களின் ஸமீபத்தில் எவன் உன்னைக் கொண்டு வந்து விட்டானோ, அவனையும் தண்டிக்கவேண்டும். (ராவணனைப் பார்த்து) ஸீதையை ராமனிடம் கொடுத்துவிட்டு நாம் ஸுகமாக இருப்போம்" என்று சொன்னான். (ஸ-15.) இந்த ஹிதமான வார்த்தையைக்கேட்டு ராவணன் "ஒருவன் விரோதியோடோ, அல்லது கோபங்கொண்ட கொடிய விஷமுள்ள பாம்போடோ வஸிக்கலாம். ஆனால் மித்ரன் என்கிற பெயருள்ளவனும் சத்ருவினிடத்தில் பக்ஷபாதமுள்ளவனுமான ஒருவனோடு வஸிக்கக்கூடாது. உலகங்களில் தாயாதிகளின் ஸ்வபாவம் எனக்குத்தெரியும். ஒருவனுக்கு வ்யஸனம் வந்தால் அவர்கள் ஸந்தோஷப்படுகிறார்கள். அவர்கள் தங்களுக்குள்ளே எவன் முக்யமானவனோ, வேலையைச்செய்துமுடிக்கிறவனோ, படித்தவனோ, சூரனோ அவனை அவமானப்படுத்துகிறார்கள். அவர்கள் தங்கள் உள்ளெண்ணத்தைக் காட்டாமல் மேலுக்கு வேண்டியவர்கள்போலே தங்களைக் காண்பித்துக்கொண்டு வியஸனம் வந்தபோது த்ரோஹம் பண்ணுவார்கள். அவர்களைக்கண்டு பயப்படவேண்டும்.

வித்யதே கோஷு ஸம்பந்நம் வித்யதே ப்ராஹ்மணே தம: |
வித்யதே ஸ்த்ரீஷு சாபல்யம் வித்யதே ஜ்ஞாதிதோ பயம் ||
(ஸ-16-9)

கோக்களிடத்தில் ஸம்பத்தும், ப்ராம்மணனிடத்தில் இந்திரியஜயமும், ஸ்திரீகளிடத்தில் சஞ்சல ஸ்வபாவமுமிருக்கின்றன. அப்படியே தாயாதிகளிடமிருந்து பயமிருக்கிறது. தாமரை இலையில் நீர்த்துளியைப்போலவும், புஷ்பத்தில் தேன் குடிக்கும் வண்டைப்போலவும், அயோக்யர்களுடைய ஸ்நேஹம் ஓரிடத்திலும் பற்றுதலில்லாமலும் நிலைத்துநிற்காமலுமே காணப்படுகிறது. உன்னைத்தவிர வேறொருவன் இப்படிப் பேசினால் உடனே இருந்தவிடம் தெரியாமல் போய்விடுவன். நீ நம்முடைய குலத்தைக் கெடுக்கவந்தவன். உன்னைச் சுடவேண்டும்" என்று விபீஷணனை நிந்தித்தான். இதைக்கேட்டு விபீஷணன் கதையும் கையுமாய் நான்கு ராக்ஷஸர்களுடன்கூடக் கிளம்பி ஆகா

சத்திலிருந்துகொண்டு ராவணனைப்பார்த்து, "நீ எனக்குத் தமையன்; உன்னிஷ்டம்போல் என்னைப்பற்றி எதைவேண்டுமானாலும் சொல். தமையன் தகப்பனுருக்கு ஸமானன். தம்பியாலே கௌரவம்பண்ணத்தகுந்தவன். ஆனால் உன்னுடைய கொடுமையான இந்தப்பேச்சைப் பொறுக்க என்னால் முடியவில்லை. ஒருவன் ஒருவனுடைய ஹிதத்தை விரும்பி நியாயமான வார்த்தையைச்சொன்னாலும் காலத்துக்கு வசப்பட்டவர்கள் அந்த வார்த்தையைக் கேட்பதில்லை. ராமனுடைய கூர்மையான பாணங்களால் நீ கொல்லப்படுவதைப் பார்க்க எனக்கு மனமில்லை. நான் சொன்னதைப்பொறுத்துக்கொள். உன்னையும் ராக்ஷஸர்களோடுகூடின இந்த நகரத்தையும் எப்படியாவது ரக்ஷித்துக்கொள். உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும். நான் போகிறேன்; என்னைவிட்டு நீ ஸுகமாய் இரு" என்று சொன்னான். (ஸ-16.)

(159) விபீஷணன் இப்படிச்சொல்லி, எங்கே ராமனும் லக்ஷ்மணனும் இருந்தார்களோ, அங்கே வந்துசேர்ந்தான்.* அவன் ஆகாசத்தில் வருவதைக் கண்டு ஸுக்ரீவன், ஹநுமான் முதலான வானரங்களைப் பார்த்து, "இதோ ஒரு ராக்ஷஸன் நான்குபேர்களுடன் ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டு வருகிறான். நம்மைக் கொல்லவருகிறான் என்று எண்ணுகிறேன்" என்று சொன்னான். இதைக்கேட்டு வானரங்கள் "ராஜாவே! உத்தரவு கொடு, இவர்களைக் கொன்றுவிடுகிறோம்" என்று கேட்டன.

---

* விபீஷணன் தமயனுக்கு அநுகூலமாயிருப்பதை விட்டுவிட்டு எப்படி அவன் சத்ருவிடம் போகலாம் என்றால், தமயனுக்கு அநுகூலமாயிருப்பது ஸாமாந்யதர்மம். பகவானுக்குக் கைங்கர்யம் செய்வது விசேஷதர்மம். இரண்டுக்கும் விரோதமிருந்தால் ஸாமாந்யதர்மத்தை விட்டுவிடவேண்டியது. விபீஷணன் ராமனை ஸர்வேச்வரனான நாராயணன் என்று அறிந்தவன். தமயனுக்கு அநுகூலனாயிருந்துகொண்டே ராமனுக்குக் கைங்கரியம் செய்யவேண்டும் என்று ஆசைப்பட்டவன். ஆகையாலேதான் ராவணனுக்குப் பலதடவைகளில் நல்ல புத்தியைச் சொன்னான். அவன் கேட்கவில்லை. இனிமேல் இங்கிருப்பதில் ப்ரயோஜனம் இல்லையென்று நினைத்து ராமனிடம் போனான். தன் அநுஷ்டானத்தாலே பகவானுடைய கைங்கர்யமே உயர்ந்த தர்மம் என்றும் அதற்கு விரோதமான ஸாமாந்யதர்மத்தை விட்டுவிடவேண்டும் என்றும் உலகத்துக்குக் காட்டினான்.

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருக்கையில், விபீஷணன் ஆகாசத்திலிருந்துகொண்டே, தான் ராவணன் தம்பி என்றும், தம் பெயர் விபீஷணன் என்றும், ஜனஸ்தானத்திலிருந்து கொண்டு வந்த ஸீதையை ராமனிடம் கொடுத்துவிடவேண்டியது என்று ராவணனிடம் பலதடவை சொல்லியும் அவன் கேட்கவில்லை, என்றும் சொல்லி, "அவனால் நான் வேலைக்காரனைப்போல் அவமானம் செய்யப்பட்டேன்; * பிள்ளைகளையும் பாரியைகளையும் விட்டுவிட்டு ராகவனைச் சரணம் அடைகிறேன். ¶ எல்லா உலகங்களுக்கும் அவன் சரண்யன்; அவன் மஹாத்மா; அவனிடம் விபீஷணனை நான் வந்திருக்கிறேன் என்று சீக்கிரம் தெரிவிக்க வேண்டும்" என்று ப்ரார்த்தித்தான். இதைக்கேட்டு ஸுக்ரீவன் ராமனிடம்போய் விபீஷணன் சொன்னதைத் தெரிவித்து "இது செய்யத்தகுந்தது இது செய்யத்தகாதது என்கிற விசாரத்திலும், விசாரித்துப்பண்ணும் தீர்மானப்படி நடப்பதிலும், ஸேனைகளை அணிவகுப்பதிலும், சாரர்களைக்கொண்டு சத்ருவின் பலத்தை அறிவதிலும் நீ கவனமுள்ளவனாயிருக்கவேண்டும். இந்த ராக்ஷஸர்கள், தங்கள் இருப்பிடம் தெரியாமல் மறைந்து நிற்பவர்கள்; வேண்டிய ரூபங்களை எடுத்துக்கொள்பவர்கள்; சூரர்கள்; கபடமான உபாயங்களை அறிந்தவர்கள். அவர்களிடத்தில் ஒருபோதும் நம்பிக்கை வைக்கக்கூடாது. விபீஷணன், ராவணனுடைய தூதனாயிருந்து நமக்குள்ளே புகுந்து பேதத்தைச் செய்யக்கூடும். ஸந்தேஹமில்லை. அல்லது அவனை நம்பினபிறகு இடைவெளி அகப்பட்டபோது நம்மைக் கொல்லுவன். ஆகையால், நீ பொறுமையுள்ளவனாயிருந்தாலும் அவனைத்

---

* இஃது உபலக்ஷணம். இதனால் விபீஷணனுக்கு ஒன்றிலும் ஆசையில்லை என்றும் அவன் ராஜ்யத்தை அபேக்ஷிக்கவில்லை என்றும் விளங்குகிறது. அவன் சரணாகதிபண்ணினது ராமனுடைய கைங்கர்யம் பெறுவதற்காக.

¶ இதனால், அபராதம்பண்ணின ராவணனுக்கும் ராமன் சரண்யன் என்பது விபீஷணனின் கருத்து. அவன் துஷ்டபுத்தியுள்ளவனாகையாலே இதையறியவில்லை. தான் அவன் தம்பியாயிருந்தபோதிலும் தன்னை ராமன் அங்கீகரிப்பன் என்று விபீஷணனுக்குள்ளவிச்வாஸமும் காட்டப்படுகிறது. "மஹாத்மா" என்கிற பதத்தாலே ராமனுடைய பரத்வமும், "ராகவாய" என்பதாலே அவனுடைய ஸௌலப்யமும் காட்டப்படுகின்றன. இரண்டும் சேர்ந்தால்தான் ரக்ஷகனைத்தேடுகிற ஜீவனுக்கு ப்ரயோஜனமுண்டாகும்.

தண்டிப்பது தகுந்தது என்று எண்ணுகிறேன்'' என்று சொன்னான். இதைக்கேட்டு, ராமன், ஹநுமான் முதலான வானரங்களைப் பார்த்து "ஸுக்ரீவன் சொன்னதைக் கேட்டீர்களே, உங்களுக்கு என்ன தோன்றுகிறது சொல்லுங்கள்'' என்று கேட்டான். இதைக்கேட்டு எல்லாரும் "மூன்று உலகங்களிலும் உனக்குத் தெரியாதது கிடையாது. ஆனபோதிலும் உனக்கு எங்களிடமுள்ள ஸ்நேஹத்தாலே எங்களைக் கேட்கிறாய். நீ உண்மையில் *உறுதியுள்ளவன்; §சூரன்; தர்மம் அறிந்தவன்; மிகுந்த பராக்ரமமுள்ளவன்; எதையும் ஆராய்ந்து செய்பவன்; மறதியில்லாதவன்; நண்பர்களை நம்பி நடப்பவன். நாங்கள் ஒவ்வொருவனும் தனித்தனியாகத் தோன்றினதைச் சொல்லுகிறோம்'' என்று சொன்னார்கள். அவர்களுள் "விபீஷணன் சத்ருவினிடமிருந்து வந்திருக்கிறான். அவனைப்பற்றி ஸந்தேஹப்படவேண்டியதுதான். அவனை நம்பிக்கைக்குத் தகுந்தவனாக உடனே ஒப்புக்கொள்ளக்கூடாது. அவனிடத்தில் பெரிய தோஷமிருந்தால் அவனை விட்டுவிடவேண்டியது. அநேக குணங்கள் இருந்தால் அவனைச் சேர்த்துக்கொள்ளலாம்'' என்று அங்கதனும், "இவனிடத்தில் புத்திமானான சாரனை அனுப்பி, பரீக்ஷித்து அவனைச் சேர்த்துக்கொள்ளவேண்டியது'' என்று சரபனும், "ராவணன் உன்னிடத்தில் வைரமுள்ளவன்; பாபம் பண்ணுகிறவன். அவனிடமிருந்து இவன் வந்திருக்கிறான். இவன் வந்தகாலமும் தேசமும் தகுந்தவைகள் அல்ல. பயத்தாலே வந்திருக்கிறானோ என்றால், நீ வெகுதூரத்திலிருக்கிறாய்; பயம் உண்டாக இடமில்லை. அவன் ராஜாவை விட்டுவிடுவதற்கு இது காலம் அன்று. ஆகையால், இவனைப்பற்றி ஸந்தேஹப்படவேண்டியது'' என்று ஜாம்பவானும், "இவனிடம் ஒருவனை அனுப்பி நல்லவார்த்தையாய் ராவணனைப்பற்றி கேட்கவேண்டியது. அவன்

---

* இது 'ஸத்யவ்ரத' என்பதின் பொருள். ராமனுடைய வ்ரதம் தன்னிடம் சரணாகதிபண்ணினவனை ரக்ஷிப்பது. ராவணனும் சரணாகதி பண்ணினால் அவனையும் ரக்ஷிக்கிறவன். இந்த வ்ரதத்தைச் செய்து முடிப்பதிலும் எவனும் அவனைத் தடுக்கமுடியாது என்பது 'ஸத்ய' என்னும் பதத்தின் கருத்து.

§ இந்தத் தர்மத்தைச் செய்வதில் தடைசெய்கிறவனை விரோதியாயிருந்தால் அம்புகளாலும், ஆச்ரிதனாயிருந்தால் தகுந்த ஸமாதான வாக்யங்களாலும் ஜயிக்கிறவன் என்பது "சூர'' என்பதின் கருத்து.

அபிப்பிராயத்தை அறிந்து, அவன் துஷ்டனு, நல்லவனு என்பதைத் தீர்மானித்து அதற்குத்தகுந்தபடி செய்யவேண்டியது" என்று மைந்தனும் சொன்னார்கள். பிறகு, ஹநுமான் "நான் கக்ஷிபேசுவதில் ஸமர்த்தன் என்பதாலோ, மற்றவர்களிடத்தில் பொறுமையாலோ, அவர்களைக்காட்டிலும் கெட்டிக்காரன் என்கிற எண்ணத்தாலோ, எதைப்பேசினுல் என்ன என்ற நினைவாலோ நான் பேசவரவில்லை. உன்னிடத்தில் நான் வைத்திருக்கிற கௌரவத்தினுல் பேசுகிறேன். மற்றவர்கள் சொன்னதில் தோஷம் எனக்குத் தோன்றுகிறது. அவர்கள் சொன்னபடி செய்வது முடியாது. ஒருவனுடைய குணதோஷங்களை அறிவதற்கு அவனை ஒரு வேலையில் ஏவவேண்டும். குணதோஷங்களை அறியாமல் ஒருவனை ஒருவேலையில் ஏவுவது நல்லதன்று. ஆகையால், அங்கதன் சொன்னது பொருந்தாது. சரபன் சாரனைக்கொண்டு அறியவேண்டியது என்று சொன்னதும் சரி அன்று. தூரத்திலிருக்கிறவனை அறிவதற்குத்தான் சாரனை அனுப்புவது. இவனோ ஸமீபத்தில் கண்ணுக்கு எதிரில் இருக்கிறுன். அவனை மறைவில்லாமல் ஆகாயத்தில் நன்றுய்ப் பார்க்கிறோம். இடமும் காலமும் தகுந்தவைகள் அல்ல என்று ஜாம்பவான் சொன்னதையும் நான் ஒப்புக்கொள்ளவில்லை. இதுதான் தகுந்த இடம். இதுதான் தகுந்தகாலம். ஸீதையைக் கொண்டுவந்ததாலே ராவணன் கெட்ட ஸ்வபாவமுள்ளவன் என்றும், அதனுல் அவனுக்கும், அவனிருக்கும் ஊருக்கும் நாசம் வரும் என்றும் ஆலோசித்தும், கரன் முதலானவர்களைக் கொன்றதாலும், வாலியைக்கொன்று ஸுக்கிரீவனுக்கு ராஜ்யத்தைக் கொடுத்ததாலும் உன் பராக்ரமத்தையும் ராவணனுடைய தோஷங்களையும் உன்னுடைய குணங்களையும் பார்த்துந்தான் இவன் இங்கே வந்திருக்கிறுன். ஒருவனை அனுப்பி இவன் அபிப்ராயத்தை அறியவேண்டும் என்று மைந்தன் சொன்னுன். இதுவும் முடியாது. வந்திருப்பவன் புத்திமானுயும் உண்மையில் யோக்யனுமாக இருந்தால் நாம் அனுப்புகிறவன் அவனிடம் போய் ஏதாவதொன்று கேட்டால் "இவன் நம்மிடத்தில் ஸந்தேஹங்கொண்டு பரீக்ஷை பண்ணுகிறுன்" என்று அறிந்துகொண்டு பலவிதமாகச் சங்கிக்கத் தொடங்குவான். அப்பொழுது நம் பிரயத்தினமில்லாமல் தானுகவந்த ஒரு மித்திரனை வீணு

கேள்விகேட்டு நாம் கெடுத்துவிட்டதாய்த்தீரும். வந்திருப்பவன் உண்மையில் அயோக்யனுயிருந்தால், பரீக்ஷைக்காகக் கேள்வி கேட்பவனுடைய குரலின் மாறுதல்களால் வாஸ்தவ விஷயத்தைத் தெரிந்துகொண்டு, அதற்குத் தக்கபடி தானும் கபடமாகவே பதில் சொல்லுவான். அப்பொழுது நாம் எப்படி அவனுடைய உள்கருத்தை ஊஹித்தறியமுடியும்? விபீஷணன் சொல்லுகிற பேச்சைக்கேட்டால், அவன் துஷ்டன் என்று தோன்றவில்லை; அவன் முகத்தில் கலக்கமில்லை; தெளிவு தோன்றுகிறது. ஆகையால், அவனிடத்தில் எனக்கு ஸந்தேஹம் இல்லை. ஒருவன் தன் ஸ்வபாவத்தை மறைக்கமுடியாது. அவன் முகத்திலும் பேச்சிலும் அது தோன்றுமே. இவன் ராவணனிடம் தோஷங்களையும் உன்னுடைய குணங்களையும் பார்த்து *ராஜ்யத்தை அடைவதற்காக இங்கே வந்திருக்கலாம். என் புத்தியில் தோன்றியதைச் சொன்னேன். மேலே எதைச் செய்யவேண்டியதோ, அதை நீ ஆலோசிக்கவேண்டும் என்று சொன்னான். இப்படி மந்திரிகள் தனித்தனி அபிப்ராயங்களைத் தெரிவித்தார்கள். (ஸ-17.)

(160) ஹநுமான் சொன்னதைக்கேட்டு ராமன் "நானும் ஒன்று சொல்ல விரும்புகிறேன். அதை நீங்கள் கேளுங்கள்.

§மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந ।
தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம் ॥

(ஸ-18-3)

§மித்ரனுக வந்தவனை அவனிடம் தோஷமிருந்தாலும் ஒருவிதத்திலும் நான் விடமாட்டேன். இதைப் பெரியோர்கள் ஒப்புக்கொள்ளுவார்கள் என்று சொன்னான். இதைக்கேட்டு ஸுக்

* இது ராமனிடத்தில் இருந்த ஸ்நேஹத்தாலே ஹநுமான் புத்தி கலங்கி ராஜநீதியைச்சொன்னபடி; வாஸ்தவத்தில் விபீஷணன் ஒன்றையும் ஆசைப்படவில்லை என்று அவன் வாக்யத்தாலே தெரிகிறது. (19-5)

§ "மித்ரபாவேந" என்பதற்கு மித்ரனல்லாமலிருந்தும், மித்ரன் வேஷத்துடன் என்றும் பொருள்கொள்ளலாம். "மித்ர" என்ற சொல்லாலே, ராமன் சரணுகதி பண்ணினவனைத் தனக்கு ஸமமாக எண்ணினன் என்று ஏற்படுகிறது. மித்ரனுக என்று பொருளானுல், சரணு

கிரீவன் ஆலோசித்து "இவன் ராக்ஷஸன், இவன் தோஷமுள்ளவனே, தோஷமில்லாதவனே, எப்படியிருந்தால் என்ன? அவனாலே நமக்கு என்ன ப்ரயோஜனம்? இவ்விதமாகக் கஷ்டம் அடைந்த தன் தமையனைவிட்டு வந்திருக்கிறானே. இவன் நன்றி கெட்டவன். இவன் எவனைத்தான் விடமாட்டான்" என்று சொன்னான். இதைக்கேட்டு எல்லாரையும் பார்த்து மந்தஹாஸம் பண்ணிக்கொண்டு ராமன் "லக்ஷ்மணா! இங்கே மிகவும் நுட்பமாயுள்ள (மிகவும் ஸூக்ஷ்மமான) ஒரு விஷயம் எனக்குத் தோன்றுகிறது. இது எல்லா அரசர்களிடமுமிருப்பதை உலகத்தில் நேரில் காண்கிறோம். ஒருவனுக்கு அவனுடைய ஜ்ஞாதிகளும் அடுத்ததேசக்காரர்களும் சத்ருக்களென்று சொல்லப்படுகிறார்கள். அவர்கள் ஸமயத்தைப் பார்த்துக்கொண்டிருந்து கஷ்டம் வந்தபோது அவனை ஹிம்ஸிப்பார்கள். இப்படியே விபீஷணனும் இங்கே வந்திருக்கலாம். தங்களுக்கு ஹிதம் செய்யும் ஜ்ஞாதிகளை அதேகுலத்தில் பிறந்த நல்லவர்கள் வெகுமதிப்பார்கள். இதுதான் அநேகமாய் எங்கும் காணும் நடக்கை. ஆனாலும் நல்லவனாயிருக்கிற ஜ்ஞாதியிடம் அவர்கள் ஸந்தேஹப்படுவதுண்டு. இப்படியாகில் பாபச்செயலுள்ள ராவணன் விபீஷணனிடத்தில் ஸந்தேஹப்படுவதைச் சொல்லவேண்டுமோ? சத்ரு பக்கத்திலிருந்தவனைச் சேர்ப்பதில் எந்த தோஷம் சொல்

---

கதிக்கு வேண்டிய ஆநுகூல்யஸங்கல்பம் காட்டப்படுவதாகும், மித்ர வேஷத்துடன் என்று பொருளானால், பகவான் ரக்ஷிப்பதற்கு பார்த்துக் கொண்டிருக்கும் வியாஜம் கிடைத்ததுஎன்று ஏற்படும். "ஸம்ப்ராப்தம்" விபீஷணன் அக்கரையிலிருந்து சரணாகதிபண்ணினால் வேகத்துடன் அங்கே போகவேண்டியதாயிருக்கும். அப்படியில்லாமல் அவனே, தான் இருக்குமிடம் வந்தான் என்பது கருத்து. "நத்யஜேயம்" இவன் விஷயத்தில் விசாரிக்கவேண்டியதொன்றுமில்லை. "சரணம்கத:" என்பதைக்கேட்டவுடனே அவனை ரக்ஷிக்கவேண்டியது. "கதஞ்சந" என்பதினால் வந்தவனிடத்தில் குணமில்லாமல் தோஷங்களிருந்தாலும், அவனைக் கைக்கொள்வது வேண்டியவர்களுக்கு இஷ்டமில்லாததானாலும், இம்மையிலேயோ மறுமையிலேயோ என்ன குற்றம் வந்தாலும் என்பது கருத்து. "தோஷை:" என்கிற சொல்லுக்கு மந்திரிகள் சொன்ன தோஷங்களும் அவர்கள் சொல்லாத தோஷங்களும் என்பது பொருள். கடைசி பாதத்துக்கு சரணாகதிதர்மத்தை அநுஷ்டித்த வஸிஷ்டரும் விச்வாமித்ரரும் தாங்கள் உபதேசம்பண்ணினது பலித்தது என்று தன்னைக்கொண்டாடுவர்கள் என்பது கருத்து.

லப்பட்டதோ, அந்த விஷயத்திலும் சாஸ்திரத்தைச் சொல்லு கிறேன். கேளுங்கள். நாம் ராவணன் ஜ்ஞாதிகள் அல்லர். ஆகை யால் நமக்கு ராவணன் ராஜ்யத்தில் ஆசையில்லை. தனக்கு நாம் போட்டிக்காரர்கள் என்று எண்ணி நமக்கு அவன் விரோதம் பண்ண இடமேயில்லை. இவனோ ராஜ்யத்தை ஆசைப்படுகிறவன். தன் இஷ்டம் நிறைவேறுவதற்காக நமக்குத் துணையாயிருந்து நம் முடைய உதவியைப்பெற விரும்பலாம். ராக்ஷஸர்கள் யோசித்து ஒரு கார்யத்தைச் செய்யமாட்டார்கள் என்று எண்ணக்கூடாது. அவர்களுள்ளும் புத்திமான்கள் இருப்பார்கள். ஆகையால் இவனை அங்கீகரிக்கலாம்.* ஜ்ஞாதிகள், கவலையற்றவர்களாயும் ஸந்தோஷமுள்ளவர்களாயும் ஒருவரோடொருவர் சேர்ந்து வாழு கிறவர்களாயும் இருப்பதில்லை. அவர்களுக்குள் பேதமுண்டா கும். ஆகையால் இவன் தமையனைக்கண்டு பயப்பட்டுப் பெருங் கூக்குரல் போடுகிறான். ஆகையால் இவனைச் சேர்த்துக்கொள்ள லாம். தமையன் எப்படியிருந்தாலும் தம்பி அவனை அநுஸரிக்க வேண்டாமா என்று கேட்கிறீர்களோ? உலகத்தில் எல்லாத் தம்பிகளும் பரதனைப்போலிருப்பார்களோ?" என்று சொன் ஞன். இதைக்கேட்டு ஸுக்ரீவன் லக்ஷ்மணனோடுகூட நமஸ் காரம்பண்ணி, விபீஷணன் ராவணனால் அனுப்பப்பட்டவன் என்றும், அவனை நம்பினபிறகு கெடுதல்செய்வன் என்றும், அவனைத் தண்டிக்கவேண்டும் என்றும் முன்போலவே சொன் ஞன். ராமன், "இவன் எப்படியாவதிருக்கட்டும். கொஞ்சம்கூடக் கெடுதியை எனக்குச் செய்யச் சக்தியில்லாதவன். இஷ்டமிருந் தால் விரல்நுனியாலேயே எவனையும் நான் கொல்லுவேன். முன்னாலே பெண்புறாவைக் கொன்ற வேடன் ஆண்புறா இருக்கு மிடம் வந்தான். அவன் சத்ருவாயிருந்தாலும், அது அவனுக் குப் பூஜைசெய்து தன் மாம்ஸத்தைக் கொடுத்து அவனை ரக்ஷித் தது. இப்படி ஒரு பக்ஷி சரணம் அடைந்தவனை ரக்ஷித்தால்

---

* தன்னிடத்திலுள்ள ஸ்நேஹத்தாலே கலங்கின ஸுக்ரீவனைத் தேற்றுவதற்காக ராஜநீதியை அநுஸரித்து ராமன் சொன்னபடி இது. விபீஷணனுக்கு ராஜ்யத்தில் ஆசையிருக்கிறது என்பது அவன் திரு வுள்ளம் அன்று.

* என்னைப்போன்றவன் அந்த தர்மத்தை அநுஷ்டிக்கவேண்டாமா? சத்ருவாயிருந்தாலும் வருத்தப்பட்டு அஞ்ஜலிபண்ணிக்கொண்டு சரணாகதிபண்ணினால் அவனைக் கொல்லக்கூடாது என்று கண்வன் என்னும் ருஷியின் பிள்ளையான கண்டு என்கிற ருஷி சொல்லிய வார்த்தையை இன்றும் கேட்டுவருகிறோம். சத்ரு உடனே பலம் கிடைக்கவேண்டும் என்றோ, அல்லது தாமதித்தாவது பலன் கிடைக்கவேண்டுமென்றோ சரணாகதி பண்ணினால், சாஸ்த்ரத்தில் நம்பிக்கையுள்ளவன் அவனை ரக்ஷிக்க வேண்டும். §பயத்தாலோ, அறியாமையாலோ, மோஹத்தாலோ, காமத்தாலோ, சரணாகதி பண்ணினவனைத் தன் சக்திக்குத் தகுந்தபடி ரக்ஷிக்காமலிருந்தால், அது பாபமாகும். அதை எல்லாரும் நிந்திப்பர்கள். சரணாகதி பண்ணினவன் இறந்து போகும்போது தன்னை ரக்ஷிக்காதவனுடைய எல்லாப் புண்ணியங்களையும் அவன் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே எடுத்துக் கொண்டுபோகிறான். சரணாகதிபண்ணினவனை ரக்ஷிக்காதிருப்

---

* என்னைப்போன்றவன்—தர்மத்தை நிலைநிறுத்துவதாக அவதாரம் பண்ணின என்னைப்போன்றவன். புறாவுக்கு வேடன் சத்ரு. விபீஷணன் எனக்குச் சத்ருவன்று. சத்ருவிருக்கும் ஊரிலிருந்து வந்தது மாத்ரம். வேடன் புறாவினிடம் சரணாகதிபண்ணவில்லை; அவேந்து இருந்த மரத்தினடிக்கு வந்ததுமாத்ரம்; விபீஷணனோ 'சரணம் கத:' என்று சொல்லியிருக்கிறான். சரணாகதனை ரக்ஷித்த என் முன்னோர் விருத்தாந்தத்தை நினைப்பித்துக்கொண்டு, அந்த ரகுவம்சத்தில் பிறந்தவனான என்னை "ராகவன்" என்று சொல்லியிருக்கிறான். புறாவும் வேடனைப் பூஜித்து தன்னுடைய மாம்ஸம் முழுவதையும் கொடுத்து, அவனை ரக்ஷித்தது. நானும் என்ன கெடுதல் எனக்கு வந்தாலும் விபீஷணனை ரக்ஷிக்கவேண்டும். இது ராமனுடைய கருத்து.

§ "பயம்" சரணாகதனை ரக்ஷித்தால் ப்ரபலமான அவன் விரோதி ரக்ஷிக்கிற நம்மையும் ஹிம்ஸை செய்வனோ என்கிற பயம். "மோஹம்" கெட்ட யுக்திகளாலே மனது கலங்கி சாஸ்த்ரார்த்தத்தை அறியாமை. "காமம்" சாஸ்த்ரத்துக்குக் கட்டுப்படாமல் மனம் போனபடி நடக்கை; அல்லது வந்தவன் கஷ்டப்படட்டும் என்று அவன் கஷ்டத்தில் ருசி; அல்லது சரணம் அடைந்தவனுடைய சத்ருவினிடமிருந்து ஒரு ப்ரயோஜனத்தை எதிர்பார்ப்பது.

பதில் இப்படிப் பெரிய தோஷமிருக்கிறது.* அது பரலோகத்தைக் கெடுக்கும்; இந்த லோகத்தில் அகீர்த்தியை உண்டு பண்ணும்; பலத்தையும் வீர்யத்தையும் நாசம் செய்யும். கண்டு சொன்னதை நான் செய்யப்போகிறேன். பலன் உண்டாகும் காலத்தில் பரலோகமும், இங்கு கீர்த்தியும் கிடைக்கும்.

§ 𑌸𑌕𑍃𑌦𑍇𑌵 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾𑌯 𑌤𑌵𑌾𑌸𑍍𑌮𑍀𑌤𑌿 𑌚 𑌯𑌾𑌚𑌤𑍇 ।
𑌅𑌭𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌭𑍍𑌯𑍋 𑌦𑌦𑌾𑌮𑍍𑌯𑍇𑌤𑌦𑍍𑌵𑍍𑌰𑌤𑌂 ௩௩ ॥

(ஸ-18-33)

எவன் ஒருதடவை சரணாகதியைச் செய்து, உனக்கு வேலைக்காரனாயிருக்கிறேன் என்று வேண்டுகிறானோ அவனுக்கு எல்லாரிடமிருந்தும் அபயத்தைக் கொடுக்கிறேன். இஃது என்னுடைய வ்ரதம் என்று சொல்லி, "வானரச்ரேஷ்டனே! அவனை அழைத்துவா; அவன், விபீஷணனோ, ராவணனோ, அவன் எவனாயிருந்தாலும் அவனுக்கு அபயம் கொடுத்தாய்விட்டது" என்று சொன்னான். இதைக்கேட்டு ஸுக்கிரீவன் ராமனை ஸ்தோத்ரம்பண்ணி, "விபீஷணன் எங்களுக்கு ஸமமாயிருக்கட்டும்; அவன் எங்க

---

* சரணாகதிபண்ணி ரக்ஷிக்கப்படாதவனுக்கு இருக்கும் உடம்பு போவதுமாத்ரமே. ரக்ஷிக்காதவனுக்கோ பரலோகமுமில்லை; இங்கே புகழுமில்லை; மற்ற எல்லாம் அழியும்.

§ "ஸக்ருதேவ" இதனால் ஒரேதடவை செய்தால் போதும் என்றும், அதற்கு வேறொன்றும் தேவைஇல்லையென்றும் காட்டப்படுகிறது. முதல்பாதத்தாலே மனதால் செய்வதும், இரண்டாவது பாதத்தால் வாயால்சொல்லுவதும் காட்டப்படுகின்றன. அல்லது முதல்பாதத்தாலே வேறு ப்ரயோஜனத்துக்காகச் செய்கிற பிரபத்தியும், இரண்டாவது பாதத்தாலே மோக்ஷத்துக்காகச் செய்யப்படுகிற பிரபத்தியும் சொல்லப்படுகின்றன. "ஸர்வபூதேப்ய:" என்பது, நான்காம் வேற்றுமையானால், எல்லாருக்கும் அபயம் கொடுக்கிறேன் என்று பொருளாகும். அப்போது ப்ரபத்திக்கு எல்லாரும் அதிகாரிகள் என்பது விளங்குகிறது. விபீஷணனுக்குமாத்ரம் அன்று; ராவணன் வந்தாலும் அவனுக்கும் அபயம்கொடுப்பேன் என்பது பொருள். ஐந்தாம்வேற்றுமையானால், எல்லாரிடமிருந்தும் அபயம் கொடுக்கிறேன். விபீஷணனுக்கு ராவணனிடமிருந்து மாத்ரம் அன்று; பிரம்மா முதலானவர்களிடமிருந்தும் அபயத்தைக் கொடுக்கிறேன் என்பது பொருள்.

னுக்கு ஸகாவாயிருக்கட்டும். அவன் மஹாப்ராஜ்ஞன்* ” என்று சொன்னான். (ஸ-18.)

(161) இப்படி அபயம் கொடுக்கப்பட்ட விபீஷணன், கூடவந்தவர்களுடன் பூமியில் இறங்கி, அவர்களுடன் ராமன் திருவடிகளில் விழுந்தான். தன்னை இன்னான் என்பதையும், ராவணனால் அவமானம் பண்ணப்பட்டு, லங்கையையும், வேண்டியவர்களையும், தனங்களையும்விட்டு வந்ததையும், § ராஜ்யமும் பிழைத்திருப்பதும் ஸுகங்களும் ராமன் அதீனம் என்பதையும் சொன்னான். ராமன் ராவணனுடைய பலத்தைக் கேட்க, விபீஷணன், அவன் ஒருவராலும் கொல்லப்படாதிருக்கும் வரனைப்பெற்றதையும், அவனுக்குத் துணையாகத் தம்பி கும்பகர்ணனும் பிள்ளை இந்த்ரஜித்தும் ஸேநாபதி ப்ரஹஸ்தனும் மற்ற வீரர்களுமிருப்பதையும், ஸேனையின்பலத்தையும் சொன்னான். இதைக்கேட்டு ராமன், “ராவணனைக்கொன்று உன்னை ராஜாவாகப் பண்ணுகிறேன். நான் சொல்லுவது உண்மை. அவன் பூமியிலுள்ளோ, பாதாளத்துக்கோ போனாலும், பிரம்மாவை அடைந்தாலும் உயிருடன் என்னால் விடப்படான். அவனைக் கொல்லாமல் நான் அயோத்யைக்குத் திரும்புகிறதில்லை. என் தம்பிகள்மேலே ஆணையிடுகிறேன்” என்று சொன்னான். அதைக்கேட்டு விபீஷணன், “ராவணனைக் கொல்லுவதிலும், லங்கையை எதிர்ப்பதிலும் என் பலத்துக்குத் தகுந்தபடி உதவி செய்கிறேன்” என்று சொல்ல, ராமன் அவனைக் கட்டிக் கொண்டு, லக்ஷ்மணனைப் பார்த்து “ஸமுத்ரஜலத்தைக் கொண்டு வந்து லங்கைக்கு ராஜாவாக இவனுக்கு அபிஷேகம் பண்ணு” என்று கட்டளையிட்டான். இதை லக்ஷ்மணன் செய்தான். வானரங்கள் நல்லது நல்லது என்று கொண்டாடின. (ஸ-19.)

---

* “மஹாப்ராஜ்ஞ:” என்பதாலே ராவணனுக்கும் ஹிதத்தைச்சொல்லும்படியான ஜ்ஞானமுள்ளவன் என்பதும், கைங்கரியமாகிய ஸம்பத்தை அடைவதற்கு ராமன் உபாயம் என்றும், தனக்கு அந்த ஸம்பத்தைக் கொடுப்பதை விலக்குவாரையும் தெளிவித்துத் தன்னையும் அவர்களையும் சேர்க்கும் திறமையுள்ளவன் ராமன் என்றும் அறிந்தவன் விபீஷணன் என்பதும் காட்டப்படுகின்றன.

§ ராஜ்யம் என்பது கைங்கரியத்துக்கு வேண்டிய எல்லா வஸ்துக்களுக்கும் உபலக்ஷணம்.

**(162)** பிறகு ஸுக்கிரீவனும் ஹநுமானும் விபீஷணனை ஸமுத்ரத்தைத் தாண்ட உபாயத்தைக் கேட்க, அவன் *ஸமுத்ர ராஜனை ராமன் சரணம் அடையவேண்டியது என்று சொல்ல, அதை அவர்கள் ராமனிடம் தெரிவித்தார்கள். ராமனும் அதை ஒப்புக்கொண்டு ஸமுத்ரராஜன் வருவதைப் பார்த்துக்கொண்டு தர்ப்பத்தின்மேல் வலதுகையைத் தலையணையாக வைத்துக் கொண்டு, ஸமுத்ரத்தைத் தாண்டுகிறது; அல்லது மரணமடைகிறது. இரண்டில் ஒன்று செய்வதாக எண்ணிப் படுத்துக் கொண்டிருந்தான்.§ மூன்றுநாள்கள் சென்றன. ஸமுத்ரராஜன் வரவில்லை. ராமன் கோபித்துக்கொண்டு கிட்ட இருந்த லக்ஷ்மணனைப் பார்த்து,

𑌪𑍍𑌰𑌶𑌮𑌶𑍍𑌚 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌚𑍈𑌵 𑌆𑌰𑍍𑌜𑌵𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌵𑌾𑌦𑌿𑌤𑌾 ।
𑌅𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌫𑌲𑌾 𑌹𑍍𑌯𑍇𑌤𑍇 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑍇𑌷𑍁 𑌸𑌤𑌾𑌂 𑌗𑍁𑌣𑌾𑌃 ॥

(𑌯𑍁-21-15.)

கோபமில்லாமை, பொறுமை, ருஜுத்தன்மை, (நேர்மை) இனியசொல் பேசுவது ஆகிய இந்தப் பெரியோர்களின் குணங்கள், குணமில்லாதவர்களிடத்தில் காட்டப்படும்போது, அவைகளுள்ளவன் சக்தியில்லாதவன் என்ற எண்ணத்தையே உலகத்தாருக்கு உண்டாக்குகின்றன.

𑌆𑌤𑍍𑌮𑌪𑍍𑌰𑌶𑌂𑌸𑌿𑌨𑌂 𑌦𑍁𑌷𑍍𑌟𑌂 𑌧𑍃𑌷𑍍𑌟𑌂 𑌵𑌿𑌪𑌰𑌿𑌧𑌾𑌵𑌕𑌮𑍍 ।
𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑍋𑌤𑍍𑌸𑍃𑌷𑍍𑌟𑌦𑌣𑍍𑌡𑌂 𑌚 𑌲𑍋𑌕𑌃 𑌸𑌤𑍍𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌨𑌰𑌮𑍍 ॥

(𑌯𑍁-21-16.)

தன்னை ஸ்தோத்ரம் பண்ணிக்கொள்ளுகிறவனும் துஷ்டனும் அசட்டுத்துணிச்சலுள்ளவனும் எங்கும் சுற்றித்திரிகிறவனும் எல்லாரிடமும் தண்டனையைச் செலுத்துகிறவனுமான மனிதனை

---

* விபீஷணன் கருத்து—தான் சரணாகதிபண்ணி பலனை அடைந்தபடியாலே, ராமனும் சரணாகதிபண்ணினால், ஸமுத்ரராஜன் அநுக்ரஹத்தாலே ஸமுத்ரத்தைத் தாண்டலாம்—என்பது.

§ இது ப்ரதிசயநம். இதைப் பரதன் செய்தபோது, க்ஷத்ரியனாலே அது செய்யக்கூடாது என்று அதற்குப் பிராயச்சித்தமாக அவனை ஜலத்தைத் தொடும்படி ராமன் அவனுக்குக் கட்டளையிட்டான். அதையே ராமன் செய்யலாமா? என்கிற கேள்விக்குப் பதில் வியாக்யானத்தில் இல்லை. இதை ப்ரதிசயனமாகக் கொள்ளவேண்டாம் என்பது சிலர் கருத்து.

உலகம் வெகுமானம் பண்ணுகிறது. நல்ல வார்த்தையாலே கீர்த்தியாவது, சண்டையில் ஜயமாவது உண்டாகிறதில்லை. "லக்ஷ்மணா! வில்லைக்கொண்டுவா! ஸமுத்ரத்தைப் பாணங்களால் வற்றப்பண்ணுகிறேன். வானரங்கள் கால்நடையாகப்போகட்டும்" என்று சொல்லி, பாணங்களை ஸமுத்ரத்தின்மேல் போட்டான். அதில் அலைகள் மலைகள்போலக் கிளம்பின. அதிலிருந்த மீன்களும் பாம்புகளும் அதன் அடியிலிருந்த அஸுரர்களும் துன்பம் அடைந்தார்கள். (ஸ-19-21.) இப்படிச்செய்தும் ஸமுத்ரராஜன் வரவில்லை. ராமன் தனுஸில் ப்ரம்மாஸ்த்ரத்தைப்பூட்டி நாணை இழுத்தான். அப்போது உலகம் முழுவதும் நடுங்கிற்று. ஸமுத்ரராஜன்வந்து அஞ்ஜலிபண்ணிக்கொண்டு "நான் உனக்கு என்ன செய்யவேண்டும், ஸமுத்ரத்தை மேடாகப் பண்ணவேண்டுமா? ஜலத்தை அசையாமலிருக்கும்படி செய்யவேண்டுமா? அல்லது அதில் அணைகட்டுவதற்கு அநுகூலமாயிருக்கவேண்டுமா? முதல் இரண்டு பக்ஷங்களும் கூடா; மற்றப் பூதங்களைப்போலே ஜலமும் தனக்கு இயற்கையாகவுள்ள ஸ்வபாவத்தை விடமுடியாது. ஜலத்தை அசையாமல் செய்தால், அதிலிருக்கும் பிராணிகள் துன்பம் அடையும். ஆகையால் மூன்றாவது பக்ஷமே தகுந்தது" என்று சொன்னான். ராமன் "இந்தப்பாணம் வீணாகாது; எதன் மேல் இதை விடலாம்" என்று கேட்க, ஸமுத்ரராஜன், "த்ருமகுல்யம் என்கிற இடத்தில் பல திருடர்கள் என் ஜலத்தைக் குடிக்கிறார்கள். அவர்கள் தொடுவது எனக்குப் பொறுக்க முடியவில்லை. அவர்கள்மேல் இந்தப் பாணத்தைப் போடலாம்" என்று சொன்னான். ராமன் அப்படியே செய்தான். ஸமுத்ரராஜன் "நளன் விசுவகர்மாவின் பிள்ளை; தகப்பனைப்போல் ஸமர்த்தன்; அவன் ஸமுத்ரத்தில் அணையைக்கட்டுவன்; நான் அதற்குக் கெடுதல் வராமல் செய்கிறேன்" என்று சொன்னான். நளனும் "ஸமுத்ரராஜன் சொன்னது சரிதான். என்னைக் கேளாமல் என் குணத்தைச் சொல்லக்கூடாது என்று இருந்தேன். இதோ அணை கட்டுகிறேன்" என்று சொல்ல, வானரங்கள் மலைகளையும் மரங்களையும் கொண்டுவந்து சேர்த்தன. அவைகளைக்கொண்டு ஐந்துநாளில் நளன் அணையைக் கட்டினான். அது நூறுயோஜனை நீளமும், பத்துயோஜனை அகலமுமுள்ளதாய் இருந்தது. அணைகட்டி முடிந்தவுடன் விபீஷணன் கதையை

எடுத்துக்கொண்டு தன் மந்திரிகளுடன் அணையின் தெற்குமுனையில்போய் நின்றான். ஹநுமான்மேல் ராமனும், அங்கதன்மேல் லக்ஷ்மணனும் ஏறிக்கொண்டார்கள். அவர்களும் ஸுக்கிரீவனும் முன்னாலே போனார்கள். வானரங்கள் இருபக்கங்களிலும் பின்னாலும் சென்றன. இப்படி அணையின்மேல் நடந்து ஸமுத்ரத்தை வானரஸேனை தாண்டிற்று. (ஸ-22.)

(163) ராமன் அப்போது உண்டான துர்நிமித்தங்களை லக்ஷ்மணனுக்குக் காட்டிக்கொண்டு ஸுக்கிரீவனுடனும் விபீஷணனுடனும் வானரஸேனைகளுடனும் லங்கைக்குப் புறப்பட்டான். (ஸ-23.) புறப்பட்டு ஸேனையை அணிவகுத்து சுகன் என்னும் ராக்ஷஸனை விட்டுவிடும்படியாக ஸுக்கிரீவனிடம் சொன்னான். வானரஸேனை ஸமுத்ரத்தின் வடகரையில் வந்திருந்தபோது, சார்த்தூலன் என்கிற ராவணனுடைய சாரன் வந்து அதைப் பார்த்து, ராவணனிடம்போய் அதை வர்ணித்து, எந்த உபாயம் தகுந்ததோ அதைச் செய் என்று சொன்னான். ராவணன் சுகன் என்னும் ராக்ஷஸனை ஸுக்கிரீவனிடம் தூதனாக அனுப்பி, "ஸுக்கிரீவா! நீ நல்லகுலத்தில் பிறந்தவன்; மிகுந்த பலமுள்ளவன்; ப்ரம்மாவின்பேரன்; ஆகையால், எனக்கு பந்து. இங்கே வருவதால் உனக்கு என்ன லாபம்? வராவிட்டால் உனக்குஎன்ன நஷ்டம்? நான் ராமனுடைய பாரியையைக் கொண்டுவந்தது உண்மைதான். அதனால் உனக்கு என்ன ஆகவேண்டும்? கிஷ்கிந்தைக்குத் திரும்பிப்போ; இந்த லங்கைக்குத் தேவர்களும் வரமுடியாது; மனிதர்களும் வானரங்களும் வரமுடியாது என்று சொல்லவும் வேண்டுமோ" என்று சொல்லச்சொன்னான். சுகன் பக்ஷிரூபத்தை எடுத்துக்கொண்டு வந்து ஆகாசத்திலேயே இருந்துகொண்டு ராவணன் கட்டளையிட்டபடி சமாசாரத்தைத் தெரிவித்தான். வானரங்கள் மேலே கிளம்பி, அவனைப் பிடித்துக் கீழே தள்ளி, அவனைக் கொல்ல ஆரம்பித்தன. அவனை விடும்படி ராமன் கட்டளையிட்டான். சுகன் மேலே கிளம்பி, ஸுக்கிரீவனைப்பார்த்து, "ராவணனுக்கு என்ன பதில் சொல்லுகிறது" என்று கேட்டான். ஸுக்கிரீவன் "நீ எனக்கு மித்ரன் அன்று; நீ என்னால் இரக்கப்படத்தகுந்தவன் அன்று; எனக்கு நீ உபகாரம் செய்தவன் அன்று; எனக்கு நீ பிரியன் அன்று; உன்னைச் சேர்ந்தவர்களுடன் நீ ராமனுக்குச் சத்ரு; ஆதலால்

நீ எனக்கும் சத்ரு ; வாலியைப்போல் நீயும் கொல்லப்படத்தகுந்தவன். உன்னைச் சேர்ந்தவர்களுடன் உன்னைக்கொன்று சீக்கிரம் லங்கையைப் பஸ்மமாகச் செய்யப்போகிறேன். தேவர்களாலும் அவர்கள் தலைவனாலும் ரக்ஷிக்கப்பட்டாலும், ஸூர்யன் மார்க்கத்தில்போய் மறைந்தாலும், பாதாளத்தில் புகுந்தாலும், ராமனிடமிருந்து நீ விடுபடமாட்டாய்'' என்று ராவணனுக்குப் பதில் ஸமாசாரம் சொன்னான். அப்போது அங்கதன், "இவன் தூதன் அன்று ; சாரன் ; இவனைப் பிடித்துவைக்கவேண்டும். இவன் லங்கைக்குத் திரும்பிப்போகக்கூடாது'' என்று சொல்ல, வானரங்கள் அப்படியே செய்தன. ராமன் அவனை விடச் சொல்லியும் அவர்கள் கேட்கவில்லை. (ஸ-20.) அவன் இப்போது ராமன் கட்டளையினால் விடப்பட்டு மிகுந்த பயத்துடன் ராவணனிடம்போய், நடந்தவைகளைச் சொல்லி, "ஸீதையை ராமனிடம் கொடுத்துவிடு, அல்லது சண்டைக்கு ஸித்தமாயிரு'' என்று சொன்னான். ராவணன் நான் ஒருபோதும் ஸீதையைக் கொடேன். என்னை ராமனாவது வேறு எவனாவது எதிர்க்க முடியாது'' என்று தன் சௌர்யத்தை ஸ்தோத்ரம்பண்ணிக் கொண்டான். (ஸ-24.)

(164) ஸமுத்ரத்தில் அணையைக் கட்டி, அதன்வழியாக வானரஸேனை வந்ததை ராவணன் கேட்டு, சுகனையும் ஸாரணனையும் கூப்பிட்டு "அணைகட்டினதை நான் நம்பவில்லை ; அஃது எப்படிக் கட்டப்பட்டது ? ராமனுடைய எண்ணம் என்ன ? அவன் வீர்யம் என்ன ? என்ன அவனுடைய ஆயுதங்கள் ? லக்ஷ்மணனுடைய வீர்யம் என்ன ? யார் ஸேனாபதி ? ஸேனையின் பலம் என்ன ? ஒருவருக்கும் தெரியாமல் அதில் ப்ரவேசித்து இவைகளை அறிந்துவாருங்கள்'' என்று கட்டளையிட்டான். அவர்கள் வானரரூபங்களை எடுத்துக்கொண்டு, ஸமுத்ரம்போல இருந்த வானரஸேனைகளுள் ப்ரவேசித்தார்கள். அந்த வானர ஸைன்யத்தை அவர்களால் கணக்கிடமுடியவில்லை. விபீஷணன் அவர்களைக் கண்டுபிடித்து "இவர்கள் ராவணன் மந்திரிகள்'' என்று ராமனுக்குத் தெரிவிக்க, அவர்கள் உயிரோடிருப்போமென்ற ஆசையற்றவர்களாய் அஞ்சலி செய்துகொண்டு வந்தகாரியத்தை ராமனிடம் தெரிவித்தார்கள். ராமன் மந்தஹாஸம் பண்ணிக்கொண்டு, "இந்தப் படை முழுவதையும் பார்த்தீர்களா ?

எங்களை நன்றாய்ப்பரீக்ஷித்தீர்களா? உங்கள்ஸ்வாமி சொன்னபடி செய்தாய்விட்டதா? இஷ்டப்படி திரும்பிப் போகலாம். இன்னும் ஏதாவது பார்க்கப்படாமலிருக்கிறதா? அதை விபீஷணன் உங்களுக்குக்காட்டுவன். நன்றாய்ப்பாருங்கள். வானரங்களால் பிடிக்கப்பட்டதைக்கொண்டு "பிழைப்போமோ" என்று பயப்பட வேண்டாம். ஆயுதமில்லாதவர்களும் பிடிக்கப்பட்டவர்களுமான தூதர்கள் கொல்லத்தகுந்தவர்கள் அல்லர். நீங்கள் தூதர்கள். ஆயுதமில்லாதவர்கள். உங்களைப் பிடித்தாலும் கொல்லக் கூடாது என்று சொல்லி, விபீஷணனைப் பார்த்து "இவர்களை விட்டுவிடு" என்று கட்டளையிட்டு, தூதர்களைப் பார்த்து, "நகரத்துக்குள்ளே போய், நான் மேலே சொல்லப்போவதை உங்கள் ஸ்வாமிக்குத் தெரிவியுங்கள். எந்தப் பலத்தை நம்பி ஸீதையைக் கொண்டுவந்தாயோ, அந்தப் பலத்தைப் பந்துக்களுடனும் ஸைனியங்களுடனும் சண்டைக்குவந்து உன் இஷ்டப்படி காட்டு. நாளையதினம் காலையில் உன் நகரமும், உன்பலமும் என்னால் பாணங்களாலே நாசம் பண்ணப்படுவதைப் பார்ப்பாய். நாளைக் காலையில், இந்திரன் அஸுரர்கள்மேல் வஜ்ரத்தைப் போட்டதுபோல், பயங்கரமான என் கோபத்தை உன்னிடத்திலும் உன் ஸைன்யத்தினிடத்திலும் காட்டுவேன்" என்று சொல்லி, தூதர்களைத் திருப்பி அனுப்பினான். அவர்கள் "மேன்மை உண்டாவதாக" என்று ராமனிடம் சொல்லி, ராவணனிடம்போய், "அந்த வானரஸேனையை உன்னால் ஜயிக்க முடியாது. ஸாமம் (நல்லவார்த்தை) என்கிற உபாயத்தை அநுஸரித்து, ஸீதையை ராமனிடம் கொடுத்துவிடு" என்று சொன்னார்கள். (ஸ-25.)

(165) தூதர்கள் சொன்னதை ராவணன்கேட்டு, தன்னை யார் வந்து எதிர்த்தாலும் ஸீதையைக் கொடுப்பதில்லை என்றும், 'நீங்கள் வானரங்களால் பிடிக்கப்பட்டுப் பயம்அடைந்தீர்கள்' என்றும் சொல்லி, மாளிகைமேல் ஏறி, வானரஸேனையைப் பார்த்து, இதில் யார் ப்ரதானர்களோ, அவர்களைச்சொல்" என்று ஸாரணனைக் கேட்டான். ஸாரணன்—நீலன், அங்கதன், நளன், ச்வேதன், குமுதன், ரம்பன், சரபன், பநஸன், விநதன், க்ரோதனன், கவயன் ஆகிய வானரவீரர்களை ஒவ்வொருவராய்ச் சொல்லி, அவர்கள் இருப்பையும், அவர்களுடன்கூட இருக்கும் ஸைன்யத்

தையும் வர்ணித்தான். (ஸ-26.) மறுபடியும் அவன் ஹரன், தாம்ரன், ஜாம்பவான், தம்பன், ஸந்நாதனன், ப்ரமாதீ, கவாக்ஷன், கேஸரீ, சதவலி இவர்களையும் வர்ணித்து, "இவர்கள் எல்லாரும் மிருந்தப்ராபாவமுள்ளவர்கள்; பெரிய மலைகள்போன்ற சரீரமுள்ளவர்கள்; எல்லாரும் ஒருக்ஷணத்தில் பூமியிலிருந்து மலையைப் பிடுங்கச்சக்தியுள்ளவர்கள்" என்று சொல்லிமுடித்தான். (ஸ-27) ஸாரணன் சொல்லாமல் விட்டவர்களை சுகன் சொல்லி, மைந்தன், த்விவிதன், ஹநுமான், ராமன், லக்ஷ்மணன், விபீஷணன், ஸுக்ரீவன் ஆகிய இவர்களை வர்ணித்து, எப்படி ஜயம் வருமோ, சத்ருக்களால் அபஜயம் வராதோ, அப்படி ப்ரயத்னம் செய்ய வேண்டும் என்று சொன்னான். (ஸ-28.)

(166) தூதர்கள் சொன்ன வார்த்தையைக்கேட்டு ராவணனுக்குக் கொஞ்சம் பயமும் கோபமும் உண்டாயின. சத்ருக்களை ஸ்தோத்ரம் பண்ணினதை அவன் பொறுக்காமல், அவர்களைப் பார்த்து, "நிக்ரஹத்தையும் அநுக்ரஹத்தையும்பண்ணச் சக்தியுள்ள ப்ரபுவுக்கு அப்ரியத்தைச் சொல்லுவது தகுந்தது அன்று. சத்ருக்கள் சண்டைக்கு வந்திருக்கையில், அவர்களை ஸ்தோத்ரம் பண்ணுவது தகுந்ததோ? ராஜநீதியில் எது ஸாரமோ, அதை நீங்கள் அறியவில்லை. பெரியோர்களை நீங்கள் ஆச்ரயித்தது வீண். உங்களை நான் கொல்லவேண்டியது; ஆனால் முன் உபகாரத்தை நினைத்து அப்படிச் செய்யவில்லை. ஓடிப் போங்கள்" என்று சொல்லி, சாரர்களை அழைத்து, "இங்கிருந்து போய் ராமனுடைய எண்ணத்தை அறிந்துவாருங்கள்" என்று கட்டளையிட்டு அவர்களை அனுப்பினான். அவர்கள் சார்தூலனை முன்னிட்டுக்கொண்டுபோய், வானரஸேனையைப் பார்த்தார்கள். சார்தூலனை விபீஷணனும் மற்றவர்களை வானரங்களும் பிடித்துக்கொண்டார்கள். ராமனுடைய கட்டளையினால் அவர்கள் விடப்பட்டு, பயத்துடன் லங்கைக்குத் திரும்பி வந்தார்கள். (ஸ-29.) சார்தூலன், ராமன் ஸுவேலம் என்கிற மலையில் ஸேனையை கருடவ்யூஹமாக வைத்திருப்பதைச் சொல்லி, ஸேனையில் முக்யமானவர்களை வர்ணித்து, "ஸீதையைக் கொடுத்துவிடு, அல்லது யுத்தத்துக்கு ஸந்நத்தமாயிரு" என்று சொன்னான். ராவணன் ஸீதையைக் கொடுப்பதில்லை என்றும் தன்னை ஒருவனும் ஜயிக்கமுடியாது என்றும் பதில் சொன்னான்.

(ஸ-30.) இப்படிச் சொல்லி, மந்திரிகளைக் கூப்பிட்டு, ஆலோசனை செய்து, அவர்களை அனுப்பினான். பிறகு ராவணன் வித்யுஜ்ஜிஹ்வன் என்கிற ராக்ஷஸனைக் கூப்பிட்டு, "ராமனுடைய தலையைப்போன்ற தலையையும், வில்லைப்போன்ற ஒரு வில்லையும் மாயையினால் செய்" என்று சொல்லி, அசோகவனத்தில் ஸீதையிடம்போய், "ராமன் ஸேனையுடன் ஸமுத்ரத்தைத் தாண்டி களைத்து ராத்ரி தூங்குகையில் என் ஸேனாபதியான ப்ரஹஸ்தன், அவர்களை எதிர்த்தான். ப்ரஹஸ்தன் ராமன் கழுத்தை அறுத்துவிட்டான். மற்றவர்கள் வானரவீரர்களைக் கொன்று ஸேனையை நாசம்செய்தார்கள். இந்த ராக்ஷஸன் ராமனுடைய தலையையும் வில்லையும் கொண்டுவந்திருக்கிறான் பார். இனிமேல் ராமனை நினைத்து ப்ரயோஜனமில்லை. என்னுடைய பார்யையாக ஆய்விடு" என்று சொல்லி, அவைகளைக் காட்டச் சொல்ல, வித்யுஜ்ஜிஹ்வன் காட்டினான். (ஸ-31.)

(167) ஸீதை அவைகளைப் பார்த்து மிகுந்த துக்கத்துடன் "கைகேயி! உன் ஆசை நிறைவேறிற்று; குலத்துக்கு நாதன் கொல்லப்பட்டான்; கலஹமே ஸ்வபாவமான உன்னாலே குலமே நாசமடைந்தது; ராமன் உனக்கு என்ன அப்ரியம்பண்ணினான்; மரவுரியைக் கட்டுவித்து அவனை என்னுடன் காட்டுக்கு அனுப்பினாயே" என்று சொல்லி, மூர்ச்சை அடைந்து, தரையில் விழுந்தாள். கொஞ்சகாலம் கழிந்தபிறகு, அவளுக்கு ப்ரஜ்ஞை திரும்பி வந்தது. அந்தத் தலையை முகர்ந்துபார்த்து, "ஐயோ! கஷ்டம்; உன்னுடைய இந்தக் கடைசி அவஸ்தையைப் பார்த்தேன்; விதவையாய்விட்டேன்; உலகத்தில் பர்த்தாவின்மரணம் பார்யையின் தோஷத்தாலே வருகிறது; நீ இறந்தபடியால் என்னிடத்தில் தோஷமிருக்கிறது; துக்கஸமுத்ரத்தில் முழுகியிருக்கிற என்னை எவன் கரையேற்றவேண்டியதோ, அந்த நீயும் கொல்லப்பட்டாயே; என் மாமியாரான கௌஸல்யை கன்றையிழந்த பசுமாட்டைப்போலச் செய்யப்பட்டாள்; உனக்கு ஆயுஸு தீர்க்கம் என்று யார் சொன்னார்களோ அவர்கள் பொய் சொன்னார்களோ? அல்லது உன் விஷயத்தில் அவர்கள் அறிவும் கெட்டுப்போய் விட்டதோ? அதுவும் தெய்வத்தின் செயலோ? உனக்கு நீதி சாஸ்த்ரம் தெரியுமே. துக்கம் வருவதைத் தடுக்க நீ ஸமர்த்தன் அன்றோ? எப்படி உனக்கு இந்த மரணம் வந்தது? நீ தூங்கு

கையில் உன்னை ராக்ஷஸன் கொன்றதாக இவன் சொல்லுகிறானே, என்னைவிட்டுப் பிரித்துக் காலராத்ரி உன்னைக்கட்டிக் கொண்டு போய்விட்டதோ? என்னை விட்டுவிட்டுப் பூமியைப் பிரியையான பார்யையைப்போல் கட்டிக்கொண்டு தரையில் படுத்துக்கொண்டிருக்கிறாயே? என்னாலே எப்போதும் புஷ்பங்களாலே அர்ச்சிக்கப்பட்ட தனுஸு இதோ வந்திருக்கிறது; உன் தகப்பனை தசரதனுடன்சேர்ந்து ஸ்வர்க்கத்தில் இருக்கிறாய்; நிச்சயம்; நீ விமானத்திலிருந்துகொண்டு இக்ஷ்வாகு வம்சத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறாய்; உனக்குப் பாரியையாய் உன்னுடன் தர்மம் செய்யவேண்டியவளான என்னை ஏன் பார்க்கவில்லை? என்னுடன் ஏன் பேசவில்லை? உன்னுடன் கூடத் தர்மம் செய்கிறேன் என்று என் கையைப் பிடித்துக்கொண்ட நீ என்னையும் அழைத்துக்கொண்டுபோ; துக்கப்பட்டுக்கொண்டிருக்கிற என்னை விட்டுவிட்டு இங்கிருந்து அந்த லோகத்துக்கு ஏன் போயிருக்கிறாய்? நல்ல வஸ்துக்களால் அலங்கரிக்கப்பட்டு என்னால் கட்டிக்கொள்ளப்பட்ட உன் சரீரத்தை நாயும் நரிகளும் இழுக்குமோ? தகுந்த தக்ஷிணை கொடுத்து அக்னிஷ்டோமம் முதலான யாகங்களைச் செய்தாயே; அந்த அக்னியாலே நீ ஸம்ஸ்காரத்தை அடையவில்லையே; மூன்றுபேர் காட்டுக்கு வந்தோம். அவர்களில் ஒருவனாய்த் திரும்பிப்போகும் லக்ஷ்மணனைக் கௌஸல்யை நம்மைப்பற்றிக் கேட்பள்; அவன் நீ ராத்ரியில் ராக்ஷஸர்களால் கொல்லப்பட்டதையும் நான் ராக்ஷஸர்களின் வீட்டிலிருப்பதையும் சொல்லுவன்; அதைக்கேட்டு மனதுவெடித்து ஜீவித்திருக்கமாட்டாள்; கரன் முதலிய ராக்ஷஸர்களைக் கொல்வதாகிய பெரிய பெரிய காரியத்தைச் செய்த ராமன், கெட்டவளான என்நிமித்தம் ப்ரஹஸ்தனாலே கொல்லப்பட்டான்; ராமன் அறியாமையால் தன் குலத்துக்குக் கேடான என்னை விவாஹம்பண்ணிக்கொண்டான்; அவன் பார்யையே அவனுக்கு மிருத்யுவாக ஆனாள்; முன் ஜன்மத்தில் நான் கெட்டஜாதியில் பிறந்து கன்யகாதானத்தைத் தடுத்திருக்கவேண்டும்; ஆகையால்தான் எல்லாருக்கும் மேற்பட்டவனுக்குப் பாரியையாயிருந்தும் சோகத்தை அடைகிறேன்; ராவணா! ராமன்மேல் என்னையும் தள்ளிவிடு; பத்னியைப் பதியுடன் சேரு; அது நல்ல கார்யம்; என்தலையுடன் அவன்

தலையையும், என் உடம்புடன் அவன் உடம்பையும் சேர்த்துவை; என் பர்த்தா அடையும் லோகத்தை அவனுடன்கூட நானும் அடைகிறேன்" என்று புலம்பினாள். இப்படி ஸீதை புலம்பிக் கொண்டிருக்கையில் ராவணன் ப்ரஹஸ்தனுடைய தூதனால் வேண்டப்பட்டு, அசோகவனத்திலிருந்து திரும்பிவந்து, ப்ரஹஸ்தனுடனும் மற்ற மந்திரிகளுடனும் ஆலோசித்துப் பேரியை அடித்து ஸேனைகளைக் கூட்டும்படி கட்டளையிட்டான். அவர்களும் அப்படியே செய்து ஸேனை வந்ததை அவனுக்குத் தெரிவித்தார்கள். ராவணன் போனவுடன், பொய்யான தலையும் வில்லும் மறைந்துபோய்விட்டன. (ஸ-32.)

(168) இப்படித் துக்கப்பட்டுப் புலம்பிக்கொண்டிருந்த ஸீதைக்கு விபீஷணன் பாரியையான ஸரமை என்பவள் ஆறுதலைச் சொன்னாள்—"ஸீதையே! ஆறுதலை அடை; உன் மனதில் துக்கம் வேண்டாம்; உன்னிடம் ராவணன் சொன்னதையும் நீ பதில் சொன்னதையும், நான் ஆகாசத்தில் மறைந்திருந்து கேட்டுக்கொண்டிருந்தேன்; ராமன் கொல்லப்படவில்லை; கொல்லப்படுவதற்குத் தகுந்தவனுமன்று; அவனால் ரக்ஷிக்கப்பட்ட வானரஸேனையும் நாசத்தை அடையத்தகுந்ததன்று; இந்தத் தலையும் வில்லும் மாயையினால் செய்யப்பட்டன; உன் துக்கம் முழுவதும் போய்விடும்; க்ஷேமம் வந்திருக்கிறது; ஸம்பத்து உன்னை அடைந்திருக்கிறது" என்று சொல்லி ஸ்ரீராமனை ஸ்தோத்ரம்பண்ணி, அவன் ஸமுத்ரத்தைத் தாண்டி ஸேனையுடன் வந்திருப்பதைச் சொல்லிக்கொண்டிருந்தாள். அப்போது பெரிய சப்தம் கேட்கப்பட்டது. ஸரமை ராவணனுடைய ஸேனை நகரத்தில் எங்கும் ஆயுதமும் கையுமாயிருப்பதை வர்ணித்து, ராமன் சீக்கிரம் ராவணனைக் கொன்று உன்னை அடைவன். அவன் மடியில் உட்காருவாய். வெகுநாளாகப் பெருகிக் கொண்டிருந்த உன் கண்ணீரை அவன் துடைப்பன். இப்படி உன்னைப் பார்க்கப்போகிறேன்" என்று சொன்னாள். (ஸ-33.) ஸரமை "நான் மறைந்துபோய் ராமனிடம் உன் க்ஷேமத்தைச் சொல்லலாமா? ஆகாயத்தில் நான் போகும்போது கருடனும் காற்றுங்கூட என்னைப் பின்தொடர முடியாது" என்று கேட்டாள். * ஸீதை, "எனக்குப் பிரியமானதைச் செய்ய இச்சித்

* அவளை வேண்டாம் என்று சொன்னால், அவளுடன் ஸ்நேஹத்துக்குக் குறைவு. ராமனிடம் அவளை அனுப்புவதும் தகுந்தது அன்று. இப்படிநினைத்து ஸீதை ஒருவியாஜத்தைக்கொண்டு அதைத்தடுக்கிறாள்.

தால், என்விஷயமாக ராவணன் என்ன செய்கிறான் என்று அறிந்து வா" என்று பதில் சொன்னாள். ஸரமை ராவணனிடம் போய், அவன் மந்திரிகளுடன் சொல்லிக்கொண்டிருந்ததைக் கேட்டு திரும்பிவந்து, "நான் கேட்டதைச் சொல்லுகிறேன். ராவணன் தாயாரும், அவித்தன் என்கிற மந்திரியும், 'ஜனஸ்தானத்திலிருக்கிற ராக்ஷஸர்களைக் கொன்று ஹநுமானை இங்கே அனுப்பி ஸமுத்ரத்தைத் தாண்டினவன் மனிதனாயிருப்பனோ? ஆகையால் அவனிடம் ஸீதையைக் கொடுத்துவிடு.' என்று சொன்னார்கள். ஆனால் அவனுக்கு உன்னைக் கொடுத்துத் தான் உயிருடன் வாழ இஷ்டமில்லை. அவனை ராமன் கொன்று உன்னைத் திரும்பி அயோத்யைக்கு அழைத்துப்போகப் போகிறான்" என்று சொன்னாள். அப்போது வானரஸேனையின் பேரீ சப்தமும் சங்கத்வனியும் கேட்கப்பட்டன. லங்கையிலிருந்த ராவணன் வேலைக்காரர்கள் தேஜஸையிழந்தவர்களாய் ராவணனுடைய தோஷத்தாலே தங்களுக்கு க்ஷேமமுண்டாகாது என்று எண்ணினார்கள். (ஸ-34.)

(169) வானரஸேனையின் பேரீ சப்தத்தைக் கேட்டு ராவணன் மந்திரிகளைப் பார்த்து, "ராமன் ஸமுத்ரத்தைத் தாண்டி ஸேனையுடன் இங்கே வந்திருப்பதை நீங்கள் சொல்ல நான் அறிந்தேன். ஒருவனையொருவன் பார்த்துக்கொண்டு ஏன் வேலைசெய்யாமலிருக்கிறீர்கள்?" என்று கேட்க, ராவணன் தாயாருக்குப் பாட்டனான மால்யவான் என்கிற ராக்ஷஸன் "எந்த ராஜா ராஜநீதியை அறிந்து அதன்படி நடக்கிறானோ, அவன் நிலையான ஐசுவரியத்தை அடைந்து சத்துருக்களைத் தன் வசப்படுத்திக்கொள்ளுவன். எந்த ராஜா தனக்குப் பலம் குறைந்தவேளையில் சத்ருக்களுடன் ஸந்திபண்ணிக்கொண்டு, பலம் விருத்தியடைந்தகாலத்தில் அவர்களுடன் சண்டைபோட்டுத் தன் பக்ஷத்துக்கு அபிவிருத்தியைச் செய்கிறானோ, அவன் உயர்ந்த ஐசுவரியத்தை அனுபவிப்பன். ஆதலால் ராமனுடன் ஸந்திபண்ணுவது எனக்கு இஷ்டமாயிருக்கிறது. எவளுக்காக ராமனும் மற்றவர்களும் நம்மை எதிர்த்து வந்திருக்கிறார்களோ, அந்த ஸீதையை ராமனிடம் கொடுத்துவிடு. நீ ருஷிகளை நடுங்கும்படி செய்து அதர்மத்தைச் செய்திருக்கிறாய். அவர்கள் ப்ரபாவத்தை எதிர்க்கமுடியாது. அவர்கள் செய்யும்

தவமும் யாகங்களும் வேதாத்யனமும் ராக்ஷஸர்களான நமக்கு அபஜயத்தைச் செய்யும். நீ தேவர்கள் அஸுரர்கள் முதலானவர்களால் கொல்லப்படாமையாகிய வரத்தை அடைந்திருக்கிறாய். இங்கே வந்திருக்கிறவர்கள் அவர்களில் ஒருவரும் அல்லர். அவர்கள் மனிதர்களும் குரங்குகளும். கெட்டநிமித்தங்களையும் பார்க்கிறேன்'' என்று சொல்லி, அவைகளை வர்ணித்தான். (ஸ-35.) இந்த ஹிதமான வாக்யத்தை ராவணன் கேளாமல் தன்னை ச்லாகித்துக்கொண்டு, ஸீதையைக் கொடுக்கமாட்டேன் என்று சொல்ல, மால்யவான் லஜ்ஜையுடன் திரும்பிப் போய் விட்டான். ராவணன் மந்திரிகளுடன் கலந்துபேசி, கிழக்குக் கோட்டைவாசலில் ப்ரஹஸ்தனையும், தெற்குவாசலில் மஹோதரனையும் மஹாபார்ச்வனையும், மேற்குவாசலில் தன்பிள்ளை இந்த்ரஜித்தையும், வடக்குவாசலில் சுகனையும் ஸாரணனையும், நடுவில் விரூபாக்ஷனையும் ஸேனைகளுடன் இருக்கும்படிக் கட்டளையிட்டுத் தானும் வடக்குவாசலில் இருக்கப்போவதாகச் சொல்லித் தான் செய்யவேண்டிய வேலையைச் செய்துவிட்டதாக எண்ணிக் கொண்டு அந்தப்புரம் சென்றான். (ஸ-36.)

(170) வானரவீரர்கள் என்ன செய்யவேண்டியது என்று ஆலோசிக்கையில், விபீஷணன், தன் மந்திரிகள் லங்கைக்குள் போய், ராக்ஷஸஸைனியம் வகுத்துவைக்கப்பட்டதைப் பார்த்து வந்ததையும் அந்த அணிவகுப்பையும் அவர்களுக்குச் சொல்லி அதை ராமனிடத்திலும் தெரிவித்தான். ராமன், நீலனை கிழக்குக் கோட்டைவாசலிலும், அங்கதனைத் தெற்குவாசலிலும், ஹநுமானை மேற்குவாசலிலும், மேற்குவாசலுக்கும் வடக்கு வாசலுக்கும் நடுவில் ஸுக்ரீவனையும், விபீஷணனையும், ஜாம்பவானையும் வைத்து, தான் லக்ஷ்மணனுடன் வடக்குவாசலிலிருப்பதாகச் சொன்னான். வானரங்கள் மனிதரூபத்துடன் இருந்து சண்டை போடவேண்டாம் என்றும், தானும் லக்ஷ்மணனும் விபீஷணனும் அவன் மந்திரிகள் நாலுபேர்களும் மனிதர்களாயிருந்து சண்டைபோடவேண்டியது என்றும் சொன்னான்.* (ஸ-37.)

* 164-வது பாராமுதல் சொன்ன விஷயங்கள் வானரஸேனை ஸமுத்ரத்தைத் தாண்டி லங்கைக்கு வந்தநாளுக்கு அடுத்தநாளில் நடந்தவைகள். ஸீதையினிடம் ராவணன், 'களைத்திருந்த ராமனை ப்ரஹஸ்தன் ராத்திரியில் கொன்றான்' என்று சொன்னதால் இஃது ஏற்படுகிறது. மேலே சொல்லப்போகிறவைகள் மூன்றாம்நாள் நடந்தவைகள்.

(171) ஸேனையை அணிவகுத்து ராமன் "ஸுவேலம் என்கிற மலையில் ஏறி அங்கு ராத்திரி இருப்போம்; லங்கையைப் பார்ப்போம். ராவணன் தர்மத்தையும் குலத்தையும் நல்ல நடக்கையையும் அறியாதவன். அவனுடைய அபராதத்தாலே ராக்ஷஸர்கள் கொல்லப்படுவதைப் பார்க்கப்போகிறேன்.

யஸ்மிந் பாபேஷு ஸம்யுக்தே ஸர்வநாசாய ஸம்பவேத் ॥
நீசேந நாஸ்ய தோஷேண குலம் தேந விநஶ்யதி ॥ (38-7.)

யமபாசத்தால் கட்டப்படவேண்டிய ஒருவன் பாபம் செய்கிறான். அந்த நீசனுடைய தோஷத்தாலே அவன் குலமே நசித்துவிடுகிறது" என்று சொல்லிக்கொண்டு மலையில் ஏறினன். அவனுடன்கூட லக்ஷ்மணனும் விபீஷணனும் ஸுக்கிரீவனும் வானரவீரர்களும் ஏறினார்கள். அன்று ராத்ரி அங்கேயே எல்லாரும் வஸித்தார்கள். (ஸ-38.) மறுநாள் காலையில் ராமன் லங்கையையும் அதன் அழகையும் ஸம்பத்தையும் பார்த்து ஆச்சரியம் அடைந்தான்: (ஸ-39.) அப்போது ஸுக்கிரீவன், கோபுரத்தின் உச்சியில் உட்கார்ந்த ராவணனைப் பார்த்துக் கோபத்துடன் கிளம்பி அவனிடம் போய், அவன் கிரீடத்தைக் கீழே தள்ள, இருவருக்கும் வெகுகாலம் த்வந்த்வயுத்தம் நடந்தது. ராவணன் களைத்து * மாயையின் பலத்தைக் காட்ட ஆரம்பிக்கையில், ஸுக்கிரீவன் கிளம்பி ராமனிடம் வந்துசேர்ந்தான். (ஸ-40.) ராமன் அவனைக் கட்டிக்கொண்டு "என்னுடன் ஆலோசிக்காமல் இந்த ஸாஹஸத்தைச் செய்தாயே. உனக்குக் கெடுதல் வந்தால் எனக்கு ஸீதையாலோ, தம்பிகளாலோ, உடம்பாலோ, என்ன ப்ரயோஜனம்? நீ திரும்பிவராமல்போனால், நான் ராவணனைச் சண்டையில் கொன்று விபீஷணனை ராஜாவாகப்பண்ணி, பரதனிடத்தில் என் ராஜ்யத்தை வைத்துவிட்டு உயிரை விட வேண்டும் என்று எண்ணினேன்" என்று சொன்னான். ஸுக்கிரீவன், "உன் பாரியையைக் கொண்டுபோன ராவணனைப்பார்த்து எப்படி என்னால் பொறுத்திருக்கமுடியும்?" என்று பதில் சொன்னான். ராமன் லக்ஷ்மணனுக்கு துர்நிமித்தங்களைக் காட்டிக்கொண்டு மலையிலிருந்து கீழே இறங்கினான். (ஸ-41.)

* இதனால் ஸுக்கிரீவன் ஜயம் அடைந்தான் என்றும், ராவணன் மாயையில்லாமல் சண்டைபோடமுடியாதவனாக ஆய்விட்டான் என்றும் காட்டப்படுகிறது.

(172) ராமன் வானரஸேனையுடன் லங்கைக்குப் புறப்பட்டு, அதை அடைந்து, முன்னால் செய்த ஏற்பாட்டின்படி நாலு கோட்டைவாசல்களிலும் வானரஸைன்யத்தைச் சண்டைக்கு ஸித்தமாயிருக்கும்படிச் செய்து, தான் வடக்குவாசலில் இருந்தான். ராஜநீதியை அநுஸரித்து, அங்கதனைக் கூப்பிட்டு, "அங்கத! ராவணனிடம்போய் நான் சொன்னதாகச் சொல்லு. ஸம்பத்தையும் ஐசுவரியத்தையும் இழந்து சாகப்போகிறவனே! அறிவில்லாதவனே! வரம் அடைந்த கர்வத்தாலே *தேவர்களுக்கும் ருஷிகளுக்கும் மற்றவர்களுக்கும் துரோஹம் செய்திருக்கிறாய். உன் கர்வம் இப்போது போகப்போகிறது. பார்யையை அபஹரித்ததால் வருத்தமடைந்த நான் உன்னைத் தண்டிக்கப் போகிறேன். அதற்காக லங்கையின் வாசலில் நிற்கிறேன். என்னால் கொல்லப்பட்டு தேவர்கள் முதலானவர்களுடைய லோகத்தை அடையப்போகிறாய். எந்தப் பலத்தால் ஸீதையைக் கொண்டுவந்தாயோ, அந்தப் பலத்தைக் காட்டு. ஸீதையைக் கொண்டுவந்து கொடுத்து என்னைச் சரணம் அடையாவிட்டால், கூர்மையான பாணங்களாலே பூமியில் ராக்ஷஸப்பூண்டில்லாமல் செய்யப்போகிறேன். தர்மத்தில் மனதுள்ள விபீஷணன் இடையூறில்லாத நிலையான லங்கைச்வர்யத்தை அடையப்போகிறான். ராஜ்யத்தை ஒருக்ஷணமும் அதர்மத்தோடு நீ அநுபவிக்கமுடியாது. தைரியத்துடன் சௌரியத்தைக்காட்டிக்கொண்டு சண்டைசெய். என் பாணங்களால் அடிக்கப்பட்டு நீ சுத்தனாக ஆவாய். என் கண்ணில் பட்டபிறகு மூன்று உலகங்களுக்கும் ஓடினாலும் உயிருடன் விடப்படமாட்டாய். உனக்கு ஹிதத்தைச் சொல்லுகிறேன். நீ இறந்தபிறகு மேல்காரியங்களைச் செய்கிறவர்கள் இருக்கமாட்டார்களாகையால், அவைகளை நீயே செய்துகொள். லங்கையை நன்றாய்ப் பார். நீ உயிரோடிருப்பது என் அதீனமாயிருக்கிறது என்று சொல்லு" என்று கட்டளையிட்டான். அங்கதன் ராவணன் மாளிகைக்குப்போய், அவன் மந்திரிகளுடன் இருக்கையில் ராமன் வார்த்தையைச் சொன்னபடி ராவணனுக்குத் தெரிவித்தான். அதைப் பொறுக்காமல் ராவணன் அங்க

* இதனால் தேவர்களின் சரணாகதியின்படி ராவணனைக் கொல்லுவதுதான் அவதாரத்தின் ப்ரயோஜனம் என்றும், ஸீதையை ராவணன் கொண்டுபோனது அதற்கு வியாஜமாத்ரம் என்றும் காட்டப்படுகிறது.

தனைப் பிடிக்கச்சொல்ல, நாலு ராக்ஷஸர்கள் அவனைப் பிடித்தார்கள். அவர்களுடன் மேலே கிளம்பி, அங்கதன் ராக்ஷஸர்களைக் கீழே தள்ளிவிட்டு, மாடியின் சிகரத்தை உடைத்துவிட்டுப் பெரிய சப்தத்துடன் ராமனிடம்போய்ச்சேர்ந்தான். ராவணன் இதைப் பார்த்து, தனக்கு நாசமுண்டாகுமோ என்று எண்ணிப் பெருமூச்சுவிட்டான். ராமன் ஸேனையுடன் சண்டைக்காக லங்கா பட்டணத்தைநோக்கிச் சென்றான். ஸுஷேணன் என்கிற வானர வீரன் நாலு கோட்டைவாசல்களைச் சுற்றிக்கொண்டிருந்தான். இதைக்கண்டு ராக்ஷஸர்களில் சிலர் ஆச்சரியத்தையும், சிலர் பயத்தையும், வேறு சிலர் சண்டையில் உத்ஸாஹமுள்ளவர்களாய் ஸந்தோஷத்தையும் அடைந்தார்கள். (ஸ-41.)

(173) வானரஸேனையினால் நகரம் தகையப்பட்டதை அறிந்த ராவணன், மாளிகையின்மேலே ஏறி அந்த ஸேனையைப் பார்த்து, அதை எதிர்ப்பதற்குத் தன் ஸேனைக்குக் கட்டளையிட்டான். வானரங்களும் நகரத்தின் மதிள்கள்மேல் ஏறி ராக்ஷஸர்களுடன் சண்டை செய்தன. (ஸ-42.) த்வந்த்வயுத்தங்கள் நடந்தன. இந்த்ரஜித்துடன் அங்கதனும், ப்ரஜங்கனுடன் ஸம்பாதியும், ஜம்புமாலியுடன் ஹநுமானும், மித்ரக்னனுடன் விபீஷணனும், தபனனுடன் கஜனும், நிகும்பனுடன் நீலனும், ப்ரகஸனுடன் ஸுக்ரீவனும், விரூபாக்ஷனுடன் லக்ஷ்மணனும், வஜ்ரமுஷ்டியுடன் மைந்தனும், அசநிப்ரபனுடன் த்விதனும், ப்ரதபநனுடன் நளனும், வித்யுன்மாலியுடன் ஸுஷேணனும் சண்டை செய்தார்கள். அக்னிகேது, ரச்மிகேது, ஸுப்தக்நன், யஜ்ஞகோபன் இவர்கள் ராமனை எதிர்த்தார்கள். ராமன் தன்னை எதிர்த்த நாலுபேர்களையும் கொன்றுவிட்டான். மற்ற ராக்ஷஸர்களில் பலர் இறந்துபோனார்கள். (ஸ-43.) அவர்கள்—யமசத்ரு, துர்தர்ஷன், மஹாபார்ச்வன், மஹோதரன், வஜ்ரதம்ஷ்ட்ரன், மஹாகாயன், சுகன், ஸாரணன்—என்பவர்கள். அங்கதன், இந்த்ரஜித்தினுடைய ரதத்தை உடைத்து, குதிரைகளையும் ஸாரதியையும் கொன்றான். அப்போது இந்த்ரஜித்து, மறைந்துகொண்டு பாம்புகளான பாணங்களாலே ராமனையும் லக்ஷ்மணனையும் பிளந்தான். பிறகு பாணங்களை வர்ஷித்து ஒன்றும் செய்யமுடியாதபடி ராமனைத் தாக்கினான். (ஸ-44.) இந்த்ரஜித்தினுடைய இருப்பிடத்தை அறிய, ராமன் அங்கதனையும் ஒன்பது வானர

வானரவீரர்களையும் அனுப்ப, அவர்கள் மரங்களைப் பிடுங்கிக் கொண்டு ஆகாசத்தில் போனார்கள். அவர்களை இந்த்ரஜித்து பாணங்களால் தடுத்தான். அவர்கள் அவனைக் காணமுடியவில்லை. இந்த்ரஜித்து, ராமனையும் லக்ஷ்மணனையும் பாணங்களாலே உடம்பு களில் ஓரிடம் தெரியாதபடி அடித்து, "இந்த்ரனும் என்னைப் பார்க்கவோ, கிட்டவோ சக்தியில்லாதவன். அப்படியிருக்க, நீங்கள் எவ்வளவு? உங்களைப் பாணங்களால் மூடி யமன் வீட்டிற்கு அனுப்புகிறேன்" என்று சொன்னான். ராமன் இந்த்ர ஜித்தின் பாணங்களால் அடிபட்டு மூர்ச்சையடைந்து கீழே விழுந்தான். அவனைப் பார்த்து லக்ஷ்மணன் உயிரோடிருப்பதில் ஆசையைவிட்டுக் கீழே விழுந்தான். இப்படி நாகபாசத்தால் கட்டுப்பட்டுக் கீழேவிழுந்த இருவர்களையும் பார்த்து ஹநுமான் முதலானவர்கள் துக்கம் அடைந்தார்கள். (ஸ-45.) இந்த்ர ஜித்து வானரவீரர்களைப் பாணங்களால் அடித்து, தன்கூட இருந்த ராக்ஷஸர்களை ஸந்தோஷப்படுத்தி, ராவணனிடம்போய், ராமனும் லக்ஷ்மணனும் கொல்லப்பட்டார்கள் என்று சொன்னான். ராவணன் ராத்திரியில் தூக்கமில்லாமல் ராமனிடமிருந்து உண்டான ஜ்வரத்தை விட்டுவிட்டுப் பிள்ளையைக் கட்டிக்கொண்டு ஸந்தோஷப்பட்டான். இங்கே ஸுக்கிரீவன் ராமனையும் லக்ஷ்மணனையும் பார்த்து துக்கப்பட்டான். விபீஷணன், "துக்கப் படாதே; இவர்கள் இறந்துபோகவில்லை; மூர்ச்சைமாத்திரம் அடைந்திருக்கிறார்கள்; அது சீக்கிரம் போய்விடும்; அதுவரை யில் இவர்களை ரக்ஷித்துக்கொண்டிரு" என்று சொன்னான். (ஸ-46.)

(174) ராவணன் இந்த்ரஜித்தை அனுப்பிவிட்டு, ஸீதை யை ரக்ஷித்துக்கொண்டிருந்த ராக்ஷஸிகளைக் கூப்பிட்டு, "ராம னும் லக்ஷ்மணனும் இந்த்ரஜித்தாலே கொல்லப்பட்டார்கள்; ஸீதையைப் புஷ்பகவிமானத்தில் ஏற்றிக்கொண்டு யுத்தகளத் துக்குப்போய் அவளுக்கு அவர்களைக் காட்டுங்கள். அப்போது அவள் ஆசையற்றவளாய் எனக்குப் பாரியையாக ஆய்விடுவாள்" என்று சொன்னான். ராக்ஷஸிகள் அப்படியே செய்தார்கள். ஸீதை, ராமனும் லக்ஷ்மணனும் சேஷ்டையில்லாமல் பூமியில் படுத்திருப்பதைப் பார்த்து துக்கப்பட்டு, "ஜ்ஞானவான்களான ப்ராம்மணர்கள், உனக்குப் பிள்ளை பிறக்கும்; நீ விதவையாக

மாட்டாய் என்றும், யாகம் பண்ணுகிறவருடைய பத்னியாயிருப்பாய் என்றும், சொன்னார்களே; அவர்கள் பொய் சொன்னார்களோ? என் பாதங்களில் பத்மரேகையிருக்கிறதே; இந்த அடையாளமுள்ள ஸ்திரீக்குப் பர்த்தாவுடன் அபிஷேகம் நடக்க வேண்டுமே; விதவையாகப்போகும் லக்ஷணம் என்னிடமில்லையே; என் உடம்பில் இருக்கிற லக்ஷணங்களைக்கொண்டு பர்த்தாவுடன் அபிஷேகமுண்டாகும் என்று சொன்னார்களே; அவைகள் ப்ரயோஜனமில்லாமல் போய்விட்டனவே; இரு ஸஹோதரர்களும் ஜனஸ்தானத்தைக் கலக்கி, ஸமுத்ரத்தைத் தாண்டிவந்தும் ஒரு குளப்படியில் கொல்லப்பட்டார்களே; மாயையினால் கண்ணுக்குப்படாமல் இருந்து ராக்ஷஸன் இவர்களைக் கொன்றுவிட்டானே; ராமன் கண்ணுக்குப் பட்டால், எவ்வளவு வேகமாக ஓடிப்போனாலும் சத்ருக்கள் உயிருடன் திரும்புவார்களோ; தெய்வத்தாலே செய்யமுடியாதது ஒன்றுமில்லை; அதை ஒருவனும் ஜயிக்கமுடியாது; என் மாமியாரைப்பற்றி எனக்கு எவ்வளவு துக்கம் அதிகமாக உண்டாகிறதோ, அவ்வளவு துக்கம் ராமனைப்பற்றியாவது லக்ஷ்மணனைப்பற்றியாவது என்னைபற்றியாவது என் தாயாரைப்பற்றியாவது உண்டாகவில்லை. கௌஸல்யை, 'ப்ரதிஜ்ஞையை முடித்துக்கொண்டுவரும் ராமனையும் லக்ஷ்மணனையும் எப்போது பார்ப்பேன்' என்று நினைத்துக்கொண்டு இருக்கிறாளே" என்று புலம்பினாள். (ஸ-47.) கூட இருந்த த்ரிஜடை அவளைப்பார்த்து, "தேவி! துக்கப்படாதே; உன்பர்த்தா உயிரோடிருக்கிறான்; இவர்களிருவரும் உயிரோடிருக்கிறார்கள் என்பதற்குத் தகுந்த காரணங்களைச் சொல்லுகிறேன். தலைவன் இறந்தால் ஸேனையிலிருக்கிறவர்களின் முகங்களில் கோபமும் ஸந்தோஷமும் தோன்றா. இவர்களுக்குப் பிராணன் போயிருந்தால் உன்னைப் புஷ்பகம் என்கிற இந்த விமானம் தூக்காது. நாயகனில்லாவிட்டால் ஸேனை உத்ஸாஹமில்லாமலும் ஒரு வியாபாரமும் செய்யாமலும் இங்கும் அங்கும் அலையும். இந்த வானரஸேனையோ அப்படி இல்லை; இதற்குப் பரபரப்புமில்லை; நடுக்கமுமில்லை; ராமலக்ஷ்மணர்களை ரக்ஷித்துக்கொண்டிருக்கிறது. இந்தக் காரணங்களால் இவர்கள் கொல்லப்படவில்லை என்று எண்ணுகிறேன். இதை நம்பு. உன்னிடத்தில் ஸ்நேஹத்தால் இதைச் சொல்லுகிறேன். நான் முன்னாலே பொய் சொன்ன

தில்லை; இனிமேலும் சொல்லப்போவதில்லை. இவர்களைத் தேவர்களும் சண்டையில் கொல்லமுடியாது. இவர்கள் முகத்தில் ஒரு விகாரமும் இல்லை. இறந்தவர்களுக்கு அப்படியிராது" என்று ஸீதைக்கு ஆறுதலைச் சொன்னாள். ஸீதை அஞ்ஜலி பண்ணிக்கொண்டு "நீ சொன்னபடியேயாகவேண்டும்" என்று சொல்லி, விமானத்துடன் லங்கைக்குத் திரும்பிப்போய் அசோக வனத்தையடைந்தாள். (ஸ-48.)

(175) நாகபாசத்தால் கட்டப்பட்டிருந்தும் பெரும் பலமுள்ளவனகையால் ராமனுக்கு நினைவு திரும்பிவந்தது. லக்ஷ்மணன் பாணங்களால் அடிபட்டுத் தரையில் கிடப்பதைப் பார்த்து ராமன், "சண்டையில் ஜயிக்கப்பட்டுக் கிடக்கும் தம்பியைப் பார்க்கும் எனக்கு ஸீதையால் என்ன ஆகவேண்டும்? உயிரோடிருப்பதால் என்ன ஆகவேண்டும்? ஸீதையைப்போன்ற ஸ்திரீயை உலகத்தில் தேடி அடையலாம். லக்ஷ்மணனைப்போன்ற தம்பியை எங்கே அடையலாம்? வானரங்கள் பார்த்துக் கொண்டிருக்கையில் நான் பிராணனை விடப்போகிறேன். கௌஸல்யைக்கும் கைகேயிக்கும் பிள்ளையைப்பார்க்க ஆசைப்பட்டுக் கொண்டிருக்கும் ஸுமித்ரைக்கும் நான் என்ன சொல்லுவேன்? அவனைவிட்டு நான் திரும்பிப்போனல், ஸுமித்ரைக்கு என்ன ஆறுதலைச் செய்யமுடியும்? லக்ஷ்மணா! நான் துக்கப்பட்ட காலங்களில் நீ எனக்கு ஆறுதலைச் சொன்னயே. இப்போது ஒன்றும் பேசவில்லையே. காட்டுக்குவந்த என் பின்னலே நீ வந்தாயே. நானும் இப்போது உன்னோடு யமன்வீட்டுக்கு வருகிறேன். விபீஷணனை ராஜாவாகப் பண்ணுகிறதாகச் சொன்னேனே. அந்த வார்த்தைப் பொய்யாய்விட்டதே. அதுவும் என்னைக் கொளுத்துகிறது" என்று புலம்பி, ஸுக்ரீவனைப் பார்த்து, "மித்ரன் செய்யவேண்டிய வேலையை நீ செய்தாய் விட்டது. வானரவீரர்களுடன் திரும்பிப் போ" என்று சொல்லி, மறுபடியும் மூர்ச்சையை அடைந்தான். இதைக்கேட்டு வானரங்கள் கண்ணீரைவிட்டன. அப்போது விபீஷணன் கதையுடன் அங்கே வந்தான். அவனை இந்த்ரஜித்தாக ப்ரமித்து வானரங்கள் அங்குமிங்கும் ஓடின. (ஸ-49.) ஸுக்ரீவன் ஜாம்பவானைக்கொண்டு "இவன்விபீஷணன்; இந்த்ரஜித்து அன்று" என்று சொல்லச்சொல்லி, வானரங்கள் ஓடிப்போவதைத் தடுத்தான்.

விபீஷணன் ஜலத்தாலே ராமனுடைய கண்களையும் லக்ஷ்மணனுடைய கண்களையும் துடைத்து அவர்களிருப்பைப் பார்த்து, "இவர்கள் பலமுள்ளவர்கள்; பராக்ரமமுள்ளவர்கள்; மறைந்து சண்டைபோடுகிற ராக்ஷஸர்களால் இவர்கள் இந்த அவஸ்தையை அடைவிக்கப்பட்டார்கள். இவர்களுடைய பலத்தை நம்பி நான் ப்ரதிஷ்டையை ஆசைப்பட்டேன். இவர்கள் இறந்து கிடக்கிறார்களே. நான் உயிரோடிருக்கும் பிணமாய்விட்டேன். ராஜ்யம் கிடைக்குமென்ற என் எண்ணம் நாசமடைந்தது" என்று அழுதான். அவனை ஸுக்ரீவன் கட்டிக்கொண்டு "நீ ராஜ்யத்தை அடையப்போகிறாய். இதில் ஸந்தேஹம் இல்லை. ராவணனும் அவன் பிள்ளையும் தங்கள் இஷ்டங்களைப் பெறப் போகிறதில்லை. ராம லக்ஷ்மணர்களுக்கு இப்போது நேரிட்டிருக்கும் பீடை இவர்களைக் கொல்லாது. இது மூர்ச்சைமாத்திரமே" என்று சொல்லி, பக்கத்திலிருந்த ஸுஷேணனைப் பார்த்து, "இவர்களுக்கு ப்ரஜ்ஞை திரும்பிவரும். இவர்களை சூரர்களான வானரர்களுடன் கிஷ்கிந்தைக்குக் கொண்டுபோ. நான் ராவணனைப் பிள்ளைகளுடனும் பந்துக்களுடனும் கொன்று ஸீதையைக் கொண்டுவருகிறேன்" என்று சொன்னான். ஸுஷேணன் "முன்னாலே தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் சண்டை நடந்த காலத்தில் அஸுரர்களாலே கொல்லப்பட்ட தேவர்களைப் பிழைப்பூட்ட ப்ருஹஸ்பதி சில ஓஷதிகளை மந்திரித்துச் சிகித்ஸை செய்தான். அவைகளாவன—ஸஞ்ஜீவகரணி, விசல்யகரணி. அவைகள் திருப்பாற்கடலில் இருக்கின்றன. அவைகள் வானரங்களுக்குத் தெரியும். ஹநுமான் போய் அவைகளைச் சீக்கிரம் கொண்டுவரட்டும்" என்று சொன்னான். இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கையில், கருடன் அங்கே வந்தான். உடனே ராமனையும் லக்ஷ்மணனையும் கட்டிக்கொண்டிருந்த நாகபாசங்கள் ஓடிப்போயின. கருடன் தன் கைகளால் அவர்கள் முகத்தைத் துடைக்க, அவர்களின் வ்ரணங்கள் இருந்தவிடம் தெரியாமல் போய்விட்டன. அவர்களும் எழுந்தார்கள். ராமன் கருடனைப் பார்த்து, "உன் அநுக்ரஹத்தாலே இந்த்ரஜித்தினாலுண்டான பெரிய துன்பம் போய்விட்டது. முன்போலப் பலமுள்ளவர்களாகச் செய்யப்பட்டோம். தகப்பனான தசரதனையும், பாட்டனான அஜனையும் அடைந்ததுபோல் உன்னை அடைந்து

என் மனது தெளிந்திருக்கிறது" என்று சொல்லி, "நீ யார்?" என்று கேட்டான். கருடன், "நான் உனக்குத் தோழன். வைநதேயன் என்று எனக்குப் பெயர். உங்களுக்கு உதவிசெய்ய இங்கே வந்திருக்கிறேன். இந்த்ரஜித்தாலே போடப்பட்ட நாக பாசத்திலிருந்து ஒருவனை விடுவிக்க இந்திரன் உள்பட ஒருவனும் முடியாது. இவைகள் கத்ருபிள்ளைகளான நாகங்கள்; ராக்ஷஸனுடைய மாயையின் ப்ரபாவத்தாலே அஸ்திரங்களாக வந்து உங்களைக் கட்டின. இதையறிந்து உனக்குத் தோழனாயிருப்பதை நினைத்துக்கொண்டு இங்கே வந்தேன். இனிமேல் நீங்கள் ஜாக்ரதையாக இருந்து மேல்காரியங்களைச் செய்யவேண்டும். ராக்ஷஸர்களுக்கு மாயை பலம்; உங்களுக்கு * ஆர்ஜவம் பலம்" என்று சொல்லி, ராமனைக் கட்டிக்கொண்டு அவனை ப்ரதக்ஷிணம் பண்ணி விடைபெற்றுக்கொண்டு, திரும்பிப்போனான். வானரங்கள் ஸ்வஸ்தமாக்கப்பட்ட ராமனையும் லக்ஷ்மணனையும் பார்த்து ஸிம்மநாதம் செய்தன. பேரிகள் அடிக்கப்பட்டன. சங்கங்கள் ஊதப்பட்டன. வானரங்கள் மரங்களைப் பிடுங்கிக்கொண்டு கோட்டைவாசலில் போய்ச் சண்டையிட ஆசையுள்ளவைகளாய் நின்றன. (ஸ-50.)

(176) வானரஸேனையிலிருந்து உண்டான ஸந்தோஷ சப்தத்தைக்கேட்டு, ராவணன், அதற்குக் காரணத்தையறிய ராக்ஷஸர்களை அனுப்பினான். அவர்கள் மதில்கள்மேல் ஏறிப் பார்த்து ராமனும் லக்ஷ்மணனும் நாகபாசத்திலிருந்து விடுபட்டதையும், வானரஸேனை சண்டைக்கு ஸித்தமாயிருப்பதையும் ராவணனுக்குத் தெரிவித்தார்கள். அவன், "இந்த்ரஜித்தாலே போடப்பட்ட நாகாஸ்த்ரங்கள் வீணாகப்போகமாட்டாவே; அவைகள் இப்போது வீணாய்ப்போய்விட்டனவே" என்று மனம் கலங்கி, தூம்ராக்ஷன் என்கிற ராக்ஷஸனைப் பெரிய ஸேனையுடன் அனுப்பினான். புறப்படுகையில் ராக்ஷஸர்களுக்குக் கெடுதியைத் தெரிவிக்கும் துர்நிமித்தங்களைப் பார்த்துக்கொண்டு அவன் மேற்குக் கோட்டைவாசலுக்குப்போய் ஹநுமானை எதிர்த்தான். (ஸ-51.) வானரங்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் கொடுமையான சண்டை நடந்தது. இருபக்கங்களிலும் அநேகம்பேர்கள் பல

* மனதும் வாக்கும் செயலும் ஒத்திருப்பது—ஆர்ஜவம்.

விதமாய்க் கொல்லப்பட்டார்கள். இதைப் பார்த்து மிகுந்த கோபம்கொண்டு ஹநுமான் ஒரு மலைச்சிகரத்தைப் பிடுங்கி தூம்ராக்ஷன் தலையில் போட்டு அவனைக் கொன்றான். மற்ற ராக்ஷஸர்கள் பயந்து லங்கைக்குத் திரும்பிப்போனார்கள். (ஸ-52.) தூம்ராக்ஷன் வதத்தைக்கேட்டு ராவணன் வஜ்ரதம்ஷ்ட்ரன் என்கிற ஸேனைத்தலைவனைச் சண்டைக்கு அனுப்பினான். அவன் துர்நிமித்தங்களைப் பார்த்துக்கொண்டு, தெற்குக்கோட்டைவாசலுக்குப்போய் அங்கதனை எதிர்த்து, அநேக வானரங்களைக் கொன்றான். அங்கதன் கோபத்துடன் மரங்களைப் பிடுங்கிக் கொண்டு ராக்ஷஸஸேனையை நாசம் செய்தான். (ஸ-53.) வஜ்ரதம்ஷ்ட்ரனுக்கும் அங்கதனுக்கும் சண்டை நடந்தது. அங்கதன் சத்ருவின்மேல் ஒரு மலையைப் பிடுங்கிப் போட்டான். அவன் ஒரு முஹூர்த்தம் மூர்ச்சை அடைந்திருந்து, அங்கதனுடன் த்வந்த்வயுத்தம்பண்ணி, அவனால் கொல்லப்பட்டான். மற்ற ராக்ஷஸர்கள் பயந்து லங்கைக்கு ஓடிப்போனார்கள். (ஸ-54.) பிறகு ராவணன் அகம்பனன் என்கிற ஸேனைத்தலைவனைச் சண்டைக்கு அனுப்ப, ராக்ஷஸர்களுக்கும் வானரங்களுக்கும் கொடுமையான யுத்தம் நடந்தது. அகம்பனன் அநேக வானரங்களைக் கொன்றான். நளன், குமுதன், மைந்தன், த்விதன் என்கிற வானரவீரர்கள் ராக்ஷஸர்களைக் கொன்றார்கள் (ஸ-55.) அப்போது ஹநுமான் வந்து அநேக ராக்ஷஸர்களைக்கொன்று, ஒரு மரத்தைப் பிடுங்கி அகம்பனன்தலையில் போட்டு அவனைக் கொன்று கீழே தள்ளினான். ராக்ஷஸர்கள் ஓடிப்போனார்கள். தேவகணங்களும், ராமலக்ஷ்மணர்களும், ஸுக்ரீவனும், விபீஷணனும் ஹநுமானைக் கொண்டாடினார்கள். (ஸ-56.) பிறகு, ராவணன் காலைவேளையில் லங்கையைச் சுற்றிப்பார்த்து, ஸேனாபதியான ப்ரஹஸ்தனைக் கூப்பிட்டு, "உன்னையும் என்னையும் கும்பகர்ணனையும் இந்த்ரஜித்தையும் நிகும்பனையும் தவிர, நகரத்தைத் தகைந்துகொண்டிருக்கிற வானரஸேனையிலிருந்து அதை விடுவிக்க வேறொருவராலும் முடியாது" என்று சொல்லி, அவனைச் சண்டைக்கு அனுப்பினான். அவன் பெரிய ஸேனையை அணிவகுத்து, கிழக்குக் கோட்டைவாசலிலிருந்து வெளிப்பட்டான். (ஸ-57.) ராக்ஷஸர்களுக்கும் வானரங்களுக்கும் கொடுமையான சண்டை நடந்தது. ப்ரஹஸ்தனுடைய நாலு

வீரர்களை எதிர்த்து த்விதன், தூர்முகன், ஜாம்பவான், தாரன் ஆகிய வானரவீரர்கள் ஒவ்வொருவனையும் ஒவ்வொருவனுகக் கொன்ருர்கள். நீலன் ப்ரஹஸ்தனை எதிர்த்து அவன் போட்ட பாணங்களையெல்லாம் வருத்தமில்லாமல் ஏற்றுக்கொண்டு ஒரு மரத்தைப் பிடுங்கி அதை எறிந்து அவனுடைய குதிரைகளைக் கொன்று அவன் வில்லைப் பிடுங்கினுன். ப்ரஹஸ்தன் ரதத்தை விட்டுக்குதித்து நீலனுடன் த்வந்த்வயுத்தம் பண்ணினுன். கடைசியில் நீலனுல் போடப்பட்ட பெரிய பாறையினுல் தலை பிளக்கப்பட்டு ப்ரஹஸ்தன் இறந்தான். ராக்ஷஸர்கள் துக்க ஸமுத்ரத்தில் முழுகினுர்கள். (ஸ-58.)

(177) இப்படி ஸேனைத்தலைவர்கள் கொல்லப்பட்டதைக் கேட்டு, ராவணன் துக்கத்தையும் கோபத்தையும் அடைந்து, "இனி சத்ருவை அலக்ஷியம் பண்ணக்கூடாது; நானே சண்டைக்குப் போகிறேன்" என்று சொல்லி, ரதத்தில் ஏறிக்கொண்டு பெரிய ஸேனையுடன் புறப்பட்டான். அந்த ஸேனையிலிருந்த தலைவர்களை இன்னுன் இன்னுன் என்று விபீஷணன் ராமனுக்குத் தெரிவித்தான். அவர்கள் :—ராவணன் பிள்ளையான அகம்பனன், இந்த்ரஜித், அதிகாயன், மஹோதரன், பிசாசன், த்ரிசிரஸ், கும்பன், நிகும்பன், நராந்தகன் என்பவர்கள். கடைசியில் ராவணனையும் காட்டினுன். ராமன் ராவணனைப் பார்த்து, "நல்ல வேளை; இந்தப் பாபி என் கண்ணுக்குப் பட்டானே; ஸீதையைக் கொண்டுபோனதினுல் எனக்கு உண்டான கோபத்தை இப்பொழுது இவன்மேல் செலுத்துகிறேன்" என்று சொல்லி, லக்ஷ்மணனுடன் வில்லும் கையுமாய் நின்ருன். ஸுக்ரீவன் ஒரு மலைச்சிகரத்தைப் பிடுங்கிக்கொண்டு ராவணன்மேல் போட, அதை அவன் பாணங்களால் பிளந்தான். ராவணன் ஒரு பாணத்தாலே ஸுக்ரீவனை அடித்துத் தள்ளினுன். சில வானரவீரர்கள் மலைகளைப் பிடுங்கிக்கொண்டு ராவணனை எதிர்த்தார்கள். ராவணன் அவர்களையும் பாணங்கால் பிளந்து கீழே தள்ளினுன். அப்போது எல்லாரும் ராமனைச் சரணம் அடைந்தார்கள். ராமன் வில்லை எடுக்க, லக்ஷ்மணன், "இவனைக் கொல்ல நானே போதும்; எனக்கு அநுமதி கொடுக்கவேண்டும்" என்று ப்ரார்த்தித்தான். ராமன், "ராவணன் மிகுந்த வீர்யமும் பராக்ரமமுமுள்ளவன்; மூன்று உலகங்களும் அவனை எதிர்க்க

முடியாது. ஜாக்ரதையாய்ச் சண்டைசெய்" என்று சொன்னான். அப்போது ஹநுமான், ராவணனிடம்போய் அவனைப் பார்த்து, "தேவர்கள் முதலானவர்களாலே கொல்லமுடியாதவன் என்று வரம் பெற்றிருக்கிறாய். நான் அவர்களில் ஒருவனும் அன்று. வானரர்களிடமிருந்துதான் உனக்குப் பயம் வரப்போகிறது. என் வலதுகை உன்னைக்குத்தி உன் உடம்பிலிருந்து ஆத்மாவை பிரிக்கப்போகிறது" என்று சொல்ல, ராவணன், "கூச்சமில்லாமல் என்னை அடி; நிலையான கீர்த்தியை அடை; உன் பராக்ரமம் ஏற்கனவே எனக்குத் தெரியும்; உன்னை நாசம்பண்ணுகிறேன்" என்று பதில் சொன்னான். ஹநுமான் மறுபடியும் "என்னால் கொல்லப்பட்ட உன் பிள்ளை அக்ஷனை நினை" என்று சொல்ல, ராவணன் அவனைக் கையால் மார்பில் அடித்தான். அதனால் ஹநுமான் மிகவும் ஆட்டம் அடைந்தான். பிறகு ஹநுமான் ராவணனைக் கையாலேயே அடித்தான். அதனால் ராவணன் ஆடிவிட்டான். அதைக்கண்டு தேவர்களும் ருஷிகளும் ஸித்தர்களும் வானரர்களும் ஸந்தோஷம் அடைந்தார்கள். ராவணன் கொஞ்சம் ஆறுதலையடைந்து ஹநுமானின்வீர்யத்தைக் கொண்டாடினான். ஹநுமான், "என் வீர்யத்தைச் சுட வேண்டும். இன்னும் நீ உயிரோடிருக்கிறாயே. இன்னொரு தடவை என்னை அடி. உன்னை யமன்வீட்டுக்கு அனுப்புகிறேன்" என்று சொல்ல, ராவணன் வலதுமுஷ்டியால் ஹநுமானை அடித்தான். ஹநுமான் அதனால் சலிக்க, ராவணன் நீலனை எதிர்த்து அவன்மேலே பாணங்களை வர்ஷிக்க, அவன் ஒரு மலையை அவன் மேலே எறிந்தான். அப்போது ஆறுதலையடைந்த ஹநுமான் ராவணனைப் பார்த்து, "வேறொருவனுடன் சண்டைப் போடுகிற உன்னை எதிர்ப்பது தகுந்ததன்று" என்று கோபத்துடன் சொன்னான். ராவணன் நீலன்போட்ட மலையை ஏழு பாணங்களால் துண்டுதுண்டாய்ப்பண்ணி கீழே தள்ளினான். நீலன் அநேக மரங்களை ராவணன்மேல் போட, அவன் அவைகளைப் பாணங்களால் துண்டித்து, நீலன்மேலே பாணங்களை வர்ஷித்தான். நீலன் தன்னைச் சிறு உடம்புள்ளவனாகப்பண்ணிக்கொண்டு ராவணன் த்வஜத்தின் நுனியில் உட்கார்ந்தான். அவனை ராவணன் பார்த்து கோபத்தாலே ஜ்வலித்தான். அதைக்கண்டு ராமலக்ஷ்மணர்களும் ஹநுமானும் ஆச்சரியம் அடைந்தார்கள்.

ராவணனும் ஆச்சரியப்பட்டு த்வஜத்தின் முனையிலிருந்த நீலனைப் பார்த்து, "நீ உயர்ந்த மாயையினால் லாகவமுள்ளவனாயிருக்கிறாய். சக்தியிருந்தால் உன் ப்ராணனை ரக்ஷித்துக்கொள்" என்று சொல்லி ஆக்நேயாஸ்த்ரத்தை அவன்மேல் ப்ரயோகித்தான். நீலன் மார்பில் அடிக்கப்பட்டுக் கொளுத்தப்பட்டுக் கீழேவிழுந்தான். ஆனால் உயிர் அவனைவிட்டுப் போகவில்லை. ராவணன், மூர்ச்சையடைந்திருந்த நீலனை விட்டுவிட்டு, லக்ஷ்மணனை எதிர்த்தான். லக்ஷ்மணன் அவனைப்பார்த்து "என்னுடனேயே சண்டைக்கு வா; வானரங்களுடன் சண்டை செய்வது உனக்குத் தகுந்ததன்று" என்று சொன்னான். ராவணன் "நல்லவேளை என் கண்ணுக்கு எதிரே வந்தாய். என் பாணக் கூட்டங்களால் துன்பப்படுத்தப்பட்டு யமன்தேசத்துக்குப் போவாய்" என்று பதில் சொல்ல, லக்ஷ்மணன், "ராஜாவே! மஹாத்மாக்கள் தங்களைத் தாங்களே ஸ்தோத்ரம்பண்ணுவதில்லை. பாபம் செய்தவர்களுக்குள் உயர்ந்தவனே! என்ன பிதற்றுகிறாய்? உன்னுடைய பலம், வீர்யம், ப்ரதாபம், பராக்ரமம் இவைகள் எனக்குத் தெரியும். வில்லும் பாணமுமாக இதோ முன்னில் நிற்கிறேன்" என்று சொன்னான். ராவணனும் லக்ஷ்மணனும் ஒருவன்மேல் ஒருவன் பாணங்களைப் போட்டார்கள். ஒவ்வொருவனும் அவைகளைத் துண்டித்தார்கள். பிறகு ராவணன் லக்ஷ்மணனை அடிக்க, அவன் கையிலிருக்கும் வில் நழுவி மூர்ச்சையை அடைந்தான். ப்ரஜ்ஞை திரும்பிவந்தபிறகு, பாணங்களால் ராவணன் வில்லை முறித்தான், ராவணன் ப்ரம்மா கொடுத்திருந்த சக்தியை லக்ஷ்மணன்மேல் போட்டான். அதை லக்ஷ்மணன் துணித்தும், அதனால் மார்பில் அடிக்கப்பட்டு மூர்ச்சை அடைந்து கீழே விழுந்தான். அவனை ராவணன் கைகளால் தூக்க ஆரம்பிக்கையில் தூக்கமுடியவில்லை. அப்போது ஹநுமான் கோபங்கொண்டு முஷ்டியாலே ராவணனை மார்பில் அடிக்க, அவன் வாயாலும் கண்களாலும் காதுகளாலும் ரக்தத்தைக் கக்கிக்கொண்டு ரதத்தில்விழுந்து மூர்ச்சை அடைந்தான். இப்படி ராவணன் இருக்க, ஹநுமான் லக்ஷ்மணனைத் தூக்கிக்கொண்டு ராமனிடம் கொண்டுபோனான். ஹநுமான் ஸுஹ்ருத்தாயும் பக்தியுள்ளவனாயுமிருந்தபடியால் தூக்கும்படி லகுவாக லக்ஷ்மணன் ஆனான். சக்தியானது லக்ஷ்மணனைவிட்டு ராவணனிடம்

போய்ச்சேர்ந்தது. லக்ஷ்மணன் தான் விஷ்ணுவின் அம்சமாயிருப்பதை நினைத்துக்கொள்ள, பாணங்களாலுண்டான துன்பம் போய்விட்டது. ராவணனுக்கும் ப்ரஜ்ஞை திரும்பிவந்தது. வானரஸேனையை அவன் அடித்தான். அதைப்பார்த்து ராமன் ஹநுமான்மேல் ஏறிக்கொண்டு ராவணனை எதிர்த்து அவனைப் பார்த்து, "நில் நில்; எனக்கு இவ்விதமான அப்ரியம் செய்து எங்கேபோய் விடுபடுவாய்? எவனைச் சக்தியால் அடித்தாயோ * அவன் உன்னிடம் வந்திருக்கிறான்" என்று சொன்னான். ராவணன் ஹநுமானை பாணத்தாலே அடித்தான். அதனாலே அவனுக்கு இயற்கையாகவுள்ள தேஜஸானது குறையாமல் விருத்தி அடைந்தது. ராமன் பாணங்களாலே ரதத்தை உடைத்து, குதிரைகளையும் ஸாரதியையும் கொன்று, த்வஜத்தையும் குடையையும் கீழேதள்ளி, வஜ்ரம் என்கிற ஆயுதத்தையும் சூலத்தையும் கத்தியையும் துணித்து, அவனையும் அடித்தான். அவன் மூர்ச்சைஅடைந்து வில்லை விட்டுவிட்டான். ராமன் வேறு ஓர் பாணத்தால் அவன் கிரீடத்தைக் கீழேதள்ளி, "நீ பயங்கரமான பெரிய வேலையைச்செய்து, களைப்பையடைந்திருக்கிறாய்; ஆகையால் இதையறிந்து உன்னை யமனிடம் சேர்க்கவில்லை; போ, நான் விடைகொடுக்கிறேன். லங்கைக்குப்போய், ஆறுதலை அடைந்து நாளையதினம் ரதத்துடனும் வில்லுடனும் திரும்பி வா. அப்போது ரதத்திலிருந்துகொண்டு என் பலத்தைப் பார்ப்பாய்" என்று சொன்னான். ராவணன் கர்வமும் ஸந்தோஷமும் போய், வெட்கத்துடன் நகரத்துக்குள் ப்ரவேசித்தான். தேவர்கள் முதலானவர்கள் ஸந்தோஷப்பட்டார்கள். (ஸ-59.)

(178) ராவணன் ராக்ஷஸர்களைக் கூப்பிட்டு "நான் செய்த உக்ரமான தபஸு முழுவதும் வீணாய்ப்போய்விட்டது. மஹேந்த்ரனுக்கு ஸமானனான நான் ஒரு மனிதனால் ஜயிக்கப்பட்டேன். "மனிதனிடமிருந்து உனக்கு மரணம்வரும்" என்று ப்ரம்மா சொன்னது என் நினைவுக்கு வருகிறது. மனிதனால் கொல்லப்படா

* இதற்கு—அந்த லக்ஷ்மணன் சீக்கிரம் வந்ததாக எண்ணு—என்பது கருத்து. ராமன் தன்னையும் லக்ஷ்மணனையும் ஒன்றாக எண்ணிச் சொன்னதாகவுமாம்.

மையை நான் கேட்கவில்லை. இக்ஷ்வாகுவம்சத்தில் பிறந்த அநரண்யன் என்பவனாலே ‘ என்வம்சத்தில் ஒருவன் பிறந்து உன்னை எல்லாப் பந்துகளுடன் கொல்லப்போகிறான் ’ என்று சபிக்கப்பட்டேன். அவன்தான் ராமன் என்று நினைக்கிறேன். என்னால் பலாத்காரம் பண்ணப்பட்ட வேதவதி என்கிற ஸ்திரீ என்னைச் சபித்தாள். அவள்தான் ஸீதையாக வந்திருக்கிறாள். பார்வதி, நந்தி, ரம்பை, வருணகன்யகை இவர்களும் சபித்தார்கள் ” என்று சொல்லி கும்பகர்ணனை எழுப்பச்சொன்னான். அவர்கள் வெகு ப்ரயாஸத்துடன் அவனை எழுப்பி, ஹநுமான் வந்தது முதல் நடந்தவைகளையெல்லாம் அவனுக்குத் தெரிவித்தார்கள். அவன் “ ராமனையும் லக்ஷ்மணனையும் வானரஸேனையையும் இப்போதே நாசம்பண்ணி, பிறகு ராவணனைப் பார்க்கிறேன் ” என்று சொல்ல, “ அது தகுந்தது அன்று. ராஜாவைப் பார்த்துக் குணதோஷங்களை விசாரித்துப் பிறகு சத்ருக்களை ஜயிக்கலாம் ” என்று அவர்கள் சொன்னார்கள். அதை அவன் ஒப்புக்கொண்டு ராவணன் மாளிகைக்குப் போனான். (ஸ-60.) கும்பகர்ணனைப் பார்த்து வானரங்கள் பயப்பட, விபீஷணன் ராமனிடம் கும்பகர்ணனுடைய பூர்வசரித்திரத்தை விரிவாய்ச் சொல்லி, “ அவனை, ராவணன்கட்டளையின்படி ராக்ஷஸர்கள் எழுப்பியிருக்கவேண்டும் ” என்று சொன்னான். ராமன் நீலனை, “ வானரஸேனையைச் சண்டைக்கு ஸித்தமாக வைத்திரு ” என்று கட்டளையிட்டான். (ஸ-61.) ராவணன் கும்பகர்ணனைக் கட்டிக்கொண்டு தன் பக்கத்தில் உட்காரவைத்து, ராமனால் பயமுண்டானதையும் முக்யமான ராக்ஷஸவீரர்கள் கொல்லப்பட்டதையும் சொல்லி, வானரஸேனையை நாசம்பண்ணி சத்ருக்களைக் கொன்று லங்கையை ரக்ஷிக்கும்படி அவனை வேண்டினான். (ஸ-62.) கும்பகர்ணன், “ மந்திராலோசனைசெய்யும் காலத்தில் எந்த தோஷத்தை நான் சொன்னேனோ, அஃது இப்போது வந்திருக்கிறது. பாபமான உன் கர்மத்தின் பலன் சீக்கிரம் வந்திருக்கிறது. இந்த செய்கையையும், அதன்பின்னால் வருவதையும் ஆலோசியாமல், வீர்யமிருக்கிறது என்கிற கர்வத்தால் அதைச் செய்தாய் ” என்று சொல்லி, ஐசுவரியத்தை அடைந்திருக்கிறவன் தகுந்த மந்திரிகளுடன் ஆலோசித்து எந்தக் காரியத்தையும் செய்யவேண்டும் என்றும், அப்படிச் செய்யாவிட்டால் கெடுதல்வரும் என்றும், எவன்

தகுந்த மந்திரி என்றும் நிரூபணம்செய்து, "முன்னால் விபீஷணனாலே சொல்லப்பட்டதை இப்போது செய்யவேண்டியது. அதுவே நமக்கு ஹிதமான கார்யம். எது இஷ்டமோ அதைச் செய்" என்று சொன்னான். இதைக்கேட்டு ராவணன் கோபித்துக்கொண்டு, "ஆசாரியன்போல் என்னைச் சிக்ஷிக்கிறாய். உன் பேச்சாலே என்ன ப்ரயோஜனம்? எப்போது எது தகுந்ததோ அதைச் செய்யவேண்டியது. கெட்டதை நல்லதாக எண்ணியோ, அறிவில்லாமையாலோ, பலத்தையும் வீர்யத்தையும் நம்பிக் கொண்டோ, எந்தக் கார்யம் ஆலோசிக்கப்படவில்லையோ, அதை இப்போது சொல்லி என்ன ப்ரயோஜனம்? என்னுடைய அபந்யாயத்தாலே செய்யப்பட்டதை, உன் பராக்ரமத்தாலே சரிப்படுத்து" என்று சொன்னான். கும்பகர்ணன், "ராக்ஷஸ ராஜாவே! நீ தாபத்தை அடையவேண்டாம். கோபத்தைவிட்டுவிட்டு, ஸ்வஸ்தனாயிரு. நான் உயிரோடிருக்கிறவரையில் இந்தக் கவலையை மனதில் வைக்காதே. எவனை நினைத்து நீ தபிக்கிறாயோ, அவனை நாசம்பண்ணுகிறேன். ராமன் என்னைக் கொன்றபிறகன்றோ உன்னைக் கொல்லவேண்டும்? அதுவே முடியாது. ஆதலால் கவலையற்றிரு" என்று பிரதிஜ்ஞை பண்ணி, அவனுக்கு நம்பிக்கை வருவதற்காகத் தன்னுடைய பராக்ரமத்தை ச்லாகித்துக் கொண்டு சண்டைக்குப் புறப்பட்டான்.* (ஸ-63.)

(179) கும்பகர்ணனைப் பார்த்து, வானரங்கள் பயந்து, மூலைக்குமூலை ஓடின. அவர்களைப் பார்த்து அங்கதன், "நீங்கள் ஓடுவது தகுந்தது அன்று. நாம் ஜயித்தால் அழியாத கீர்த்தியை அடைவோம். கொல்லப்பட்டால் வீரஸ்வர்க்கத்துக்குப் போவோம். ராமன் இருக்கையில் நமக்கு என்ன பயம்?" என்று நல்வார்த்தைசொல்லி, அவைகளை நிறுத்திச் சண்டைக்கு ஸித்தமாயிருக்கும்படி பண்ணினான். (ஸ-66.) வானரங்கள் மரங்களைப் பிடுங்கிக்கொண்டு கும்பகர்ணனை எதிர்த்தன.

---

* மஹோதரன் என்கிற ராக்ஷஸன் கும்பகர்ணனைத் தூஷித்து ராமனைக் கொல்லமுடியாது என்றும், அவன் கொல்லப்பட்டதாகக் கோஷித்து ஸீதையை வசப்படுத்தவேண்டும் என்றும் சொன்னான். கும்பகர்ணன் அவனைத் தூஷித்து, முன்போல் சத்ருக்களைக் கொல்லுவதாகச் சொல்லி சண்டைக்குப் புறப்பட்டுப்போனான். (ஸ-64-65.)

அவன் வானரங்களைக் கதையால் அடித்து ஆயிரக்கணக்காகக் கீழே தள்ளினான்; சிலரைக் கடித்துத் தின்றான். த்விவிதனும் ஹநுமானும் மலைகளைப் பிடுங்கி அவன்மேல் போட்டார்கள். அவன் சூலத்தாலே மலைகளைப் பிளந்தான். ஹநுமான் வேறு மலையைப் பிடுங்கி நின்றுகொண்டு தன்னிடம்வந்த கும்பகர்ணனை அடித்தான். அவன் அதனால் கலங்கி, ரக்தம்பெருகச் சூலத்தை எடுத்துக்கொண்டு ஹநுமானை மார்பில் குத்தினான். ஹநுமான் மார்பு பிளக்கப்பட்டு மூர்ச்சையை அடைந்து பயங்கரமாகக் கதறினான். நீலன் ஒரு மலையைக் கும்பகர்ணன்மேல் எறிந்தான். அவன் அதை முஷ்டியாலே தூளாக்கினான். நீலனும் மற்றும் நாலு வானரவீரர்களும் அவனை எதிர்த்தார்கள். கும்பகர்ணன் அவர்களில் ருஷபனைக் கைகளாலும், சரபனை முஷ்டியாலும், நீலனை முழங்காலாலும், கவாக்ஷனை உள்ளங்கையாலும், கந்தமாதனனைக் காலாலும் அடித்தான். இவர்கள் எல்லாரும் ரக்தத்தைக் கக்கிக் கொண்டு கீழே விழுந்தார்கள். அங்கதன் கும்பகர்ணன்மேல் ஒரு மலையை எறிந்து மார்பில் அடித்தான். கும்பகர்ணன் மூர்ச்சை அடைந்து அது தெளிந்தவுடன் அங்கதனைச் சூலத்தால் குத்தினான். அவன் மூர்ச்சை அடைந்து கீழே விழுந்தான். கும்பகர்ணன் சூலத்தை எடுத்துக்கொண்டு ஸுக்ரீவனை எதிர்த்து அவன்மேல் சூலத்தை ப்ரயோகித்தான். ஹநுமான் அதை முழங்காலில்வைத்துக் கைகளால் முறித்துவிட்டான். கும்பகர்ணன் மலையின் சிகரத்தைப் பிடுங்கி அதனால் ஸுக்ரீவனை அடித்தான். ஸுக்ரீவன் அதனால் அடிபட்டு மூர்ச்சை அடைந்து கீழேவிழ, அவனைத் தூக்கிக்கொண்டு கும்பகர்ணன் லங்கைக்குப்போனான். ப்ரஜ்ஞை திரும்பிவந்தபிறகு ஸுக்ரீவன் கும்பகர்ணனுடைய காதுகளை நகங்களால் கிள்ளி, மூக்கையும் விலாப்புறங்களையும் பற்களால் கடித்தான். கும்பகர்ணன் அவனைப் பிடித்துத் தரையில் அறைய, அவன் ஆகாசத்தில் கிளம்பி ராமனிடம் போய்ச்சேர்ந்தான். கும்பகர்ணன் திரும்பிவந்து வானரங்களைப் பக்ஷிக்க, எல்லாரும் ராமனைச் சரணம் அடைந்தார்கள். அப்போது லக்ஷ்மணன் ஏழு பாணங்களாலே கும்பகர்ணனை அடித்தான். அவனை விட்டுவிட்டுக் கும்பகர்ணன் ராமனை எதிர்த்தான். ராமன், ரௌத்ராஸ்த்ரத்தை அவன் மேல்போட்டு அடிக்க, அவனுடைய கதையும் ஆயுதங்களும்

நழுவி பூமியில் விழுந்தன. அவன் மலைச்சிகரத்தை ராமன்மேல் எறிய, ராமன் அதைப் பாணங்களால் துணித்தான். அப்போது லக்ஷ்மணன் வானரங்களைப் பார்த்து கும்பகர்ணன்மேல் ஏறுங்கள் என்று சொல்ல, அவர்கள் அப்படியே ஏற, துஷ்டயானைப் பாகனைத் தள்ளுவதுபோல், அவைகளையெல்லாம் கும்பகர்ணன் கீழே தள்ளினான். ராமன், இவன் துஷ்டராக்ஷஸன் என்று தெரிந்து வில்லும் கையுமாய்க் கும்பகர்ணனை எதிர்த்தான். அவன், "இவன்தான் ராமன்" என்று அறிந்து, "நான் விராதன் அல்லன்; கபந்தனும் கரனும் வாலியும் மாரீசனும் அல்லன்; நான் கும்பகர்ணன். இந்த என் இருப்புலக்கையைப் பார். இதனால் நான் முன்பு தேவர்களையும் அஸுரர்களையும் ஜயித்தேன். நான் காதும் மூக்குமில்லாதவன் என்று என்னை அலக்ஷ்யம் செய்யாதே. என்மேல் உன் வீர்யத்தைக் காட்டு. இப்போது நான் உன்னைக் கொல்லுகிறேன்" என்று சொன்னான். இப்படிச் சொன்னவனை ராமன் பாணங்களாலே அடித்தான். அவைகளால் அவனுக்கு ஒரு துன்பமுமுண்டாகவில்லை. ராமன் வாயவ்ய அஸ்த்ரத்தால் அவனுடைய ஒரு புஜத்தை அறுத்தான். இன்னொரு கையால் மரத்தைப் பிடுங்கிக்கொண்டு அவன் ராமனை எதிர்க்க, ராமன் ஐந்த்ராஸ்த்ரத்தால் அந்தப் புஜத்தையும் அறுத்துத் தள்ளினான். புஜங்கள்போயும் எதிர்த்துவந்த அவனை இரண்டு அர்த்தசந்த்ரபாணங்களைப் போட்டு கால்களை அறுத்துத்தள்ளி, ஐந்த்ராஸ்ரத்தாலே அவன் தலையை அறுத்தான். கும்பகர்ணன் பூமியில்விழுந்து இறந்தான். தேவர்கள் முதலானவர்கள் ஸந்தோஷப்பட்டார்கள். ராக்ஷஸர்கள் துக்கப்பட்டார்கள். (ஸ-67.)

(180) கும்பகர்ணன் கொல்லப்பட்டதை ராவணன்கேட்டு மூர்ச்சையடைந்தான். ப்ரஜ்ஞை திரும்பிவந்தபிறகு, அவனைப் பற்றிப் புலம்பினான்—"கும்பகர்ண! சத்ருஸேனையைத் தபிக்கச்செய்து, என் துன்பத்தைப் போக்காமல் என்னை விட்டுவிட்டு யமன்வீட்டுக்குப் போய்விட்டாயே! எனது வலதுகை போய்விட்டதே! உன்னை நம்பி நான் ஒருவனையும்கண்டு பயப்படவில்லையே! தேவர்கள் நீ கொல்லப்பட்டதைப் பார்த்து ஸந்தோஷத்துடன் கூச்சல்போடுகிறார்களே! வானரங்கள் இப்போதே இங்கே வருமே! கும்பகர்ணனை இழந்தபிறகு,

எனக்கு ஸீதையாலோ, ராஜ்யத்தாலோ, உயிராலோ என்ன ப்ரயோஜனம்? என் தம்பியைக் கொன்றவனை நான் கொல்லா விட்டால் எனக்கு மரணமே தகுந்தது. மஹாத்மாவான விபீஷணன்வார்த்தையை நான் கேட்கவில்லையே! அதன் பலன் இப்போது வந்திருக்கிறது. ப்ரஹஸ்தன்வதத்தைக் கேட்டது முதல், விபீஷணன்வார்த்தை என்னைத் துன்பப்படுத்துகிறது. தார்மிகனுன அவனைத் துரத்திவிட்டேனே! அதன் பலன் இப் போது வந்து எனக்குச் சோகத்தைக் கொடுக்கிறது" என்று புலம்பி ராவணன் கீழே விழுந்தான். (ஸ-68.)

(181) இப்படிப் புலம்பும் ராவணனைப் பார்த்து, அவன் பிள்ளை த்ரிசிரஸ், "ப்ரம்மா உனக்குக் கொடுத்த ரதத்தையும் சக்தியையும், கவசத்தையும் வில்லையும்கொண்டு ராமனை வதம் செய்யலாம். ஆனுல் நீ இங்கேயிரு. நான் போர்க்களத்துக்குப் போகிறேன். உன் சத்ருக்களை நாசம் செய்கிறேன்" என்று அவனைத் தேற்றினுன். இதைக்கேட்டு ராவணன் மறுபடியும் தான் பிறந்ததாக எண்ணினுன். த்ரிசிரஸின் வார்த்தையைக் கேட்டு தேவாந்தகன், நராந்தகன், அதிகாயன் ஆகிய மற்றப் பிள்ளைகளும் சண்டை செய்வதில் உத்ஸாஹமுள்ளவர்களாய் நான் முன்னே நான் முன்னே என்று போட்டிப்போட்டார்கள். ராவணன் அவர்களைக் கட்டிக்கொண்டு ஆசீர்வாதம்பண்ணிச் சண்டைக்கு அவர்களையும், அவர்களை ரக்ஷிக்க, தன் தம்பியான யுத்தோன்மத்தனையும் மத்தனையும் கூட அனுப்பினுன். அவர்கள் எல்லாரும் போர்க்களத்துக்குப் போனுர்கள். ராக்ஷஸர்களுக்கும் வானரங்களுக்கும் கொடுமையான சண்டை நடந்தது. அங்கதன் நராந்தகனைப் பார்த்து, "இந்த வானரங்களை விட்டுவிட்டு உன் கத்தியை என்மேல் போடு" என்று சொல்ல, அவன் அப்படியே செய்தான். அஃது அவனுடைய மார்பில்பட்டும் அவனை ஒன் றும் பண்ணுமல் உடைந்து சிதறிக் கீழே விழுந்தது. அங்கதன் உள்ளங்கையாலே அறைந்து நராந்தகன் குதிரையைக் கொன்று, முஷ்டியாலே அவனை அடிக்க, அவன் மார்புபிளந்து கீழேவிழுந்து இறந்தான். (ஸ-69.) அப்போது தேவாந்தகனும் த்ரிசிரஸும் யுத்தோந்மத்தனும் சேர்ந்து அங்கதனை எதிர்க்க, அவர்களுள் த்ரசிரஸ் அவனை நெற்றியில் அடித்தான். அதைப்பார்த்து ஹநுமான் தேவாந்தகனைத் தலையில் அடித்தும், நீலன் யுத்தோந்

மத்தனையும் மலையாலே தலையில் அடித்தும் கொன்றார்கள். ஹநுமான் த்ரிசிரஸின் கத்தியைப் பிடுங்கி அதைக்கொண்டே அவன் கழுத்தை அறுத்துத் தள்ளினன். அப்போது எதிர்த்துவந்த மத்தன் என்பவனை ருஷபன் அவன்கதையைப் பிடுங்கிக்கொண்டு அதனாலேயே அவனை அடித்துக் கொன்றான். (ஸ-70.) இப்படித் தன் ப்ராதாக்களும் சிற்றப்பன்மார்களும் கொல்லப்பட்டதைப் பார்த்துக் கோபம்கொண்டு அதிகாயன் எதிர்த்துவந்தான். அவனைக்கண்டு வானரங்கள் கும்பகர்ணன் திரும்பிவந்தான் என்று நினைத்துப் பயந்து மூலைக்குமூலை ஓடின. இதைக்கண்டு ராமன் அவனை வர்ணித்து, அவன் யார் என்று விபீஷணனைக் கேட்க, அவன் "இவன் ராவணன் பிள்ளை; இவனுக்கு அதிகாயன் என்று பெயர்; ப்ரம்மாவிடம் வரம் பெற்றவன்; ராவணனுக்கு ஸமமானவன்; இவன்விஷயத்தில் தகுந்த ப்ரயத்தனங்களைச் சீக்கிரம் செய்யவேண்டும்" என்று சொன்னன். எதிர்த்துவந்த அதிகாயனை வானரவீரர்கள் மலைகளாலும் மரங்களாலும் அடிக்க, அவன் அவைகளைப் பாணங்களால் துணித்து, அவர்களைப் பாணங்களால் துன்பப்படுத்தினன். வானரவீரர்கள் அவனுக்கு ஒன்றும் செய்யமுடியாமல் இருந்தார்கள். அவன் அவர்களை விட்டுவிட்டு, ராமனிடம்போய், அவனைச் சண்டைக்கு அழைக்க, லக்ஷ்மணன் அவனை எதிர்த்தான். அவன் தன்மேல் போட்ட பாணங்களை லக்ஷ்மணன் துணித்து, அவனைப் பாணத்தால் நெற்றியில் அடித்தான். அவனும் லக்ஷ்மணனை மார்பில் அடிக்க, லக்ஷ்மணனுடைய உடம்பிலிருந்து ரக்தம் பெருகிற்று. பிறகு இருவரும் ஒருவன்மேல் ஒருவன் பாணங்களைப் போட்டார்கள். ஒருவன்போட்ட பாணங்கள் மற்றவனால் துண்டிக்கப்பட்டன. இப்படியிருக்கையில், வாயு ஆகாசத்திலிருந்து "இவன் ப்ரம்மாவினிடமிருந்து வரம்பெற்றவன். ப்ரம்மாஸ்த்ரத்தைத் தவிர, மற்றொன்றாலும் அவனைக் கொல்லமுடியாது" என்று சொல்ல, லக்ஷ்மணன் அந்த அஸ்த்ரத்தையே ப்ரயோகித்தான். அதைப் பலவிதமாய் அதிகாயன் தடுத்துப்பார்த்தும் முடியவில்லை. அதனல் கழுத்து அறுபட்டு அவன் இறந்தான். ராக்ஷஸர்கள் லங்கைக்கு ஓடினார்கள். வானரங்கள் ஸந்தோஷம் அடைந்தன. (ஸ-71.)

(182) கும்பகர்ணன்முதலானவர்களின் வதத்தைக்கேட்டு, ராவணன் "தூம்ராக்ஷன் முதலான சூரர்களும் வெகு ராக்ஷஸர்களும் கொல்லப்பட்டார்களே! ராமனையும் லக்ஷ்மணனையும் இந்த்ரஜித்து நாகபாசத்தாலே கட்டினதும் வியர்த்தமாகிவிட்டதே! ராமனையும் ஸுக்கிரீவனையும் எவன் கொல்லுவன்? ராமனை நான் நாராயணனாகவே எண்ணுகிறேன்" என்று நினைத்துக்கொண்டு, ராக்ஷஸர்களை எப்போதும் ஜாக்ரதையுடன் நகரத்தை ரக்ஷிக்கும்படி கட்டளையிட்டுப் பயத்துடன் தன் அரண்மனைக்குப்போனான். (ஸ-72.) அதிகாயன் முதலான பிள்ளைகளும் தம்பிகளும் கொல்லப்பட்டதைக் கேட்டு ராவணன் மூர்ச்சையடைந்தான். இந்த்ரஜித்து அவனைத்தேற்றி, அக்னியில் ஹோமம்செய்து சஸ்த்ரங்களை மந்திரித்து, போர்க்களத்துக்குப் போய் வானரங்கள்போட்ட மரங்களையும் மலைகளையும் தடுத்து, அவர்களைப் பலவிதமாய்த் துன்பப்படுத்தி, ஸுக்ரீவன்முதலான வானரவீரர்களை அடித்து, வானரஸேனையை ப்ரம்மாஸ்த்ரத்தாலே மோஹம்அடையும்படி செய்தான். அந்த ஸேனையினிருப்பைப் பார்த்து, ராமன், "லக்ஷ்மணா! இந்த்ரஜித்து வானரஸேனையைக் கீழேதள்ளி, ப்ரம்மாஸ்த்ரத்தைக்கொண்டு நம்மையும் துன்பப்படுத்துகிறான். ப்ரம்மா அவனுக்கு வரம்கொடுத்திருக்கிறார். அவன் மறைந்திருந்து இந்த வேலையைச் செய்கிறான். அவனை எப்படி நாம் கொல்லமுடியும்? இந்தப் பாணம் விழுவதை என்னைப்போலவே நீயும் மனக்கவலையில்லாதவனாய்ப் பொறுத்துக்கொள்" என்று சொன்னான். அப்படியே இந்த்ரஜித்தால் அடிக்கப்பட்டு ராமலக்ஷ்மணர்கள் மூர்ச்சையை அடைந்தார்கள். இந்த்ரஜித்து திரும்பி நகரத்துக்குப்போனான். (ஸ-73.) விபீஷணன் ஹநுமானைக் கண்டுபிடித்து, அவனுடன் தீவட்டிகளைப் பிடித்துக்கொண்டு யுத்தகளத்தைச் சுற்றிப் பார்த்து எவர்கள் உயிருடன் இருந்தார்களோ, அவர்களுக்கு ஆறுதலைச் சொல்லி ஜாம்பவானைக் கண்டார்கள். விபீஷணன், "உயிரோடிருக்கிறாயா?" என்று அவனைக் கேட்க, ஜாம்பவான் "ராக்ஷஸச்ரேஷ்ட! உன்னைப் பார்க்கமுடியவில்லை; குரலாலே உன்னை அறிந்துகொண்டேன். ஹநுமான் உயிரோடிருக்கிறானா?" என்று கேட்டான். விபீஷணன், "ராமலக்ஷ்மணர்களைபற்றிக் கேளாமல் ஹநுமானைப்பற்றி ஏன் கேட்கிறாய்?" என்று வினவ,

ஜாம்பவான், "ஹநுமான் பிழைத்திருந்தால், நாம் கொல்லப் படாதவர்களாக ஆவோம்" என்று பதில் சொல்லி, ஹநுமானை ஸ்தோத்ரம்பண்ணி, "ஹிமவத் பர்வதத்துக்கும் கைலாஸபர்வத சிகரத்துக்கும் நடுவில் ஓஷதிபர்வதம் இருக்கிறது. அதில் ஸஞ்ஜீவிகரணி முதலான நாலு மஹௌஷதிகள் இருக்கின்றன. அவைகளைக் கொண்டுவா" என்று சொன்னான். ஹநுமான் அப்படியே ஒரே தாண்டலாய்ப்போய் ஓஷதி பர்வதத்தைப் பார்க்கும்போது, 'நம்மைக் கொண்டுபோக வந்திருக்கிறான்' என்று ஓஷதிகள் மறைந்துவிட்டன. ஹநுமான் கோபம்கொண்டு முழுமலையையும் பிடுங்கிக்கொண்டு திரும்பிவந்தான். ஓஷதிகளின் வாஸனை பட்டவுடன் ராமனும் லக்ஷ்மணனும் இறந்துபோன எல்லா வானரங்களும் எழுந்திருந்தார்கள். இதுவரையில் சண்டையில் அடிபட்டு இறந்த வானரங்களும் பிழைத்தன. ராவணன் உத்தரவினால், கொல்லப்பட்ட ராக்ஷஸர்கள் அப்போது அப்போது ஸமுத்ரத்தில் தள்ளப்பட்டார்கள். ஆதலால் அவர்கள் பிழைக்க வழியில்லை. (ஸ-74.)

(183) பிறகு ஸுக்கிரீவன் வானரர்களைக் கொள்ளிக் கட்டையைக்கொண்டு லங்கையைக்கொளுத்தும்படி கட்டளையிட, அவைகள் அப்படியே செய்து, ஒரு முஹூர்த்தத்தில் நகரத்தைக் கொளுத்தின. வானரங்கள் ஸந்தோஷத்தினாலும், ராக்ஷஸர்கள் பயத்தினாலும் கூக்குரலிட்டார்கள். ராமனும் லக்ஷ்மணனும் நகரத்தின் கோபுரங்களைப் பாணங்களால் அடித்தார்கள். அவர்களின் நாணின் சப்தமும் வானர ராக்ஷஸர்களின் சப்தமும் எங்கும் கேட்கப்பட்டன. ராவணன் மிகுந்த கோபம் அடைந்து கும்பகர்ணன் பிள்ளைகளான கும்பனையும் நிகும்பனையும் யூபாக்ஷன், சோணிதாக்ஷன், ப்ரஜங்கன், கம்பனன் என்கிற ராக்ஷஸ வீரர்களையும் அனுப்பினான். ராக்ஷஸஸேனைக்கும், வானரஸேனைக்கும் கொடுமையான சண்டை நடந்தது.* (ஸ-75.) கம்பனன் அங்கதனை எதிர்த்து, கதையால் அடித்து மூர்ச்சை அடையும்படிச் செய்தான். ப்ரஜ்ஞை திரும்பிவந்தபிறகு அங்கதன் மலைச்

* இந்த்ரஜித்தின் சண்டை மூன்றாவதுநாளில் ஸாயங்காலத்துக்குள் முடிந்தது. நகரத்தைக் கொளுத்தினது அன்றுராத்ரி முதல்யாமத்தில், உடனே சண்டை ஆரம்பமாயிற்று.

சிகரத்தை எறிந்து அவனைக் கொன்றான். அப்போது சோணிதாக்ஷனும் யூபாக்ஷனும் ப்ரஜங்கனும் அங்கதனை எதிர்க்க, அவனுக்குத் துணையாக மைந்தனும் த்விதனும் வந்தார்கள். மூன்று வானரவீரர்களுக்கும் மூன்று ராக்ஷஸர்களுக்கும் சண்டை நடந்தது. அங்கதன் ப்ரஜங்கனுடைய கையை முஷ்டியால் அடிக்க, அதிலிருந்து கத்தி நழுவிக் கீழேவிழுந்தது. அங்கதன் அதை எடுத்துக்கொண்டான். ப்ரஜங்கன் அங்கதனை அடிக்க, அவன் ப்ரஜங்கன்கழுத்தை அந்தக் கத்தியால் அறுத்து அவனைக் கொன்றான். யூபாக்ஷன் ரதத்தைவிட்டுக்கீழேஇறங்கி எதிர்த்துவந்தான். அவனை த்விதன் எதிர்த்துக் கைகளால் பிடித்துக்கொண்டான். அவனுக்குத் துணையாக சோணிதாக்ஷன் வந்தான். அவனை த்விதனும், யூபாக்ஷனை மைந்தனும் கொன்றார்கள். கும்பன் வந்து மைந்தனையும் த்விதனையும் அங்கதனையும் அடித்துக் கீழேதள்ள, அவனுக்கும் ஸுக்கிரீவனுக்கும் த்வந்த்வயுத்தம் நடந்தது. ஸுக்கிரீவன் அவனைத் தூக்கி ஸமுத்ரத்தில் எறிய, அவன் அதிலிருந்து கிளம்பிச் சண்டைக்குவர, ஸுக்கிரீவன் முஷ்டியால் அவன் மார்பில் அடித்து அவனைக் கொன்றான். (ஸ-76.) நிகும்பன் எதிர்த்து வர, அவனை ஹநுமான் எதிர்த்தான். ஹநுமானை அவன் இருப்புலக்கையாலும் அவனை ஹநுமான் முஷ்டியாலும் அடிக்க, அவன் ஹநுமானைப் பிடித்து இழுத்துக்கொண்டுபோனான். ஹநுமான் தன்னை விடுவித்துக் கொண்டு அவனைக் கீழேதள்ளி அவன் மார்பில் கிளம்பிக் கிளம்பிக் குதித்து அவன் தலையைத்திருகிக் கொன்றான். (ஸ-77.)

(184) நிகும்பன் முதலானவர்கள் கொல்லப்பட்டதைக் கேட்டு ராவணன் மிகுந்த கோபமும் துக்கமுமுள்ளவனாய்க் கரன் பிள்ளையான மகராக்ஷனை யுத்தகளத்துக்கு அனுப்பினான். (ஸ-78) அவன்போய் வானரங்களின்மேலே பாணங்களை வர்ஷிக்க, அவைகள் ஓடிப்போயின. அவனுக்கும் ராமனுக்கும் சண்டை நடந்தது. கடைசியில் ராமன் அவன் வில்லை முறித்து ரதத்தை உடைக்க, மகராக்ஷன் சூலத்தை ராமன்மேல் போட்டான். அதையும் ராமன் துணிக்க, அவன் முஷ்டியுடன் ராமனிடம்வர, ராமன் ஆக்நேயாஸ்த்ரத்தாலே மகராக்ஷனுடைய மார்பைப் பிளந்து அவனைக் கொன்றான். (ஸ-79.)

(185) மகராக்ஷன் கொல்லப்பட்டதைக் கேட்டு ராவணன் மிகுந்த கோபங்கொண்டு, இந்த்ரஜித்தை யுத்தகளத்துக்கு அனுப்ப, அவனும் ஹோமஞ்செய்து மறைந்துகொண்டிருந்து, ராமனையும் லக்ஷ்மணனையும் வானரஸேனையையும் பாணங்களால் அடித்து, ராமன் ஆகாசத்தில் போட்ட பாணங்களைத் துணிக்க, லக்ஷ்மணன் ராமனைப்பார்த்து "ப்ரம்மாஸ்த்ரத்தாலே இந்த்ரஜித்தையும் ராக்ஷஸர்கள் எல்லாரையும் நாசஞ்செய்கிறேன்" என்று சொன்னான். ராமன், "ஒருவன் தப்பிதத்துக்காக எல்லாரையும் கொல்லுவது நியாயம் அன்று. நானே அவன் எங்குபோனாலும் தப்பாதபடிசெய்து அவனைக் கொல்லுகிறேன்" என்று சொல்லி, அதை எப்படிச் செய்கிறது என்று ஆலோசித்துக்கொண்டிருந்தான். (ஸ-80.) ராமனுடைய அபிப்ராயத்தை அறிந்து இந்த்ரஜித்துப் பயந்து நகரத்துக்குள்ளே போய், மாயையினால் ஸீதையைப்போல் ஒன்றைச்செய்து, அதை ரதத்தில் வைத்துக்கொண்டு திரும்பிவந்து ஹநுமானுக்கும் வானரங்களுக்கும் முன்னால் நின்றான். ஹநுமான் அதைப்பார்த்து உண்மையில் ஸீதை என்று பிரமித்து வானரங்களுடன் அவனை எதிர்த்தான். அவன் கத்தியை எடுத்துக்கொண்டு "எவளுக்காக நீங்கள் வந்திருக்கிறீர்களோ, அவளைக் கொல்லுகிறேன். பிறகு ராமலக்ஷ்மணர்களையும் உன்னையும் ஸுக்ரீவனையும் விபீஷணனையும் கொல்லுகிறேன்" என்று சொல்லி, ஹநுமானால் தடுக்கப்பட்டும் கத்தியால் மாயாஸீதையை வெட்டிக் கீழே தள்ளினான். (ஸ-81.) அப்போது ஹநுமானும் வானரங்களும் இந்த்ரஜித்தையும் ராக்ஷஸஸேனையையும் எதிர்த்துச் சண்டைசெய்தார்கள். பிறகு ஹநுமான், "இனி எதற்காக சண்டைசெய்கிறது? ராமனிடம் நடந்ததைச் சொல்லி, அவன் எதைக் கட்டளையிடுகிறானோ அதைச் செய்வோம்" என்று சொல்லி, அவர்களுடன் ராமனிடம் போனான். இந்த்ரஜித்தும் நிகும்பிலை என்கிற இடத்துக்குப்போய் யாகம் செய்ய ஆரம்பித்தான். (ஸ-82.)

(186) ஹநுமான் ராமனிடம்போய் இந்த்ரஜித்து செய்த செய்கையைத் துக்கத்துடன் தெரிவிக்க, அவன் துக்கத்தாலே மூர்ச்சித்துக் கீழே விழுந்தான். அவனைக் கட்டிக்கொண்டு லக்ஷ்மணன், "நீ இந்திரியங்களை அடக்கிக்கொண்டு ஸன்மார்க்கத்தில் இருந்தாலும் தர்மம் உன்னை அநர்த்தங்களிலிருந்து

ரக்ஷிக்கமுடியவில்லையே. நாம் ஸ்தாவரங்களையும் ஜங்கமங்களையும் எப்படிப் பார்க்கிறோமோ, அப்படித் தர்மத்தை நாம் பார்ப்பதில்லை. தர்மம் என்று ஒரு வஸ்து இல்லையென்றே எண்ணுகிறேன். அஃது இருந்தால் உன்னைப்போன்றவன் விபத்தை அடையமாட்டான். அதர்மம் என்று ஒன்று இருந்தால் ராவணன் நரகத்துக்குப் போகவேண்டியது. ராவணனுக்குக் கஷ்டம் வராமையாலும் உனக்குக் கஷ்டம் வந்திருப்பதாலும் தர்மம் அதர்மபலத்தைக் கொடுத்து அதர்மமாகவும், அதர்மம் தர்மபலனைக்கொடுத்து தர்மமாகவும் ஆய்விட்டன. தர்மமும் அதர்மமும் இருந்தாலும் அவைகள் கிரியாரூபங்களாகையாலே செய்த உடனே போய்விடுகின்றன. ஆகையால் அவைகளின் பலன்களைத் தெய்வம் கொடுக்கிறது என்று சொல்லுகிறார்கள். தெய்வத்துக்கு எல்லாமிருக்கிறபடியால் அது தனக்காக அதைச் செய்வதாகச் சொல்லக்கூடாது. பிறருக்காகவானால் ஒருவனை ஏழையாகவும் மற்றொருவனைப் பணக்காரனாகவும், இன்னும் பலவிதமான வைஷம்யமிருப்பவைகளாகவும் அது செய்யக்கூடாது. கர்மத்துக்குத் தகுந்தபடி அது பலன் கொடுக்கிறது என்றால், தெய்வம்தானே ஒருவனை நல்ல கர்மத்தையும் ஒருவனைக் கெட்டகர்மத்தையும் செய்விக்கிறது. ஆகையால் தெய்வம் பலன் கொடுக்கிறது என்கிற மதம் ஒப்புக்கொள்ளக்கூடாது. வேறு சிலர் அபூர்வம் என்று சொல்லப்படுகிற அதிர்ஷ்டம் பலன்களைக் கொடுக்கிறது என்று சொல்லுகிறார்கள். அதிர்ஷ்டத்தை நாம் பார்க்கவில்லை. அநுமாநத்தாலும் அது ஏற்படாது. அதைச் சொல்லும் வேதவாக்யங்கள் அர்த்தவாதங்கள். ஆகையால், அதிர்ஷ்டத்தையும் ஒப்புக்கொள்ளக்கூடாது. தர்மம் பலத்தை அநுஸரித்துப் பலனைக் கொடுக்கவேண்டும். அதை அபேக்ஷிக்காமல் பலனைக்கொடுக்கச் சக்தியில்லை. ஆகையால், துர்பலமான தர்மத்தை நாம் செய்யவேண்டியதில்லை. ப்ரதானமான பலத்தையே நாம் அநுஸரிக்கவேண்டும். பித்ருவாக்ய பரிபாலனம் என்கிற தர்மத்தைச் செய்ததாலேதான் நீ காட்டுக்கு வந்தாய். ராக்ஷஸன் உன் பாரியையை அபஹரித்தான். இந்த்ரஜித்து அவளைக் கொன்று உனக்கு மிகுந்த துக்கத்தை உண்டுபண்ணினான், நான் இந்த்ரஜித்தைக்கொன்று அந்த துக்

கத்தைப் போக்குகிறேன்; எழுந்திரு" என்று சொன்னான்.* (ஸ-83.) அப்போது அவ்விடம்வந்த விபீஷணன் ராமன் துக்கப்பட்டிருப்பதையும் அவனுக்கு லக்ஷ்மணன் ஆறுதல் சொல்லுவதையும்கண்டு, அதன் காரணத்தையும் அறிந்து, "இந்த்ரஜித்து ஸீதையைக்கொன்றது மாயை; அதற்காகத் துக்கப்படவேண்டாம்; அவன் இடையூறில்லாமல் சண்டையைச் செய்துமுடிப்பதற்காக நிகும்பிலையில் யாகம் செய்கிறான். அது முடிந்தால் ஒருவனும் அவனை ஜயிக்கமுடியாது. அது முடிவதற்கு முன்னாலே அவனைக் கொல்லவேண்டும். அதற்காக என்னுடனும் ஸைனியங்களுடனும் லக்ஷ்மணனை அனுப்பவேண்டும்" என்று ராமனை ப்ரார்த்தித்தான். (ஸ-84.)

(187) விபீஷணன் சொன்னதைத் துக்கத்தாலே ராமன் முதலில் அறியவில்லை. அதை மறுபடியும் சொல்லச்சொல்லி, விஷயத்தைத் தெரிந்துகொண்டு விபீஷணனுடனும் முழுவானரஸேனையுடனும் லக்ஷ்மணனை நிகும்பிலைக்கு அனுப்பினான். (ஸ-85) வானரஸைனியம் அவ்விடம்போய் ராக்ஷஸஸேனையை எதிர்க்க, இரண்டு ஸேனைகளுக்கும் கொடுமையான சண்டை நடந்தது. ஹநுமான் ராக்ஷஸஸேனையை நாசம்செய்துகொண்டிருந்தான். அதைக்கேட்டு இந்த்ரஜித்து யாகத்தை முடிக்காமலே வெளியே வந்து ரதத்தில் ஏறிக்கொண்டு ஹநுமானைக் கொல்லவந்தான். அவனுக்கும் ஹநுமானுக்கும் பலமான சண்டை நடந்தது. அப்போது விபீஷணன் இந்த்ரஜித்தைக் கொல்லும்படி லக்ஷ்மணனை ஏவினான். (ஸ-86.) விபீஷணன் லக்ஷ்மணனுக்கு ஓர் ஆலமரத்தைக் காண்பித்து அதன்கிட்ட இந்த்ரஜித்துப் போவதற்கு முன்னாலே அவனைக் கொல்லவேண்டும் என்று சொல்ல, லக்ஷ்மணன் அவனைச் சண்டைக்குக் கூப்பிட்டான். இந்த்ரஜித்து லக்ஷ்மணன்பக்கத்தில் விபீஷணன் இருப்பதைப் பார்த்து, "சிற்றப்பனே! நீ எப்படி உன் பிள்ளையான எனக்கு த்ரோஹம் பண்ணுகிறாய்? நீ ஜ்ஞாதியாயும் ஸௌஹ்ருத்தாயும் ஒரே ஜாதியாயும் உடன்பிறந்தவனாயும் இருப்பதைப் பாராமல், தோன்றின

* தர்மிஷ்டனுக்குத் துக்கம்வந்தபோது, அவனைச் சேர்ந்தவர்கள் தர்மம் என்று ஒன்றிருப்பதையும் தெய்வமிருப்பதையும் சங்கிப்பது உலக வழக்கம். அதைக் காட்டுவதற்காக லக்ஷ்மணன் பேசினபடி. உண்மையில் அவன் நாஸ்திகன் அல்லன்.

படி நடக்கிறவன்; நீ கெட்ட புத்தியுள்ளவன்; உனக்குத் தர்மம் ஒன்றுமில்லை; உன்னைச்சேர்ந்தவர்களை விட்டுவிட்டு பிறர்களுக்கு வேலைக்காரனாயிருக்கிற உன்னை ஸாதுக்கள் நிந்திப்பர்கள். 'ஐயோ! இப்படியாய்விட்டானே' என்று உன்னைப்பற்றித் துக்கப்பட வேண்டும். பிறன் குணமுள்ளவனும், தன்னைச் சேர்ந்தவன் குணமில்லாதவனும் ஆனாலும், குணமில்லாத தன்னைச் சேர்ந்தவனே உயர்ந்தவன். பிறன் பிறனே. எவன் தன்னைச்சேர்ந்தவனைவிட்டுப் பிறனை ஆச்ரயிக்கிறானோ, அவன் தன்னைச் சேர்ந்தவர்களுக்கு நாசம்வந்தபிறகு பிறனாலேயே கொல்லப்படுகிறான். ஹோமத்துக்கு இடையூறைச் செய்து ஆலமரத்தினிடம் லக்ஷ்மணனைக் கொண்டுவந்தாயே. இது இரக்கமில்லாதவன் செய்கையன்றோ? கொடுமையான செய்கையைப் பந்துவான உன்னைத் தவிர வேறு எவன் செய்வன்?" என்று விபீஷணனை நிந்தித்தான். விபீஷணன், "ராக்ஷஸராஜாவின் பிள்ளையே! என் ஸ்வபாவம் தெரியாமல் பிதற்றுகிறாய். நான் உனக்குப் பெரியவனானபடியால் கடுமையாகப் பேசாதே. கொடுமையான செய்கைகளைச் செய்கிற ராக்ஷஸர்களின்குலத்தில் நான் பிறந்தவன்தான். ஆனால் அவர்களிடமில்லாத ஸ்வபாவம் எனக்கு இருக்கிறது. அதுவே மனிதர்களுக்கு உயர்ந்த குணம். க்ரூரமான ஸ்வபாவத்திலாவது அதர்மத்திலாவது எனக்கு ப்ரீதியில்லை.

𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌚𑍍𑌯𑌤𑌶𑍀𑌲𑌂 𑌹𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑌾𑌪𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌮𑍍 ।
𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑍁𑌖𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌹𑌸𑍍𑌤𑌾𑌦𑌾𑌶𑍀𑌵𑌿𑌷𑌂 𑌯𑌥𑌾 ॥ (87-27.)

எவன் ஸ்வபாவம் தர்மத்தைவிட்டு விலகினதோ, எவன் பாபத்தைச் செய்வதிலேயே தீர்மானமுள்ளவனோ, அவனை ஒருவன் விட்டுவிட்டு, கையிலிருந்த விஷமுள்ள பாம்பை விட்டு ஸுகத்தை அடைவதுபோல் ஸுகம் அடைவன். ஹிம்ஸை செய்வது, பிறர் சொத்தை அபஹரிப்பது, பிறர் மனைவியைத் தொடுவது, கெட்ட ஆசாரம் ஆகிய இவைகளை நெருப்புப் பிடித்த வீட்டை விடுவதுபோல விடவேண்டும் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். பிறர் சொத்தை எடுப்பதும், பிறர் மனைவியைத் தொடுவதும், ஸுஹ்ருத்தினிடம் ஸந்தேஹப்படுவதும் ஆகிய இந்த மூன்று தோஷங்களும் நாசத்தை உண்டுபண்ணும். மஹர்ஷிகளை வதம்செய்வது, எல்லாத் தேவர்களுடனும் சண்டை

செய்வது, கர்வம் கோபம் விரோதம்-இவைகளுள்ளவனுயிருப்பது, பிறர் நன்றுயிருப்பதைப் பொறுக்காமை ஆகிய இந்தத் தோஷங்கள் எனக்குத் தமையனும் உனக்குத் தகப்பனுமான ராவணனிடத்தில் இருக்கின்றன. அவைகள் ஐசுவரியத்தையும் உயிரோடிருப்பதையும் நாசம்செய்பவைகள். இவைகள், மேகங்கள் பர்வதங்களை மறைப்பதுபோல, இருக்கிற குணங்களையும் மறைத்துவிடும். ஆகையால் அவனை விட்டுவிட்டேன். இந்த லங்கை என்கிற நகரமும் நீயும் உன் தகப்பனும் இருக்கப்போவதில்லை. நீ ஆலமரத்துக்குப் போகமுடியாது. ராமனை எதிர்த்து உயிரோடிருக்க முடியாது. லக்ஷ்மணனுடன் சண்டைசெய்து உன் பலத்தைக் காட்டலாம்" என்று சொல்லிமுடித்தான். (ஸ-87.)

(188) இந்த்ரஜித்தும் லக்ஷ்மணனும் வீரவாதங்கள் சொல்லிக்கொண்டு, ஒருவன் மற்றொருவனைப் பாணங்களால் அடித்தான். இருவருக்கும் கொடுமையான சண்டை நடந்தது. (ஸ-88.) இது வெகுகாலம் நடந்தும் ஒருவனும் ஒருக்ஷணமும் வியாபாரமில்லாமல் இருக்கவில்லை. (ஸ-89.) லக்ஷ்மணனுக்குக்கொஞ்சம் ச்ரமபரிஹாரம் பண்ணுவதற்காக, விபீஷணன் தன் மந்திரிகளுடன்கூட முன்னுலே வந்து நின்று ராக்ஷஸஸேனையின்மேல் பாணங்களைப் போட்டு, வானரவீரர்களைக் குறித்து, "அநேக ராக்ஷஸவீரர்கள் கொல்லப்பட்டார்கள்; இன்னும் கொஞ்சம்தான் செய்யவேண்டும்" என்று சொல்லி உத்ஸாஹப்படுத்தினன். அவர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் பலமான சண்டை நடந்தது. விபீஷணன், "என் பிள்ளையான இந்த்ரஜித்தை நான் கொல்லுவது தகுந்ததன்று. ஆனல் ராமனுக்காக அதையும் செய்யலாம். கண்ணில் நீர் நிரம்பி அதைச் செய்யவிடுகிறதில்லை" என்று சொல்லி, இந்த்ரஜித்தின்மேலே ஒருபாணமும் போடவில்லை. அவன்மாத்திரம் விபீஷணனை அடித்தான். பிறகு அவனை விட்டுவிட்டு லக்ஷ்மணனை எதிர்க்க, இருவருக்கும் முன்போல் சண்டை நடந்தது. லக்ஷ்மணன் இந்த்ரஜித்தின் ஸாரதியைக் கொல்ல, இந்த்ரஜித்துத் தானே ரதத்தை நடத்திச் சண்டைசெய்தான். வானரவீரர்கள் இந்த்ரஜித்தின் குதிரைகளைக்கொன்று ரதத்தையும் உடைத்தார்கள். இந்த்ரஜித்துக் கீழே குதித்துச் சண்டைசெய்தான். (ஸ-90.) மறுபடியும் வானரஸேனையை வஞ்சித்து நகரத்துக்குள்போய் வேறு ரதத்துடன் திரும்பிவந்தான். குதி

ரைகளை விபீஷணனும், ஸாரதியை லக்ஷ்மணனும் கொல்ல, இந்த்ரஜித்துக் கீழேநின்றுகொண்டு சண்டைசெய்தான். மஹாஸ்த்ரங்களை ஒருவன்போட மற்றவன் அதைத் துணித்துவிட்டான். கடைசியில் லக்ஷ்மணன் ஐந்த்ராஸ்த்ரத்தை எடுத்து,

𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌤𑍍𑌯𑌸𑌨𑍍𑌧𑌶𑍍𑌚 𑌰𑌾𑌮𑍋 𑌦𑌾𑌶𑌰𑌥𑌿𑌰𑍍𑌯𑌦𑌿 ।
𑌪𑍌𑌰𑍁𑌷𑍇 𑌚𑌾𑌪𑍍𑌰𑌤𑌿𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌃 𑌶𑌰𑍈𑌨𑌂 𑌜𑌹𑌿 𑌰𑌾𑌵𑌣𑌿𑌮𑍍 ॥

(91-71.)

"ராமன் தர்மத்தில் மனதுள்ளவனும் ப்ரதிஜ்ஞைபண்ணுவதைச் செய்கிறவனும் பௌருஷத்தில் ஒப்பில்லாதவனும் ஆக இருந்தால், ஏ பாணமே! இந்த ராவணன் பிள்ளையைக் கொல்லு" என்கிற மந்த்ரத்தைக்கொண்டு அபிமந்திரித்து, இந்த்ரஜித்து மேலே போட்டு அவனைக் கீழே தள்ளினான். இதைக்கண்டு ஆகாசத்தில் தேவர்களும் மஹர்ஷிகளும் பூமியில் வானரங்களும் ஸந்தோஷம் அடைந்தார்கள். ராக்ஷஸர்கள் இருந்தவிடம் தெரியாமல் ஓடிப்போனார்கள். (ஸ-91.) லக்ஷ்மணன் ராமனிடம் போய் அவனுக்கு நமஸ்காரம்செய்து பக்கத்தில் நிற்க, ராமன் விபீஷணன் வாயாலே அவன் செய்த செய்கையைக்கேட்டு லக்ஷ்மணனை மடியில்வைத்துக் கட்டிக்கொண்டு அவனைக் கொண்டாடினான். பிறகு ஸுஷேணனைக் கூப்பிட்டு லக்ஷ்மணனுக்கும் விபீஷணனுக்கும் வானரங்களுக்கும் சண்டையினாலுண்டான துன்பங்களை நீக்கச் சிகித்ஸை செய்யும்படி கட்டளையிட்டான். அவன் அப்படியே செய்ய, எல்லாரும் ஸ்வஸ்தர்கள் ஆனார்கள். (ஸ-92.)

(189) இந்த்ரஜித்துக் கொல்லப்பட்டதைக்கேட்டு ராவணன் மூர்ச்சை அடைந்தான். ப்ரஜ்ஞை திரும்பிவந்தபிறகு, அடியில் வருமாறு புலம்பினான்—"குழந்தையே! இந்த்ரனை ஜயித்த நீ எப்படி லக்ஷ்மணனுக்கு வசப்பட்டாய்? நீ காலனையும் ம்ருத்யுவையும் மந்தரமலையின் சிகரத்தையும் பிளக்கச் சக்தியுள்ளவன்; லக்ஷ்மணனைப் பிளப்பதில் என்ன சிரமம்? உனக்கும் மரணத்தைக்கொடுத்தானே! அந்த யமனை நான் ச்லாகிக்கவேண்டும்; எந்த வீரன் தன் ஸ்வாமிக்காகக் கொல்லப்படுகிறானோ, அவன்

ஸ்வர்க்கத்தை அடைகிறான். இது யுத்தவீரர்களின் தர்மம். ஆகையால் உன்னைப்பற்றித் துக்கப்படவில்லை. தேவர்களும் லோகபாலர்களும் ருஷிகளும் நீ கொல்லப்பட்டதை அறிந்து பயமில்லாமல் ஸுகமாய்த் தூங்குவார்கள். இந்த்ரஜித்து இல்லாத இந்த மூன்று உலகமும் எனக்குச் சூன்யமாய்த் தோன்றுகிறது. இப்போது அந்தப்புரத்தில் ராக்ஷஸஸ்திரீகளின் அழுகைக்குரலைக் கேட்கப்போகிறேன். ராஜ்யத்தையும், லங்கையையும், ராக்ஷஸர்களையும், தாயாரையும், என்னையும், பார்யைகளையும் விட்டுவிட்டு எங்கே போனாய்? நீ இறந்து நான் உனக்குத் தர்ப்பணம் பண்ணவேண்டியதாயிருக்கிறதே! நான் இறந்து நீ அன்றோ தர்ப்பணம் செய்யவேண்டும்? இது விபரீதமாயிருக்கிறதே! ஸுக்கிரீவனும் லக்ஷ்மணனும் ராமனும் பிழைத்திருக்கிறார்களே! என் துன்பத்தைப் போக்காமல் நீ போய்விட்டாயே!” என்று இப்படி புலம்பிக் கொடுமையான கோபத்துக்கு உட்பட்டு, ராமனைக் கொல்லுவதாக ப்ரதிஜ்ஞைசெய்து, ஸீதையையும் கொல்லுவதாகத் தீர்மானம்பண்ணி, கத்தியை எடுத்துக்கொண்டு அசோகவனத்துக்குப் போனான். அதைக்கண்ட ஸீதை, “என்னைத் தனக்குப் பாரியையாயிருக்கும்படி அநேகந்தடவை சொல்லியும் நான் கேளாமையால் வெறுப்பும் கோபமுமுண்டாய் என்னைக் கொல்லவந்திருக்கிறானோ? அல்லது எனக்காக ராமனையும் லக்ஷ்மணனையும் கொன்றுவிட்டானோ? அல்லது அவர்களைக் கொல்லாமலே புத்ரசோகத்தாலே என்னைக் கொல்லவந்திருக்கிறானோ? ஹநுமான் சொன்னதைக் கேளாமல்போனேனே. கேட்டிருந்தால் இப்போது பர்த்தாவின் மடியில் இருப்பேனே” என்று நினைத்து, கௌஸல்யையைப்பற்றி வருத்தப்பட்டாள். அப்போது ஸுபார்ச்வன் என்கிற புத்திமானான மந்திரி, “நீ குபேரன் தம்பி அன்றோ; தர்மத்தை விட்டுவிட்டுக் கோபத்தால் ஸீதையைக்கொல்ல விரும்புகிறாயே; இவள் ரூபமுள்ளவள் என்பதைப் பார்; எங்களுடன்கூடப்போய் உன் கோபத்தை ராமனிடம் காட்டு; இது க்ருஷ்ணபக்ஷ சதுர்த்தசி; அமாவாஸையில் ஜயத்தை அடைவாய்; ராமனைக் கொன்றபிறகு இவளை அடையலாம்” என்று சொல்லி, ராவணனை விலக்கினான். இந்து அவன் மனதில் பட்டது. திரும்பி ஸபைக்குப்போனான். (ஸ-93.)

(190) ராவணன் ஸபைக்குவந்து ராமனைக் கொல்லுவதற்காக மூலபலத்தை அனுப்பினான். அதற்கும் வானரஸேனைக்கும் கொடுமையான சண்டை நடந்தது. வானரங்கள் ராக்ஷஸர்களால் பிடிக்கப்பட்டு ராமனைச் சரணம் அடைய, ராமன் தனியாய் ராக்ஷஸஸேனைக்குள்போய், அதன்மேல் பாணங்களைவர்ஷித்தான். காந்தர்வாஸ்த்ரம் என்கிற அஸ்த்ரத்தைப்போட்டு, அவர்களை மயக்க, அவர்களுள் ஒவ்வொருவனும் மற்றவனை ராமனாக நினைத்து அடித்தான். இந்த இரண்டு காரணங்களால் ராக்ஷஸஸேனை சின்னபின்னமாகப் பண்ணப்பட்டது. கொல்லப்படாத சிலர் லங்கைக்குத் திரும்பி ஓடினார்கள்.* (ஸ-94.) ஓடிப்போய் நகரஸ்திரீகளைப் பார்த்து, "பிள்ளையுள்ளவர்களே! நீங்கள் பிள்ளைகளை இழந்தீர்கள், பார்யையானவர்களே! உங்கள் பர்த்தாக்கள் கொல்லப்பட்டார்கள்" என்று சொன்னார்கள். ஊர் முழுவதும் ஒரே அழுகைக்குரலாயிருந்தது. ராக்ஷஸஸ்திரீகள் ராவணனை அடியில் வருமாறு நிந்தித்தார்கள் :—"சூர்ப்பணகை வயதுசென்றவள்; அழகில்லாதவள்; மிகுந்த அழகுள்ள ராமனை ஆசைப்பட்டாள்; அவள் கரனுக்கும் தூஷணனுக்கும் மற்ற ராக்ஷஸர்களுக்கும் நாசமுண்டாக ராமனைத் தீண்டினாள்; அவளுக்காக ஸீதையைக் கொண்டுவந்ததாகிய கொடுமையான செய்கையை ராவணன் செய்தான்; அவன் அவளை ஒருபோதும் அடையப்போகிறதில்லை; அவனுக்கும் ராமனுக்கும் நிலையான விரோமுண்டாயிற்று. விராதன், கரன், தூஷணன், த்ரிசிரஸ், கபந்தன், வாலி இவர்கள் கொல்லப்பட்டதும், ஸுக்ரீவனுக்கு ராஜ்யம் கிடைத்ததும் ராமனுடைய ப்ரபாவத்துக்குப் போதுமான ஸாக்ஷி. விபீஷணன் தர்மத்தோடு சொன்ன வார்த்தையை ராவணன் கேட்கவில்லையே! அதைக் கேட்டிருந்தால் இந்த ஊர் இப்படியிருக்காது. கும்பகர்ணன் ராமனாலும், அதிகாயனும், பிரியனான பிள்ளை இந்த்ரஜித்தும் லக்ஷ்மணனாலும் கொல்லப்பட்டதைக் கேட்டும் அவனுக்குப் புத்திவரவில்லையே! ஒவ்வொரு வீட்டிலும் 'என் பிள்ளை சண்டையில் கொல்லப்பட்டான்; என்கூடப்பிறந்தவன் கொல்லப்பட்டான்; என் பர்த்தா

---

* இந்தச் சண்டை ஸூர்யோதயத்தில் ஆரம்பித்து ஒருநாளில் எட்டாவது பாகத்தில் முடிந்தது. (பாகம் என்பது 3¾ நாழிகை.)

கொல்லப்பட்டான்' என்று அழுகைக்குரல் கேட்கப்படுகிறதே. ராமன் ஒருவனுலே ஸேனைமுழுவதும் நாசம்பண்ணப்பட்டதே! அவன் விஷ்ணுவா? ருத்ரனு? மஹேந்த்ரனு? அல்லது யமனு? ராமனுக வந்திருக்கிறவன். பயத்துக்கு முடிவைக் காணுமல் நாம் புலம்புகிறோம். வரம் பெற்றதை நினைத்துக்கொண்டு ராவணன் ராமனிடமிருந்து தனக்கு வந்திருக்கிற பயத்தை அறியவில்லையே! எவன் ராமனேடு சண்டைசெய்கிறவனை ரக்ஷிக்க முடியும்? ஒவ்வொரு சண்டையிலும் ராவணனுக்குச் சாவைக் காட்டுகிற துர்நிமித்தங்கள் காணப்படுகின்றனவே! அவைகளை ராவணன் அறியவில்லையே! அவன் தான் மனிதர்களிடமிருந்து கொல்லப்படாமையைக் கேட்கவில்லை. ஆகையால் மனிதரூபமாக பயம் வந்திருக்கிறது. ப்ரம்மா ராவணனுக்கு வரம்கொடுத்த போது தேவர்கள் ருத்ரனை ப்ரார்த்திக்க, அவன் 'உங்களுக்கு க்ஷேமத்துக்காகவும் ராக்ஷஸர்களுக்கு நாசத்துக்காகவும் ஒரு ஸ்திரீ உண்டாகப்போகிறாள்' என்று சொன்னனும். அவள் தான் இந்த ஸீதை. ராவணனேடு நம் எல்லாரையும் இவள் பக்ஷிக்கப்போகிறாள். மூர்க்கனை ராவணனுடைய அக்ரமத்தாலே இந்த நாசம் நமக்கு வந்திருக்கிறது" என்று இப்படி ராக்ஷஸஸ்திரீகள் ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு கதறினார்கள். (ஸ-95.)

(191) ராவணன் நகரத்திலுண்டான அழுகைக்குரலைக் கேட்டு மிகுந்த கோபத்துடன் ஸேனையை ஸித்தப்படுத்தி, அதனுடன் யுத்தகளத்துக்குப் போனான். பல துர்நிமித்தங்கள் காணப்பட்டன. அவைகளை அவன் கவனிக்கவில்லை. வானரங்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் கொடுமையான சண்டை நடந்தது. ராவணன் ரதத்துடன் எங்கேஙங்கே போனானே, அங்கேஅங்கே வானரஸேனையை நாசம் பண்ணினான். (ஸ-96.) அப்போது விரூபாக்ஷன் மஹோதரன் என்கிற ராக்ஷஸவீரர்களை ஸுக்கிரீவன் வரிசையாய்க் கொன்றான். (ஸ-97-98.) அப்படியே அங்கதனும் மஹாபார்ச்வனைக் கொன்றான். (ஸ-99.) இவர்கள் கொல்லப்பட்டதைப் பார்த்து ராவணன் மற்றவர்களை விட்டுவிட்டு ராமனை எதிர்த்தான். இருவருக்கும் கொடுமையான சண்டை நடந்தது. (ஸ-100.) நடுவில் லக்ஷ்மணன் ராவணனுடைய ஸாரதியைக்கொன்று அவனுடைய வில்லை அறுத்தான், விபீஷ

ணன் அவனுடைய குதிரைகளைக் கொன்றான். ராவணன் தம்பியைக்கொல்ல அவன்மேல் சக்தியைப்போட்டான். அதை லக்ஷ்மணன் பாணங்களாலே மூன்று துண்டுகளாகப் பண்ணிவிட்டான். தன் தம்பியை இப்படி ரக்ஷித்த லக்ஷ்மணன்மேல் வேறு சக்தியை ராவணன் போட, அதனால் மார்பு பிளக்கப்பட்டு லக்ஷ்மணன் கீழே விழுந்தான். அவனை ரக்ஷிக்கும்படி ஸுக்ரீவன் முதலானவர்களுக்குக் கட்டளையிட்டு ராமன், ராவணன்மேல் பாணங்களை வர்ஷிக்க, அவைகளால் அடிக்கப்பட்டு ராவணன் யுத்தகளத்திலிருந்து ஓடிப்போனான். (ஸ-101.)

(192) ராவணன் ஓடிப்போக, ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து ஸுஷேணனிடம் புலம்பினான்.—"இப்படி லக்ஷ்மணன் இருப்பதைப் பார்த்தும், எனக்கு சண்டைசெய்ய சக்தியிருக்குமா? அவன் இறந்தால் எனக்கு ப்ராணனால் அல்லது ஸுகத்தால் என்ன ப்ரயோஜனம்? என் வீர்யம் வெட்கப்படுகிறது; வில்லு கையைவிட்டு நழுவுகிறது; பாணங்கள் துக்கப்படுகின்றன; கண்ணில் நீர் நிரம்புகிறது; உடம்பு நடுங்குகிறது; தீவ்ரமான கவலை உண்டாகிறது; அவனுடன்கூட இறந்துபோகலாம் என்று ஆசை உண்டாகிறது.

தேசே தேசே களத்ராணி தேசே தேசே ச பாந்தவா: ।
தம் து தேசம் ந பஶ்யாமி யத்ர ப்ராதா ஸஹோதர: ॥

(10-2-12.)

பார்யையை இழந்தவன் வேறு பார்யையையும், பந்துவை இழந்தவன் வேறுபந்துவையும் எந்தத் தேசத்திலும் அடையலாம். ஒரே தாய்வயிற்றில் பிறந்த ப்ராதாவை இழந்தால் மறுபடியும் அவனை அடையக்கூடிய தேசம் எதுவோ அதை நான் பார்க்கவில்லை" என்று புலம்பினான். ஸுஷேணன் அடையாளங்களாலே லக்ஷ்மணன் இறந்துபோகவில்லையென்று அறிந்து, அதை ராமனுக்குத் தெரிவித்து, ஹநுமானை முன்போல மஹௌஷதிகளைக் கொண்டுவரும்படி ஏவ, அவன் பர்வத சிகரத்தையே கொண்டுவந்தான். ஔஷதியின் வாஸனையை முகர்ந்தவுடன் லக்ஷ்மணன் ஸ்வஸ்தனாய் எழுந்திருந்தான். ராமன் மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்தான். லக்ஷ்மணன் ராவணனை சீக்கிரம் கொல்லும்படி ராமனை வேண்டினான். (ஸ-102.)

(193) ராவணன் வேறொரு ரதத்தில் ஏறிக்கொண்டு திரும்பிவந்தான். ராவணன் ரதத்திலும் ராமன் பூமியிலும் இருந்து சண்டைசெய்வது தகுந்தது அன்று என்று எண்ணி, தேவேந்திரன் மாதலியுடன் தன்ரதத்தையும் கவசத்தையும் வில்லையும் பாணங்களையும் சக்தியையும் ராமனுக்கு அனுப்பினான். ராமன் ரதத்தில் ஏறிக்கொள்ள, சண்டை மறுபடியும் ஆரம்பித்தது. துர்நிமித்தங்கள் காணப்பட்டன. (ஸ-103.) ராமனைக் கொல்ல ராவணன் சூலத்தைப்போட்டான். அதைப் பாணங்களால் தடுக்கமுடியாதபோது, இந்த்ரன் அனுப்பிய சக்தியைப் போட, அஃது அந்தச் சூலத்தின்மேல் விழுந்து அதைத் துணித்தது. ராமன், பாணங்களால் ராவணனை மார்பிலும் நெற்றியிலும் அடித்தான்; (ஸ-104) அடித்து ராவணனைப் பார்த்து, "நான் இல்லாதவேளையில் ஸீதையை ஜனஸ்தானத்திலிருந்து பலாத்காரமாய் நீ கொண்டுவந்தாய். ஆகையால் உனக்கு வீர்யமில்லை. நீ உன்னைச் சூரன் என்று எண்ணுகிறாய். உன் சௌரியத்தை ஸ்திரீகளிடம் காண்பிக்கிறாய். இந்தத் தாழ்ந்த செய்கையைச் செய்தும் சூரன் என்று உன்னை எண்ணுகிறாய். மரியாதையைக் கடந்தவனே! வெட்கமில்லாதவனே! நல்லநடக்கையில்லாதவனே! நீ செய்த செய்கையின் பலனை இப்போது அடையப் போகிறாய். என் எதிரில் ஸீதையைத் தீண்டினால் என் பாணங்களால் கொல்லப்பட்டு உன் தம்பி கரனைப் பார்த்திருப்பாய். நல்லவேளையாய் என் கண்ணுக்கு எதிரில் வந்தாய். பாணங்களால் உன்னை யமன்வீட்டுக்கு அனுப்புகிறேன்" என்று நிந்தித்து, அவன்மேல் பாணங்களை வர்ஷித்தான். ராவணன் மனதுகலங்கினான். எப்போது அவன் வில்லை வளைக்கமுடியாமலும் பாணங்களைப் போடமுடியாமலும் ராமனுக்குப் பதில்செய்ய முடியாமலும் இருந்தானோ, அப்போது அவன் ஸாரதி ரதத்தை போர்க்களத்திலிருந்து வெளியே கொண்டுபோனான். (ஸ-105.)

(194) ராவணன் தன்னை யுத்தகளத்திலிருந்து வெளியே கொண்டுவந்ததற்காக ஸாரதியை நிந்தித்து "வீர்யமிழந்தவனும் சக்தியும் பௌருஷமுமில்லாதவனும் பயந்தவனும் தேஜஸ் அற்றவனும் யுத்ததந்திரங்களினால் விடப்பட்டவனும் அஸ்த்ரங்களில்லாதவனுமாக எண்ணி என்னை அவமதித்து, உன் மனது போனபடி நடக்கிறாய். நீ செய்த செய்கையால் வெகுநாளாய்

என்றால் ஸம்பாதிக்கப்பட்ட கீர்த்தி, தேஜஸ், வீர்யம், 'ராவணன் ஓடமாட்டான்' என்கிற ஜனங்களின் நம்பிக்கை, இவைகள் எல்லாம் நாசம்செய்யப்பட்டன; ரதத்தைத் திருப்பு'' என்று கட்டளையிட்டான். ஸாரதி, "உன் ஹிதத்தை நினைத்து நான் இப்படிச் செய்தேன்" என்று சொல்லி, அவனை ராம னிடம் கொண்டுவந்து விட்டான். (ஸ-106.) அப்போது தேவர் களுடன் சண்டையைப் பார்க்கவந்த அகஸ்தியர் ராமனுக்கு ஆதித்யஹ்ருதயம் என்கிற மந்திரத்தை உபதேசித்து, இதை மூன்றுதடவை ஜபித்தால் சத்துருக்களை ஜயிக்கலாம் என்று சொன்னார். ராமன் அதை மூன்றுதடவை ஜபித்து ஸந்தோஷ முள்ளவனாய்ச் சண்டைக்குக் கிளம்பினான்.* (ஸ-107.) மறுபடி யும் ராமனுக்கும் ராவணனுக்கும் பலமான சண்டை நடந்தது. (ஸ-108.) ராமன் ராவணன் த்வஜத்தை அறுத்துக் கீழே தள்ளி னான். (ஸ-109) ராவணனுடைய குதிரைகளைத் திரும்பும்படி யும் செய்தான். அவனுடைய ஒரு தலையை அறுத்தான். அது மறுபடியும் முளைத்தது. இரண்டாவது தலையையும் மூன்றாவது தலையையும் அறுக்க, அவைகளும் முளைத்தன. இப்படி நூற் றொரு தடவைத் தலைகளை அறுப்பதும் அவைகள் முளைப்பதுமாய் இருந்தன. 'மாரீசன், விராதன், கபந்தன், கரன், தூஷணன் ஆகிய இவர்கள் எந்தப் பாணங்களால் கொல்லப்பட்டார்களோ, அவைகள் ராவணன்விஷயத்தில் தேஜஸ் குறைந்து வீணாய்ப் போய்விட்டனவே! இதற்கு என்ன காரணம்?' என்று ராமன் யோசித்தான். (ஸ-110.) அப்போது மாதலி ப்ரம்மாஸ்த்ரத் தைப்பற்றி ராமனுக்கு நினைப்பூட்டினான். ராமன் அதை ராவ ணன்மேல் போட, அவன் ஹ்ருதயம் பிளந்து இறந்து கீழே விழுந்தான். தேவர்கள் ஆகாசத்திலிருந்து 'ராமன் நல்லகாரியம் செய்தான், நல்லகாரியம் செய்தான்' என்று ராமனைக் கொண் டாடிப் புஷ்பங்களை வர்ஷித்தார்கள். தேவதுந்துபிகள் அடிக்கப்

---

* ஸ்ரீமத் ராமாயணம் முழுவதும் நாராயணனைப் பரதேவதையாகச் சொல்லுகிறபடியால் ஸூரியனைப் பரதேவதையாகச் சொல்லுகிற இந்த ஸர்க்கம் பின்னால் சேர்க்கப்பட்டது என்று கோவிந்தராஜரின் அபிப் ராயம்.

பட்டன. ஸுக்ரீவனும் வானரஸேனையும் ஸந்தோஷப்பட்டார்கள். அடிக்கப்படாத ராக்ஷஸர்கள் பயந்து லங்கைக்குத் திரும்பி ஓடினார்கள்.* (ஸ-111.)

(195) விபீஷணன், தமையன் கொல்லப்பட்டுக் கிடந்ததைப்பார்த்து, துக்கத்தாலே, "வீரனே! பராக்ரமசாலி என்று பிரஸித்தி பெற்றவனே! படித்தவனே! ராஜநீதி அறிந்தவனே! உயர்ந்த படுக்கையில் படுக்கத்தகுந்தவனே! எப்படிப் பூமியில்

---

* ராக்ஷஸஸேனைக்கும் வானரஸேனைக்கும் நடந்த சண்டை 172 பாராமுதல் இந்தப் பாராவரையில் சுருக்கமாய் எழுதப்பட்டது. சண்டை ஒரு கிருஷ்ணபக்ஷம் நவமியில் ஆரம்பித்தது. அன்று துமுலயுத்தமும், ராத்திரியில் ராமனையும் லக்ஷ்மணனையும் நாகாஸ்த்ரத்தினாலே இந்த்ரஜித்து கட்டினதும், அவர்கள் கட்டிலிருந்து விடுபட்டபிறகு, தூம்ராக்ஷனும் வஜ்ரதம்ரஷ்ட்ரனும் கொல்லப்பட்டதும். இரண்டாவது நாளில் அகம்பநனும் ப்ரஹஸ்தனும் கொல்லப்பட்டதும், ராவணன் சண்டைக்கு வந்து களைத்துப்போனதும், அன்று ராத்திரி கும்பகர்ணன் வதமும், பிறகு ராவணனின் நாலு பிள்ளைகளின் வதமும், அவன் தம்பி இருவர்களின் வதமும். மூன்றாவதுநாளில் ப்ரம்மாஸ்த்ரத்தால் இந்த்ரஜித்து ராமனையும் லக்ஷ்மணனையும் கட்டினது. முன் ராத்திரியில் வானரங்கள் லங்கையைக் கொளுத்தினது. அதன்பிறகு, கும்பகர்ணன் இரண்டு பிள்ளைகளும் அவனுடன்கூட வந்த நாலு வீரர்களும் மகராக்ஷனும் கொல்லப்பட்டது. நாலாவதுநாளில் இந்த்ரஜித்தின் சண்டையும், அவன் மாயாவிதைதையைக் கொன்றதும். ஐந்தாவதுநாளில் நிகும்பிலையில் இந்த்ரஜித்து யாகம் செய்ததும், அது முடிவதற்குமுன் லக்ஷ்மணன் அவனைக் கொன்றதும். ஆறாவதுநாளில் மூலபலத்தின் சண்டை. எழாவது நாளில் ராவணன் சண்டையும் அவன் வதமும். சண்டை நவமியில் ஆரம்பித்ததால் அமாவாஸையில் ராவணன் வதம். இதற்கு ப்ரமாணம்:— கும்பகர்ணனை ராவணன் எழுப்பும்படி சொல்லும்போது, மந்த்ராலோசனை செய்து இதுமுதல் ஒன்பதுநாள் தூங்குகிறான் என்று ராவணன் சொன்னது. (ஸ-60-17.) ஹநுமான் ஸீதையைக் கண்ட மறுநாள் லங்கையைக் கொளுத்தினது. இது காலைவேளையில். அவன் உடனே ஸமுத்ரத்தைத் தாண்டிக் கிஷ்கிந்தைக்குப் போனான். அன்றைக்கே அபிஜின்முஹூர்த்தத்தில் (15-நாழிகை) ராமன் வானரஸேனைகளுடன் புறப்பட்டு மறுநாள் ஸமுத்ரக்கரைக்கு வந்துசேர்ந்தது. அன்றைக்கே ராவணன் மந்த்ராலோசனைசெய்கையில் கும்பகர்ணன் நடந்ததை ஸரிப்படுத்துவதாகச் சொன்னது. அன்றைக்கே விபீஷணன் ராமனிடம் சரணாகதிசெய்தது. அன்றுமுதல் மூன்றுநாள் ராமன்ப்ரதிசயனம். அணைகட்டினது ஐந்தாவதுநாளில். ஐந்தாவதுநாளில் லங்கைக்கு ராமன் வந்ததும், ஸேனையை அணிவகுத்ததும், ஸுவேலமலையில் ஏறி லங்கையைப் பார்த்ததும். மந்த்ராலோசனை செய்த நாளை விட்டுவிட்டால், ப்ரதிசயனம் இரண்டுநாள்; அணைகட்டினது ஐந்துநாள், இரண்டுநாள் சண்டை, ஆக

படுத்திருக்கிறாய்? நான் முன்னால் சொன்னது இப்போது வந்து விட்டது. கோபத்துக்கும் மோஹத்துக்கும் வசப்பட்டவனுக்கு நான் சொன்னது பிடிக்கவில்லை. ஸீதையைக் கொண்டுவந்ததை நீயும் கும்பகர்ணனும் இந்த்ரஜித்தும், கர்வத்தினால் கெட்டகர்மம் என்று எண்ணவில்லை. அதன் பலன் இப்போது வந்துவிட்டது. ராஜநீதிக்கு ஏற்பட்ட எல்லை போய்விட்டது. அக்னிஹோத்ரம் முதலான தர்மங்களைச் செய்துகொண்டிருந்தாய்; அவைகள் போய்விட்டன; மிகுதியான பலமும் போய்விட்டது; உயர்ந்த

---

ஒன்பதுநாள். இந்த்ரஜித்தின் சண்டை மூன்றுநாள்கள் என்பது "மூன்று அஹோராத்ரங்களால் வீரன் (இந்த்ரஜித்து) வெகு ப்ரயாஸத்துடன் கொல்லப்பட்டான்" (ஸ-92-15) என்பதாலும், மூலபல சண்டை சதுர்த்தசியில் என்பது, "இன்றையதினம் க்ருஷ்ணபக்ஷ சதுர்த்தசி அமாவாஸையில் விஜயத்தை அடைவதற்காகப் புறப்படு" என்கிற ஸுபார்ச்வன் வாக்யத்தாலும் ஏற்படுகின்றன.

(2) இந்தச் சண்டையில் வானரங்களுக்கு மலைகளும் மரங்களும், சிலைகளில் பற்களும் நகங்களும் முஷ்டியும் யுத்தஸாதனங்கள். ராக்ஷஸர்களுக்குப் பலவித அஸ்த்ரங்கள். தூம்ராக்ஷன் சண்டைமுதல் கொல்லப்பட்ட ப்ரதான ராக்ஷஸர்கள்:—ராமனால் கும்பகர்ணனும் மகராக்ஷனும் ராவணனும்; லக்ஷ்மணனால் அதிகாயனும் இந்த்ரஜித்தும்; ஸுக்ரீவனால் கும்பனும் விருபாக்ஷனும் மஹோதரனும்; அங்கதனால் வஜ்ரதம்ஷ்ட்ரனும் நராந்தகனும் கம்பனனும் ப்ரஜங்கனும் மஹாபார்ச்வனும்; ஹநுமானால் தூம்ராக்ஷனும் அகம்பனனும் தேவாந்தகனும் த்ரிசிரஸும் நிகும்பனும்; நீலனால் ப்ரஹஸ்தனும் யுத்தோந்மத்தனும்; ருஷபனால் மத்தனும்; மைந்தனால் யூபாக்ஷனும்; த்விதனால் சோணிதாக்ஷனும்.

(3) ஸீதை ராமனுடன் சேருவதற்கு ப்ரதிபந்தங்களாயிருந்தவர்கள் ராவணனும் அவனைச் சேர்ந்தவர்களும். அதுபோல ப்ரபத்தி பண்ணின ஜீவனுக்கு பகவத் ப்ராப்திக்கு ப்ரதிபந்தங்கள், அவன் முன்னால் செய்த கர்மங்கள். ராக்ஷஸஸேனைகளைப்போல் அவைகள் கணக்கற்றவைகள். ப்ரயாஸப்பட்டுக் கொல்லப்பட்ட கும்பகர்ணனையும் இந்த்ரஜித்தையும் ராவணனையும்போல் பகவதபசாரம், பாகவதாபசாரம் ஆகிய பலமான கர்மங்கள். ராவணன் முதலானவர்களைக் கொன்ற பிறகுதான் ஸீதை ராமனிடம் போனதுபோல், ப்ரபந்நனுடைய கர்மங்களை நாசம்பண்ணி, பகவான் அவனைத் தன்னிடம் சேர்த்துக்கொள்ளுவது.

(4) ராவணனைக் கொல்லாமல் அவன் தலைகளை அறுத்ததினால் ப்ரயோஜனம் கிடைக்கவில்லை. அதுபோல இந்த்ரியங்களை ஜயித்தாலும் மனதை ஜயிக்கிறவரையில் அவைகள் மறுபடியும் மறுபடியும் ஜீவனைப் பாதிக்கும்.

ஸ்துதிக்கு விஷயமாயிருந்ததும் போய்விட்டது; நீ பூமியில் விழுந்துகிடப்பது, ஸூர்யன் பூமியில் விழுந்திருப்பதையும், சந்த்ரன் இருளில் முழுகியிருப்பதையும், அக்னி தேஜஸ் இழந்ததையும் ஒத்திருக்கிறது. வீரனை நீ இறந்து புழுதியில் படுத்திருக்க, உலகத்தில் என்ன மீதியிருக்கிறது? உலகமே சூன்யமாயிருக்கிறது” என்று புலம்பினான். அப்போது ராமன் “இவன் க்ஷத்ரியதர்மத்தை அநுஸரித்து, சண்டையில் கொல்லப்பட்டான்; அவனைப்பற்றிச் சோகிப்பது தகுந்தது அன்று; எவனால் மூன்று உலகங்களும் இந்திரனும் சண்டையில் பயத்தை அடையும்படி செய்யப்பட்டார்களோ, அந்த வீரன் கொல்லப்பட்டதைப்பற்றித் துக்கப்படுவது தகுந்தது அன்று; சண்டையில் ஜயம் இன்னாருக்குத்தான் என்பது ஒருபோதுமில்லை; வீரனானவன் சத்துருக்களால் கொல்லப்படுகிறான்; அல்லது அவன் சத்துருக்களைக் கொல்லுகிறான்; சண்டையில் கொல்லப்பட்ட க்ஷத்ரியனைப்பற்றி சோகத்தை அடையவேண்டியதில்லை; இப்படியே முன்னோர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆகையால், இதையறிந்து மேலே செய்யவேண்டியதைச் செய்” என்று சொன்னான். விபீஷணன், “இவன் தினம் அக்னிஹோத்ரம் செய்தவனும் மிகுந்த தபஸ் செய்தவனும் வேதாந்தம் அறிந்தவனும் கர்மங்களைச் செய்வதில் மிகுந்த உறுதியுள்ளவனுமாக இருந்தான். அவனுக்கு எந்தவிதமான ஸம்ஸ்காரம் செய்யவேண்டுமோ, அதை உன் அநுக்ரஹத்தால் செய்கிறேன்” என்று சொல்ல, ராமன்,

மரணாந்தானி வைராணி நிவ்ருத்தம் ந: ப்ரயோஜநம் ।
க்ரியதாமஸ்ய ஸம்ஸ்காரோ மமாப்யேஷ யதா தவ ॥ (112-25.)

ஜனஸ்தானத்தில் இருந்த ருஷிகளுக்குக் கெடுதிசெய்தது, ஸீதையைக் கொண்டுவந்தது, ஜடாயுவைக் கொன்றது முதலானவைகளால் இவனிடம் எனக்கு உண்டாயிருந்த வைரங்கள் இவன் மரணத்துடன் முடிவை அடைந்தன.* நமது காரியம் பலித்து

* இவ்விதமான வைரங்களை இனி இவன் செய்யமுடியாது. இவன் விஷயத்திலும் நல்லது செய்யவேண்டியது என்று எண்ணியிருந்தேன். அதை அவன் தடுத்துவிட்டான். அதைச் செய்வதற்கு இடமான ப்ரயோஜனம் எனக்கு இப்போது கிடைத்தது.

விட்டது. ஆகையால் அவனுக்கு ஸம்ஸ்காரத்தைச் செய்ய வேண்டும். எப்படி அவன் உனக்கு ப்ராதாவோ, அப்படியே எனக்கும் ப்ராதாவாக ஆய்விட்டான். அவனுக்கு ஸம்ஸ்காரத்தை நீ செய்யாவிட்டால் நானே செய்யவேண்டியதாயிருக்கும்" என்று பதில் சொன்னான். (ஸ-112.)

(196) ராவணன் கொல்லப்பட்டதைக் கேட்டு, அவன் அந்தப்புரத்திலிருந்த ஸ்திரீகள் தலைமயிரை விரித்துக்கொண்டு வடக்குக் கோட்டைவாசல்வழியாய் யுத்தகளத்துக்கு வந்தார்கள். தங்கள் பர்த்தாவைப் பார்த்து, "ஹா ராஜபுத்ரனே! ஹா நாதனே!" என்று சொல்லி, கண்ணும் கண்ணீருமாய் அவன் மேல் விழுந்து கதறினார்கள். ஒருத்தி அவனைக் கட்டிக்கொண்டும், ஒருத்தி அவன் கால்களைப் பிடித்துக்கொண்டும், ஒருத்தி அவன் கழுத்தைப் பிடித்துக்கொண்டும், ஒருத்தி கைகளைத் தூக்கிக் கொண்டும், ஒருத்தி அவன் முகத்தைப் பார்த்துக்கொண்டும், ஒருத்தி அவன் தலையைத் தன் மடியில் வைத்துக்கொண்டு அதைப்பார்த்து, கண்ணீரால் அதை நனைத்துக்கொண்டும் "எவனால் இந்த்ரனுக்கும் யமனுக்கும் நடுக்கமுண்டாயிற்றோ, எவனால் குபேரனிடமிருந்து புஷ்பகம் என்கிற விமானம் அபஹரிக்கப்பட்டதோ, எவனால் தேவர்களுக்கும் ருஷிகளுக்கும் கந்தர்வர்களுக்கும் மிகுந்த பயமுண்டுபண்ணப்பட்டதோ, அவன் கொல்லப்பட்டுப் படுத்திருக்கிறான். எவனுக்குத் தேவர்களிடமிருந்தும் அஸுரர்களிடமிருந்தும் நாகங்களிடமிருந்தும் பயமில்லையோ, அவனுக்கு மனிதனிடமிருந்து பயம் வந்ததே! எப்போதும் ஹிதத்தைச்சொன்ன ஸுஹ்ருத்துக்களின் வார்த்தையைக் கேளாமல் இவன் தன் மரணத்துக்காகவே ஸீதையைக் கொண்டுவந்தான். (ராவணனைப் பார்த்து) நீ உன் வதத்தை விரும்பியே உனக்கு ஹிதத்தைச் சொன்ன விபீஷணனைக் கொடிய சொற்களால் நிந்தித்தாயே! ஸீதையை நீ ராமனிடம் திருப்பிக் கொடுத்திருந்தால் இந்தக் கொடுமையான வியஸனம் எங்களுக்கு வந்திராது. உன் தம்பியின் ஆசை நிறைவேறியிருக்கும். ராமன் உன் குலத்துக்கு மித்ரனாயிருந்திருப்பன். நாங்கள் விதவைகளாக ஆகியிருக்கமாட்டோம்; உன் சத்ருக்களான தேவர்களின் ஆசை நிறைவேறியிராது; நீயும் நாங்களும் இப்படி ஆனதற்குக் காரணம் உன் மனதின்போனபடி நடந்தது அன்று.

தெய்வம் எல்லாரையும் வேலைசெய்யும்படி பண்ணுகிறது. தெய்வத்தினால் கொல்ல ஸங்கல்பிக்கப்பட்டவனை வேறொருவன் கொல்லுகிறான்; தெய்வம் ஒன்றைச்செய்ய ஆரம்பிக்கையில் அதை அர்த்தத்தாலோ, காமத்தாலோ, பராக்ரமத்தாலோ, கட்டளையிடுவதாலோ தடுக்க முடியாது" என்று ரோதனம்பண்ணினார்கள். (ஸ-113.)

(197) அப்போது, ராவணனுடைய மூத்தபத்தினியான மந்தோதரி அவனைப் பார்த்து, "குபேரன் தம்பியே! நீ கோபித்துக்கொண்டால் இந்த்ரனும் ருஷிகளும் ப்ராம்மணர்களும் கந்தர்வர்களும் உன் முன்னால் நிற்கமாட்டார்களே! உன் கோபத்தைக்கண்டு ஆகாசத்தில் ஸஞ்சரிக்கிறவர்கள் ஒவ்வொரு திக்கிலும் ஓடினார்களே! அப்படிப்பட்ட நீ வெறும் மனிதனை ராமனால் ஜயிக்கப்பட்டாயே! உனக்கு வெட்கமில்லையா? இப்படி நீ இருப்பதற்கு என்ன காரணம்? மூன்று உலகங்களையும் ஜயித்து வீரஶ்ரீயை அடைந்த உன்னை, காட்டில் ஸஞ்சரிக்கிற மனிதன் எப்படிக் கொன்றான்? இது ஆச்சரியம். சண்டைக்குவேண்டிய எல்லா ஸாதனங்களையுமுடைய உன்னை மனிதனை ராமன் கொன்றான் என்று நான் நம்பவில்லை. ஜனஸ்தானத்திலிருந்து உன் தம்பி கரனையும் அவனைச் சுற்றியிருந்த ராக்ஷஸர்களையும் எப்போது கொன்றானோ, அப்பொழுதே அவனை மனிதன் என்று எண்ணலாமோ? தேவர்களாலும் நுழையமுடியாத லங்கையில் எப்போது ஹநுமான் புகுந்தானோ, எப்போது வானரங்களால் ஸமுத்ரத்தில் அணை கட்டப்பட்டதோ, அப்போதே ராமனை மனிதன் அன்று என்று எண்ணினேன். அறியமுடியாத மாயையைக்கொண்டு யமனே ராமன்ரூபமாக உன் நாசத்துக்குத்தானே வந்தான். அல்லது இந்த்ரன் உன்னை எதிர்த்தானோ? இல்லை இல்லை. சண்டையில் உன்னைப் பார்ப்பதற்குக்கூட அவனுக்கு என்ன சக்தியிருக்கிறது? இவைகள் எல்லாம் இல்லை. ராமன் நிச்சயமாய் உலகத்தின் ரக்ஷணத்தையே நினைத்துக்கொண்டிருக்கிற விஷ்ணு; அவன் எல்லா ஜீவன்களுக்கும் ஆத்மா; எப்போதுமிருக்கிறவன்; ஆதியும் நடுவும் முடிவுமில்லாதவன்; பெரியோர்களான தேவர்களுக்கும் ப்ரம்மாவுக்கும் பெரியவன்; பிரக்ருதிமண்டலத்துக்கு மேலான வைகுந்தத்தில் இருக்கிறவன்; உலகத்தைப் போஷிக்கிறவன்; அதற்காக சங்கத்தையும் சக்

ரத்தையும் கதையையும் தரிக்கிறவன்; ஸ்ரீவத்ஸத்தை மார்பில்
உடையவன்; எப்போதும் லக்ஷ்மீயோடு கூடியவன்; ஜயிக்கமுடி
யாதவன்; பழுதுபோகாத பராக்ரமமுடையவன்; இப்படிப்
பட்ட விஷ்ணு மனிதரூபத்தை எடுத்துக்கொண்டு வானரரூபங்
களை எடுத்துக்கொண்ட எல்லாத் தேவர்களாலேயும் சூழப்பட்டு,
உலகத்துக்கு க்ஷேமத்தைச்செய்யும் ஆசையினால் ராக்ஷஸர்களோடு
கூடின உன்னைக் கொன்றுவிட்டான். முன்னால் நீ இந்திரியங்களை
ஜயித்து மூன்று உலகங்களையும் ஜயித்தாய்; அந்த வைரத்தை
நினைத்துக்கொண்டிருக்கிற இந்திரியங்களாலேயே நீ ஜயிக்கப்பட்
டாய். 'ராகவனிடத்தில் விரோதமில்லாமலிரு' என்று நான்
சொன்னதை நீ ஏற்றுக்கொள்ளவில்லை. அதன் பலன் வந்திருக்
கிறது. தகுந்த காரணமில்லாமல் ஸீதையினிடத்தில் உனக்கு
ஆசையுண்டாயிற்று. ஐச்வரியத்துக்கும் உன் உடம்புக்கும் உன்
னைச் சேர்ந்தவர்களுக்கும் நாசமுண்டாவதற்காகவே இது நேர்ந்
தது. அருந்ததியையும் ரோஹிணியையும் காட்டிலும் உயர்ந்தவ
ளாயும் கௌரவம் பண்ணத்தகுந்தவளாயும் இருக்கிற ஸீதையை
நீ புத்தியில்லாமல் தீண்டித் தகாத செய்கையைச் செய்தாய்.
அவள் பூமியைக்காட்டிலும் பொறுமையுள்ளவள்; எல்லா ஸம்பத்
தையும் கொடுக்கிறவள்; பர்த்தாவினிடத்தில் ஆசையுள்ளவள்;
அவள் ஜனமில்லாத காட்டில் தனியாயிருக்கும்போது அவளை
வஞ்சித்துக் கொண்டுவந்தாய். அவளுடன் சேருவதில் உனக்கு
உண்டாயிருந்த ஆசை நிறைவேறாமல் தபஸாலே கொளுத்தப்
பட்டாய். ஒருவன் தான் செய்த பாபகர்மத்தின் பலனைக்
கட்டாயம் அடையவேண்டும்.

ஶுபக்ருச்சுபமாப்நோதி பாபக்ருத்பாபமச்நுதே । (114-26)

நல்லதைச் செய்கிறவன் நல்ல பலனை அநுபவிக்கிறான். கெட்ட
தைச் செய்கிறவன் கெட்ட பலனை அடைகிறான். விபீஷணன்
ஸுகத்தை அடைந்தான். நீ இவ்விதமான துக்கத்தை அடைந்
தாய். ஸீதையைக் காட்டிலும் அதிக அழகுள்ள வெகு ஸ்தி
ரீகள் உனக்கு இருக்கிறார்கள். மன்மதன் வசப்பட்டு இதை நீ
மோஹத்தாலே அறியவில்லை. குலத்தாலோ, அழகாலோ,
ஸாமர்த்தியத்தாலோ, ஸீதை எனக்கு ஸமமன்று; மேற்பட்ட
வளும் அன்று, மோஹத்தால் இது உனக்குத் தெரியவில்லை,

எல்லா ஜனங்களுக்கும் மிருத்யு ஒருவிதத்தாலும் காரணமில்லாமல் வருகிறதில்லை. உன் மரணத்துக்கு ஸீதை காரணம். அந்த மிருத்யுவை தூரத்திலிருந்து நீயே கொண்டுவந்தாய். ஸீதை துக்கம் நீங்கி ராமனுடன் ஸுகமாயிருக்கப்போகிறாள். அதிக புண்ணியம் பண்ணாத நான் துக்கஸமுத்ரத்தில் விழுந்தேன். என் தகப்பன் அஸுரராஜா என்றும், என் பர்த்தா ராக்ஷஸராஜா என்றும், என் பிள்ளை இந்த்ரனை ஜயித்தவன் என்றும் மிகுந்த கர்வமுள்ளவளாயிருந்தேன். அது போய்விட்டது. இந்த்ர நீலமணியைப்போன்றதும் உயர்ந்த ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டதுமான உன் உடம்பு கூர்மையான பாணங்களால் நிறைந்திருக்கிறது. ஆதலால் அதைக் கட்டிக்கொள்ள முடியவில்லை. நீ இறந்தது ஸ்வப்நமா? நீ மிருத்யுவுக்கும் மிருத்யுவாய் இருந்தாயே. எப்படி மிருத்யுவுக்கு வசப்பட்டாய்? மஹா ப்ரபாவமுள்ள நீ ராமனால் கொல்லப்பட்டதைப் பார்த்து, இன்னும் உயிர் தரித்திருக்கிறேனே! எப்போது என் பிள்ளையான இந்த்ரஜித்தை லக்ஷ்மணன் கொன்றானோ, அப்போதே நான் அடிபட்டேன்; இப்போது கொல்லப்பட்டேன். நீ வீரஸ்வர்க்கம் போகிறாய். என்னையும் அழைத்துக்கொண்டுபோ. உன்னை விட்டுப் பிழைத்திருக்கமாட்டேன். என்னைவிட்டு ஏன் போகிறாய்? என்னுடன் ஏன் பேசவில்லை? நகரத்தைவிட்டுக் கால் நடையாய் வந்திருக்கிற என்னைப் பார்த்து ஏன் கோபித்துக் கொள்ளவில்லை?'' என்று புலம்பினாள். (ஸ-114.)

(198) அப்போது ராமன் விபீஷணனைப்பார்த்து, "இந்த ஸ்திரீகளை அப்புறப்படுத்தி, ராவணனுக்கு ஸம்ஸ்காரம்பண்ணு'' என்று சொல்ல, விபீஷணன், "இவன் தர்மத்தையும் வ்ரதத்தையும் விட்டவன்; க்ரூரன்; இரக்கமில்லாதவன்; பொய் சொல்லுகிறவன்; அயலார் ஸ்திரீயைத் தீண்டினவன்; இவனுக்கு ஸம்ஸ்காரம் பண்ண நான் தகுந்தவன் அல்லன்; அவன் தமையனுருவம்கொண்ட சத்ரு; எல்லாருக்கும் கெடுதியைச் செய்வதில் ப்ரீதியுள்ளவன்; தமையன் என்று நான் பூஜிக்க வேண்டியதாயிருந்தாலும் அவன் பூஜிக்கத்தகுந்தவன் அல்லன்; அவனுக்கு ஸம்ஸ்காரத்தை நான் பண்ணாமல்போனால் என்னை இரக்கமில்லாதவன் என்று ஜனங்கள் சொல்லக்கூடும்; அவர்கள்

சொன்னால் சொல்லட்டும்; அவனுடைய துர்க்குணங்களை அவர்கள் விசாரிக்கும்போது நான் செய்தது தகுந்தது என்று சொல்லுவார்கள்" என்று பதில் சொன்னான். ராமனுக்கு அவன் சொன்னது பிடிக்கவில்லை. ராமன், "நீ எனக்கு இஷ்டமானதையே செய்யவேண்டும்; உன் ப்ரபாவத்தாலேதான் நான் ஜயத்தை அடைந்தேன்; ஆகையால் உன் ஹிதத்தையே நான் சொல்லவேண்டும்; அவனுக்கு ஸம்ஸ்காரம்பண்ணுவது உனக்கு ஹிதம்; ராவணன் நீ சொன்னபடி அதர்மமும் பொய்யும் உள்ளவனாயிருக்கட்டும்; ஆனால், அவன் தேஜஸுள்ளவனும் பலமுள்ளவனும் சண்டைகளில் எப்போதும் சூரனும் இந்த்ரன் முதலான தேவர்களாலே அபஜயம் அடையாதவனும் உலகங்களை நடுங்கும்படி செய்தவனுமாக இருந்தான்; எனக்கு அவனிடம் வைரமில்லை; உலகத்தில் சத்ருவினிடத்தில் வைரம் அவன் மரணத்துடன் முடிவை அடைகிறது; ஸீதையை அடைவதாகிற ப்ரயோஜனம் நமக்குக் கிடைத்துவிட்டது; உனக்கு எப்படி அவன் ப்ராதாவோ, அப்படியே எனக்கும் ப்ராதா; ஆகையால் ஸம்ஸ்காரத்தைச் செய்யவேண்டும்; அப்படிச் செய்தால் உனக்குக் கீர்த்தி கிடைக்கும்" என்று சொன்னான். இதைக்கேட்டு விபீஷணன் அக்னிஹோத்ரம் செய்கிறவனுக்கு எப்படி ஸம்ஸ்காரம் செய்யவேண்டுமோ, அப்படியே ராவணனுக்கு ஸம்ஸ்காரமும் தர்ப்பணமும் செய்து ராமனிடம் திரும்பி வந்தான்.* (ஸ-114.)

(199) ராமன், இந்த்ரனுடைய ரதத்தை அனுப்பிவிட்டு ஸுக்ரீவனைக் கட்டிக்கொண்டு, தங்கியிருக்குமிடத்துக்கு வந்து லக்ஷ்மணனைப் பார்த்து, "குழந்தையே! விபீஷணனை லங்கையில் அபிஷேகம் பண்ணு; என்னிடத்தில் அவன் ப்ரீதியுள்ளவன்; பக்தியுள்ளவன்; எனக்கு உபகாரம் செய்தவன்; ராவணன் தம்பியான இவனை லங்கையில் ராஜாவாக அபிஷேகம்

---

* விபீஷணன் ஸம்ஸ்காரம் பண்ணமாட்டேன் என்று சொன்னதற்குக் கருத்து—இது ராமனுக்கு இஷ்டமாயிருந்து, அதைச் செய்யலாம் என்று அவன் சொன்னால், அதைச் செய்யவேண்டும்; இல்லாவிட்டால்செய்யக்கூடாது—என்பது. முன்னாலே ராமன் உத்தரவு கொடுத்திருந்தாலும் அதை நன்றாய் அறிவதற்காக இப்படி விபீஷணன் சொன்னது.

பண்ணிப் பார்ப்பதில் எனக்கு மிகுந்த ஆசையிருக்கிறது" என்று கட்டளையிட்டான். லக்ஷ்மணன் இதைச் சொன்னபடி செய்தான். (ஸ-115).

(200) பிறகு ராமன் ஹநுமானைப்பார்த்து, "விபீஷணன் அநுமதியைப் பெற்றுக்கொண்டு ஸீதையிடம் போய், நான் ஸுக்ரீவனுடனும் லக்ஷ்மணனுடனும் க்ஷேமமாயிருப்பதையும், என்னால் ராவணன் கொல்லப்பட்டதையும் சொல்லி, அவள் சொல்லும் ஸமாசாரத்தை அறிந்து வா" என்று கட்டளையிட்டான். (ஸ-115.) ஹநுமான் லங்கைக்குள் போய் ஸீதையைக் கண்டான். ஸீதை அவனைப் பார்த்து, ஹநுமான் என்று அறிந்து ஸந்தோஷப்பட்டுப் பேசமுடியாமல் மௌனமாயிருந்தாள். ஹநுமான் ராமன் சொன்னதைச் சொல்லி, "லங்கைச்வர்யம் விபீஷணனுடையதாகச் செய்யப்பட்டது. இதை நம்பி ஸமாதானமுள்ளவளாயிரு. உன் வீட்டிலேயே இருக்கிறாய். விபீஷணன் ஸந்தோஷத்துடன் உன்னைப் பார்க்க வருகிறான்" என்று சொன்னான். இதைக்கேட்டு ஸீதை எழுந்திருந்து ஸந்தோஷம் அடைந்து, அதனால் ஒன்றும் சொல்லமுடியாமலிருந்தாள். ஹநுமான், ஏன் பேசவில்லை என்று கேட்க, ஸீதை, "என் பர்த்தா விஜயம் அடைந்த இந்த பிரியமான வார்த்தையைக்கேட்டு மிகுந்த ஸந்தோஷத்துக்கு வசப்பட்டு ஒரு க்ஷணம் பேசமுடியாதிருந்தேன். எனக்கு ப்ரியத்தைச்சொன்ன உன்னை எப்படிக் கொண்டாடுவது என்று ஆலோசித்துப் பார்க்கிறேன். எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. மூன்று உலகங்களில் உனக்குக் கொடுக்கத் தகுந்தது எது என்று பார்க்கிறேன்; தெரியவில்லை. வெள்ளியோ தங்கமோ பலவிதமான ரத்னங்களோ மூன்று உலகங்களின்ராஜ்யமோ, இவைகளை உன் உபகாரத்துக்குத் தகுந்தவைகளாகச் சொல்லமுடியாது" என்று பதில் சொன்னாள். ஹநுமான், "பர்த்தாவுக்குப் பிரியமானதிலும் ஹிதமானதிலும் கவனமுள்ளவளே! அவனுடைய விஜயத்தில் ஆசையுள்ளவளே! பிரியமான இவ்விதப் பேச்சைப் பேச நீயே தகுந்தவள். இந்த உன் வார்த்தை ரத்னக்குவியலைக் காட்டிலும் தேவராஜ்யத்தைக்காட்டிலும் உயர்ந்தது. சத்ருவைக் கொன்று ராமன் ஜயம் அடைந்ததைப் பார்ப்பதே எனக்கு தேவராஜ்யம் முதலானவைகள்" என்று சொன்னான். ஸீதை "உன் வார்த்தை லக்ஷ

ணங்களோடுகூடியும் இனிமையாயும் எட்டு அங்கங்களோடுகூடின புத்தியைக் காட்டுவதாயுமிருக்கிறது. இதை உன்னைத்தவிர வேறு எவன் சொல்லக்கூடும்? குணங்களாலும் நீ சிலாகிக்கத் தகுந்தவன்; உயர்ந்த தர்மிஷ்டன்; சிரமத்தைப் பொறுப்பது, ஆபத்தன்மை, சாஸ்த்ரஜ்ஞானம், சரீரபலம், மனோபலம், பராக்ரமம், வேலைகளைச் செய்துமுடிக்குந்திறமை, தேஜஸ், பொறுமை, ப்ரபாவம், கலங்கவேண்டிய விஷயத்திலும் கலங்காமை, அடக்கம் இவைகளும் மற்றக் குணங்களும் உன்னையடைந்தே சோபையை அடைகின்றன" என்று ஸீதை ஹநுமானைக் கொண்டாடினாள்.

(201) ஹநுமான் ஸீதையைப் பார்த்து, மறுபடியும் "இந்த ராக்ஷஸிகள் உன்னைத் துன்பப்படுத்தினார்களே. நீ அநுமதி கொடுத்தால் அவர்களைக் கொல்லுகிறேன். இந்த வரனை எனக்குக் கொடு" என்று சொன்னான். அதைக்கேட்டு ஸீதை, "இந்த ராக்ஷஸிகள் வேலைக்காரிகள். ராஜாவின் கட்டளைக்கு உட்பட்டவர்கள். அவன் கட்டளையிட்டதைச் செய்பவர்கள். அவர்கள்மேல் எவன் கோபித்துக்கொள்வன்? பாக்யத்தின் வேறுபாட்டாலும் முன்னமே நான் செய்த கெட்டகர்மங்களாலும் அவர்கள் செய்த துன்பங்கள் எல்லாம் என்னால் அடையப்பட்டன.

ஸ்வக்ருதம் ஹ்யநுபுஜ்யதே (யு-116-40.)

எவனும் தான் செய்ததின் பலனை அநுபவிக்கவேண்டும். இந்த வேலைக்காரிகள் செய்ததை நான் பொறுத்துக்கொள்ளுகிறேன். அவர்கள் கஷ்டப்படுவதைத் தயையுள்ள என்னால் பார்க்கமுடியாது. என்னைப் பயமுறுத்தும்படி ராவணன் உத்தரவுபண்ணியிருந்தான். அவன் இறந்தபிறகு அவர்கள் அதைச் செய்வார்களோ? முன்னமே ஒரு கரடி புலிக்குச் சொன்னதைக் கேள்.

ந பர: பாபமாதத்தே பரேஷாம் பாபகர்மணாம் ।
ஸமயோ ரக்ஷிதவ்யஸ்து ஸந்தஶ்சாரித்ரபூஷணா: ॥

(யு-166-44.)

பிறருக்குப் பாபகாரியம் செய்கிறவர்களுக்குப் புத்தியுள்ள அந்தப் பிறர் பதில் பாபகாரியத்தைச் செய்கிறதில்லை. இந்த ஆசா

ரத்தை அறிந்தவன் செய்யவேண்டும். இதுவே பெரியோர்களுக்குப் பூஷணம்.* உன் அபிப்ராயப்படி அவர்கள் பாபம் செய்து கொல்லத்தகுந்தவர்களாக இருக்கலாம். என் அபிப்ராயப்படி அவர்கள் பாபம் பண்ணினவர்கள் அல்லர். பெரியவளான நீ அவர்கள்விஷயத்தில் இரக்கத்தைக் காண்பிக்கவேண்டும்.

நகஶ்சிந்நாபராத்யதி ॥ (166-45.)

உலகத்தில் அபராதம் பண்ணாதவனே இல்லை. உலகத்துக்கு ஹிம்ஸை செய்வதை விளையாட்டாக எண்ணுகிறவர்களும் வேண்டிய ரூபங்களை எடுத்துக்கொள்பவர்களும் பாபங்களைச் செய்கிறவர்களுமான ராக்ஷஸர்கள்விஷயத்தில்கூடக் கெடுதியானதைச் செய்யக்கூடாது" என்று பதில் சொன்னாள். இதைக்கேட்டு ஹநுமான் ஸீதை சொன்னது ராமபத்னியாயிருக்கிற அவளுக்கே தகுந்தது என்று சொல்லி, பதில் ஸமாசாரத்தைக்கேட்க, "நான் பர்த்தாவைப் பார்க்க விரும்புகிறேன்" என்று ஸீதை சொன்னாள். இதைப் பெற்றுக்கொண்டு ஹநுமான் ராமனிடம் திரும்பிவந்தான். (ஸ-116.)

(202) ஹநுமான் சொன்னதைக்கேட்டு ராமன், கொஞ்சம் கண்ணீர்ததும்ப ஆலோசித்து விபீஷணனைப் பார்த்து, "ஸீதைக்கு ஸ்நானமும் அலங்காரமும் செய்வித்து சீக்கிரம் அழைத்துக்கொண்டு வா" என்று கட்டளையிட்டான்.§ விபீ

---

* ஒரு புலியால் துரத்தப்பட்ட ஒரு வேடன் ஒரு கரடியிருந்த மரத்தில் ஏறினான். அவனைக் கீழே தள்ளும்படி புலி கரடியைக்கேட்டும் "தள்ளுவது அதர்மம், அதைச்செய்யமாட்டேன்" என்று சொல்லிற்று. பிறகு கரடி தூங்குகையில் அதைக் தள்ளும்படி வேடனைக்கேட்க, அவன் அதைக் கீழே தள்ளினான். கரடி தப்பிப்போய் அந்த மரத்தில் ஏறிற்று. அபராதம்பண்ணின வேடனைக் கீழே தள்ளலாமே என்று புலி கரடியைக்கேட்க, அது நான் செய்யமாட்டேன் என்று சொல்லிற்று. இது புராணக் கதை.

§ ராவணன் வீட்டிலிருந்த ஸீதையை ஏற்றுக்கொண்டால் உலகம் பெரிய பழியைச் சொல்லும்; தோஷமில்லாத அவளை ஏற்றுக்கொள்ளாமை பெரிய குற்றமாகுமே; என்ன செய்கிறது என்பது ஆலோசனையின் விஷயம்.

ஷணன் உடனே அந்தப்புரத்துக்குப்போய் ஸீதைக்கு ராமன் சொன்னதைத் தெரிவிக்க, அவள் "ஸ்நானம் பண்ணாமலே பர்த்தாவைப் பார்க்க விரும்புகிறேன்" என்று சொன்னாள். விபீஷணன், "ராமன் பர்த்தாவாகவும் ராஜாவாகவும் இருப்பதால் அவன் சொன்னபடி செய்யவேண்டும்" என்று சொல்ல, ஸீதை அதை ஒப்புக்கொண்டு, ஸ்நானம்செய்து, அலங்காரம் செய்துகொண்டாள். அவளை மூடுபல்லக்கில் ஏற்றிக்கொண்டு விபீஷணன் ராமன்ஸமீபம் வரும்போது கூட்டமாயிருந்த ஜனங்களைத் தூரத்தில் போகும்படி விலக்கினான். அதைப் பார்த்து ராமன் கோபித்துக்கொண்டு, "எதற்காக ஜனங்களை வருத்தப்படுத்துகிறாய்? இஃது என்னை அலக்ஷியம் பண்ணுவதாகிறது. இந்த முயற்சியை விட்டுவிடு. இவர்கள் என் ஜனங்கள். ஒரு ஸ்திரீக்கு வீடுகளும் ப்ராகாரங்களும் வஸ்த்ரங்களும் திரைகளும் இவ்விதமான ராஜவைபவங்களும் அழகு செய்பவைகள் அல்ல. அவள் நடக்கையே அவளுக்கு ஆபரணம். துக்கம் வந்தகாலத்திலும், ராஜ்யத்தில் கலஹமுண்டானகாலத்திலும், சண்டையுண்டானகாலத்திலும், ஸ்வயம்வரத்திலும், யாகத்திலும், விவாஹகாலத்திலும் ஸ்திரீகள் பலர் பார்க்க வெளியில் இருப்பது தோஷம் அன்று. இவள் யுத்தக்களத்தில் வந்திருக்கிறாள். பெரிய கஷ்டத்தில் இருக்கிறாள். ஆகையால் இவளைப் பார்ப்பது குற்றம் அன்று. மேலும் என் பக்கத்திலிருக்கும்போது அஃது எப்படி குற்றமாகும்? அவளை என் ஸமீபம் சீக்கிரம் கொண்டுவா. ஸுஹ்ருத்துக்களுடைய நடுவிலிருக்கிற என்னை அவள் பார்க்கட்டும்" என்று சொன்னான். ஸீதை வெட்கத்தினால் அங்கங்களை ஒடுக்கிக்கொண்டு விபீஷணன் பின்னால் வந்து ராமன் முகத்தைப் பார்த்து 'ஆரிய!' என்று கூப்பிட்டு வஸ்த்ரத்தாலே முகத்தை மூடிக்கொண்டு அழுதாள். (ஸ-117.) பக்கத்தில் நின்ற ஸீதையைப் பார்த்து ராமன் "சத்ருவைக்கொன்று உன்னை நான் அடைந்தேன். க்ஷத்ரியன் ஆண்மைத்தன்மையினால் எதைச் செய்யவேண்டியதோ, அது செய்யப்பட்டது. என் கோபம் முடிவை அடைந்தது. ராவணனால் எனக்கு உண்டுபண்ணப்பட்ட தோஷம் நீக்கப்பட்டது, எனக்கு நேர்ந்த அவமானத்தையும் சத்ருவையும் சேர்ந்தே வேருடன் அறுத்துவிட்டேன். இப்போது என் ஆண்மைத்

தன்மையைக் காட்டியாய்விட்டது. என் ப்ரயாஸம் ஸபல மாயிற்று. ராவணனைக் கொல்லுகிறேன் என்கிற என் ப்ரதிஜ்ஞை நிறைவேறிற்று நான் ஸ்வதந்திரனாகிவிட்டேன். என்னை விட்டுப் பிரிந்திருக்கிறவேளையில் உன்னை ராவணன் கொண்டு வந்ததால் எந்தத் தோஷம் தெய்வத்தால் உண்டுபண்ணப்பட்டதோ, அதை மனிதனான நான் போக்கினேன். எவன் தனக்கு நேர்ந்த அவமானத்தைத் தேஜஸால் போக்கவில்லையோ, அவனுக்கு என்ன புருஷார்த்தமுண்டு? ஸமுத்ரத்தைத் தாண்டி லங்கையைக் கொளுத்திப் பெரிய செய்கையை ஹநுமான் செய்தான். அது ஸபலமாயிற்று. மந்த்ராலோசனைகாலத்தில் எனக்கு ஹிதத்தைச் சொல்லி, ஸேனையுடன் சண்டைசெய்த ஸுக்கிரீவனுடைய ச்ரமமும் ஸபலமாயிற்று. குணமில்லாத தமையனை விட்டு என்னை அடைந்த விபீஷணனுடைய ப்ரயாஸம் ஸபலமாயிற்று" என்று சொன்னான். இப்படிச் சொல்லிக்கொண்டிருந்த ராமனை ஸீதை பார்க்க, அவன் கோபத்துடன், "ஸீதே! சண்டையில் நாங்கள் எல்லாரும் பட்ட ச்ரமத்தை நீ அறிவதற்காகச் சொன்னேன். ஆனால் இதை உனக்காகச் செய்யவில்லை. என்னுடைய சீலத்தை ரக்ஷிக்கவும், அபவாதத்தைப் போக்கவும், ப்ரஸித்தமான என் குலத்துக்கு ஏற்பட்ட அபகீர்த்தியைத் துடைக்கவும் அது செய்யப்பட்டது. உன் சரித்ரத்தைப்பற்றி ஸந்தேஹமுண்டாயிருக்கிறது. கண்ணில் ரோகமுள்ளவனுக்கு விளக்கு எப்படி ப்ரதிகூலமோ, அப்படியே நீ என் முன்னால் நிற்பது எனக்கு ப்ரதிகூலமாயிருக்கிறது. எங்கே இஷ்டமோ, அங்கே போ. நான் அநுமதி கொடுத்துவிட்டேன். உனக்குப் போக எங்கும் திக்குக்கள் இருக்கின்றன. உன்னால் எனக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. நல்ல குலத்தில் பிறந்து தேஜஸுஉள்ள எவன், பிறன் வீட்டில் வஸித்த ஸ்திரீயை மனதில் அருவருப்புடன் ஏற்றுக்கொள்வன். ராவணன் மடியிலிருந்து நழுவியவளும் அவனால் கெட்ட பார்வையுடன் பார்க்கப்பட்டவளுமான உன்னை, என் குலத்தை உயர்ந்ததாகச் சொல்லிக்கொண்டிருக்கும் நான் எப்படி ஏற்றுக்கொள்வது? நான் ஆலோசித்தே இப்படிச் சொல்லுகிறேன். உனக்கு ரக்ஷகன் வேண்டுமானால் லக்ஷ்மணன், பரதன், ஸுக்கிரீவன், விபீஷணன் ஆகிய இவர்களுள் எவனுடைய வீட்டிலாவது நீ ஸுகமாயிரு" என்று

சொன்னான்.* (ஸ-118.) இந்தக் கொடுமையான பேச்சைக் கேட்டு ஸீதை, மிகுந்த வருத்தம் அடைந்து, கண்ணீர்பெருக, அதைத் துடைத்துக்கொண்டு பர்த்தாவைப்பார்த்து, "வீரனே! ஸாதாரண மனிதன்போல் காது சுடும்படி கொடியதும் தகாததுமான பேச்சை ஏன் பேசுகிறாய்? நீ எப்படி எண்ணுகிறாயோ, அப்படி நான் இல்லை. என்னை நம்பு. என் சரித்திரத்தினால் நான் சபதம் பண்ணுகிறேன். ஸாதாரண ஸ்திரீயின் நடவடிக்கையைப் பார்த்து ஸ்திரீஜாதியைப்பற்றியே ஸந்தேஹப்படுகிறாய். என் ஸ்வபாவம் உனக்குத் தெரியாதா? தெரிந்திருந்தால் இந்த ஸந்தேஹத்தை விட்டுவிடு. எனக்கு ராக்ஷஸனுடைய உடம்புடன் ஸ்பர்சம் நேர்ந்தது என் இச்சையால் அன்று. அந்த விஷயத்தில் அபராதம் செய்தது தெய்வம். எது எனக்கு அதீனமாயிருந்ததோ அந்த ஹ்ருதயம் உன்னிடம் இருக்கிறது. உடம்பு பராதீனமானது. அதை நியமனம்பண்ணச் சக்தியில்லாத நான் என்னசெய்வேன்? என் ஸ்வபாவத்தை உன்னுடன்கூட இருந்ததாலே நீ அறியலாமே. அதனால் உனக்கு நம்பிக்கை உண்டாகாவிட்டால், எதனால் நம்பிக்கை உண்டுபண்ணமுடியும்? உனக்கு நம்பிக்கை உண்டாகாவிட்டால், நான் அடியோடு அழிந்தேன். என்னைப் பார்ப்பதற்காக ஹநுமானை லங்கைக்கு அனுப்பினாயே. லங்கையிலிருந்த என்னைப்பற்றி உனக்கு ஸந்தேஹமில்லையே. அப்போதே என்னைத் தள்ளியிருந்தால் உன் வார்த்தையை ஹநுமான் சொன்னவுடனேயே அவன் முன்னாலே என் பிராணனை விட்டிருப்பேன். பிழைத்திருப்பதில் ஸம்சயமுண்டாகக்கூடிய சண்டையில் நீ எடுத்துக்கொண்ட ப்ரயாஸமும், உன் ஸுஹ்ருத்துக்கள் உனக்காகப் பட்ட வருத்தமும் வியர்த்தமாக ஆகியிருக்கமாட்டா. நீ கோபத்தை விடாமல், நான் ஸ்திரீஜாதியாயிருப்பதையே நினைக்கிறாய். எனக்கு ஜனகன் பெண் என்று பெயர்மாத்திரம். நான் பூமியிலிருந்து உண்டானதையும் என்னுடைய நடவடிக்கையையும் நீ நினைக்கவில்லை. பால்யத்தில் உன்னால் பிடிக்கப்பட்ட

---

* பர்த்தாவினால் விடப்பட்ட ஸ்திரீ பந்துக்கள்வீட்டில் இருக்க வேண்டியது. ஒருபோதும் ஸ்வதந்திரமாயிருக்கக்கூடாது என்கிற சாஸ்த்ரத்தை அநுஸரித்துச் சொன்னபடி. இது மஹாபுருஷன் வாக்யமானபடியால் இதற்கு வேறுவிதமாய் அர்த்தம் பண்ணக்கூடாது.

என் கை உனக்கு ப்ரமாணமாகவில்லை. என்னுடைய பக்தியையும், என்னுடைய ஸ்வபாவத்தையும் நீ மறந்துவிட்டாய்'' என்று பதில் சொல்லி, லக்ஷ்மணனைப் பார்த்து, “விறகை அடுக்கி நெருப்பைமூட்டு. இந்த என்னுடைய வ்யஸனத்துக்கு அதுதான் மருந்து. பொய்யான அபவாதத்தாலே தாக்கப்பட்ட நான் பிழைத்திருக்க விரும்பவில்லை. குணங்களாலே ப்ரீதியை அடையாத பர்த்தாவால் விடப்பட்ட எனக்குத் தகுந்த கதி வேறு ஏது? நான் அக்னிப்ரவேசம் பண்ணுகிறேன்'' என்று சொன்னாள். இதைக்கேட்டு லக்ஷ்மணன் வருத்தத்துடன் ராமன் முகத்தைப்பார்த்து, ராமனுக்கு அதுவே இஷ்டம் என்று முகக்குறியால் அறிந்து சிதையை அடுக்கினான். ஸீதை, தலைகுனிந்திருந்த ராமனை ப்ரதக்ஷிணம்செய்து, தேவதைகளுக்கும் ப்ராம்மணர்களுக்கும் நமஸ்காரம்பண்ணி, கையைக்கூப்பிக்கொண்டு அக்னியின் ஸமீபம் போய், “என் மனது ஒருபோதும் ராமனிடமிருந்து விலகாதிருந்தால், எல்லாவற்றுக்கும் ஸாக்ஷியாயிருக்கிற அக்னியானது என்னை எல்லாவிதத்தாலும் ரக்ஷிக்கட்டும். ராமன் என்னைத் துஷ்டை என்று எண்ணுகிறான். அந்த எண்ணம் பிசகாயிருந்தால், ஸர்வஸாக்ஷியான அக்னி என்னை எல்லாவிதத்தாலும் ரக்ஷிக்கட்டும். நான் த்ரிகரணத்தாலும் தர்மஜ்ஞனை ராமனைவிட்டுப் போகாதிருந்தால் என்னை அக்னி ரக்ஷிக்கட்டும். சூரியன், வாயு, திக்குக்கள், சந்த்ரன், பகல், ஸந்த்யாகாலம், ராத்ரி, பூமி ஆகிய இவர்களும் மற்றவர்களும் என்னை நல்ல சரித்ரமுள்ளவள் என்று அறிந்தால், அக்னி என்னை ரக்ஷிக்கட்டும்'', என்று சொல்லி, அக்னியை ப்ரதக்ஷிணம்செய்து மனதில் ஸம்சயமில்லாமல் ஜ்வலித்துக்கொண்டிருந்த அக்னியில் ப்ரவேசித்தாள். இதைப் பார்த்து எல்லா வானரங்களும், ராக்ஷஸர்களும் ஹா ஹா என்று கதறினார்கள். (ஸ-119.)

(203) அப்போது ப்ரம்மா ருத்ரன் முதலான தேவர்கள் வந்தார்கள். திக்பாலர்கள் ராமனைப் பார்த்து, “நீ எல்லா உலகங்களையும் உண்டுபண்ணினவன்; ஜ்ஞானமுள்ளவர்களுக்குள் மிகவுமுயர்ந்தவன்; அக்னியில் விழுந்த ஸீதையை ஏன் உபேக்ஷிக்கிறாய்? நீ தேவகணங்களுக்குள் மிகவும் உயர்ந்தவனாயிருக்கும் தன்மையை ஏன் அறியவில்லை?'' என்று சொல்லி அவனை ஸ்தோத்ரம் பண்ணினார்கள். இதைக்கேட்டு ராமன், “என்னை

மனிதன் என்றும் தசரதன் பிள்ளை என்றும் ராமன் என்கிற பெயருள்ளவன் என்றும் எண்ணுகிறேன். என் ஸ்வரூபத்தை யும் நான் யாரைச்சேர்ந்தவன் என்பதையும் எந்த ப்ரயோ ஜனத்துக்காக வந்தவன் என்பதையும் ஜ்ஞானசக்தி நிறைந்த ப்ரம்மா சொல்லட்டும்"* என்று சொல்ல, ப்ரம்மா, "நீ நாராயணன் என்கிற தெய்வம்; லக்ஷ்மீபதி; சங்கமும் சக்ரமும் உனக்கு ஆயுதங்கள்; நீ எங்குமிருக்கிறவன்; நீ ஒற்றைக்கொம் புள்ள வராஹமாக அவதாரம் பண்ணினவன்; மூன்றுகாலங்களி லும் சத்ருக்களை ஜயிப்பவன்; உனக்கு நாசமில்லை; ஸத்யம் ஜ்ஞானம் அனந்தம் என்று சொல்லப்பட்ட ப்ரம்மம் நீ" என்று அவன் ஸ்வரூபத்தை விஸ்தாரமாய் வர்ணித்து, "ஸீதை லக்ஷ்மீ; நீ விஷ்ணு. ராவணனை வதம் பண்ணுவதற்காக மனித சரீரத் துடன் வந்தாய். உன்னால் எங்களுடைய காரியம் செய்யப்பட் டது. ராவணன் கொல்லப்பட்டான். நீ வைகுந்தத்துக்குப் போக லாம். உன் பலமும் வீர்யமும் வீணாய்ப்போகிறவைகள் அல்ல. உன்னைப் பார்ப்பதும் ஸ்தோத்ரம் பண்ணுவதும் வீணாய்ப் போகா. உன்னிடத்தில் பக்தியுள்ளவர்கள் வேண்டியதை அடைவர்கள்" என்று சொன்னான். (ஸ-120.) இதைக்கேட்ட அக்னி தன் ரூபத்துடன் ஸீதையை மடியில் வைத்துக்கொண்டு ராமனிடம் நேரில் வந்து, "இந்த ஸீதையினிடத்தில் ஒரு தோஷமுமில்லை. இவள் வாக்காலோ, மனதாலோ, கண்க ளாலோ உன்னைவிட்டுப் போகவில்லை. அவள் சரித்ரம் நல்லது. ராவணனால் லங்கைக்குக் கொண்டுவரப்பட்டு ராக்ஷ ஸிகள் நடுவில் வைக்கப்பட்டுப் பலவிதமாய் ப்ரலோபிக்கப் பட்டாலும் அவள் மனது உன்னிடமே இருந்தது. ராவணன் சொன்னவை எல்லாம் இவள் காதில் படவில்லை. ஆகையால் இவளை ஏற்றுக்கொள். நான் சொன்னதைத் தடுக்கக்கூடாது. நான் உனக்குக் கட்டளையிடுகிறேன்" என்று சொன்னான். இதைக்கேட்டு ராமன், "ஸீதை பாபம் செய்பவளல்லள். இதை

---

* பகவான் மனிதரூபத்துடன் வந்து மனிதனைப்போல் நடந்து ராவணனைக் கொன்றான். அதுவரையில் தன் ஸ்வரூபத்தை மறைத்துக் கொண்டிருந்தான். அவன் இறந்தபடியால் செய்யவேண்டிய கார்யம் முடிந்தது. இனி தன்னை மறைத்துக்கொண்டிருப்பதற்குப் பிரயோ ஜனமில்லை. தன் ஸ்வரூபத்தை உலகத்தாருக்கு ப்ரம்மா முகத்தாலே வெளியிட ராமன் இப்படிக் கேட்டது.

நானும் அறிவேன். ஸூர்யனைவிட்டு ப்ரபை எப்படிப் பிரிந்திருக்காதோ, அப்படியே ஸீதை என்னைவிட்டுப் பிரியாதவள். அக்னியின் ஜ்வாலையை எப்படிக் கிட்டமுடியாதோ, அப்படியே ராவணனும் அவளைக் கிட்டமுடியாது. ஆனால் உலகம் பொல்லாதது. அவளைச் சோதனை செய்யாமல் ஏற்றுக்கொண்டால் "ராமன் மூர்க்கன்; காமத்துக்கு வசப்பட்டவன்" என்று உலகம் சொல்லும். மூன்று உலகங்களுக்கும் நம்பிக்கை உண்டாவதற்காக இவள் அக்னியில் விழுவதை நான் பார்த்துக்கொண்டிருந்தேன். இவளை இவள் தேஜஸே ரக்ஷித்தது. ஆகையால் உங்களுடைய இந்த நல்லவார்த்தையை நான் அவசியம் கேட்க வேண்டியது" என்று சொல்லி, ஸீதையுடன் சேர்ந்தான். (ஸ-121.)

(204) அப்போது ருத்ரன் ராமனைப் பார்த்து, "இந்த உலகத்தில் உனக்குப் பிதாவாயிருந்த தசரதன் விமானத்திலிருக்கிறான். அவனுக்கு நமஸ்காரம் பண்ணு" என்று சொல்ல, ராமனும் லக்ஷ்மணனும் அவனுக்கு நமஸ்காரம் செய்தார்கள். தசரதன் அவர்களை மடியில்வைத்துக் கட்டிக்கொண்டு "ராமா! உன்னைவிட்டுப் பிரிந்த எனக்கு ஸ்வர்க்கமும், தேவரிஷிகள் செய்யும் வெகுமானமும் பிடிக்கவில்லை. இஃது உண்மை. நீ காட்டில் வஸித்து, பண்ணின ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றி, சத்ருவைக்கொன்றதைப் பார்த்து எனக்கு ஸந்தோஷமுண்டாகிறது. உன்னைக் காட்டுக்கு அனுப்பும்படி கைகேயி சொன்ன பேச்சுக்கள் என் மனதில் இருந்தன. நீ க்ஷேமமாயிருப்பதைப் பார்த்தும் லக்ஷ்மணனுடன் உன்னைக் கட்டிக்கொண்டும் துக்கத்திலிருந்து விடுபட்டேன். நீ தேவர்களால் வேண்டப்பட்டு ராவணன் வதத்துக்காக வந்ததை இப்போது அறிந்தேன். உன்னைப்பெற்ற கௌஸல்யையும் அயோத்யையிலிருக்கும் ஜனங்களும் க்ருதார்த்தர்களாவார்கள். உனக்கு மிகுந்த கீர்த்தி உண்டாயிருக்கிறது. ராஜ்யத்தை அடைந்து தம்பிகளுடன்கூட நீ தீர்க்காயுஸாயிரு" என்று ஆசீர்வாதம் பண்ணினான். ராமன் கைகேயிக்கு எந்தச் சாபம் கொடுக்கப்பட்டதோ, அந்தச் சாபம் அவளைத் தொடாமலிருக்கவேண்டும் என்றும், அவளையும் பரதனையும் அனுக்ரஹிக்கவேண்டும்" என்றும் ப்ரார்த்திக்க, தசரதன் அப்படியே ஆகட்டும் என்று சொன்னான். (ஸ-122.)

இந்த்ரனும் ராமனைப் பார்த்து "நீ செய்த வேலையினால் எனக்கு ப்ரீதி உண்டாயிருக்கிறது. உனக்கு என்னவேண்டும்" என்று கேட்க, "எனக்காகச் சண்டையில் ராக்ஷஸர்களால் கொல்லப்பட்ட வானரங்கள் காயமும் அதனாலுண்டான வேதனையும் இல்லாமல், முன்போல பலமும் பௌருஷமுமுள்ளவர்களாய் தூங்கினவர்கள் போல் எழுந்திருக்கவேண்டும்" என்று ராமன் ப்ரார்த்தித்தான். இந்த்ரன் அப்படியே அநுக்ரஹம் செய்ய, ராமன் கேட்டுக் கொண்டபடி வானரங்கள் ஸ்வஸ்தர்களாய் எழுந்திருந்து ஆச்சரியத்துடன் ராமனை வணங்கின. தேவர்கள் தங்கள் இருப்பிடத்துக்குத் திரும்பிப்போனார்கள். (ஸ-123.)

(205) மறுநாள் காலையில் விபீஷணன் வந்து ராமனை ஸ்நானம்செய்து அலங்காரம் பண்ணிக்கொள்ளும்படி ப்ரார்த்திக்க, ராமன் "பரதனைவிட்டு இதை நான் செய்யமாட்டேன். என் ப்ரதிஜ்ஞையை முடித்துக்கொண்டு திரும்பி வருகிறேன் என்று சித்ரகூடத்தில் அவனுக்கும் தாய்மார்களுக்கும் வஸிஷ்டருக்கும் நான் சொன்னதை நிறைவேற்றவேண்டும். என் மனது பரதனிடம் இருக்கிறது. நான் இங்கிருந்து உடனே போகவேண்டும். நீ செய்யும் உபசாரங்களைப் பெற்றுக்கொள்ளமுடியாது. கோபித்துக்கொள்ளாதே. நீ சொன்னதே போதும். எனக்கு அநுமதி கொடு" என்று சொல்ல, விபீஷணன், புஷ்பகவிமானத்தைக் கொண்டுவந்து நிறுத்தினான். (ஸ-124.) விபீஷணனைக்கொண்டு வானரங்களுக்குத் தகுந்த ஸன்மானங்களைச் செய்வித்து, ராமன் ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் விமானத்தில் ஏறி, ஸுக்ரீவனை "நீ வானரங்களுடன் ஸுகமாக கிஷ்கிந்தைக்குப்போயிரு" என்று சொன்னான். அவனும் விபீஷணனும், "நாங்களும் அயோத்திக்குவந்து உன் அபிஷேகத்தைப் பார்த்து கௌஸல்யைக்கு நமஸ்காரம் செய்து திரும்பிவர விரும்புகிறோம்" என்று ப்ரார்த்திக்க, ராமன், வானரங்களுடன் ஸுக்ரீவனையும், ராக்ஷஸர்களுடன் விபீஷணனையும் விமானத்தில் ஏற்றிக்கொண்டு ஆகாசமார்க்கமாகப் புறப்பட்டான். (125) புறப்பட்டுப்போகையில், ஸீதைக்கு வழியிலிருந்தவைகளைக் காட்டிக்கொண்டுபோனான். "ஸீதையே! இது த்ரிகூடம் என்கிற மலையிலிருக்கிற லங்கை என்னும் நகரம்; ரத்தமும் மாம்ஸமும் சேர்ந்து சேறாயிருக்கிற இந்த இடத்தில் வானரங்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் கொடுமையான சண்டை

நடந்தது; இங்கே உனக்காக ராவணனும் மற்றவர்களும் கொல்லப்பட்டார்கள்; இங்கே மந்தோதரிவந்து ரோதநம்பண்ணினள்; இது ஸமுத்ரம்; இதில் உனக்காக நளன் என்கிற வானரனால் ஸேது கட்டப்பட்டது; இந்த இடத்தில்தான் நான் படுத்திருந்ததும், ஸமுத்ரராஜன்வந்து எனக்கு அநுக்ரஹம்பண்ணினதும், விபீஷணன் வந்ததும். இது கிஷ்கிந்தை. இதில் ஸுக்ரீவனுக்காக நான் வாலியைக் கொன்றேன்" என்று சொன்னான். அப்போது ஸீதை, "ஸுக்ரீவன் பார்யையான தாரையாலும், மற்ற வானர ஸ்திரீகளாலும் சூழப்பட்டு அயோத்யைக்குப் போக ஆசைப்படுகிறேன்" என்று சொல்ல, ஸுக்ரீவனைக்கொண்டு அவர்களை வரவழைத்து விமானத்தில் ஏற்றிக்கொண்டு புறப்பட்டான். முன்போலவே "இது ருச்யமூகம் என்கிற மலை; இங்கே ஸுக்ரீவனுடன்சேர்ந்து வாலியைக் கொல்ல நான் ப்ரதிஜ்ஞை பண்ணினேன்; இது பம்பை என்கிற ஸரஸு; இங்கே உன்னைவிட்டுப் பிரிந்து துக்கத்தாலே புலம்பினேன்; இங்கே சபரி என்கிற வேடஸ்திரீயைப் பார்த்தேன்; இங்கே கபந்தன் என்கிற ராக்ஷஸனைக் கொன்றேன்; இதோ காணப்படுகிறது ஜனஸ்தானம்; இங்கே உனக்காக ராவணனுக்கும் ஜடாயுவுக்கும் பெரிய யுத்தம் நடந்தது; இதிலேயே கரன் முதலானவர்கள் கொல்லப்பட்டார்கள்; இது நம்முடைய ஆச்ரமமிருந்த பஞ்சவடி; இஃது அந்தப் பர்ணசாலை; இதிலிருந்து ராவணன் உன்னைக் கொண்டுபோனான்; இது கோதாவரி; இஃது அகஸ்தியர் ஆச்ரமம்; இது ஸுதீக்ஷ்ணருடைய ஆச்ரமம்; இது சரபங்கர் ஆச்ரமம்; இதில் இந்த்ரனைப் பார்த்தேன்; இங்கே விராதன் கொல்லப்பட்டான்; இஃது அத்ரியின் ஆச்ரமம்; இதில் நீ அவர் தர்மபத்னியான அநஸூயையைப் பார்த்தாய்; இது சித்ரகூடம்; இங்கே பரதன் என்னை நல்லவார்த்தை சொல்லுவதற்கு வந்தான்; இது யமுனை என்கிற ஆறு; அதோ பரத்வாஜாச்ரமம்; அதின் பக்கத்திலிருப்பது கங்கை; அது ச்ருங்கிபேரபுரம்; அங்கே குஹனோடு சேர்ந்தோம்; அதோ தூரத்தில் தெரிகிறது ஸரயூ; அஃது அயோத்தி; என் தகப்பனருடைய நகரம்; அதற்கு நமஸ்காரம் பண்ணு" என்று ஸீதைக்கு ஒவ்வொன்றாய்ச் சொல்லிக்கொண்டு பரத்வாஜாச்ரமம் வந்துசேர்ந்தான். (ஸ-126) அன்றையதினம் ராமன் அயோத்யை

யைவிட்டுப் புறப்பட்டதுமுதல் பதினன்கு வர்ஷங்கள் முடிந்து பதினைந்தாவது வர்ஷத்தின் முதல்நாள். அது சுக்லபக்ஷம் பஞ்சமி. ராமன் பரத்வாஜருக்கு நமஸ்காரஞ்செய்து, "அயோத்யையில் எல்லோரும் ரோகமில்லாமலிருக்கிறார்களா? அது ஸுபிக்ஷமாயிருக்கிறதா? என் தாயார்கள் ஜீவித்திருக்கிறார்களா? இந்த விஷயங்கள் உம்முடையகாதில் பட்டனவா?" என்று கேட்டான். ருஷி, "பரதன் தாபஸவேஷத்துடன் உன்வரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறான். க்ருஹத்தில் எல்லோரும் க்ஷேமமாயிருக்கிறார்கள். இந்த ஆச்ரமத்திலிருந்து புறப்பட்டதுமுதல் நடந்தவைகளையெல்லாம் நான் தபஸால் அறிந்தேன். இன்றைக்கு இங்கே இருந்து நாளையதினம் அயோத்யைக்குப் போகலாம்" என்று சொன்னார். அதை ஒப்புக்கொண்டு அன்று அங்கு ராமன் இருந்தான். அவர் அநுக்ரஹத்தால் அயோத்யைக்குப்போகும் வழியில் அகாலமாயிருந்தும் மரங்களில் புஷ்பங்களும் தேன் நிறைந்த பழங்களும் உண்டாயின. வானரங்கள் பழங்களைச் சாப்பிட்டுக்கொண்டு அயோத்திக்குப் போயின.* (ஸ-127.)

(206) பரத்வாஜர் ஆச்ரமத்துக்குப்போகும்போது, ராமன் ஹநுமானை அயோத்யைக்கு அனுப்பி, "ராஜக்ருஹத்தில் எல்லோரும் ஸௌக்யமா என்று அறிந்து வா. ச்ருங்கிபேரபுரத்தில் வேடராஜாவான குஹனைக் கண்டு நான் க்ஷேமமாயிருப்பதை அவனுக்குச் சொல்; அவன் எனக்கு உயிர்த்தோழன்; அவன் அயோத்

---

* ராமன் அயோத்யையைவிட்டுச் சித்திரைமாதம் சுக்லபக்ஷம் பஞ்சமி அன்று காட்டுக்குப் புறப்பட்டான். சித்ரகூடம் வருவதிலும் அதில் இருப்பதிலும், ருஷிகள் ஆச்ரமத்துக்குப் போய்க்கொண்டிருந்ததிலும் பத்துவர்ஷங்கள் சென்றன. பஞ்சவடியில் அவன் மூன்றுவர்ஷமிருந்தான். பதினாலாவதுவர்ஷம் முதல்நாள் சுக்லபக்ஷ பஞ்சமியில் ராவணன் ஸீதையைக் கொண்டுபோனது. வைகாசிமாதத்தில் ராமன் ஸுக்ரீவனோடு சேர்ந்தது. ஆடிமாதத்தில் வாலிவதம். ஆவணிமாதம்முதல் நாலுமாதம் மழைக்காலம். மார்கழிமாதத்தில் வானரங்கள் ஸீதையைத் தேட ஆரம்பித்தது. பங்குனிமாதம் பௌர்ணமியில் ராமன் ஸமுத்ரக் கரைக்கு வந்தது. ப்ரதிசயனமும் அணைகட்டினதும் யுத்தமும் பதினைந்துநாள்கள். அமாவாஸையில் ராவணவதம். ப்ரதமையில் ப்ரேதகார்யம். த்விதீயையில் விபீஷணன் பட்டாபிஷேகமும் ராமன் ஸீதையுடன் சேர்ந்ததும். த்ருதீயையில் லங்கையைவிட்டுப் புறப்பட்டது. சதுர்த்தியில் கிஷ்கிந்தையில் இருந்தது. பஞ்சமியில் பரத்வாஜாச்ரமம் வந்துசேர்ந்தது.

யைக்குப்போகும் வழியைக் காண்பிப்பன்; பரதன் இருப்பையும் தெரிவிப்பன்; பரதனைக்கண்டு ஆகவேண்டிய காரியங்களை முடித்துக்கொண்டு ராமன் ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் பரத்வாஜாச்ரமத்தில் வந்திருக்கிறான் என்று சொல்லு. நடந்தவைகளையும் சொல்லு இதைக்கேட்டு அவன் முகக்குறியையும் அவன் சொல்லுவதையும் அறிந்துவா. ஸமிருத்தமும் குல பரம்பரையாய் வந்ததுமான ராஜ்யத்தை எவன்தான் ஆசைப்படமாட்டான். பரதனுக்கு அதில் ஆசையிருந்தால் அவனே பூமி முழுவதும் ஆளட்டும். நாம் வெகுதூரம் வருவதற்குமுன் வந்து இதைச் சொல்" என்று கட்டளையிட்டான். ஹநுமான் ராமன் சொன்னபடி செய்து பரதனைக்கண்டு, அவன் நிலைமையைக்கண்டு ராமன் வரவைத் தெரிவித்தான். அதைக்கேட்டு பரதன் ஸந்தோஷத்தாலே மூர்ச்சையடைந்தான் நினைவு திரும்பிவந்த பிறகு ஹநுமானைக் கட்டிக்கொண்டு அவனைப் பார்த்து, "நீ தேவனோ? மனிதனோ? இரக்கத்தாலே இங்கே வந்திருக்கிறாய். எனக்கு ப்ரியமானதைச் சொன்ன உனக்கு லக்ஷம் பசுமாடுகளையும் நூறு க்ராமங்களையும் பார்யைகளாக பதினாறு கன்யகைகளையும் கொடுக்கிறேன்" என்று சொன்னான். (ஸ-128.) பரதன் "ராமன் காட்டுக்குப்போய் அநேக வர்ஷங்களாயிற்று. நடந்ததெல்லாம் விரிவாய்ச் சொல்" என்று கேட்க, ஹநுமான் கைகேயி வரங்கேட்டதுமுதல் பரத்வாஜாச்ரமத்துக்குத் திரும்பி வந்ததுவரையில் நடந்தவைகளை அவனுக்குத் தெரிவித்தான். (ஸ-129.)

(207) பரதன் ஹநுமான் சொன்னதைக் கேட்டு மிகுந்த ஸந்தோஷம் அடைந்து, சத்ருக்னனைக்கொண்டு நகரத்தையும் அதற்குப் போகும் மார்க்கத்தையும் அலங்காரம் செய்வித்து, ராமன் பாதுகைகளைத் தலையில் வைத்துக்கொண்டு, ராஜோபசாரத்துடன் ராமனை எதிர்கொள்ளப்போனான். ராமன் வராததைப் பார்த்து அவன் கவலைப்பட, ஹநுமான், "வானரங்களின் சப்தத்தைக் கேள்; அதோ புஷ்பகவிமானம் வருகிறது பார்" என்று சொன்னான். ரதம் கிட்டவந்தது. ராமனையும் ஸீதையையும் லக்ஷ்மணனையும் மற்றவர்களையும் அதில் கண்டு, பரதன் அதில் ஏறி ராமன் திருவடிகளில் விழுந்தான். ராமன் அவனைத் தூக்கித் தன் மடியில் வைத்துக்கொண்டு கட்டிக்கொண்டான்.

பிறகு பரதன் லக்ஷ்மணனுடைய நமஸ்காரத்தைப் பெற்றுக் கொண்டு ஸீதைக்கு நமஸ்காரம்பண்ணி, ஸுக்ரீவனைக் கட்டிக் கொண்டு; "நீ நாலு ப்ராதாக்களான எங்களுடன் ஐந்தாவது ப்ராதாவாக இரு.

ஸௌஹார்தாஜ்ஜாயதே மித்ரமபகாரோऽரிலக்ஷணம் ॥

(ஸ-130-44.)

நல்ல மனமுள்ளவனாயிருப்பதாலே ஒருவன் ஒருவனுக்கு மித்ரனாக ஆகிறான். அபகாரம் செய்வது சத்ருவின் லக்ஷணம்" என்று சொன்னான். பரதன், ஜாம்பவான்முதலான வானரவீரர்களை ஆலிங்கனம் பண்ணி, விபீஷணனுக்கு உபசாரவார்த்தை சொல்லி, "நீ துணையாயிருந்ததினால் செய்யமுடியாத காரியம் செய்யப்பட்டது" என்று சொன்னான். சத்ருக்னன் ராம லக்ஷ்மணர்களுக்கும் ஸீதைக்கும் நமஸ்காரம் செய்தான். ராமன் தாயார்களுக்கு நமஸ்காரம்செய்து, புரோஹிதனான வஸிஷ்டனுக்கும் நமஸ்காரம் செய்தான். நகரத்து ஜனங்கள் "நல்ல வேளை க்ஷேமமாய்த் திரும்பிவந்துசேர்ந்தாய்" என்று கைகளைக் கூப்பிக்கொண்டு சொன்னார்கள். பரதன் பாதுகைகளைக் கொண்டு வந்து ராமன் திருவடிகளில் சேர்த்து, "ராமா! இந்த ராஜ்யத்தை நான் ரக்ஷித்துவந்தேன்; இதை உன்னிடம் திருப்பிக் கொடுத்துவிடுகிறேன்; நான் பிறந்தது இன்று ஸபலமாயிற்று; நீ திரும்பிவந்து அயோத்திக்கு ராஜாவாக ஆனதைப் பார்த்து என் ஆசை நிறைவேறிற்று. பொக்கிஷத்தையும் தான்யசாலையையும் ஸேனையையும் நகரத்தையும் உன் தேஜஸைக்கொண்டு நான் பத்துமடங்காக விருத்தி செய்திருக்கிறேன்" என்று சொன்னான். பரதன் செய்ததைக்கண்டு வானரங்களும் ராக்ஷஸர்களும் ஆனந்தத்தாலே கண்ணீரைச் சொரிந்தார்கள். ராமன் பரதன் ஆச்ரமத்துக்குப்போய் எல்லாருடனும் விமானத்திலிருந்து இறங்கி, அந்த விமானத்தைக் குபேரனிடம் அனுப்பிவிட்டான். (ஸ-130.)

(208) பரதன், இன்றைக்கே மத்யான்னத்தில் அபிஷேகம் பண்ணிக்கொள்ளவேண்டும் என்று ப்ரார்த்திக்க, ராமன் அதை ஒப்புக்கொண்டான். உடனே ராமனும் லக்ஷ்மணனும் ஸ்நானம் செய்தார்கள். அவர்களுக்கு அலங்காரம் செய்யப்

பட்டது. தசரதன்ஸ்திரீகள் ஸீதைக்கு அலங்காரம் செய்தார்கள். கௌஸல்யை, பிள்ளையினிடத்தில் ஆசையாலே வானர ஸ்திரீகளுக்கும் அலங்காரம் செய்தாள். சத்ருக்னன் கட்டளையிட்டபடி ஸுமந்த்ரன் ரதத்தைக் கொண்டுவந்து நிறுத்தினான். ராமன் ஸீதையுடன் ரதத்தில் ஏறிக்கொள்ள, பரதன் குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்துக்கொண்டான். சத்ருக்னன் ராமனுக்குக் குடைபிடித்தான். லக்ஷ்மணன் ஒரு சாமரத்தையும் விபீஷணன் மற்றொரு சாமரத்தையும் வீசினார்கள். ஆகாசத்தில் ருஷிகளும் தேவர்களும் மருத்கணங்களும் ராமனை ஸ்தோத்ரம்பண்ணின. மதுரமான சப்தம் கேட்கப்பட்டது. ஸுக்ரீவன் சத்ருஞ்ஜயம் என்கிற யானையின்மேல் ஏறிக்கொண்டான். வானரங்கள் மனிதரூபங்களை எடுத்துக்கொண்டு ஆயிரக் கணக்கான யானைகளின்மேல் ஏறிக்கொண்டன. இவ்விதமாக வாத்யகோஷத்துடன் ராமனும் மற்றவர்களும் அயோத்யைக்கு வந்துசேர்ந்தார்கள். வானரங்கள் தங்கக்குடங்களில் நான்கு ஸமுத்ரங்களிலிருந்தும் மற்றப் புண்யநதிகளிலிருந்தும் தீர்த்தங்களைக் கொண்டுவந்தன. அன்று புஷ்யநக்ஷத்திரம். நல்ல முஹூர்த்தத்தில் வஸிஷ்டர் மற்ற ப்ராம்மணர்களுடன் ரத்னமயமான ஸிம்மாஸனத்தில் ராமனையும் ஸீதையையும் உட்காரவைத்து, வஸுக்கள் இந்த்ரனுக்கு அபிஷேகம் பண்ணினது போல, அந்தத் தீர்த்தங்களாலே அவர்களுக்கு அபிஷேகம் பண்ணினார். அவர்களுக்கு சத்ருக்னன் குடை பிடித்தான். ஸுக்ரீவனும் விபீஷணனும் சாமரம் வீசினார்கள். வாயு இந்த்ரனால் அனுப்பப்பட்ட பொன்மாலையையும் முத்துமாலையையும் கொண்டுவந்து கொடுத்தான். தேவகந்தர்வர்கள் பாடினார்கள். அப்ரஸுகள் நர்த்தனம் பண்ணினார்கள். (ஸ-131.)

(209) ராமன் பட்டாபிஷேகம் ஆனபிறகு, ப்ராம்மணர்களுக்கு கணக்கில்லாத தங்கத்தையும் குதிரைகளையும் பசுமாடுகளையும் கொடுத்தான். ஸுக்ரீவனுக்குத் தங்கத்தால் செய்யப்பட்ட உயர்ந்த மாலையையும், அங்கதனுக்கு ரத்னங்கள் இழைக்கப்பட்ட தோள்வளைகளையும் கொடுத்தான். முத்துமாலையை ராமன் ஸீதையிடம் கொடுத்தான். அவள் சுத்தமான இரண்டு வஸ்த்ரங்களையும் உயர்ந்த ஆபரணங்களையும் ஹநுமானுக்குக் கொடுத்து, தன் கழுத்திலிருந்த ஹாரத்தை எடுத்து, வான

ரங்களையும் ராமனையும் பார்த்தாள். ராமன் அவள் அபிப்ராயத்தை அறிந்து, "உனக்கு யாரிடம் ப்ரீதியிருக்கிறதோ, எவனிடத்தில் ஆண்மைத்தன்மையும் பராக்ரமமும் உயர்ந்த புத்தியும் பூர்ணமாயிருக்கின்றனவோ, அவனுக்கு இதைக் கொடு" என்று சொல்ல, ஸீதை அதை ஹநுமானுக்குக் கொடுத்தாள். அந்த மாலையினால் ஹநுமான் மிகவும் சோபித்தான். மற்றவர்களுக்கும் அவரவர்களுக்குத் தகுந்தபடி ராமன் ஸம்மானம்பண்ண, ஸுக்ரீவன் வானரங்களுடன் கிஷ்கிந்தைக்குச் சென்றான். விபீஷணன் ஸ்ரீரங்கவிமானமாகிய இக்ஷ்வாகுகுலதனத்தைப் பெற்றுக் கொண்டு ராக்ஷஸர்களுடன் லங்கைக்குத் திரும்பிப்போனான். லக்ஷ்மணனைப் பார்த்து யுவராஜாவாக இரு என்று ராமன் சொல்ல, அதை அவன் ஒப்புக்கொள்ளவில்லை. பரதனை ராமன் யுவராஜாவாக அபிஷேகம் பண்ணினான். ராமன் பலவித யாகங்களைச் செய்து பதினோராயிரம்வர்ஷம் பூமியைப் பரிபாலனம் பண்ணினான். ஒருகுறைவுமில்லாமல் பூமி செழித்திருந்தது. (ஸ-131.)

---

ஸ்ரீமதே ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம: ||

யுத்தகாண்டம் முற்றிற்று.

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ||

---

# அநுபந்தம்.

## 1. ருச்யச்ருங்கர்.

( இந்தக்கதை ஸுமந்த்ரன் தசரதருக்குச் சொன்னது.)

( பாரா—3 )

மூன்றாவது பாராவில் சொன்னபடி கணிகைகள் விபண்டகர் ஆச்ரமத்தின் ஸமீபத்தில் இருந்தார்கள். ருச்யச்ருங்கர் வேதத்தைச் சொல்லிக்கொண்டு காட்டில் தபஸ் செய்கிறவர். இவன் புருஷன், இவள் ஸ்திரீ என்று அவருக்குத் தெரியாது. தற்செயலாய் அவர் கணிகைகள் இருந்தவிடத்துக்கு வந்தார். அவர்கள் அவரை "நீர் யார்?" என்று கேட்க, அவர் தம் வரலாற்றைச் சொல்லி, அவர்களைத் தன் ஆச்ரமத்துக்கு அழைத்துக் கொண்டு போனார். அவர்கள் அவர் செய்த பூஜையைப் பெற்றுக் கொண்டு அவர் தகப்பனாரான விபண்டகரிடத்தில் பயத்தால் போகப் புறப்பட்டு, "எங்களுடைய இந்தப் பழங்களை வாங்கிச் சாப்பிடும்" என்று சொல்லி, அவரைக் கட்டிக்கொண்டு தாங்கள் கொண்டுபோயிருந்த பக்ஷ்யங்களை அவருக்குக் கொடுத்தார்கள். அவர் அதைச் சாப்பிட்டுப் பழங்கள் என்றே எண்ணினார். அவர்கள் அவரிடம் சொல்லிக்கொண்டு போய்விட்டார்கள். ருச்யச்ருங்கரோ, அவர்கள் அழகைப் பார்த்து அவர்களின் ஸ்பர்சத்தையடைந்து அவர்கள் கொடுத்ததைச் சாப்பிட்டு அவர்களையே நினைத்துக்கொண்டிருந்தார். மறுநாள் ருச்யச்ருங்க ருஷி எங்கே அவர்களைப் பார்த்தாரோ, அந்த இடத்துக்குப் போனார். அவர்கள், "வாரும்; எங்கள் ஆச்ரமத்துக்குப் போவோம்" என்று சொல்லி, அவரை நகரத்துக்கு அழைத்துக்கொண்டு வந்தார்கள். எதிர்பார்த்தபடி மழை பெய்தது. ராஜா ஸந்தோஷப்பட்டு அவரை எதிர்கொண்டுபோய் அழைத்து வந்து, தகுந்த பூஜையைச் செய்து, தன் பெண்ணான சாந்தை என்பவளை அவருக்கு விவாஹம் செய்துகொடுத்தான். சாந்தை தசரதன்பெண். அவனுக்கு ஸகாவான அங்கராஜனுக்குப் பிள்ளையில்லை. ஸந்ததிவிருத்திக்காக சாந்தையைத் தனக்குப்

பெண்ணைக் கொடுக்கும்படி அங்கராஜன் வேண்ட, தசரதனும் கொடுத்தான். அவள் அங்கராஜன் பெண் என்று சொல்லப் பட்டுவந்தாள். (பா-ஸ-10.)

---

## 2. தாடகை.

---

(இந்தக் கதை ராமனுக்கு விச்வாமித்ரர் சொன்னது.)
(பாரா—11.)

1. முன்காலத்தில் ஸுகேது என்கிற ஒரு யக்ஷன் இருந்தான். அவன் பிள்ளையில்லாமல் கடுமையான தபஸு செய்கையில் ப்ரம்மா வந்து அவனுக்குத் தாடகை என்கிற பெண்ணையும் அவளுக்கு ஆயிரம்யானை பலத்தையும் வரன்களாகக் கொடுத்தான். ஸுகேது அவளை ஸுந்தன் என்பவனுக்குக் கலியாணம் செய்துகொடுத்தான். அவனுக்கு மாரீசன் என்கிற பிள்ளை பிறந்தது. ஸுந்தன் மரணம் அடைந்தபிறகு, தாயும் பிள்ளையும் அகஸ்தியர் என்கிற ருஷியைப் பக்ஷிக்க ஆரம்பித்தார்கள். ருஷி கோபங்கொண்டு தாடகையை ராக்ஷஸியாகவும், மாரீசனை ராக்ஷஸனாகவும் ஆகும்படி சபித்தார். அதுமுதல் தாடகை செல்வம் நிறைந்த மலதம் என்றும் காருசம் என்றும் சொல்லப்பட்ட தேசங்களை நாசம்செய்தாள்.

2. அந்தத் தேசங்களுக்கு இந்தப் பெயர்கள் வந்ததற்குக் காரணம் :—இந்த்ரன் விருத்ரனைக் கொன்றபோது ப்ரம்மஹத்தி அவனைப் பிடித்துக்கொண்டது. தேவர்களும் ருஷிகளும் அதை விலக்குவதற்கு அவனுக்கு அபிஷேகம் செய்தார்கள். அப்போது அவன் மலம் ஒரு தேசத்திலும், பசி ஒரு தேசத்திலும் வந்து சேர்ந்தன. அதனால் இவைகளுக்கு மலதம் என்றும் காருசம் என்றும் பெயர்கள் வந்தன. மலத்தையும் பசியையும் இந்த தேசம் பெற்றுக்கொண்டபடியால், இந்த்ரன் ஸந்தோஷப்பட்டு அவைகளுக்கு செல்வம் நிறைந்திருக்கவேண்டும் என்று அநுக்ரஹம் செய்தான். (பா-ஸ-24-25.)

---

## 3. ஸித்தாச்ரமம்.

(இது விசுவாமித்ரரால் ராமனுக்குச் சொல்லப்பட்டது.)
(பாரா—12.)

இதில் பகவான் விஷ்ணு அநேகமாயிரம் யுகங்கள் வஸித்திருந்தார். ஒருகாலத்தில் தேவர்கள் வந்து "மஹாபலி மூன்று உலகங்களையும் எங்களிடமிருந்து பிடுங்கிக்கொண்டு, எங்களைப் பலவிதமாய் ஹிம்ஸை செய்கிறான். நீர் வாமன ரூபத்தையெடுத்துக்கொண்டு அவனை ஜயித்து, அந்த லோகங்களை வாங்கிக் கொடுக்கவேண்டும்" என்று வேண்டினார்கள். அப்போது கச்யபர் அதிதியுடன் வந்து, இதே விஷயத்தைத் தெரிவித்து அதிதிக்குப் பிள்ளையாக அவதாரம் செய்யும்படி வேண்டினார். பகவானும் அதை ஒப்புக்கொண்டு வாமனனாக அவதாரம் செய்து, பலியினிடம் போய் மூன்றடி மண்ணைக்கேட்டு, அதைப்பெற்று, த்ரிவிக்ரம ரூபத்தை எடுத்துக்கொண்டு, மூன்று உலகங்களையும் அளந்து, அவைகளை இந்த்ரனுக்குக் கொடுத்தான். இது புண்ணியமான ஆச்ரமம்.

---

## 4. விச்வாமித்ரரின் வம்சகதை.

(இது விச்வாமித்ரரால் ராமனுக்குச் சொல்லப்பட்டது.)
(பாரா—14.)

பிரம்மாவின் பிள்ளை குசன் என்று பெயருள்ள ஒருவர் இருந்தார். அவர் வைதர்ப்பியினிடத்தில் குசாம்பன், குசநாபன், ஆதூர்த்தரஜஸன், வஸு என்ற நான்கு பிள்ளைகளைப் பெற்றார். குசாம்பன் கௌசாம்பீ என்கிற நகரத்தையும், குசநாபன் மஹோதயம் என்கிற நகரத்தையும், ஆதூர்த்தரஜஸு தர்மாரண்யத்தையும், வஸு கிரிவ்ரஜம் என்கிற நகரத்தையும் நிர்மாணம் செய்தார்கள். இது வஸுவின் தேசம். இதில் ஐந்து மலைகளும் மாலைபோல் விளங்குகிற மாகதி என்கிற நதியும் இருக்கின்றன. குசநாபனுக்கு நூறு பெண்கள் இருந்தார்கள். அவர்கள் உத்யானத்துக்குப்போய்ப் பாடிக்கொண்டும் நர்த்தனம் பண்ணிக்

கொண்டும் வாத்யங்களை வாசித்துக்கொண்டுமிருக்கையில், வாயு அவர்களின் ரூபத்தையும் யௌவனத்தையும் பார்த்து, மோஹங் கொண்டு, அவர்களைத் தனக்கு பாரியையாயிருக்கும்படி வேண்டினன். அவர்கள், "எங்கள் தகப்பனர் எவருக்கு எங்களைக் கொடுப்பரோ அவர்தான் எங்களுக்குப் பர்த்தா" என்று சொன்னார்கள். வாயு கோபித்துக்கொண்டு அவர்களுக்குள்ளே புகுந்து அவர்களைக் கூனிகளாகச் செய்தான். அவர்கள் வெட்கப்பட்டுக்கொண்டு வீட்டுக்குள் போக, அவர்களுடைய தகப்பனர் அவர்களுக்கு உண்டான வேறுபாட்டுக்குக் காரணத்தைக் கேட்டான். அவர்கள் நடந்ததைச் சொன்னார்கள். ராஜா, அவர்கள் பொறுமையைக் கொண்டாடி, சூளீ என்கிற ருஷிக்கு ஸோமதா என்கிற கந்தர்வஸ்திரீயினிடத்தில் பிறந்த ப்ரம்மதத்தன் என்கிற காபிலிநகரத்தின் ராஜாவுக்குத் தன் பெண்களைக் கல்யாணம்பண்ணிக்கொடுத்தான். அவன் பெண்களைப் பாணிக்ரஹணம் பண்ணினவுடன் அவர்களின் உடம்பிலிருந்த வேறுபாடுகள் போய்விட்டன. பெண்களும் மாப்பிளேயும் புறப்பட்டுப்போனபிறகு, குசநாபன் புத்ரகாமேஷ்டி யாகத்தைச் செய்து, காதி என்கிற பிள்ளையைப் பெற்றான். அவர் எனக்குத் தகப்பனர். குசன் வம்சத்தில் பிறந்ததினால் எனக்குக் கௌசிகன் என்று பெயர். ஸத்யவதி என்கிற பெயருள்ள என் தமக்கை ருசீகர் என்கிற ருஷியைக் கல்யாணம் செய்துகொண்டு, அவர் ஸ்வர்க்கலோகம்போனபோது அவருடன் கூடப் போனாள். இப்போது அவள் கௌசிகி என்கிற நதியாகப் பிரவஹித்துக் கொண்டிருக்கிறாள். (ஸ-32-33, 34.)

---

## 5. கங்காவதரணம்.

(இது விசுவாமித்ரரால் ராமனுக்குச் சொல்லப்பட்டது.)
(பாரா—14.)

1. ஹிமவான் என்கிற பர்வதராஜன் மேருவின்பெண்ணான மனோரமையினிடத்தில் கங்கையென்றும், உமை என்றும் இரு பெண்களைப் பெற்றான். கங்கையென்கிற பெண்ணை, தேவர்கள் உலகங்களின் க்ஷேமத்துக்காகத் தங்களுடன் அனுப்பவேண்டும் என்று வேண்டினார்கள். அவள் இப்படி தேவநதியாக ஆனாள்.

இளைய பெண்ணான உமையைப் பர்வதராஜன் ருத்திரனுக்குக் கலியாணம் பண்ணிக் கொடுத்தான். (ஸ-35.) ருத்ரன் ஆசையினால் உமையுடன்சேர்ந்து நூறுவர்ஷங்களாகியும் அவன் தேஜஸை உமையிடம் வைக்கவில்லை. அந்த தேஜஸ் பிள்ளையாகப் பிறந்தால் எவன் அதை ஸஹிக்கமுடியும் என்று தேவர்கள் பயந்து, தேஜஸை உமையிடம் வைக்கக்கூடாது என்று வேண்டினார்கள். அவன் அதை ஒப்புக்கொண்டு, தன் உடம்பிலிருந்து பிரிந்த தேஜஸை எங்கே விடுகிறது என்று கேட்க, அதைப் பூமியில் விடும்படி தேவர்கள் சொன்னார்கள். ருத்ரன் தேவர்கள் சொன்னபடியே செய்ய, அது காடுகளும் மலைகளுமுள்ள பூமியை வியாபித்தது. தேவர்களால் வேண்டப்பட்டு அக்னி அதில் ப்ரவேசித்தான். அது ஒரு பெரிய வெண்மையான மலையாக ஆகி, பிறகு நாணல் காடாக ஆயிற்று. உமை தனக்கு ஸந்ததி உண்டாவதற்கு இடையூறு உண்டானதைப் பார்த்துக் கோபித்துக்கொண்டு, "தேவர்களே! இன்றுமுதல் உங்களுக்கு உங்கள் பாரியைகளிடத்தில் ப்ரஜைகள் உண்டாகா" என்று தேவர்களையும், "பூமியே! நீ அநேகம் பேர்களுக்குப் பாரியையாயிருப்பாய்" என்று பூமியையும் சபித்தாள். (ஸ-36.)

2. ருத்ரன் தபஸ்செய்யப் போனபிறகு தேவர்கள் ப்ரம்மாவினிடம் போய், "எங்களுக்கு ஸேனாதிபதியாக நீர் கொடுத்த ருத்ரன் தபஸ்செய்யப் போய்விட்டான். எங்களுக்கு ஸேனாதிபதி வேண்டும். நாங்கள் என்ன செய்கிறது?" என்று கேட்க, அவர் "அக்னியிடம்போய் அவனை வேண்டுங்கள்" என்று சொன்னார். அவர்கள் கைலாஸமலைக்குப்போய் அக்னியை வேண்டினார்கள். அவன், ருத்ரன் தேஜஸை கங்கையில் விட்டான். அதை அவள் பொறுக்கமுடியாமல், ஹிமவானின் அடிவாரத்தில் அதை விட்டாள். அதில் ஒரு குழந்தை பிறந்தது. அதற்குப் பால் கொடுப்பதற்காக அதனைக் கிருத்திகா நக்ஷத்திரங்களுடன் தேவர்கள் சேர்த்தார்கள். அவன் ஆறுமுகத்தை எடுத்துக்கொண்டு ஆறுபேர்களின் ஸ்தன்யத்தைச் சாப்பிட்டான். ஆகையால் அவனுக்கு ஸ்கந்தன், கார்த்திகேயன், ஷண்முகன் என்கிற பெயர்கள் உண்டாயின. அவனைத் தேவர்கள் அபிஷேகஞ்செய்து தங்களுக்கு ஸேனாதிபதியாகப் பண்ணிக் கொண்டார்கள். (ஸ-37.)

3. இக்ஷ்வாகுவம்சத்தில் ஸகரன் என்று ஓர் அரசன் இருந்தான். அவன் பிள்ளையில்லாமல் கேசினி, ஸுமதி என்கிற பாரிகைகளுடன் ஹிமயமலைக்குப்போய் ப்ருகுப்ரஸ்ரவணம் என்கிற இடத்தில் தவம் செய்தான். நூறுவர்ஷம் சென்றபின்பு பிருகு என்கிற ருஷி ப்ரத்யக்ஷமாகவந்து "உனக்குப் பிள்ளைகள் உண்டாவார்கள். ஒரு பாரியை வம்சவிருத்தியைச் செய்கிற ஒரு பிள்ளையையும், மற்றொருத்தி, தேஜஸ்விகளான அறுபதினாயிரம் பிள்ளைகளையும் பெறுவார்கள்" என்று அநுக்ரஹம் செய்தான். கேசினி ஒரு பிள்ளையையும், ஸுமதி அறுபதினாயிரம் பிள்ளைகளையும் வேண்டினார்கள். ராஜா ஸந்தோஷமடைந்து பாரியைகளுடன் தன் நகரத்துக்குத் திரும்பிவந்தான். தகுந்த காலத்தில் பிள்ளைகள் பிறந்தார்கள். கேசினியின் பிள்ளைக்கு அஸமஞ்ஜன் என்று பெயர். அவன் ஊர்க்குழந்தைகளைக் கொண்டுபோய் ஸரயூவில் போட்டு, அதைப் பார்த்து சிரித்துக்கொண்டிருந்தான். இதை ப்ரஜைகள் ராஜாவுக்குத் தெரிவிக்க, அவன் அஸமஞ்ஜனைத் தேசத்தினின்றும் துரத்திவிட்டான். அவனுக்கு அம்சுமான் என்று ஒரு நல்ல பிள்ளை இருந்தான். (ஸ-38.)

4. ஸகரன் அசுவமேதயாகம் பண்ணவேண்டுமென்று ஆசைப்பட்டு உபாத்தியாயருடன் குதிரையை வெளியே அனுப்பினான். அந்தக் குதிரையை இந்திரன் கொண்டுபோய் ஒளித்துவிட்டான். ஸகரன் அறுபதினாயிரம் பிள்ளைகளையும் பார்த்து, குதிரையைத் தேடிவரும்படி கட்டளையிட்டான். ஒவ்வொருவனும் ஒருயோஜனைதூரம் தேடினான். பூமி முழுவதிலும் தேடியும் குதிரையைக் காணவில்லை. பூமியைக் கல்லினார்கள். (ஸ-39.) பூமியைக்கல்லி ரஸாதலத்துக்குப் போனார்கள். அதை ப்ரதக்ஷிணம் செய்கையில் பூமியைத் தூக்கிக்கொண்டிருக்கிற நான்கு திக்கஜங்களையும் கண்டு அவைகளை ப்ரதக்ஷிணம்செய்து வடகிழக்குத் திக்குக்குப் போனார்கள். அவ்விடத்தில் கபிலவாஸுதேவன் என்கிற ருஷியையும், அவர் பக்கத்தில் மேய்ந்துகொண்டிருந்த குதிரையையும் கண்டு "இவர்தாம் குதிரையைக் கொண்டுவந்தவர்" என்று நினைத்து அவரை எதிர்த்தார்கள். அவர் கோபித்துக்கொண்டு "ஹூம்" என்று சொல்ல, எல்லாரும் எரிந்து சாம்பலாக ஆனார்கள். (ஸ-40) பிள்ளைகள் போய் வெகுகாலமாயும் திரும்பிவராமையால் ஸகரன் பேரனை

அம்சுமானைப் பார்த்து, "போனவர்களுக்கு என்ன நேர்ந்தது என்று அறிந்து, குதிரையைக் கொண்டுவந்து யாகத்தை முடித்துவை" என்று கட்டளையிட்டான். அம்சுமானும், எங்கும் தேடி ரஸாதலத்தில் சாம்பலாய் எரிக்கப்பட்டிருந்த பித்ருக்களையும், பக்கத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருந்த குதிரையையும் பார்த்தான். மிகுந்த துக்கத்துடன் இறந்தவர்களுக்குத் தர்ப்பணம் செய்ய ஜலத்தைத் தேட, அப்போது அவ்விடம் வந்த கருடன், "உன் பித்ருக்கள் கபிலருஷியால் எரிக்கப்பட்டார்கள். அவர்களின்வதம் உலகங்களின் ஹிதத்துக்காக ஏற்பட்டது. அவர்களைக் கங்காஜலத்தாலே நனைத்தால் அவர்கள் ஸ்வர்க்கலோகம் போவார்கள். குதிரையைக் கொண்டுபோய் உன் பாட்டன் யாகத்தை முடித்துவிடு" என்று சொன்னான். அம்சுமானும் குதிரையைக் கொண்டுபோய் யாகத்தை முடித்துவைத்தான். கங்கையைப் பூமிக்குக் கொண்டுவரும் வழியை அறியாமல், ஸகரனும் அம்சுமானும், அவன் பிள்ளை திலீபனும் முப்பதினாயிரம்வர்ஷம் ராஜ்யபரிபாலனம்பண்ணி ஸ்வர்க்கத்தை அடைந்தார்கள். (ஸ-41.) திலீபன் பிள்ளை பகிரதன் கோகர்ணம் என்னுமிடத்தில் ஆயிரம்வர்ஷம் தபஸ் செய்தான். ப்ரம்மா ஸந்தோஷப்பட்டு ப்ரத்யக்ஷமாகி, "கங்கை பூமிக்கு வருவள். அவள் ஆகாசத்திலிருந்து விழுவதைப் பூமியால் தாங்கமுடியாது. அதைத் தாங்குவதற்காக தபஸ்செய்து ருத்ரனை ப்ரார்த்தி" என்று சொன்னான். (ஸ-42.) பகிரதன், ப்ரம்மா சொன்னபடி தபஸ் செய்தான். ஒருவர்ஷமானபிறகு, ருத்ரன் வந்து 'நீ சொன்னபடி செய்கிறேன்' என்று ஒப்புக்கொண்டான். கங்கை கர்வத்துடன், "நான் வேகமாய் வந்து ருத்ரன் தலையில் விழுந்து, அவனைப் பாதாள உலகத்தில் அழுத்துகிறேன்" என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டு ருத்ரன் தலையில் வேகமாய்வந்து விழுந்தாள். அவள் கர்வத்தைப் போக்குவதற்காக ருத்ரன் தன் ஜடையின் மண்டலத்திலேயே அவள் சுற்றிச் சுற்றிக் கொண்டிருக்கும்படி செய்தான். மறுபடியும் பகிரதன் செய்த தபஸினால் ஸந்தோஷமடைந்து, கங்கையைப் பிந்துஸரஸில் விட்டான். அதிலிருந்து கங்கை ஏழு அருவிகளாகப் பிரவஹித்தாள். அவைகளில் மூன்று அருவிகள் கிழக்குத்திக்கிலும், ஸிந்து முதலான மூன்று அருவிகள் மேற்கேயும் பிரவஹித்தன.

ஏழாவது அருவி, பகீரதன் முன்னாலே போக, அவன் பின்னால் ப்ரவஹித்தது. ஜன்ஹு என்கிற ருஷி யாகம் பண்ணிக்கொண்டிருந்த இடத்தில் புகுந்து அதை முழுகும்படி செய்தது. ருஷி அதைப் பானம் பண்ணிவிட்டார். பிறகு தேவர்களாலும் ருஷிகளாலும் வேண்டப்பட்டு அவர் அதைக் காதுவழியாய் வெளியில் விட்டார். ஆகையால் அதற்குப் பாகீரதி என்றும் ஜாஹ்நவீ என்றும் பெயர்கள் உண்டாயின. வேறு இடையூறுகளில்லாமல் பகீரதன் ரஸாதலத்துக்குக் கங்கையைக் கொண்டுபோய் அதன் ஜலத்தால் பித்ருக்களின் சாம்பல் குப்பல்களை நனைப்பித்தான். அவர்கள் எல்லோரும் ஸ்வர்க்கலோகம் அடைந்தார்கள். (ஸ-43.)

---

## 6. அமிருதமதனகதை.

(இது விசுவாமித்ரரால் ராமனுக்குச் சொல்லப்பட்டது.)

ஒருகாலத்தில் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும், கிழத்தனமும் மரணமும் இல்லாமலிருக்கவேண்டும் என்று ஆசையுண்டாயிற்று. அவர்கள் திருப்பாற்கடலில் மந்தரம் என்கிற மலையை மத்தாகவைத்து, வாஸுகி என்கிற ஸர்ப்பத்தை அதில் கயிறாகச் சுற்றி, அதை ஆயிரம்வர்ஷம் கடைந்தார்கள். அதிலிருந்து அப்ஸரஸுகளும் ஸுரையும் (கள்ளும்) உச்சைச்ரவஸ் என்கிற குதிரையும் கௌஸ்துபம் என்கிற உயர்ந்த ரத்னமும் தன்வந்தரி என்கிற வைத்யச்ரேஷ்டனும் லக்ஷ்மியும் அமிருதமும் வெளிப்பட்டன. அப்ஸரஸுகளை ஒருவரும் பரிக்ரஹம் பண்ணவில்லை. ஆதலால் அவர்கள் எல்லாருக்கும் பொதுவானவர்களாகிவிட்டார்கள். ஸுரையை அஸுரர்களும், குதிரையை இந்த்ரனும், கௌஸ்துபத்தை விஷ்ணுவும் எடுத்துக்கொண்டார்கள். லக்ஷ்மீ விஷ்ணுவையே வரித்தாள். அவன் அவளை மார்பிலேயே வைத்துக்கொண்டான். விஷ்ணு மோஹினிரூபத்தை எடுத்துக்கொண்டு அஸுரர்களை வஞ்சித்து அமிருதத்தை தேவர்களுக்குக் கொடுத்தான். இதனால் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் கோரமான சண்டை உண்டாயிற்று. அதில் இந்த்ரன் அஸுரர்களைக் கொன்று தன் லோகத்துக்குப் போய்ச்சேர்ந்தான். (ஸ-45.)

---

## 7. மருத்துக்களின் உத்பத்தி.

(இதுவும் விசுவாமித்ரரால் ராமனுக்குச் சொல்லப்பட்டது.)

திதி தன் பிள்ளைகளான அஸுரர்கள் இந்த்ரனால் கொல்லப் பட்டதைக்கண்டு மிகுந்த துக்கத்துடன் தம் பர்த்தாவான கச்யபரிடம் இந்த்ரனைக் கொல்லும் பிள்ளையை வேண்டினாள். அவர் சுசியாயிருந்து ஆயிரம்வர்ஷம் தபஸ் செய்தால், நீ வேண்டினது கிடைக்கும் என்று சொன்னார். அவள் அப்ப டியே தபஸ் செய்கையில் இந்த்ரன் வந்து, அவளுக்கு வேண் டியவைகளைக் கொண்டுவந்து கொடுத்துப் பணிவிடை செய்தான். பிறகு தபஸ் முடிவதற்கு பத்துவர்ஷமிருக்கையில் திதி கலைப் பினால் மத்யான்னத்தில் உட்கார்ந்துகொண்டே தூக்கம் அடைந் தாள். அப்போது அவள்தலை அவள் காலில் பட்டது. இந்த இடைவெளி அகப்பட்டவுடன் அவள் உடம்பில் இந்த்ரன் புகுந்து, அவள் கர்ப்பத்தை வஜ்ரத்தால் ஏழுபாகமாகத் துணித் தான். அவைகள் அழுதன. அதைக்கேட்டு திதி விழித்துக் கொண்டு, "என் குற்றத்தினால் இது நேர்ந்தது. இவைகளை நாசம் பண்ணாதே. அவர்களை ஏவ்வேழு கூட்டங்களான மருத் துக்களின் ஸ்தானங்களைப் பரிபாலனம் செய்கிறவர்களாகச் செய்" என்று இந்த்ரனை வேண்டினாள். இந்த்ரனும் அதை ஒப்புக்கொண்டு சொன்னபடி செய்தான். (ஸ-46-47.)

## 8. அஹல்யை.

(இது விசுவாமித்ரரால் ராமனுக்குச் சொல்லப்பட்டது.)
(பாரா—15.)

1. இந்த ஆச்ரமத்தில் கௌதமருஷி தன் பாரியையான அஹல்யையுடன் வஸித்துவந்தார். ஒருகாலத்தில் இந்த்ரன் அவளை ஆசைப்பட்டு, ருஷி ஸ்னானம்பண்ணப்போயிருக்கையில் அவர் வேஷத்தைத் தரித்துக்கொண்டு அவளிடம் வந்தான். அவள் தேவேந்திரன் என்கிற குதூஹலத்தால், அவனுடன் சேர்ந்து, "மனது குளிர்ந்தது ; ருஷி வருவதற்குமுன்னால்போய்

உன்னை ரக்ஷித்துக்கொள்" என்று சொன்னாள். இந்திரனும் பரபரப்புடன் புறப்படுகையில், ருஷி திரும்பிவந்து, அவன் செய்த கெட்ட செய்கையை அறிந்து, அவனைச் சபித்தார். அவன் விருஷணங்கள் கீழே விழுந்தன. அஹல்யையையும் சபித்தார்—"இவ்விடத்தில் ஆஹாரமில்லாமல் வாயுபக்ஷணம் செய்துகொண்டு, பஸ்மத்தில் படுத்துக்கொண்டு, ஒருவராலும் பார்க்கப்படாமல் அநேகமாயிரம் வர்ஷங்கள் வஸி. தசரத சக்ரவர்த்தி குமாரனான ராமன் இவ்விடம் வரும்போது சாபத்திலிருந்து விடுபட்டு உன் ஸ்வரூபத்தை அடைவாய்" என்று. இப்படிச்சொல்லி கௌதமர் ஆச்ரமத்தை விட்டுவிட்டு ஹிமய மலைக்குத் தபஸ் செய்யப்போனார். (ஸ-48.)

2. இந்த்ரன் தேவர்களிடம் "கௌதமர் தபஸைக்கெடுப்பதாகிய தேவகாரியத்தைச் செய்யப்போனேன். அவர் கோபித்துக்கொண்டு என்னை விருஷணமில்லாமல் செய்துவிட்டார். இந்த விஷயத்தில் என்ன செய்யவேண்டியதோ அதைச் செய்யுங்கள்" என்று சொன்னான். அவர்களும் மேஷத்தின் (செம்மறியாடு) விருஷணத்தைக்கொண்டு இந்த்ரனிடம் சேர்த்தார்கள். அது முதல் இந்த்ரன் மேஷவிருஷணனாயிருக்கிறான். (ஸ-49.)

---

## 9. விசுவாமித்ரர் கதை.

(இது சதாநந்தர் ராமனுக்குச் சொன்னது.)
(பாரா—16.)

1. விசுவாமித்ரர் ராஜாவாக வெகுகாலம் தம் பிரஜைகளைப் பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தார். ஒருகாலத்தில் தம் ஸேனையுடன் ஸஞ்சாரம்பண்ணுகையில் வஸிஷ்டர் ஆச்ரமத்துக்கு வந்து அவரை நமஸ்காரம்பண்ணினார். வஸிஷ்டர் அவருக்குத் தகுந்தபடி ஆதித்யத்தைச் செய்து, "உம்முடைய ஸேனைக்கும் உமக்கும் விருந்துசெய்ய விரும்புகிறேன்" என்று சொல்ல, விசுவாமித்ரர் "நீர் செய்த ஆதித்யத்தாலும் கொடுத்த காய்கிழங்குகளாலும் உம்முடைய தர்சனத்தாலும் எனக்குத் தகுந்த விருந்து செய்யப்பட்டது. நான் போய்வருகிறேன்"

என்று சொன்னார். வஸிஷ்டர் நிர்ப்பந்தம் செய்ய, விசுவாமித்ரர் அதைப் பெற்றுக்கொள்ள ஒப்புக்கொண்டார். வஸிஷ்டர் சபலை என்கிற கோவைக் கூப்பிட்டு, "ராஜாவுக்கும் அவர் ஸேனைக்கும் ஒருகுறைவுமில்லாமல் பூர்ணமான திருப்தி உண்டாகும்படி போஜனம் பண்ணிவை" என்று கட்டளையிட்டார். (ஸ-52.) சபலை சொன்னபடி செய்தது. விசுவாமித்ரர் மிகுந்த திருப்தியை அடைந்து, சபலையைத் தனக்குக் கொடுக்கும்படி வஸிஷ்டரைக் கேட்டார். வஸிஷ்டர், "இதைக்கொண்டு நான் வைதிக கர்மங்களைச் செய்கிறேன். இதுதான் எனக்கு உயிர்" என்று பதில் சொல்லி, 'சபலையைக் கொடுக்கமாட்டேன்' என்று சொன்னார். (ஸ-53.)

2. விச்வாமித்ரர் சபலையைப் பிடித்து இழுக்க, வஸிஷ்டர் அநுமதியின்படி சபலை தன் உடம்பிலிருந்து கணக்கில்லாத பப்லவர்களையும் யவனர்களையும் காம்போஜர்களையும் மற்றவர்களையும் உண்டுபண்ணிற்று. அவர்களுக்கும் விசுவாமித்ரருக்கும் சண்டையுண்டாயிற்று. (ஸ-54.) விசுவாமித்ரரின் ஸேனை முழுவதும் நாசம் அடைய, அவருடைய நூறுபிள்ளைகள் வஸிஷ்டரை எதிர்த்து வந்தார்கள். வஸிஷ்டர் ஹூம் என்று சொல்லி, அவர்களைச் சாம்பலாக எரித்துவிட்டார். விசுவாமித்ரர் வெறுப்பையடைந்து ஹிமயமலையின் சார்வில் ருத்ரனைக் குறித்துத் தபஸ் செய்து, அவரிடமிருந்து உயர்ந்த அஸ்த்ரங்களைப் பெற்றுத் திரும்பிவந்து, அஸ்த்ரங்களால் வஸிஷ்டர் ஆச்ரமத்தைச் சூன்யமாகப் பண்ணினார். (ஸ-55.) விச்வாமித்ரர் எந்த எந்த அஸ்த்ரத்தை வஸிஷ்டர்மேலே ப்ரயோகஞ்செய்தாரோ, அந்தந்த அஸ்த்ரத்தை வஸிஷ்டர் ப்ரம்மதண்டத்தாலே சக்தியில்லாததாகச் செய்துவிட்டார். கடைசியில் விசுவாமித்ரர் ப்ரம்மாஸ்த்ரத்தை விட்டார். அதை வஸிஷ்டர் விழுங்கிவிட்டார். விசுவாமித்ரரும் வெட்கப்பட்டு பெருமூச்சுவிட்டு

𑌧𑌿𑌗𑍍𑌬𑌲𑌂 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌬𑌲𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑍇𑌜𑍋𑌬𑌲𑌂 𑌬𑌲𑌮𑍍 ।
𑌏𑌕𑍇𑌨 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌦𑌣𑍍𑌡𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌹𑌤𑌾𑌨𑌿 𑌮𑍇 ॥

(ஸ-56-23.)

க்ஷத்ரியன்பலத்தைச் சுடவேண்டும். ப்ரம்மதேஜஸின் பலமே பலம். ஒரு ப்ரம்மதண்டத்தால் என் எல்லா அஸ்த்ரங்களும்

நாசம்பண்ணப்பட்டன. ஆகையால், "ப்ராமணத்தன்மை வருவதற்காக உக்ரமான தபஸ் செய்வேன்" என்று தபஸ் செய்யப் புறப்பட்டார். (ஸ-56.)

3. முதலில் விசுவாமித்ரர் தெற்குத்திக்கில் ஆயிரம்வர்ஷம் தபஸு செய்ய, ப்ரம்மா ஸந்தோஷமடைந்துவந்து, "நீ ராஜர்ஷி" என்று சொன்னான். விசுவாமித்ரர் திருப்தி அடையாமல் மறுபடியும் தபஸ் செய்கையில், த்ரிசங்கு என்கிற இக்ஷ்வாகு வம்சத்து அரசன் அவரைச் சரணம் அடைந்தான். அவன் உடம்புடனே ஸ்வர்க்கம் போக ஆசைப்பட்டுத் தன் குருவான வஸிஷ்டரை அதற்குவேண்டும் யாகத்தைச் செய்விக்கும்படி வேண்டினான். அவர் முடியாது என்று சொல்ல, அவன் அவர் பிள்ளைகளிடம் போய் அதே பதிலைப்பெற்றதும், அவன் "நான் வேறொருவரிடம் போகிறேன்" என்று சொல்ல, அவர்கள் அவனைச் சண்டாளனாகும்படி சபித்தார்கள். அவன் ரூபம் அப்படியே மாறிவிட்டது. அவன் தனியாய் விசுவாமித்ரரிடம் போய், தனக்கு உண்டான வேறுபாட்டுக்குக் காரணத்தைத் தெரிவித்து, தான் செய்த நல்லகாரியங்களைச் சொல்லி, உடம்புடன் ஸ்வர்க்கத்துக்குப் போவதற்காக அவரைச் சரணம் அடைந்தான். (ஸ-58.) அவர் ருஷிகளைக் கூப்பிட்டு யாகத்தைச் செய்வித்து, "இந்த உடம்புடனேயே ஸ்வர்க்கம் போவாய்" என்று சொல்லி ஸ்வர்க்கத்துக்கு அனுப்பினார். அவனும் அப்படியே ஸ்வர்க்கத்துக்குப் போக, 'சண்டாளன் ஸ்வர்க்கத்துக்கு வரக்கூடாது' என்று சொல்லி, இந்த்ரன் அவனைத் தலைகீழாகத் தள்ளிவிட்டான். அவன் "என்னைக் காப்பாற்று, காப்பாற்று" என்று கீழே விழ, விசுவாமித்ரர் "நில் நில்" என்று சொல்லி, அவன் விழுவதைத் தடுத்து, "வேறு இந்த்ரனை உண்டுபண்ணுகிறேன்; அல்லது, உலகத்தில் இந்த்ரன் இல்லாமலிருக்கட்டும்" என்று சொல்லி, தேவர்களை ஸ்ருஷ்டிபண்ண ஆரம்பித்தார். தேவர்களும் மற்றவர்களும் நடுநடுங்கி, விசுவாமித்ரரை நல்ல வார்த்தை சொல்லி, த்ரிசங்கு இருக்கிற இடமே அவனுக்கு நிலையான ஸ்வர்க்கமாக இருக்கட்டும் என்று ஏற்பாடு செய்தார்கள். (ஸ-59-60.)

4. பிறகு, விசுவாமித்ரர் மேற்குத்திக்கில் புஷ்கரம் என்கிற விடத்தில் கோரமான தபஸு செய்துகொண்டிருந்தார்.

அப்போது அம்பரீஷன் என்கிற இக்ஷ்வாகுவம்சத்து ராஜா யாகம்பண்ண ஆரம்பிக்கையில், பசுவை இந்த்ரன் கொண்டு போய்விட்டான். அதற்குப் பதிலாக நரபசுவை (மனிதனை பசுவை) ஸம்பாதித்து யாகத்தை முடிக்கவேண்டும் என்று ருத்துவிக்குக்கள் சொன்னார்கள். ராஜா எங்கும்தேடிக் கடைசியில் ருசிகர் என்கிற ருஷியிடம்போய் 'லக்ஷம் கோக்களைக் கொடுக்கிறேன். உம்முடைய பிள்ளைகளில் ஒருவனைக் கொடும்' என்று கேட்டான். 'மூத்தபிள்ளையைக் கொடுக்கமாட்டேன்' என்று ருஷியும், 'கடைசிபிள்ளையைக் கொடுக்கமாட்டேன்' என்று அவர் பத்னியும் சொல்ல, நடுப்பிள்ளையான சுனச்சேபன் தன்னைப் பெற்றோர்கள் விற்றுவிட்டதாக எண்ணி, ராஜாவுடன் புறப்பட்டான். ராஜா சொன்னபடி கோக்களை ருஷிக்குக் கொடுத்துவிட்டு, சுனச்சேபனை அழைத்துக்கொண்டுவந்து புஷ்கரத்தில் ச்ரமபரிஹாரம் பண்ணினான். (ஸ-61.) அப்போது சுநச்சேபன் தன் அம்மானை விசுவாமித்ரரைச் சரணம் அடைந்தான். அவர் தம் பிள்ளைகளைப் பார்த்து, "இவனுக்குப் பதிலாக ஒருவன் நரபசுவாக ராஜாவுடன் போகவேண்டும்" என்று சொல்ல, அவர்கள், "உம்முடைய பிள்ளைகளை விட்டுவிட்டு அன்யன் பிள்ளையை எப்படி ரக்ஷிக்கலாம்" என்று பரிஹாஸம் பண்ணினார்கள். விசுவாமித்ரர் கோபித்துக்கொண்டு பிள்ளைகளைச் சபித்து, சுனச்சேபனுக்கு இரண்டு மந்திரங்களைச் சொல்லிக் கொடுத்து, 'உன்னை யூபத்தில் கட்டும்போது, அக்னியைப் பார்த்துக்கொண்டு, இந்த்ரனையும், அவன் தம்பியையும்குறித்து இந்த மந்திரங்களைச் சொல்லு' என்று சொன்னார். அவன் அப்படியே செய்தான். இந்த்ரன் திருப்தியை அடைந்து சுனச்சேபனுக்குத் தீர்க்காயுஸையும், ராஜாவுக்கு விரும்பின பலனையும் கொடுத்தான். (ஸ-62.)

5. மறுபடியும் விசுவாமித்ரர் ஆயிரம்வர்ஷம் தபஸு செய்தார். பிரம்மா வந்து "நீர் ருஷி" என்று சொன்னார். விசுவாமித்ரர் திருப்தி அடையாமல் மறுபடியும் தபஸு செய்கையில் மேனகை என்கிற அப்ஸரஸு அவ்விடம் ஸ்நானம் பண்ணவர, விசுவாமித்ரர் அவள் அழகைக்கண்டு மோஹித்து, அவளுடன் பத்துவர்ஷங்களைப் போக்கினார். பிறகு வெட்கப் பட்டு வடக்குத்திக்கில் போய் தபஸ் செய்தார். பிரம்மா வந்து

"நீர் மஹர்ஷியாய்விட்டீர்" என்று சொல்ல, விசுவாமித்ரர், "என் தபஸினால் நான் மஹர்ஷியாக ஆகிவிட்டதாகச் சொன்னால், நான் ஜிதேந்திரியன்" என்று சொன்னார். பிரம்மா, "நீர் ஜிதேந்திரியராக இன்னும் ஆகவில்லை. மறுபடியும் பிரயத்னம் செய்யும்" என்று சொல்லிப் போய்விட்டார். மறுபடியும் விசுவாமித்ரர் தபஸு பண்ணினார். அப்போது, அவர் தபஸுக்கு விக்னம்செய்ய ரம்பை என்கிற அப்ஸரஸைத் தேவர்கள் அவரிடம் அனுப்பினார்கள். (ஸ-63.) விசுவாமித்ரர் அவளைக் கண்டு ஸந்தேஹப்பட்டு, "என் தபஸுக்கு விக்னம்செய்ய தேவர்கள் இவளை அனுப்பினார்கள்" என்று தீர்மானம்பண்ணி அவளைச் சபித்தார். உடனே நான் கோபத்தை அடக்கவில்லையே என்று வருத்தப்பட்டு இனிமேல் கோபத்தை அடக்குகிறேன். ஒருபோதும் பேசுகிறதில்லை என்று கிழக்குத்திக்குக்குப் போய் மறுபடியும் கடுமையாகத் தபஸு செய்தார். (ஸ-64) ஆயிரம்வர்ஷமானபிறகு கட்டைபோலிருந்தார். ஒருவிதமாயும் அவருக்கு விக்னம் செய்யமுடியவில்லை. அப்போது அவர் போஜனம் செய்கையில், இந்த்ரன் ப்ராமண வேஷம்கொண்டு அந்த அன்னத்தைக் கேட்டான். அவர் ஸந்தோஷமாய் ஒன்றும் பேசாமல் அதைக் கொடுத்துவிட்டார். மறுபடியும் ஆயிரம் வர்ஷம் தபஸு செய்தார். அவர் தலையிலிருந்து உண்டான அக்னியாலே மூன்று உலகங்களும் எரிக்கப்பட்டன. தேவர்கள் முதலானவர்கள் ப்ரம்மாவிடம் போய் முறையிட, அவரும்வந்து "விசுவாமித்ரரே! நீர் ப்ரம்மருஷியாய்விட்டீர்; உமக்கு ப்ராம்மண்ணியத்தையும் தீர்க்காயுஸையும் கொடுத்தேன்" என்று சொன்னார். விசுவாமித்ரர் "நீர் சொல்லுவது உண்மையானால் வஸிஷ்டர் தன் வாயால் அதைச் சொல்லட்டும்" என்று வேண்டினார். அவரும் அப்படியே சொன்னார். இரண்டு ருஷிகளுக்கும் ஸக்யம் உண்டாயிற்று (ஸ-65.)

---

## 10. தசரதன் சாபம் அடைந்த கதை.

---

(இது தசரதனால் கௌஸல்யைக்குச் சொல்லப்பட்டது.)
(பாரா-63.)

நான் யுவராஜாவாக இருக்கும்போது, ஒருநாள் ஸரயூநதிக் கரையில் வேட்டையாடப் போனேன். அப்போது அந்த நதி

யின் துறையில் ஒரு குடத்தின் ஜலம் மொள்ளுகிற சப்தத்தைக் கேட்டு, அது யானையின் சப்தம் என்று பிரமித்து, சப்தம்வந்த வழியே பாணத்தைப் போட்டேன். அப்போது ஹா! ஹா!! என்கிற ஒரு மனிதனின் குரலைக்கேட்டு, அந்த இடம் போய், ஒரு ருஷியின் புத்ரன் அடிபட்டிருப்பதைப் பார்த்தேன். அவன் "ஏ! ராஜாவே! காட்டில் வஸிக்கிற நான் உனக்கு என்ன அபராதம் செய்தேன்? வயதான கண் தெரியாத என் தாயார்தகப்பனார்களுக்கு ஜலம் கொண்டுவர வந்தேன்; நான் கொல்லப்பட்டதால் அவர்களும் கொல்லப் பட்டவர்களாவார்கள்; சீக்கிரம் அவரிடம்போய் அவர் கோபித்து உன்னைக் கொளுத்துவதற்குமுன்னால் நடந்ததை அவரிடம் சொல்லு; ப்ரமஹத்தி வரும் என்று நீ யோசிக்கவேண்டாம்; நான் ப்ராம்மணன் அன்று; சூத்ரஸ்திரீயினிடத்தில் வைச்யனுக்குப் பிறந்தவன்" என்று சொல்லிப் பிராணனை விட்டான். (அ-ஸ-63.) இதைக்கேட்டு மிகுந்த வருத்தத்துடன் தீர்த்தக்குடத்தை எடுத்துக்கொண்டு அவன் தகப்பனார் ஆச்ரமத்துக்குப்போய், அவர்கள் ருஷி பிள்ளை சொன்னபடியிருப்பதைப் பார்த்தேன். நான் வந்த சப்தத்தைக்கேட்டு ருஷி தம்பிள்ளை என்று பிரமித்துப்பேசுகையில், நான் பயந்து நடந்ததை அவருக்குச் சொல்லி, "அஜ்ஞானத்தால் உம் பிள்ளை என்னால் கொல்லப்பட்டான்; அதைப் பொறுத்துக்கொள்ள வேண்டும்" என்று வேண்டினேன். அவர் மிகுந்த சோகம் அடைந்து, "நீயே நேரில் வந்து சொல்லாவிட்டால் உன் தலை நூறு துண்டுகளாக வெடித்திருக்கும். பிள்ளையைக் கடைசித் தடவைப் பார்க்க ஆசைப்படுகிறோம். எங்களை அந்த இடத்துக்குக் கொண்டுபோ" என்று சொன்னார். அவர்களை அப்படியே கொண்டுபோய் விட்டேன். அவர் பிள்ளையைப் பார்த்து பலவிதமாய்ப் புலம்பி, அவனுக்கு நல்லகதி வரவேண்டும் என்று ஆசீர்வாதம் பண்ணினார். அப்போது ருஷியின் பிள்ளை திவ்ய ரூபத்துடன் ஸ்வர்க்கத்துக்குப் போகிறவனாய்த் தாயார் தகப்பனார்களைப் பார்த்து, "உங்களுக்குப் பரிசர்யை செய்ததாலே உயர்ந்த இடத்தை அடைந்துவிட்டேன்; நீங்களும் என்னிடம் சீக்கிரம் வந்துசேருவீர்கள்" என்று சொல்லி விமானத்துடன் ஸ்வர்க்கத்துக்குப் போனான். தகப்பனார் அவனுக்குத் தர்ப்ப

ணம் பண்ணி என்னைப் பார்த்து " அந்த பாணத்தாலே எங்களை யும் கொல்லு ; மரணம் அடைவதில் எங்களுக்கு வருத்தமில்லை ; என் பிள்ளையை அறியாமையால் கொன்றதற்கு உன்னைச் சபிக் கிறேன் ; எப்படி பிள்ளையைவிட்டுப் பிரிந்து நான் சோகத்தை அடைகிறேனோ, அப்படியே நீயும் பிள்ளையைவிட்டுப் பிரிந்து சோகம் அடைந்து மரணத்தை அடைவாய் " என்று சொல்லி, அக்னிப்ரவேசம்பண்ணி, அவ்விருவர்களும் ஸ்வர்க்கத்தை அடைந் தார்கள். (அ-ஸ-64.)

---

## 11. விராதன்.

( இது விராதனால் ராமனுக்குச் சொல்லப்பட்டது.)
( பாரா—86.)

இவன் தும்புரு என்கிற கந்தர்வன். குபேரன் ரம்பை யோடு சேர்ந்திருக்கையில் அவனுக்கு அவன் பணி செய்யவில்லை. குபேரன் கோபித்துக்கொண்டு " ராக்ஷஸசரீரத்தை அடை " என்று அவனைச் சபித்தான். அவன் நல்லவார்த்தை சொல்ல, " தசரதன் பிள்ளையான ராமன் உன்னை எப்போது கொல்லு வனோ, அப்போது உன் ஸ்வரூபத்தைப்பெற்று ஸ்வர்க்கத்தை அடைவாய் " என்று குபேரன் சொன்னான். இப்படி தன் வர லாற்றைச் சொல்லி ராமனுடைய அநுக்ரஹத்தாலே அவன் ஸ்வர்க்கம் போய்ச்சேர்ந்தான். (ஆர-ஸ-4.)

---

## 12. அகஸ்த்யர்.

(இந்தக் கதை ராமன் லக்ஷ்மணனுக்குச் சொன்னது.)
( பாரா—90.)

ஒருகாலத்தில் வாதாபி, இல்வலன் என்கிற இரண்டு அஸு ரர்கள் பிராம்மணர்களைக் கொன்றுகொண்டிருந்தார்கள். கொன்ற பிரகாரம்—இல்வலன் ப்ராம்மண ரூபத்தை எடுத்துக்கொண்டு ஸம்ஸ்கிருதபாஷையில் பிராமணர்களை ச்ராத்தத்துக்காக வரிக் கிறது. வாதாபியை ஆடாகப்பண்ணி, அவன் மாம்ஸத்தைப் பாகம் செய்து, அவர்களைச் சாப்பிடும்படி செய்து பிறகு " வாதாபியே ! வெளியில்வா " என்று இல்வலன் கூப்பிட, அவன்

ஆட்டைப்போல் கத்திக்கொண்டு, பிராமணன் உடம்பைப் பிளந்து வெளியே வருகிறது—என்பது. இப்படி பிராமணர்களை அவர்கள் ஆயிரக்கணக்காகக் கொன்றார்கள். அகஸ்தியரையும் இப்படியே கொல்லஎண்ணி, வாதாபியை ஆடாகப்பண்ணி அவன் மாம்ஸத்தைப் பாகம்செய்து அவர் போஜனம் செய்யும்படி செய்து, வாதாபீ ! என்று கூப்பிட்டான். அவன் வெளியே வரவில்லை. ஏன் என்றால், அகஸ்தியர் “ மந்தஹாஸம் பண்ணிக்கொண்டு அவன் எப்படி வெளியே வருவன் ? என்னாலே ஜரிக்கப்பட்டான் ” என்றார். இல்வலன் அகஸ்தியரை எதிர்த்துவர, அவன் அவர் தேஜஸால் கொளுத்தப்பட்டான். (ஆர-ஸ-12.)

## 13. கபந்தன்.

(இந்தக் கதை கபந்தனால் ராமனுக்குச் சொல்லப்பட்டது.)
(பாரா—102.)

நான் தனுவின் பிள்ளை ; எனக்கு மிகுந்த அழகுள்ள உடம்பு இருந்தது. நான் கோர ரூபத்தை யெடுத்துக்கொண்டு எல்லாரையும் நடுங்கும்படி செய்தேன். ஸ்தூலசிரஸ் என்கிற பெயரையுடைய ருஷி கோபித்துக்கொண்டு இந்த உடம்பே உனக்கு இருக்கட்டும் என்று சபித்தார். இந்த சாபத்துக்கு எப்போது முடிவு உண்டாகும் என்று அவரைப் பிரார்த்தித்தேன். அவர், “ எப்போது இந்த வனத்தில் ராமன் வந்து உன் புஜங்களை அறுத்து உன்னைத் தஹனம் பண்ணுவனோ, அப்போது சாபம் முடியும். உன்னுடைய ரூபமும் திரும்பிவரும் ” என்று அநுக்ரஹம் செய்தார்.

2. இந்த கபந்தரூபம் வந்ததற்கும் காரணத்தைச் சொல்லுகிறேன். நான் தபஸுசெய்து பிரம்மாவை ஸந்தோஷப்படுத்தித் தீர்க்காயுளை வரமாகப் பெற்றேன். அப்போது இந்திரன் எனக்கு என்ன பண்ணக்கூடும் என்று கர்வத்துடன் அவனுடன் சண்டைக்குப்போனேன். அவன் வஜ்ரத்தாலே என்னை அடிக்க, கழுத்துக்கு மேற்பட்ட உடம்பின் பாகம் வயிற்றுக்குள் புகுந்தது. என்னைக் கொன்றுவிடு என்று நான் அவனை ப்ரார்த்திக்க, “ ப்ரம்மாவின் வார்த்தை பொய்யாகக்கூடாது ”

என்று அவன் சொல்லி, ஒருயோஜனை நீளமுள்ள இரண்டு புஜங்களையும் வயிற்றில் வாயையும் கூர்மையான தெற்றுப்பல்லையும் கொடுத்தான். நான் புஜங்களை நீட்டி இந்த வனத்தில் ஸஞ்சரிக்கிற ஸிம்மம் முதலான பிராணிகளைப் பிடித்துச் சாப்பிட்டுக் கொண்டு பிழைத்திருக்கிறேன். இப்போது உன் அநுக்ரஹத்தாலே சாபம் முடிவை அடையப்போகிறது. (ஆ-ஸ-71.)

---

## 14. துந்துபி.

(இதை ராமனுக்கு ஸுக்ரீவன் சொன்னது.) (பாரா—105.)

துந்துபி என்கிற அஸுரன் ஆயிரம் யானையின் பலத்தை வரமாகப் பெற்றுக் கர்வத்துடன் யாருடன் சண்டைசெய்யலாம் என்று தேடி ஸமுத்ரத்தினிடம் போனான். ஸமுத்ரராஜன் "உன்னோடு சண்டைசெய்ய நான் ஸமர்த்தன் அல்லன். ஹிமவான் என்கிற பர்வதராஜா இருக்கிறான் அவனிடம் போ" என்று சொன்னான். துந்துபி பர்வதராஜனிடம் போய், யானை போன்ற பெரிய பாறைகளை அவன்மேல் எறிந்தான். அவன் பயந்து, "நான் சண்டையில் ஸமர்த்தன் அல்லன். நான் ருஷிகளுக்கு வாஸஸ்தானமாயிருக்கிறேன். உனக்குத் தகுந்தவன் கிஷ்கிந்தையில் வாலி என்கிற வானரராஜா இருக்கிறான். அவனிடம் போ" என்று சொல்லி, அவனை வாலியிடம் அனுப்பினான். துந்துபி, எருமைமாட்டின் ரூபத்துடன் கிஷ்கிந்தைக்கு வந்து, அதன் துவாரத்திலிருந்து கர்ஜித்தான். வாலி இதைப் பொறுக்காமல் வெளியே வந்தான். இருவருக்கும் த்வந்த்வயுத்தம் நடந்தது. கடைசியில் வாலி எதிரியைக் கொன்று மலைபோல் இருந்த அவன் உடம்பைக் கைகளாலே ஒருயோஜனை தூரத்தில் எறிந்தான். அதிலிருந்து அப்போது சொட்டின ரக்தபிந்துக்கள் மதங்கர் என்னும் ருஷியின் ஆச்ரமத்திலும் அவர் உடம்பிலும் விழுந்தன. அவர் கோபித்துக்கொண்டு "இந்த வேலையை எவன் செய்தானோ, அவன் இங்கே வரக்கூடாது. வந்தால் இறந்து போவன்" என்று சபித்தார். வாலி அவரிடம்போய் நல்ல வார்த்தை சொல்லியும் அவர் கேட்கவில்லை. அதுமுதல் வாலி ருச்யமூகமலையிலிருக்கும் மதங்கர் ஆச்ரமத்துக்குப்போகப் பயப்பட்டு அங்கே போகாமலிருந்தான். (கி-ஸ-11.)

---

## 15. வாலிக்கும் ஸுக்ரீவனுக்கும் விரோதத்துக்குக் காரணம்.

(இதை ஸுக்ரீவன் ராமனுக்குச் சொன்னது.)
(பாரா—104.)

துந்துபியினுடைய பிள்ளை மாயாவி. அவனுக்கும் வாலிக்கும் ஒரு ஸ்திரீவிஷயமாய் விரோதமுண்டாயிருந்தது. அவன் கிஷ்கிந்தைக்குவந்து துவாரத்தில் நின்றுகொண்டு கர்ஜித்தான். அதைப் பொறுக்கமுடியாமல் வாலி வெளியில் வந்தான். நானும் அவன்பின்னால் போனேன். எங்கள் இருவரையும்கண்டு பயந்து ஓடி மாயாவி ஒரு குகையில் புகுந்தான். என்னை அதன் துவாரத்தில்வைத்துவிட்டு வாலியும் அதற்குள்போனான். ஒருவர்ஷம் காத்திருந்தேன். வாலி வரவில்லை. ரக்தபிரவாஹம் வெளியே வந்தது. நான் வாலி கொல்லப்பட்டான் என்று பயந்து, குகையின் துவாரத்தை ஒரு பெரிய பாறையால் மூடிவிட்டு வந்துவிட்டேன். மந்திரிகளின் வேண்டுகோளின்மேல் நான் ராஜாவாக இருந்தேன்: வாலி மாயாவியைக் கொன்று கிஷ்கிந்தைக்கு வந்து, நான் ராஜாவாயிருப்பதைப் பார்த்துக் கோபங்கொண்டு, நான் எவ்வளவு நல்லவார்த்தை சொல்லியும் கேளாமல், என் பார்யையை அபஹரித்துக்கொண்டு, ஒரு துணியுடன் தேசத்தைவிட்டு என்னைத் துரத்திவிட்டான். நான் பூமிமுழுவதையும் சுற்றி, மதங்கசாபத்தால் இங்கே வாலி வரமுடியாது என்று அறிந்து, பயத்துடன் இங்கே இருக்கிறேன். (கி-ஸ-8-12.)

---

அநுபந்தம் முற்றிற்று.